# மூன்று விளக்குகள்!

[அமரர் ஏவி. எம். அறக்கட்டளை
நினைவுச் சொற்பொழிவுகள்-1985]

850

நீதிபதி, டாக்டர் மு.மு. இஸ்மாயில்

கம்பன் கழக வெளியீடு
சென்னை.

முதற் பதிப்பு : ஆகஸ்டு, 1985



விலை ரூ. 30-00

[இந்நூலின் முதல் பதிப்பு மட்டும் ஏவி. எம். அறக்கட்டளையினரால் வெளியிடப்படுகிறது.]

மாருதி பிரஸ்,
173, பீட்டர்ஸ் ரோடு,
சென்னை-600 014.
மேலட்டை ஓவியம் : உகி

# பதிப்புரை

சென்னைக் கம்பன் கழகம் *1975* இல் நிறுவப்பெற்றது. திரு. ஏவி. மெய்யப்பன் அவர்கள் *12-8-1979* அன்று இயற்கை அடைந்தமை வரையில் கழகத்தின் துணைத்தலைவர்களுள் ஒருவராக இருந்து வந்தார்கள்.

சினிமாத் துறையில் பெரும்பெயர் பெற்றிருந்த அவர்கள், கம்பன் கழகத்தோடு தொடர்பு கொண்டதிலிருந்து, கழகத்தின் வளர்ச்சியிலும், கம்பனுடைய கவி நயத்தைப் பருகுவதிலும், முழுமையான ஈடுபாடு கொண்டிருந்தார்கள். ஒவ்வோர் ஆண்டும் தாம் தலைவராக இருந்த ஏவி. எம். அறக்கட்டளையினுடைய ஏவி. எம். இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் கம்பன் விழா நிரந்தரமாக நடைபெறுவதற்கு வழி வகுத்ததோடு, கழகத்திற்கு அவ்வப்போது தேவையான உதவிகள் அனைத்தையும் நிறைந்த உள்ளத்துடனும், மட்டற்ற மகிழ்ச்சியுடனும் செய்து வந்தார்கள்.

அன்னாருடைய மறைவுக்குப்பின், அமரர் ஏவி. எம். அவர்களின் குடும்பத்தினர், அதே ஈடுபாட்டையும், அக்கறையையும் காட்டி வருகிறார்கள். அமரர் ஏவி. எம். அவர்களுடைய நினைவில் ஆண்டுதோறும் கம்பனைப் பற்றிச் சென்னைக் கம்பன் கழகத்தின் ஆதரவில், ஒரு நினைவுச் சொற்பொழிவு நடக்க வேண்டுமென்று விரும்பி, அதற்காக ஆவன செய்வதற்கு முன் வந்தார்கள்.

அந்தத் திட்டத்தின்படி அமரர் ஏவி. எம். அவர்களின் இவ்வாண்டின் (இரண்டாம் ஆண்டைய) நினைவுச் சொற்

பொழிவு 1985ஆம் ஆண்டு, ஜூலைத் திங்கள் 27, 28 தேதிகளில் ஏவி. எம். இராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நடைபெற்றது.

சொற்பொழிவை நீதிபதி, டாக்டர் மு. மு. இஸ்மாயீல் அவர்கள் "மூன்று வினாக்கள்!" என்ற தலைப்பில் நிகழ்த்தினார்கள்.

முதல் நாளான 27-7-85 சனிக்கிழமை அன்று, 'தினமணி' ஆசிரியர் திரு. ஏ. என். சிவராமன், அவர்கள் தலைமை ஏற்றுத் தொடங்கி வைத்தார்கள்.

இரண்டாம் நாளான 28-7-85 ஞாயிற்றுக் கிழமை அன்று, தமிழகச் செய்தி, அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. இராம. வீரப்பன் அவர்கள் தலைமை தாங்கினார்கள்.

இந்த நினைவுச் சொற்பொழிவின் நூல் வடிவமே இது. இதனை நூல் வடிவாக்கி, அச்சிடும் பொறுப்பையும், அமரர் ஏவி. எம். குடும்பத்தினரே ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

இந்தச் சொற்பொழிவினை ஏற்பாடு செய்து, அதனைக் கம்பன் கழகத்தின் மூலம் நிறைவேற்றிய, ஏவி. எம். குடும்பத்தார்க்கு எங்கள் மனம் கனிந்த நன்றி.

கம்பன் கழகத்தார்
சென்னை

9-8-85

## முன்னுரை

சுமார் நாற்பது ஆண்டுகட்கு மேலாக, கம்பனைப் பயின்றும், அவன் படைப்பினைப் போற்றிப் பேசியும், எழுதியும் வந்திருக்கிறேன்.

இந்த நீண்ட காலகட்டம், கம்பன் படைப்பைப் படிப்பதோடல்லாமல் அதனை வால்மீகி முனிவரின் இராமாயணத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் வாய்ப்பையும் தந்தது.

பல மேடைகளில் பேசியதோடல்லாமல், எண்ணிறந்த பட்டி மண்டப நிகழ்ச்சிகட்குத் தலைமை வகிக்கும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. பட்டி மண்டபங்களில் வாதத்திற்கு எடுத்துக் கொள்ளும் பொருளுக்கு ஏற்ப கம்பனைப் பல கோணங்களிலிருந்து ஆயும் பேறும் எனக்குக் கிடைத்தது. இவற்றின் காரணமாக, கம்பனுடைய காவிய நயம், கற்பனை வளம், சிந்தனைச் செறிவு, சொற்செட்டு, இலட்சியப் பார்வை, ஞானப்போக்கு, கதை அமைப்பு, காப்பியக் கட்டுக்கோப்பு முதலியன பற்றித் தனித்தனியாகவும், ஒன்றைப் பிறவற்றின் பின்னணியிலும், ஆழ்ந்து, ஆய்ந்து பார்க்கும் வாய்ப்பும் கிடைத்தது.

சமீப காலத்தில், தமிழ்நாடு எங்கும், கம்பன் கழகங்கள் தோன்றி மாதத்திற்கு ஒரு கம்பன் விழா என்பதோடன்றி, ஒன்றுக்கு மேற்பட்ட கம்பன் விழாக்கள் பல இடங்களில் இன்று நிகழ்வதைக் காண்கிறோம்.

இதன் காரணமாக, இதற்குமுன் எப்போதும் இல்லாத அளவிற்குக் கம்பனைப் பற்றிப் படித்தவரும், பாமரரும்

அவரவருடைய, கல்வித் தரத்திற்கும் அறிவு வளர்ச்சிக்கும் ஏற்ப, பரவலாகவும், ஆழமாகவும் தெரிந்து கொள்ளும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறுர்கள்.

இச்சூழ்நிலையில் சென்னைக் கம்பன் கழகத்தினர் இவ் வாண்டின் அமரர் ஏவி. எம் நினைவு அறக்கட்டளைச் சொற் பொழிவினை நிகழ்த்துமாறு என்னைப் பணித்தனர். நானே கம்பன் கழகத் தலைவனுக இருப்பதால், நான் இதனைச் செய்வது பொருத்தமாக இராது என்று கம்பன் கழக உறுப் பினர்களுக்கு நான் பன்முறை எடுத்துக் கூறியும், என்மாட்டு அவர்கள் கொண்டிருந்த அன்பின் காரணமாக, இவ்வாண்டுச் சொற்பொழிவினை நானே நிகழ்த்தவேண்டும் என்று வற்புறுத்தினர். என்னுடைய ஆட்சேபணை மிகுந்த அளவுக்கு, அவர்களுடைய வற்புறுத்தலும் மிகுந்து, இறுதியில், அது, அவர்களுடைய கட்டளையாகவே ஆகிவிட்டது.

அன்பிற்கு இருக்கும், ஊற்றமும், அதிகாரமும், வேகமும் வேறு எதற்கும் இல்லாததன் காரணமாகவும், அவர் களுடைய ஒத்துழைப்பினேடுதான் கம்பன் கழகத்தின் பணிகள் நடைபெறச் செய்ய வேண்டியவனுக நான் இருப்ப தாலும், அவர்கள் கட்டளையை மீற முடியாத நிலையினன் ஆயினேன்.

இதனுடன் பிறிதொரு காரணமும் சேர்ந்து கொண்டது,

திரு. ஏவி. மெய்யப்பன் அவர்கள் கம்பன் கழகத் துணைத் தலைவர்களில் ஒருவராக இருந்தபொழுது, எனக்களித்த ஒத்துழைப்பிற்கு நன்றிக் கடனுக இது அமையும் என்றஓர் எண்ணமும் ஆம். சினிமாத் துறையில் பெரும்புகழும், பேரும், பேறும் பெற்றிருந்த அவர்கள் கம்பன் கழகத்தோடு தொடர்பு கொண்ட நாளிலிருந்து, குறிப்பாகக் கம்பன் காப்பியத்திலும், பொதுவாகத் தமிழ் இலங்கியங்களிலும் காட்டிய ஆர்வத்தையும், ஈடுபாட்டையும் கண்டு நான் ஆச்சர்யமே பட்டுவிட்டேன். அது மாத்திரம் அன்று. இராமாயணம் போன்ற நம் நாட்டு இதிகாசங்கள் புகட்டும்

அறத்தையும், ஒழுக்கத்தையும், சீலத்தையும் இன்றைய இளைஞர்கள் சமுதாயத்திடையே பரப்பவேண்டும் என்பதில் அவர்கள் காட்டிய ஆர்வமும், அதற்காகச் செய்ய முன் வந்த பொருள் உதவியும் அளவற்றவை.

அத்தகையவர் அமரரான பிறகு, அவரால் அமைக்கப் பெற்ற, இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவோடு என் பெயரும் இணைந்திருக்க வேண்டும் என்ற ஆசை, கம்பன் கழக உறுப்பினர்கள், 'இச் சொற்பொழிவினை நீங்களே நிகழ்த்த வேண்டும்' என்று வலியுறுத்திய உடன் என் உள்ளத்தில் உண்டாயிற்று.

இவை அனைத்தின் பலனே, இந்த நூல் வடிவத்தில் வந்திருக்கும் சொற்பொழிவு.

சொற்பொழிவின் பொருளாய் எதனை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சிந்தித்துப் பார்த்தேன். கம்பனுடைய திறமையின் பல் கூறுகளையும், பல்வேறு சமயங்களில் நான் பேசியும் இருக்கிறேன்; எழுதியும் இருக்கிறேன்; அறிஞர் பெருமக்கள் பலர் அப்படியே செய்துள்ளனர்.

எனவே பொதுவாக இராமாயணமும், குறிப்பாகக் கம்பன் படைப்பும் பெருத்த அளவில் மக்களிடையே பரவி இருக்கின்ற இந்தக் கட்டத்தில் பொதுவாகக் கம்பனுடைய தனித்திறனைப் பற்றி மட்டும் பேசாமல், இராமாயணம் தோன்றியகாலம் தொட்டு, இன்று வரையிலும் சர்ச்சைக்கு இடமாக இருக்கும்—ஏன் எதிர் காலத்திலும் சர்ச்சைக்கு இடமாகவே இருக்கக் கூடிய—ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் கொண்டு அதனை ஒரு புதிய கோணத்திலிருந்து ஆய்ந்தால் அதனைப் பற்றிப்பிறர் மேலும் சிந்திப்பதற்கும், அதன் காரணமாகப் புதிய, புதிய, அணுகு முறைகள் உண்டாவதற்கும். வழி பிறக்குமே என்று எண்ணினேன்.

அதன் விளைவுதான் இந்த நூல்.

இந்நூலில் நான் கூறியிருக்கும் கருத்துகள் அனைத்தையும் என்னுடைய சொற்பொழிவு கேட்டவர், இந்நூலைப் படிப்பவர், அப்படியே ஏற்றுக் கொள்வர் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

ஆனால், ஒன்றை மட்டும் நான் எதிர்பார்க்கின்றேன்.

அறிஞர்கள் சிந்தனையைத் தூண்டும் அளவிற்கு என்னுடைய கருத்துகளுக்குச் சிறிதளவாவது மதிப்பு கிடைக்கும் என்பதுதான் அது.

என்னுடைய கருத்துகளைப் பிறர் மறுப்பதன் காரணமாக, எனக்கு எந்தவிதமான வருத்தமோ, வெறுப்போ உண்டாகாது என்று உறுதியாகச் சொல்கிறேன். காரணம் என்ன என்றால், அறிவோ, அறிவைக் கொண்டு ஆய்ந்து காணும் உண்மையோ, யாருடையனவும்—அவர் எவ்வளவு உயர்ந்தவர் ஆயினும், கற்றவர் ஆயினும்—ஏக போக உரிமையாக இருக்கமுடியாது. என்பதோடன்றி அவையே இறுதியானவை என்று எந்த குறிப்பிட்ட கட்டத்திலும் சொல்வதற்கும் இடம் இல்லை.

புதிய புதிய கோணங்களிலிருந்து என்னுடைய கருத்துகளையும், கூற்றுகளையும் ஆயும் அறிஞர்கள் இருக்கவே செய்வர்.

அப்படி யாரேனும் முன் வருவாரேயானால் அவர்களுடைய இத்தகைய அறிவுப் பணிக்கு நான் தூண்டுகோலாக இருந்தது பற்றி மகிழ்ச்சியே அடைவேன்.

சென்னை - 4.<br>9-8-1985

மு. மு. இஸ்மாயீல்

# பொருளடக்கம்

# மூன்று வினாக்கள்!

## 1. நுழை வாயில்

விடை பெறு வினாக்கள்

இராமகாதை தோன்றிய நாள் முதற் கொண்டு இன்றும், ஏன், என்றுமே, சர்ச்சைக்கும் விவாதத்திற்கும் உரியதான கதை நிகழ்ச்சிகளில் தலைமையானது 'வாலி வதம்'.

இந்த வாலி வதம் பற்றிக் காப்பியம் பேசுகின்ற சூழ்நிலைக்கு ஏற்ப, மூன்று வினாக்கள் எழுகின்றன.

ஒன்று: வாலி இராமனால் கொல்லப்பட வேண்டியவன் தானா?

இரண்டு: வாலியை இராமன் கொன்ற முறை சரியானதா?

மூன்று: வாலியைக் கொல்ல இராமன் கையாண்ட முறையினால் அவனுடைய பெயரும் புகழும் பங்கப் பட்டனவா?

விடை காண் முயல்வுகள்

இம் மூன்று கேள்விகட்கும் பல்வேறு அறிஞர்கள் அவ்வப்பொழுது விடை அளிக்க முயன்றிருக்கிறார்கள்.

பேச்சாக எழுத்தாக் எத்தனையோ சொற்பொழிவுகள் நிகழ்ந்திருக்கின்றன, கட்டுரைகளும் எழுதப் பெற்றிருக் கின்றன.

### யானறி அளவையில் இயம்புவன் சில

எனினும் இந்த மூன்று வினாக்களுக்கும் பதிலிறுக்கும் வகையில் ஒரு புதிய அணுகு முறையைக் கையாள்வதே என் நோக்கம். நான் அறிந்தவரையில் இந்த முறையில் அணுகி யாரும் இந்த வினாக்களுக்கு விடை இறுத்திருப்ப தாகத் தெரியவில்லை. அதே சமயத்தில் என்னுடைய அணுகு முறையும், நான் அந்த அணுகு முறையின் வாயிலாகக் காட்டும் விடைகளும் முற்றிலும் அறுதி யானவை என்று சொல்லிக் கொள்ளவும் நான் தயாராக இல்லை. ஏனெனில், மனிதனுடைய அறிவிற்கும், சிந்தனைக்கும், இடத்தினாலோ, காலத்தினாலோ, எல்லை கட்டிவிட முடியாது. நான் காட்டுவதை விடச் சிறந்த அணுகு முறையைப் பிறர் காட்ட முன்வரக் கூடும். அந்த அணுகு முறையின் காரணம் ஆக அவர்கள் அளிக்கும் விடைகளும் வேறாக இருக்க முடியும்.

### செய்தக்க செய்யாமை வேண்டா

இவ்வாறு எதிர்காலத்தில் வேறு விதமாகப் பேரறிஞர்கள் முடிவுகாண முற்படக் கூடும் என்ற காரணத்தினால், எனக்குச் சரி என்று தோன்றும் அணுகு முறையையும் விடைகளையும் பிறர்க்கு எடுத்து விளக்க முயலாமல் இருப்பேனேயானால் இலக்கிய ஆய்வுப் பணியில் நான் செய்ய வேண்டுவதனைச் செய்யத் தவறியவனாகி விடுவேன். இது எனக்கு மாத்திரம் பொருந்துவது அன்று. அனைவருக்கும் பொருந்துவதே ஆகும்.

### கொள்ளத்தக்க தள்ளத்தக்க

ஒரு காப்பியத்தைப் பற்றியோ, அது படைக்கும் பாத்திரங்களின் சிந்தனை, சொல், செயல் பற்றியோ, அந்தக் காப்பியத்தில் தோய்ந்த ஒருவன், தனக்குத் தோன்றும் கருத்துகளையும் முடிவுகளையும் எடுத்துக் கூறினால்தான் திறன் ஆய்வு வளர்ச்சிக்கு வழி கோலியவன் ஆவான்.

ஏனெனில், அதனைப் படிப்பவர்களுடைய உள்ளத்தில் அக்கருத்து ஒத்துக் கொள்ளக் கூடியதாக அமையலாம்; அன்றி தள்ளத் தக்கதாகவும் அமையலாம். அப்படி ஒத்துக் கொள்ளக் கூடியதாக அமையுமிடத்தும் கூட அதற்கு வேறு காரணங்கள் அடிப்படையாக இருக்க முடியும். அது போலவே தள்ளக் கூடியவை என்ற முடிவுக்கு வருபவர்கள், அதற்குரிய காரணங்களைக் காட்ட வேண்டிய கட்டாயத்திற்கு உட்படுபவர்களாதலின் அந்தக் காரணங்களைத் தேர்ந்து தெளிந்து எடுத்துக் காட்ட, அதன் மூலமாக இலக்கியத் திறனாய்வு தொடர்ந்து வளர்ந்து கொண்டே போகும்.

### வரம்பில் நின்று வழி காண்போம்

முன்னர் எடுத்து வைக்கப்பட்ட மூன்று கேள்வி கட்கும், கம்பனுடைய 'இராமகாதையின் காப்பியக் கட்டுக்கோப்பு' என்ற வட்டத்திற்குள் நின்று கொண்டே நான் விடைகாண முயல்கிறேன்; அப்படிச் செய்வதே பொருத்தமானதும் ஆகும். அதற்கு மாறாக காப்பியக் கட்டுக் கோப்பிற்கு அப்பால் போய் விட்டால், அணுகு முறை மாறுபட்டதாக ஆவதோடல்லாமல் கொடுக்கும் விடைகளும் பொருத்தமற்றவைகளாக ஆகிவிடும்.

இப்படிச் செய்யும் பொழுது கம்பனுடைய காப்பியத்தில் இருந்தே, அவன் கூறுகின்ற நிகழ்ச்சியினை

விளக்க வேண்டும். வேறு பலரும் இந்த முயற்சியில் முன்னர் ஈடுபட்டிருப்பதனால் அவர்களும் இந் நிகழ்ச்சிக்குப் பொருத்தமான, காப்பியப் பகுதிகளைத் தத்தம் நூல்களில் எடுத்துக் காட்டி இருக்கிறார்கள்.

அவர்களுடைய எந்த நூலையும் விமரிசிப்பது என் நோக்கம் அன்று. அதே சமயத்தில் நான் அணுகுகின்ற முறைக்கும், நான் காட்ட முயலுகின்ற முடிவுகளுக்கும் முற்றும் முரணாக அந்த நூல்களில் ஏதேனும் இடம் பெற்றிருக்குமேயானால் அதனைக் குறிப்பாகவோ நேரிடையாகவோ எடுத்துக் காட்ட வேண்டியது என் கருத்தினை வலியுறுத்துவதற்கு அவசியமாகும்.

கம்பனுடைய காப்பியக் கட்டுக் கோப்புக்கு உள் ளடங்கியே நான் இந்த நிகழ்ச்சியை அணுகுகிறேன் என்ற போதிலும், அந்தக் கட்டுக்கோப்பிற்குப் பின்னணியாக அமைந்த ஆதி இராமாயணம் ஆகிய வால்மீகியின் படைப்பையும், அதற்குப் பின் நம் நாட்டிலும் பிறநாடு களிலும் தோன்றிய இராமகாதைகளையும் அங்கும் இங்கு மாகச் சுட்டிக்காட்ட வேண்டியது அவசியம் ஆகிறது.

ஆதி தவிர்கிலேம்

அப்படி இருப்பினும் எல்லா இராமகாதைகளுக்கும் ஆதியான, மூலகாவியம் வால்மீகி முனிவரால் இயற்றப் பெற்ற இராமாயணமே. ஆகையால் அதனைப் பற்றி சிறிது விரிவாக எடுத்துக்காட்ட வேண்டியது தவிர்க்க முடியாததாகிறது.

இவை அனைத்தையும் பின்னணி ஆகக் கொண்டுதான் நான் முன்னர் வைத்த மூன்று வினாக்களுக்கும் அடிப்படை யாக அமைந்திருக்கிற நிகழ்ச்சியையும் அதனை ஒட்டி அந்தக் கேள்விகட்கு நான் கொடுக்க விரும்புகிற விடை களையும் அறிஞர்கள்முன் வைக்க விரும்புகிறேன்.

## 2. வால்மீகியும் அவர்க்குப் பின்னரும்

### மாபாரதம் காட்டும் மாறுபாடு விடுபாடு

இராமகாதையை முதன் முதலில் பாடியவர் வால்மீகி முனிவர். இராமாயணத்திற்கு அடுத்துத் தோன்றிய தாகக் கருதப்படுவது வியாச முனிவர் இயற்றிய மகா பாரதம்.

இந்த மகாபாரதத்தில், இராமகாதையின் நிகழ்ச்சிகள் எடுத்துக்காட்டாகவும், மேற்கோளாகவும், விளக்கமாகவும் காண்பிக்கப் பெறுகின்றன.

இராமகாதை நிகழ்ச்சிகள் சுருக்கமாக ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் எடுத்துக் கூறவும் பெற்றிருக்கின்றன.

அப்படிக் கூறப்பெறும் பொழுது, வால்மீகி முனிவர் கொடுத்திருக்கும் சம்பவங்களும், நிகழ்ச்சிகளும், வரிசையிலும், இடத்திலும் மாறுபட்டிருக்கின்றன.

அஃதன்றியும் வான்மீகி முனிவரின் இராமாயணத்தில் காணப்பெறும் நிகழ்ச்சிகள் சில விடுபட்டும் இருக்கின்றன; அதனுள் காணப் பெறுத நிகழ்ச்சிகள் சில சேர்க்கப்பெற்றும் இருக்கின்றன.

மகாபாரதத்தின் குட்டிக் கதையாக இராமாயணம் குறிக்கப்படுவதால், இராமாயண நிகழ்ச்சிகள் அனைத்தும் அங்கு இடம் பெற்றிருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது மிகை ஆகும். ஆகையால் சில நிகழ்ச்சிகள் கதையைச் சொல்லிக்கொண்டு போகும் வேகத்தில்விடுபட்டிருப்பதை நாம் புரிந்து கொள்ளலாம். எனினும் குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் இடம் மாறியோ, வரிசை மாறியோ காணப் பெறும் பொழுதும், புதிய நிகழ்ச்சிகள் சேர்க்கப் பெறும்

பொழுதும் தான், அவை வேண்டும் என்றே செய்யப் பெற்றிருக்கின்றன, என்று கொள்ளவேண்டி இருக்கிறது.

பரசுராமன் அகந்தை

மகாபாரதத்தில் வன பருவத்தில் தீர்த்த யாத்திரைச் சருக்கத்தில் இராமகாதை பற்றிய குறிப்பு வருகிறது. இங்கு இராமன், பரசுராமன் அகந்தையைப் போக்கிய செய்தி குறிப்பிடப் பெறுகிறது.

இது லோமசர் யுதிஷ்டிரர் இடத்தில் சொன்னதாக இடம் பெற்றிருக்கிறது. பரசுராமன் பார்க்கவராமன் என்று குறிப்பிடப் பெறுகிறுன். பிருகு வம்சத்தில் தோன்றிய ஜமதக்கினி முனிவரது குமாரன் ஆகையால் இவ்வாறு குறிப்பிடப் பெற்றிருக்கக் கூடும்.*

இங்கு நான் எடுத்துக் காட்டவிரும்புவது என்ன என்ருல் இவ்விருவருடைய சந்திப்பு, வால்மீகியில் கொடுக்கப்பட்டிருப்பது போல மகாபாரதத்தில் கொடுக்கப் பெறவில்லை என்பதுதான்.

வால்மீகி இராமயணத்தில் சீதா கல்யாணத்திற்குப் பிறகு, தசரதன் இராமன் முதலியோர் அயோத்திக்குத் திரும்பும் வழியில் பரசுராமன் எதிர்ப்படுகிருன்.

ஆனல் மகாபாரதத்தில் இப்பகுதியிலோ, தசரதனுடைய அரண்மனையில் விஷ்ணுவினுடைய அவதாரமாக இராமன் பிறந்திருப்பதைக் கேள்விப்பட்ட பரசுராமன், உண்மை அறிந்து கொள்ளும் ஆர்வத்தனுய் அயோத்திக்குச் செல்கிருன்.

முனிவன் வருவது அறிந்து அவனை எதிர்கொள்ள நகரத்தின் எல்லைக்குத் தன் குமாரன் இராமனைத் தசரதன்

---

* The Greater Ramayana by Dr. V. Raghavan. Page 10.

அனுப்பி வைக்கிறான். தொடுத்த வில்லனுய்த் தோன்றிய தோன்றலைக் கண்ட பரசுராமன் தன் வில்லை அவன் கையில் தந்து, வளைக்குமாறு கேட்கிறான். இராமன் நாண் கோத்து வில்வளைத்தபோது, தன்னுடைய அம்பையே அதில் தொடுக்குமாறு பரசுராமன் கேட்க, பரசுராமன் அகந்தைக்காக இராமன் அவனைக் கண்டிக்கிறான். அப்படிக் கண்டிக்கும் பொழுதுதான் இராமன் வாயிலாக வால்மீகி இராமாயணத்தில் இல்லாத செய்தி ஒன்று வெளிப்படுகிறது.

பரசுராமனுடைய அகந்தையால் தான் யார் என்பதனை அவன் புரிந்து கொள்ளவில்லை என்று சொல்லி இராமன் தன் விசுவரூபத்தைக் காட்டுகிறான்—கீதையில் அர்ச்சுனனுக்குக் கிருஷ்ணன் காட்டுவதைப்போல.

இந்த விசுவரூபத்தில் பிரபஞ்சம் முழுமையும் கண்ட பரசுராமன் தன் அகந்தை ஒழிய, இராமனை வணங்கி, அவனிடம் விடை பெற்றுக் கொண்டு மகேந்திர மலைக்குச் சென்று விடுகிறான்.

மகாபாரதத்தில் இப்படிக் குறிக்கப்பெறும் நிகழ்ச்சி வால்மீகி இராமாயணத்தில் இல்லை.

**இராமோ பாக்கியானம்**

மகாபாரதத்தில் வேறு ஒரு இடத்தில் இராமாயணம் இன்னும் சற்று விரிவாக இடம் பெற்றிருக்கிறது.

வன பருவத்தில் "இராமோபாக்கியானம்" என்ற தலைப்பில் 274 ஆம் ஸ்லோகம் முதல் 292 ஆம் ஸ்லோகம் வரையில் இடம் பெற்றிருக்கிறது.*

துரியோதனன் மைத்துனன் ஆன ஜெயத்ரதன் பாண்டவர்கள் வேட்டைக்குச்செல்ல, திரௌபதி தனித்து

* The Greater Ramayana by Dr. V. Raghavan. Page 11.

விடப்பட்டது அறிந்து, அவளை வன்முறையாகக் கவர்ந்து கொண்டு செல்கிருன். திரும்பி வந்த பாண்டவர்கள் ஜெயத்ரதனை வென்று திரௌபதியை மீட்டுக் கொண்டு வருகிருர்கள்.

திரௌபதி இவ்வாருக எடுத்துச் செல்லப்பட்டது குறித்து வருந்துகின்றனர், யுதிஷ்டிரர், மார்க்கண்டேய முனிவரிடம் இந்நிகழ்ச்சி தங்களுக்குப் பேரவமானம் கொடுத்துவிட்டது என்று சொல்லி வருந்தியபோது அவர், அவமானத்திலுைம், துக்கத்திலுைம் பாதிக்கப் பட்ட யுதிஷ்டிரருக்கு அமைதியும், ஆறுதலும் சொல்லும் வகையில் இராமனுடைய மனைவி ஆகிய சீதையை இராவணன் எடுத்துச் சென்ற கதையைக் கூறுகிருர்.

இந் நிகழ்ச்சியே ''இராமோபாக்கியாநம்'' ஆக அமைந்திருக்கிறது.

மிகச்சுருக்கமாக அமைக்கப்பட்டு இருப்பதில் ஆச்சர்யப்பட ஒன்றும் இல்லை. சில முக்கியமான நிகழ்ச்சிகள் விடுபட்டிருக்கின்றன. வேறு சில நிகழ்ச்சிகள் தொட்டுக்காட்டப் பெற்றிருக்கின்றன. அவ்வளவு முக்கிய மல்லாத நிகழ்ச்சிகள் சில விரிவுபடுத்தப் பெற்றுள்ளன.

இங்கும் அங்குமாக வால்மீகியிலிருந்து இக்கதைச் சுருக்கம் மாறுபடுகிறது. உதாரணம் ஆக வால்மீகி இராமாயணத்தின்படி இராவணனுடைய அங்கங்களை இராமன் அறுத்தெறிய அவை மீண்டும் முளைத்தன. இங்கோ இலக்குவன் கும்பகர்ணனுடன் போரிடும் பொழுது இவ்வாறு நடந்ததாகக் குறிப்பிடப்பெறுகிறது.

இன்னொரு முக்கியமான மாறுபாட்டையும் காண லாம். இராவணனை அழிப்பதற்காகத் தேவர்கள் திருமாலிடம் முறையிட்டுக் கொண்டபோது திருமால்,

தான் இராமனுக அவதரித்து இராவண வதத்தை நிகழ்த்து வதாக அவர்களுக்கு உறுதி அளிக்கிருர். அவ்வேளேயில் பிரம்மன், தேவர்களே, இராமனுக்கு இப்பணியில் உதவு வதற்காகப் பொருத்தமான உருக்களேப் பெற்று உலகில் பிறக்கக் கட்டளே இடுகிருன். இதன்படி தேவர்கள் வானரராகப் பிறக்கின்றனர்.

துந்துபி-மந்தரை

துந்துபி என்ற கந்தர்வப்பெண்ணே இராவண வதம் நடைபெறுவதில் இராமனுக்கு உதவுவதற்காக மந்தரை என்ற கூனியாகப் பிறக்குமாறு பிரம்மன் பணிக்கிருன். இச்செய்திகள் ''இராமோபாக்கியாநத்தில்'' கூறப் பெறுவன.

இராமனுக்கு முடிசூட்ட தசரதன் தீர்மானித்திருக் கிருன் என்பதைக் கேட்ட கைகேயி, தசரதனிடத்து அவள் எந்த நிலேயில் இருந்துகொண்டு தனக்கு அவன் முன் அளித்த வரங்களேப் பெற்ருள் என்பதில், வால்மீகியி னின்றும் இராமோபாக்கியாநம் பெரிதும் வேறுபடு கிறது.

''எல்லா ஆபரணங்களாலும் அலங்கக்ரிகப்பட்ட வளும், யாக வேதிபோல் மெல்லிய இடையுள்ளவளும், உத்தமமான ரூபத்தைத் தரித்திருக்கின்றவளுமான அந்தக் கைகேயியானவள் அந்த மந்தரை சொல்லே அறிந்து கொண்டு, ஏகாந்தத்தில் பர்த்தாவை அடைந்து, நகைப் பவள் போலவும், அழகிய புன்னகையுடன் ஆசை காட்டு கிறவள் போலவும் அணுகினுள்''

இவ்வாறு இராமோபாக்கியாநம் சொல்கிறது.

கடலேக் கடந்து இலங்கை அடைவது எப்படி என்பது பற்றி ஆலோசிக்கும் இடத்து, ஓடங்களாலும், தெப்பங்

களாலும் கடலைத் தாண்ட முடியுமா என்ற ஒருயோசனை விவாதிக்கப்பெற்று முடிவில் கைவிடப் பெற்றது. இது இராமோபாக்கியாநம் குறிப்பது.

இதே செய்தி ஸ்கந்த புராணத்திலும் இடம் பெற்றுள்ளது. ஆனால் வால்மீகியில் இல்லை. *

எல்லாவற்றிற்கும் மேலாக இராமோபாக்கியாநத்தில் கும்பகர்ணனைக் கொல்வது இலக்குவன்; இராமன் அல்லன்.

அடுத்து இராவண வதத்தின் பின் சீதையை அழைத்து வருமாறு இராமன் கட்டளை இட்டபோது அவள் தன் விருப்பத்திற்கு மாறான போதிலும், அவன் ஆணை ஏற்று, குளித்து அலங்கரித்துக் கொண்டு அவன் முன் தோன்றினாள் என்பார் வால்மீகி.

இராமோபாக்கியாநப்படியோ, சீதை தன் விருப்பப் படியே புழுதி படிந்த உடலோடும், மாசடைந்த துகிலோ டும் இராமன்முன் தோன்றுகிறாள்.

இறுதியாக வால்மீகத்தில் குறிப்பிடப்பெறும் சீதை யின் அக்கினிப்பிரவேசம் இராமோபாக்கியாநத்தில் இடம் பெறவில்லை.

இப்படியாக இராமாவதாரத்திற்கு அடுத்ததாகிய கிருஷ்ணாவதாரம் பற்றிய மகாபாரதத்திலேயே இராம காதை, வால்மீகி சொல்லியவாறு அன்றி,மாறுபாடுகட்கு உள்ளாயிற்று என்பதனை எடுத்துக் காட்டுவதே என் நோக்கம். ஆகையால் அதனை உணர்த்த இம் மேற்கோள் களே போதுமானவை ஆகும்.

உண்மையில் மற்றும் பல வேறுபாடுகளும், மாறுபாடு களும் இருக்கத்தான் செய்கின்றன.

---

* The Greater Ramayana by Dr. V. Raghavan, Page 19,41.

### பிறநூல்களில் இராம வரலாறு

ஹரிவம்சத்தில் விஷ்ணுவின் அவதாரமான இராமனின் கதை சுருக்கமாக இடம் பெறுகிறது.

அதுபோலவே விஷ்ணுபுராணத்திலும் இடம் பெறுகிறது.

பாகவதத்தில் விஷ்ணுவின் அவதாரமாகிய இராமன் பற்றிய கதை இடம் பெறுவது இயற்கையே. அதுபோலவே மத்ஸ்ய புராணத்திலும் இராமகாதை குறிப்பிடப்பெறுகிறது.

வாயு புராணத்திலும் இக்கதை இடம்பெறுகிறது. இங்கு இராவணனுடைய உருவத் தோற்றம் குறிப்பிடப் பெறுவதில் மாற்றம் காண்கிறோம்.

இருபதுகரம், தலை ஈர் ஐந்து, பெற்ற அத்திருவிலிக்கு நான்கு கால்கள் இருந்தன என்ற குறிப்பு உள்ளது.

காளிதாசருடைய இரகுவம்சத்தில் (12 ஆம் சர்க்கம் —88ஆம் ஸ்லோகம்) இராவணன் தொடைகள் பன்மையில் குறிக்கப்பெறுகின்றன.

வாயு புராணக் குறிப்பையும் வைஜயந்தி நிகண்டுவையும் ஆதாரமாகக்கொண்டு உரையாசிரியர்கள் இங்கு கொடுக்கப்படும் பன்மை என்பது, நான்கு என்ற எண்ணே என்பர்.

### கூர்மம் காட்டும் மாயாசீதை

கூர்மபுராணத்திலும் இராமகாதை சுருக்கமாகக் கொடுக்கக் பெற்றுள்ளது. எனினும் இதில் ஒரு புதிய செய்தி தரப்பெறுகிறது.

சந்நியாசி வேடத்தில் வந்து இராவணன் சீதையை அபகரிக்க முயல்கிறான். அப்பொழுது சீதை அக்கினி பகவானைப் பிரார்த்திருக்கிறாள்.

அக்கினிபகவான் சீதையின் உதவிக்கு வருகிறான். இராவணனை அழிக்கும்பொருட்டு அக்கினிபகவான் ஒரு மாயா சீதையை சிருஷ்டித்து வைத்து விட்டு உண்மையான சீதையை எடுத்துக் கொண்டு விட்புலம் சார்கிறான்.

இராவணன் அம் மாயா சீதையையே கொண்டு விண்ணின் ஏகி, நஞ்சு இயல் அரக்கியர் நடுவண் சிஞ்சுப வனத்திடைச் சிறை வைக்கிறான்.

இராவணவதத்திற்குப் பின் சீதைபற்றி இராமனுக்குச் சந்தேகம் எழும்பொழுது, சீதை தீக்குளித்துத் தன் தூய்மையை நிலை நாட்ட முயல்கிறாள். அப்பொழுது அங்கியங்கடவுள் அம் மாயா சீதையை எரித்துவிட்டு உண்மையான சீதையை இராமன் முன் கொண்டு வந்து விடுக்கிறான்.

இராமன் தன்முன் தோன்றிய அங்கியங்கடவுளை வணங்குகிறான். அப்பொழுது தீப்புத்தேள் "இதுதான் உன்னுடைய மாபெருந்தேவி. எந்தப் பார்வதியை மகிழ்வித்தாளோ அந்தப் பார்வதிபோலத் தூய்மை யானவள்; நான் படைத்த மாயா சீதையைத்தான் தன்னுடைய அழிவுகாலம் நெருங்க இராவணன் தூக்கிச் சென்றான்; எனவே இந்தச் சீதையை நீ ஏற்றுக்கொள்; நீ நாராயணனே என்பதனையும் உணர்ந்து கொள்" என்று கூறிவிட்டு அனைவரது வணக்கத்தையும் ஏற்றுக் கொண்டு மறைந்தான்.

இச்செய்தி கூர்மபுராணம் கூறுவது.

---

* The Greater Ramayana y Dr. V. Raghavan. Pages 37—38.

அக்கினி புராணம் கூறுவது

அக்கினிபுராணத்திலும் திருமால் அவதாரங்கள் குறிப்பிடப் பெறும் பொழுது இராமகாதையும் இடம் பெறுகிறது. இதில் காணப்படும் செய்தி என்ன என்ருல் இராமன் மந்தரையை, அவள் கால்களைப் பற்றி இழுத்தான் என்பதும், அதன் காரணமாகவே அவளுடைய வெறுப்புக்கும், பகைமைக்கும் ஆளானுன் என்பதும் ஆகும்.

சிவபுராணம் செப்புவது

சிவமகா புராணத்திலும் இராமகாதை குறிப்பிடப் பெறுகிறது. இதில் உணர்த்தப்படும் தத்துவம் என்ன என்ருல் சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் தொழில் முறைப் பிரிவு உண்டே அன்றி அவர்கள் ஆளுமையில் வேறுபாடில்லை என்பதாகும்.

இதனை ஒரு நிகழ்ச்சியின் மூலம் இப்புராணம் உணர்த்த முயல்கிறது.

சிவனும் சதியும் ஒருமுறை ஆனந்தமாக உலா வந்து கொண்டிருந்தபோது தண்டகாரண்யத்தை அடைகிருர்கள். அங்கு இரு சகோதரர்களைக் காண்கிருர்கள். வருத்தம் தோய்ந்த முகத்தொடும் அழுகை நீர் அருத கண்ணொடும் இருப்பவன் இராமன் என்பதையும், அவன் தன் துணைவி சீதையை இழந்திருக்கிருன் என்பதையும், சகோதரர்கள் இருவரும் அவளைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிருர்கள் என்பதையும், சிவன் தெரிந்து கொள்கிருன்.

இராமன் எதிரில் சென்று சிவன் அவனை வணங்குகிருன். இதனைக் கண்ட சதி வியப்படைகிருள்.

---

* The Greater Ramayana by Dr. V. Raghavan. Page 38.

"எல்லாக் கடவுளரும் உம்மை வணங்க, நீர் போய் இவரை ஏன் வணங்குகிறீர்!" என்று கேட்கிறாள்.

அப்போது சிவன் தன் சதியிடத்து அச்சகோதரர் இருவரும் இராமனும், லக்ஷ்மணனும் ஆவார்கள் என்றும், அவர்கள் மகாவிஷ்ணு, ஆதிசேஷன் ஆகியோரின் அவதாரங்கள் என்றும் சொல்கிறான்.

இந்த பதில் சதிக்குத் திருப்தி அளிக்கவில்லை என்பது கண்ட சிவன் சதியை நோக்கி, அவளே போய் இராமனுடைய பெருமையை சோதித்து அறியலாம் எனச் சொல்கிறாள்.

அப்படியே செய்ய முற்பட்ட சதி, இராமனைச் சோதிக்க விரும்பி, சீதையின் உரு எடுத்துக் கொண்டு இராமனை அணுகுகிறாள்.

அந்த உருவத்திலும் சதியைத் தெரிந்துகொண்ட இராமன், அவளுக்கு உரிய மரியாதையைச் செய்து, சிவன் எங்கே உள்ளான் எனவும், அவள் மாத்திரம் தனித்து வந்தது ஏன் எனவும் வினவுகிறான்.

அப்பொழுதுதான் சதி, சிவன் தனக்குக் கூறிய இராமன் பெருமையை உணர்ந்து கொள்கிறாள். அஃதன்றியும் சிவன் இராமனிடத்து இத்தகைய பெரு மரியாதையை எப்படி வளர்த்துக் கொண்டான் என்றும் இராமனைக் கேட்கிறாள்.

இராமன், பிரபஞ்சத்தின் வேலைகளைப் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மூவரும் பிரித்துக் கொண்டிருப்பதையும், சிவனுடைய விருப்பப்படியே, உலக க்ஷேமத்திற்காகத் தானே இராம, இலக்குவ, பரத, சத்ருக்னர்கள் ஆக, அவதரித்திருப்பதனையும், தான் கானகம் வர

நேரிட்டதையும் சீதையைத் தேடிக்கொண்டு இருப்பதையும் கூறுகிறான்.

அத்துடன் இராமன் சீதையைக் கண்டுபிடித்து இராவணனை, இராக்ஷஸர்களை வதைப்பதற்குத் தன்னை ஆசீர்வதிக்க வேண்டும் என்றும் சதியை வேண்டிக்கொள்கிறான்;[1] வணங்கவும் செய்கிறான்.

நந்தி இட்ட சாப விளக்கம்

ஸ்கந்த புராணத்திலும் இராம காதை பல இடங்களில் குறிப்பிடப்பெறுகிறது. நந்திதேவர் இராவணனுக்குக் கொடுத்த சாபம் விவரிக்கப்பெறுகிறது. தேவர்கள் இராவண வதத்திற்காக விஷ்ணுவைப் பிரார்த்தித்துக் கொண்டபொழுது சிவனுடைய ஒரு அம்சமே அனுமனாகப் பிறந்தது என்றும், விஷ்ணு இராமனாகவும், ஆதிசேஷன் லக்ஷ்மணன் ஆகவும்,தோன்ற விஷ்ணுவின் இரு கரங்களும் (வளையொடு, திகிரியும்) பரத சத்துருக்கனர் ஆகவும் தோன்றின என்றும், சீதை, தீயிடைக் குளித்த அத்தெய்வக் கற்பினள் ஆன வேதவதியே என்றும் குறிப்பிடப் பெறுகிறது.[2]

பிரம்மவைவிரதா என்ற மகாபுராணமும் அனுமன் சிவனின்அம்சத்தில் ஒரு பகுதியே என்று குறிப்பிடுகிறது.

வால்மீகியிலோ "வாயுதேவரிடம் வச்சிரத்துக்கு ஒப்பான சரீரம் உள்ளவனாகவும், கருடனுக்கு ஒப்பான வேகம் உள்ளவனாகவும் அனுமான் தோன்றினான்" என்ற குறிப்பு உள்ளது (பாலகாண்டம் - 17ஆம் சர்க்கம்.)

கம்பன் இப்பகுதியில்,

---

1. The Greater Ramayana by Dr. V. Raghavan. Page 39—40.
2. " " 46.

''வாயு, 'மற்று எனது கூறு மாருதி' எனலும், மற்ருேர்,
'காயும் மற்கடங்கள் ஆகி, காசினி அதனின்மீது
போயிடத் துணிந்தோம்' என்ருர்; புராரி,
'மற்று யானும் காற்றின்
சேய்' எனப் புகன்ருன்; மற்றைத் திசையுளோர்க்குஅவதி
உண்டோ—
(கம்பன் 206)[1]

என்று குறிப்பிடும் பாடல் நோக்கத்தக்கது.

இப்பாடல் (206) அநுமன் வாயுவின் அம்சமாகவும், சிவனது அம்சமாகவும் தோன்றிஞன் என்று குறிக்கிறது.

கம்பன், வால்மீகியையும், ஸ்கந்த புராணத்தையும் சேர்த்து எடுத்துக்கொண்டதன் விளைவாக இங்ஙனம் அமைக்கப்பட்டு இருக்கலாம்.

பிரம்ம புராணத்தில் இராமகாதை

பிரம்ம புராணம் ஒரு மகாபுராணம். அது ஆதி புராணம் என்றும் குறிப்பிடப் பெறும். இந்நூலில் மூன்று இடங்களில் இராம காதை எடுத்துக்காட்டப் பெறுகிறது. அதில் ஒன்று நம் கவனத்திற்கு உரியது.

சீதை தீக்குளித்த பிறகு, அவளைத் தன் மடிமீது எடுத்து வைத்துக்கொள்ள இராமன் விரும்பியபொழுது அங்கதனும், அநுமனும் குறுக்கிட்டு அயோத்தி நகர மக்கள் இந்த அக்கினி சுத்தியை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்றும், அந்நகர் சேர்ந்தபின், அந்நகர மக்களுக்கு முன் ஓர் அக்கினி சுத்தி செய்த பிறகு சீதையை இராமன் எடுத்து வைத்துக்கொள்ளலாம் என்றும் கூறுகிருர்கள்.[2]

---

1. சென்னைக் கம்பன் கழகப்பதிப்பின் படி கம்பராமாயணப் பாடல் தொடர் எண்

2. The Greater Ramayana by Dr. V. Raghavan. Pages 4-344.

முன்னர்க் குறிப்பிட்ட பிரம்ம வைவிரதா என்ற மகாபுராணத்தில் மேலும் பல செய்திகள் இடம்பெறுகின்றன.

பொன் மான் நிகழ்ச்சியின்பொழுது, அம்மூவர் ஒருங்கு இருந்தபொழுது, அவர்முன் ஓர் அந்தணன் வருகிறான். அந்த அந்தணன் இராமனிடத்துத் தனித்து அந்தரங்கமாகச் செய்தி ஒன்று சொல்லி, அது இலக்குவனும் அறியக் கூடாது என்றும் குறிப்பிட்டமைகிறான்.

அவ்வந்தண வடிவம் தாங்கி வந்தவன் அக்கினித் தேவனே. அவன் இராமனிடத்தில் சீதையைத் தான் எடுத்துக் கொண்டு போகப் போவதாகவும், இராவண வதத்திற்குப் பிறகு (சாயா) சீதை தீக்குளிக்கும்பொழுது மீட்டும் அவளை அளிப்பதாகவும், இடையில் நடைபெறும் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் தான் ஒரு மாயா சீதையைச் சிருஷ்டித்துத் தருவதாகவும் சொல்கிறான்.

இராமனும் இதற்குச் சம்மதிக்கிறான். இராவண வதத்திற்குப் பின்னால் நடந்த தீக்குளிப்பிற்குப் பிறகு உண்மையான சீதை இராமனிடம் சேர்ப்பிக்கப் பெறுகிறாள்.

தீக்குழிப் புக்க மாயா சீதை (சாயா சீதை எனப்படுகிறாள்) அக்கினி ஏவல் ஏற்று, புஷ்கரம் சென்று, தவம் நோற்று, இலக்குமி தேவியாக, தேவ உலகம் சார்கிறாள்.

அதுவன்றியும் இப்புராணம் அடுத்து வரும் துவாபர யுகத்தில் அவளே திரௌபதை ஆகத் தோன்றுவாள் என்றும் கூறுகிறது. *

**நாரதீய புராணம் நவில்வது**

நாரதீய மகாபுராணம் இராமகாதையைக் குறிப்பிடுகிறது.

---

* The Greater Ramayana by Dr. V. Raghavan. Page 45

அது இராம, பரத, சத்ருக்கன, இலக்குவன் ஆகிய நால்வரையும் விஷ்ணுவின் சதுர்வியூக மூர்த்திகளின் அவதாரங்களாகக் குறிப்பிடுகிறது.

அதாவது —

நாராயணன் — இராமன் ஆகவும்
பிரத்தியும்நன் — பரதன் ஆகவும்
அநிருத்தன் — சத்துருக்கனன் ஆகவும்
சங்கர்ஷணன் — இலக்குவன் ஆகவும்

அவதரித்தனர் என்பதாம்.

இவ்வாறே விஷ்ணு தர்மோத்தரம் என்னும் உப புராணமும் குறிப்பிடும்.*

பாத்ம புராணம் பகர்வது

பாத்ம புராணமும் இராம காதையை விரிவாகப் பேசும். வால்மீகி இராமாயணப்படி இராவண வதத்திற்குப்பிறகு, இலங்கை நகர்க்குள் நுழையுமாறு இராமனை விபீஷணன் வேண்டிக் கொண்டும், இராமன் ஏற்றுக் கொள்ளவில்லை.

இப்புராணம், இராமன் உயர்நிலை ஒன்றில் நின்றவாறு இலங்கை நகரைச் சுற்றும் முற்றும் பார்க்கிறுன் என்றும், குறிப்பாக அசோக வனத்தையும், கோதை நல்லாட்குக் குளிர் நிழல் தந்த சிஞ்சுப மரத்தையும் காண்கிறுன் என்றும், அப்பொழுது மயக்கமுறுகிறுன் என்றும் கூறும்.

இப்புராணம் இராமவதாரம் பற்றிக் குறிப்பிடும் பொழுது பல புதிய செய்திகளைக் கூறுகிறது. தேர்வல் தயரதற்குத் தேவியர் நால்வர் எனவும், அவர்கள் கௌசல்யா, சுமித்திரா, சுரூபா, சுவேசா என்ற

* The Greater Ramayana by Dr. V. Raghavan. Pages 47 & 64

பெயரினர் எனவும் கூறும். மகப் பேற்றை விரும்பிய கௌசல்யை இறைவனைப் பிரார்த்தித்துக் கொள்கிருள். மன்னு புகழ் மன்னன் மனைவியர் மணிவயிறு வாய்க்கப் பெறுகின்றனர். பின்னர் கௌசல்யை இராமனையும், சுமித்திரை இலக்குவனையும், சுரூபா பரதனையும், சுவேசா சத்துருக்கனனையும் ஈன்றெடுக்கின்றனர். அம்மக்களது ஜாதகர்ம நாமகரண நிகழ்ச்சியைப் பிரம்மனே [ முன் நின்று நடத்திவைத்தான் எனவும் இந் நூல் குறிப்பிடும்.

இராமனுடைய பிள்ளை விளையாடல்களை இந் நூல் குறிப்பிடும். ஒரு முறை அவன் பிரம்மராக்ஷஸனுல் பீடிக்கப்பட்டு மயக்கமுற, வசிஷ்டர் அதனை நீக்கினுர் என்றும், அதன் பின்னர், இராமனுக்கு அனைத்துள மறை களையும், சாத்திரங்களையும் உபதேசித்தார் எனவும் குறிப்பிடும்.

இங்கு இராமன் திருமணம் சில வேறுபாடுகளுடன் இடம் பெற்றுள்ளது. விதேக மன்னன் ஒருமுறை வேள்வி செய்தபோது அத்தீயிடைத் தோன்றியவளே அவன் குமாரத்தி ஆகிய வைதேகி. இவளை இராமனுக்குத் திருமணம் செய்து தர முன் வந்தான் என்றும் தசரதனும் அவனைச் சார்ந்தவர்களும் திருமணம் குறித்து அந்நாடு அடைந்தனர் எனவும் இப்புராணம் கூறும்.

இப் புராணத்தில் இடம்பெற்றிருக்கும் வியக்கத்தக்க, வேடிக்கையான செய்திகளும் உண்டு.

விதேக மன்னன் இரவில் சிவனையும், பிற தெய்வங் களையும் வழிபடுபவன். சிவன் அவன் முன் தோன்றி வைதேகியை மணப்பதற்குப் பலர் முன் வருவர் என்றும், இராமனே அவள் கணவன் ஆக அமைவான் என்றும், கூறி தன்னுடைய வில்லை அம் மன்னனிடம் தந்து,

அதனை வளைப்பவற்கே வைதேகியைத் திருமணம் செய்து கொடுக்கவேண்டும் என்றும், இச் செய்தியைப் பிறமன்னர்க்கு அறிவிக்க வேண்டும் என்றும் கூறுகிறான்.

தேவர்கள், இராக்ஷஸர்கள், மன்னர்மரபினர், அந்தணர் எனப் பலர் வில்லை விளைக்க முன்வந்து முயன்றும், முயற்சியில் இடைக்கண் முரிந்தே போயினர். இராமன் மட்டுமே தன் முயற்சியில் வென்று சீதையை அடைகிறான்.

இங்கு அதிசயிக்கத்தக்கது என்ன என்றால், வில்லை வளைத்துச் சீதையை அடைய முயன்ற அந்தணர்களில் விசுவாமித்திரரும் ஒருவர் என்று இந்நூல் குறிப்பது ஆகும்.

மேலும் இந்நூல்படி தயரதன் இராமனுக்கு இளவரசப் பட்டம் சூட்டியபின் மகிழ்ச்சியோடு வாழ்கிறான். அந்த நிலையில் பொறாமை அடைந்த பரதனுடைய தாய், தயரதனிடம் இராமன் பதினான்கு ஆண்டுகள் காட்டுக்குச் சென்று வாழவேண்டும் என்றும், பரதனே நாட்டை ஆளவேண்டும் என்றும் கேட்கிறாள். தயரதன் எப்படியோ சம்மதித்து விடுகிறான். தயரதனிடத்து வசிட்டர் வரப்போகும் நிகழ்ச்சிகளை முன் கூட்டியே எடுத்துச் சொல்கிறார். இராமன் கானகம் செல்வது, சீதை அபகரிக்கப்படுவது, இராக்ஷஸர் கள் கொல்லப்படுவது, பின்னர் இராமன் அயோத்தி திரும்பி நாட்டை ஆள்வது, என்பன அவற்றுள் சில.

### வீசிய வில் விளைந்தது அணையாய்

இதில் காணப்படும் மற்றொரு செய்தி: கடற்கரை அணுகிய இராமன், சிவனை வணங்கி, தான் எப்படிக் கடலைக் கடப்பது என வினவுகிறான். சிவன் தன்னுடைய வில்லை அவனுக்குக் கொடுக்கிறான்.

இராமன் அந்த வில்லே, விரிகடல் பரப்பில் எறிய அதன் வழி இராமன் முதலியோர் சேனைசூழ அக்கரை அடைகின்றனர்.

அதிகாயன், இராவணன் இராமனைச் சிறைப்படுத்தி சீதை முன் கொண்டு நிறுத்தி, அவள் கண்காண, அவனைக் கொல்லத் திட்டமிட்டிருக்கிறான் என்று இராமனிடம் சொல்கிறான்.

மேலும் இப்புராணப்படி இலங்கையின் தலைவாயில் முகப்பில், ஐந்தலைய கொடும்பாவி ஒன்று இருக்கும் என்றும், அது நொறுக்கி வீழ்த்தப் பெறும் பொழுது இராவணன் கொல்லப் பெறுவான் என்று சுக்கிரன் விதித்திருப்பதாகவும், கூறப் பெறுகிறது. மேலும் இராமனிடம் அக் கொடும் பாவியை நொறுக்கி வீழ்த்திய பின் பாதலம் புகவேண்டும் என்பதும் கூறப் பெறுகிறது.

இராமனும் அவ்வாறே அவ்வைம்முக உருவினைச் சிதைத்து வேறுக்குகிறான். அப்போது அவன் உடன் இருந்த அதிகாயன், வித்யுந்மாலின் என்பார் இராமனிடம் தங்களைக் காக்கக் கோருகின்றனர். அதன்பின் இராமன் சேனையுடன் இலங்கை நகர்க்குள் நுழைகிறான்.

போர் தொடங்குகிறது. அரக்கர் பலர் அழிவு எய்து கின்றனர். பல அரக்கர் தலைவர்கள் வீந்துபடுகின்றனர்.

அப்பொழுது வீடணன் இராவணனிடம், இராமனைச் சரண் அடையுமாறு அறிவுரை கூறுகிறான். இராவணன் அதனை ஏற்க மறுக்கவே, வீடணன் அவனைப் பிரிந்து இராமன் பக்கல் சேர்கிறான்.

இந்தவாறு இராவணனை அடைந்த வீடணன் இராவணனது உயிர் நிலை அமைந்து உள்ள அவனது

அங்கத்தைக் குறிப்பிட்டு அவ்விடை அம்பு பொருத்தின் மாள்வான் என்றும் கூறுகிருன்.

அவ்வாறே இராமன் வில் தொடுத்து, கணை ஏவி, ஆவி போக்குகிருன்.

இப்படி இராவணன் கொல்லப்பட்ட பின்னரே கும்பகருணன் கொல்லப்படுகிருன். வீடணன் இராவணற்கும் மற்றையோர்க்கும் ஈமக்கடன்கள் செய்கிருன்.

பின் இராமன் வீடணனை இலங்கை வேந்தனுக்கி அவ்விடத்தே ஒரு சிவன் கோயிலையும் அமைக்கிருன்.

இராமன் இதன் பின்னர் அயோத்தி நகர் சேர்ந்தமை சொல்லப் பெறுகிறது. *

நரசிம்ம புராணம் கூவில்வது

நரசிம்ம புராணம் என்பது ஒரு உப புராணம். விஷ்ணுவின் அவதாரங்களை விளக்கும் வகையில் இராமாயணம் இந்நூலிடை குறிப்பிடப் பெறுகிறது. மார்க்கண்டேய முனிவர் வாயிலாக இராமகாதை சுருக்கமாகக் கூறப்பெறுகிறது.

இராமன் சிவ தனுசு தன்னை முறித்தபிறகு, அப்படி முறிக்க முயன்று தோற்ற பிற மன்னர்கள், ஒரு சேர இராமனை எதிர்க்கின்றனர். அப்போரில் இராமன் வெற்றி பெறுகிருன்.

பிறிதொரு செய்தி என்ன என்ருல், சூர்ப்பணகை இராமனிடத்து, தன்னை அவன் மனைவியாக ஏற்றுக் கொள்ளவில்லை எனினும், இலக்குவனுவது தன்னை மனைவியாக ஏற்க, அவனைப் பணிக்கும் வகையில் ஓலை

* The Greater Ramayana by Dr. V. Raghavan pages 47-59

ஒன்று எழுதித் தரக் கோருகிருள். இராமனும் ஓர் ஓலை எழுதி அவள் கை அளிக்கிருன்.

அவ்வோலையில், கொணரும் சூர்ப்பணகையின் மூக்கரிய வேண்டும் என்ற குறிப்பு இருக்கக் கண்ட இலக்குவன் அவ்வாறே செய்கிருன்.

மற்ருெரு புதுமையான செய்தி ஒன்றும் இந்நூலிடை உளது. வால்மீகியில், யுத்த சமயத்தில் இராவணன் மந்திரிகளில் ஒருவனுகிய வச்சிரதம்மிஷ்டிரன் ''அரக்கர்கள், அயோத்தியிலிருந்து பரதன் தூதுவர்கள் வருவது போல, மாறு வேடமுற்று இராமனை அணுக வேண்டும். அவனும் மெய் என நம்புவான். எதிர்பாரா வகையில் அவர்களைத் தாக்கி, இராமன், மற்று முள்ளோரை அழிக்க வேண்டும்'' என்று யோசனை கூறுகிருன்.

இந்த நரசிம்ம புராணமோ, இதனை வேறு ஒரு கட்டத்தில் ஆள்கிறது. சீதா அபகரணப் பகுதியில் இராவணன் சீதையிடத்து, ''பரதன் அயோத்தியிலிருந்து வந்திருக்கிருன். அவன் சற்றுத் தொலைவில் இராமனுடன் பேசிக் கொண்டு இருக்கிருன். உன் மகிழ்ச்சிக்காக மான் பிடிக்கப் பெற்றுவிட்டது. நீ, இலக்குவன், இராமன் சேர்ந்தார் அனைவரும், இவ் விமானத்தில் ஏறி அயோத்தி அடைந்துவிடலாம். ஏறுக'' எனச் சொல்கிருன். நம்பிய நங்கை விமானத்தில் ஏறிவிடுகிருள். விமானம் இலங்கை நோக்கிச் செல்கிறது.

இந்தப் புராணத்தில் காணப் பெறும் மற்ருெரு செய்தியாவது : சுயம் பிரபை வானரர்களிடம் இராமன் வரலாறும், சீதை அபகரிக்கப்பட்டதும், தனக்குத் தெரியும் என்று கூறி அவர்களை மகேந்திர மலைநோக்கிச் செல்லப் பணிக்கிருள்,

அங்கு உள்ள சம்பாதியைச் சந்திக்கச் சொல்கிறாள். அநுமனே சீதையைக் கண்டு வரத்தக்கவன் எனறு கூறி ஆசீர்வதிக்கிறாள். *

மேற்கூறிய அனைத்தும் கம்பன் காலத்திற்கு முன்னர் ஆரியத்தில் தோன்றிய நூல்கள்.

அவற்றிலிருந்து வால்மீகியினுடைய இராமகாதை எவ்வெவ்வாறெல்லாம் திரிபும், மாற்றமும் பெற்று பல்வேறு நூல்களில் இடம் பெற்றுள்ளன என்பதைக் கண்டோம்.

விரிவஞ்சி விடப்பட்டன பல செய்திகள். இவையே அன்றியும், "இராமாயணம்" என்ற பெயரின ஆக நூல்கள் பல தோன்றியுள்ளன.

இராமாயணப் பேர் பெறு நூல்கள்

அக்கினி வேஸ்ய இராமாயணம்
அத்யாத்ம இராமாயணம்
அற்புத இராமாயணம்
சங்கக இராமாயணம்
சதகோடி இராமாயணம்
மந்திர இராமாயணம்
யோக_வாசிஷ்ட இராமாயணம்
ஸ்ரீதர இரா‌ாாயணம்

என்பன அவற்றுள் சில.

ஆரியத்தில் இவ்வாறு பல இராமாயணங்கள் தோன்றின. அதுவன்றியும் இராமாகாதையை எடுத்துக் கூறும் வேறு பல நூல்களும் உள்ளன.

இவை பலவற்றாலும், தெளிவாக வெளிப்படுவது என்னவென்றால் கம்பன் காலமாகிய ஒன்பதாம்

---

* The Greater Ramayana by Dr V. Raghavan. Pages 60-63

நூற்றுண்டின் முன்னர், ஆரியத்தில் இராம்காதை வால்மீகியால் பாடப்பெற்றதன் பின்னர், இராமகாதை பல் வேறு மாற்றங்களோடு பல் வேறு நூல்களில் இடம் பெற்றுள்ளது என்பதே ஆகும்.

இத்தகைய மாற்றங்கள் ஏன் தோன்றின? எப்படித் தோன்றின? என்பன போன்ற வினுக்கள் இயற்கையாகவே எழுதல் கூடும்.

பண்டைய இலக்கியங்கள், காப்பியங்கள் அனைத்துமே முதன் முதலாக ஒலிவடிவினவாகப் படைக்கப்பட்டனவே. பல்லாயிரம் ஆண்டுகளாக அவை செவி வழியாக மக்களி டையே பரவின. எந்த அளவிற்கு அவை பரவின என்பது மக்களை எவ்வளவு தூரம் அவை கவர்ந்தன என்பதைப் பொறுத்தது. அத்தகைய இலக்கியங்கள், காப்பியங்கள் வரி வடிவம் பெறுவது மிகமிகப் பின்னரே. இராமாயணம் இதற்கு விதி விலக்கு அன்று.

வால்மீகி முனிவர் காலம் கி.மு 600 என்பர்; கி.மு 1500 என்பாரும் உளர். அப்பொழுதே அவர் இயற்றிய இராமாயணம் எழுத்து வடிவைப் பெற்று விட்டது என்று சொல்ல முடியாது.

சொல்லப் போனல், வான்மீகி முனிவர்க்கு முன்னமேயே, ஒரு இராமகாதை செவி வழியாக மக்களிடையே பரவி இருந்தது என்றும், அதற்கு ஒரு ஒழுங்கான உருவம் கொடுத்தவர்தாம் வான்மீகி முனிவர் என்பாரும் உளர்.

எது எப்படியாயினும், வால்மீகி முனிவர் இயற்றிய இராமாயணம் வரிவடிவம் பெற்றபின், கிடைக்கும் ஓலைச் சுவடிகளுள் மிகப் பழமையானது விக்கிரம சகாப்தம் 1076ஆம் (கி.பி 1020ஆம்) ஆண்டையது என்றும், அது

நேவாரி எழுத்தில் எழுதப் பெற்றது என்றும், காத்மாண்டு நகரில் உள்ள 'பிர்' நூல் நிலையத்தில் (எண் 934) உள்ளது என்றும், பத்திரமாகப் பாதுகாக்கப் பெற்றுவருகிறது என்றும் கூறுவர்.[1]

அப்படியாயின் காப்பியம் வரி வடிவம் பெறுவதற்கு முன்னால் அது வழக்கிலிருந்த ஆயிரக் கணக்கான ஆண்டுகளில் எத்துணையோ மாறுபாடுகளைப் பெற்றிருப்பதும் இயல்பே ஆகும்.

மேலும் இத்தகைய காப்பியங்கட்கு வியாக்யானம் எழுதுபவர்களும் நூல் எழுத்து வடிவம் பெற்ற பின்னரே செயற்பட்டிருப்பர்.

வான்மீகி இராமாயணத்திற்கு வியாக்கியானம் எழுதியவர்களுள் முக்கியமானவர்கள் கோவிந்தராஜர், திலகர், இராமபண்டிதர் முதலியோர் ஆவர்.

இப்படிப் பார்க்கும் பொழுது, கம்பன் காலம் கி.பி. 9ஆம் நூற்றாண்டு எனக் கொள்ளும்பொழுது[2] கம்பனே வரி வடிவில் வால்மீகி இராமாயண காதையைப் படித்திருக்க முடியாது.

ஆனால், சங்க காலத்துக்கு முன்னரே, தமிழ் இலக்கியங்களில் இராமாயணக் குறிப்புகள் இடம் பெற்றிருக்கின்றன.

எனவேதான் இப்பொழுது வரிவடிவில் காணப் படுகின்ற வால்மீகி இராமாயணத்தில் இல்லாத (அல்லது) இருப்பதற்கு மாறுபட்ட, செய்திகள் அத்தகைய தமிழ் இலக்கியங்களில் குறிக்கப் பெறுகின்றன.

---

1 The Ramayana Tradition in Asia, Published by Sahitya Academy, Page. 94

2 கம்பன் காலம் கி.பி. 9 ஆம் நூற்றாண்டு என்பதே பெரும் பாலோர் துணிபு.

வால்மீகியினுடைய இராமாயணம் வரிவடிவம் பெற்ற பிறகும்கூட, நாட்டு மக்கள் அனைவரும் அதனைப் படித்திருப்பார்கள் என்று சொல்வதற்கு இல்லை.

### படித்தவர் படைத்த மாற்றம்

வால்மீகி படைத்த கதையை எழுத்து வாயிலாகப் படித்தவர்கள் கூட, அதில் கூறப்பெற்றிருக்கும் நிகழ்ச்சிகளை மேலும் சிறக்கச் செய்ய வேண்டும் என்று கருதியோ, சில நிகழ்ச்சிகள் தங்களுக்குப் பிடிக்காததால் அவற்றை விட்டு விட வேண்டும் என்று எண்ணியதாலோ, தாங்கள் பொருத்தம் ஆனவை என்று கருதுகின்ற சில நிகழ்ச்சிகளைக் சேர்க்க வேண்டும் என்று நினைத்து செயற் பட்டதாலோ, இத்தகைய மாற்றங்கள் ஏற்பட்டிருக்கக் கூடும்.

வேறொன்றையும் மனத்தில் கொள்ளலாம். இராமன் திருமாலின் அவதாரம் என்ற அடிப்படையில் இராம காதை மக்களிடையே பெருத்த அளவில் இடம் பெற்றது.

ஆகையினால் செவி வழியாக இக்காதை சொல்லப்பட்டதோடன்றி, நாடகங்களாகவும், நடன நிகழ்ச்சிகளாகவும், தோற்பாவை நிழல் கூத்தாகவும் மக்களிடையே பெருத்த அளவில் பயிலப் பெற்றது. செவி வழி கேட்ட இக் கதையை, இம்முறையில் கலைவழியாகக் காண முற்படும்பொழுது. அதற்கு ஏற்ப மாற்றங்கள் செய்யப்பட்டும் இருக்கலாம்.

### நாடக வடிவில்

உண்மையில் மகா நாடகம் என்ற பெயரில் நூல் ஒன்று இருந்திருக்கிறது. இந்த மகாநாடகம் போஜ ராஜாவினால் மிகவும் ஆதரிக்கப் பெற்றது என அறிகிறோம். போஜ ராஜனுடைய காலம் 11 ஆம் நூற்றாண்டு என்பர். அந் நாடகம், அதற்கு முன்னரே பிரபலமாக இருந்த இராமாயண நாடகங்கள் பலவற்றில் இருந்தும், அவற்றின்

நிகழ்ச்சிகளைத் தொகுத்து, பாடல்களாக அமைக்கப் பெற்றது என்பர்; இந்த மகா நாடகம், அநுமான் நாடகம் என்றும் குறிப்பிடப் பெற்றது என்பர்.

காளிதாசனுக்கு முன்னரே பாஷா என்பவர் பிரதிமா, அபிஷேக நாடகங்களை இயற்றினர் என்றும் சொல்லப்படுகிறது. இன்னும் வேறு பல, இராமாயண நாடகங்களும் இருந்திருக்கின்றன.

பிரசன்ன ராகவம் என்ற நாடகம் பதின்மூன்ரும் நூற்ருண்டைச் சேர்ந்த ஜெயதேவரால் ஆக்கப் பெற்றது என்று கூறுவர்.

பிற சமய இராமாயணங்கள்

இவை அனைத்தும் அல்லாமல், பௌத்த ராமாயணம், ஜைனராமாயணம் என்பனவும் தோன்றின. பௌத்த ஜாதகக் கதைகளும் உள. இவற்றுள் தசரத ஜாதகக் கதை என்பதும் ஒன்று. இவை கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்னரே தோன்றின என்பதற்கு ஆதாரங்கள் உள்ளன என ஆய்வறிஞர்கள் கூறுவர்.

வால்மீகி இராமாயணமும் அதன் அடிப்படையில் தோன்றிய பிற நூல்களும் கி.மு 400—200 கால எல்லையைச் சார்ந்தவை என்று குறிப்பிடுவர். *

மேற்குறித்த நூல்கள் வடபுலத்து மொழிகளில் தோன்றின எனினும் இராமகாதை பாரத நாடு முழுமையும் பரவி இருந்தது. பாமரரும் அறிந்திருந்தனர். தமிழ் கூறும் நல்லுலகமும் விதி விலக்கு அன்றே.

பிற நாடுகளில் இராமாயணம்

தவிர பாரதத்தின் கீழை நாடுகளில் இவ்விராம காதை பரவி இருந்தது எனக் கூறற்குச் சான்றுகள் உள.

* The Ramayana Tradition in Asia, Sahitya Academy P. 1

ஆதி காலம் தொட்டே இந்திய நாட்டினர் சீன, ஜப்பான் மற்றும் கிழக்கு ஆசிய நாடுகள் பலவற்றிற்கும் யாத்ரீகர்களாக, வணிகர்களாகச் சென்று வந்தனர் என்பது வரலாறு கூறும் உண்மை.

அது போலவே அந்நாட்டு மக்களும் நம் நாட்டுடன் தொடர்பு கொண்டும், வருகை தந்தும், சென்றிருக்கின்றனர்.

ஆராய்ச்சியாளர் கருத்துப்படி, ஆறும் நூற்றாண்டில் இராமகாதை சீன நாட்டை அடைந்தது. ஏழாம் நூற்றாண்டில் மலேயாவைச் சேர்ந்தது. 8ஆம் நூற்றாண்டில் இருந்து இந்தோனேஷியா நாட்டில் இது இடம் பெற்றிருக்கிறது, என்பதற்கு ஆதாரங்கள் காணப் பெறுகின்றன.

திபெத், மங்கோலியா, சைபீரியா, ஜப்பான், லாவோஸ், கம்போடியா, பிலிப்பைன்ஸ், பர்மா, இலங்கை ஆகிய நாடுகளிலும் இராமகாதை பரவலாயிற்று.

இந்நாடுகளில் நாடகங்களாகவும், நடன நிகழ்ச்சிகளாகவும், முதலில் இடம் பெற்று, பின்னர் காவிய வடிவிலும் இராமகாதை இடம் பெற்றது.

இப்படி இடம் பெற்ற வகையில் அவ்வந்நாட்டு மக்களின் அவ்வக்காலத்து நாகரிகம், பண்பாடு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றிற்கு ஏற்ப இராமகாதை புதிய புதிய வடிவங்களை எடுத்தது.

**இன்னகைச் சீதை இலங்கேஸ்வரன் மகள்!**

சீதை தசரதன் மகள் என்றும், இராவணன் மகள் என்றும் கூறும் கதைகள் உள. அநுமன் பலரை மணந்தவன் என்று சொல்லும் கதைகளும் உண்டாயின.

அந்தந்த நாட்டு மொழிகளுக்கு ஏற்ப, கதாபாத்திரங்களின் பெயர்களும் இடப் பெயர்களும் மாறுபாடுற்றன.

நம் தமிழகத்தும் இராம காதை, கிறித்து பிறப்பதற்கு முன்னரே பயிலப் பெற்று வந்தது என்பதை அறிவோம்.

ஆகையால்தான் இராமகாதை பற்றிய குறிப்புகள், சங்க நூல்களில், சங்கம் சார்ந்த நூல்களில் இடம் பெறலாயின.

சங்ககால இலக்கியங்கட்கு முன்னரும், வால்மீகியார் இராம காதை பாடிய பின்னரும், ஆய இவ்விடைக் காலத்து தமிழில் ஒரு இராமகாதை (முழு வடிவில்) இருந்தது என்பாரும் உளர்.

உருவம் திரிந்து வேருக......

இவ்வளவு விரிவாக இவற்றை எடுத்துக்காட்டும் நோக்கம் என்ன என்ருல், கம்பன் காலத்துக்கு முன்னதாகவே இராமகாதை இந்திய நாட்டில் பல வடிவங்கள் ஏற்றதோடு அன்றி, வெளிநாடுகட்கும் சென்று அங்கும் பல வடிவங்களைப் பெற்றுவிட்டது என்று குறிக்கவே.

கம்பன் தன் காப்பியம் பாடு முன்னரே, இவை அனைத்தையும் அறிவான். இன்னென்றையும் மறந்துவிடக் கூடாது. தேவாரமும், திவ்வியப் பிரபந்தமும் இராமாயணக் கதா பாத்திரங்கள் பற்றிக் குறிப்பிட்டிருக்கின்றன. அவையும் அவன் அறிந்தவையே.

உண்மையில் சொல்லப்போனுல் வால்மீகியில் இல்லாத பல செய்திகள் தேவார, திவ்வியப்பிரபந்தங்களில் உள்ளன.

இவை அனைத்தையும் கற்றுணர் கம்பன், இயற்கையாகத் தனக்கு அமைந்திருந்த கற்பனை வளத்தையும்

கவிதா விலாசத்தையும் கொண்டு இராமகாதையைப் பாடினன் என்று சொல்வது மிகைக் கூற்று அன்று.

**வகுத்த வான்மீகன்**

இராமகாதையை முதலில் பாடியவர் வால்மீகி முனிவரே. அவருடைய படைப்பே கம்பன் கட்டிய கவி மாளிகைக்கு அடித்தலம் ஆனது.

பாயிரத்தில், குறிப்பாக வால்மீயின் பெயர், இடம் பெரு விடினும், பாயிரஅமைப்பின் படியும், உரையாசிரியர்களின் கருத்துப்படியும், வான்மீகி முனிவர் படைப்பைத்தான் கம்பன் தன்னுடைய காப்பிய அடித்தளமாகக் கொண்டான் என்பது தெளிவாகிறது.

எப்படி இருப்பினும் வால்மீகி இராமாயணத்திற்கும் கம்பனது இராமகாதைக்கும் அடிப்படையில் ஒரு ஒற்றுமை உண்டு. அதுதான் "இராமன் திருமாலின் அவதாரம் என்றாலும், கதைமுழுமையிலும் அவன் மனிதனாகச் செயல்பட்டானே அன்றி, எந்தக் கட்டத்திலும் தன்னைத் தெய்வமாகக் காட்டிக் கொள்ளவில்லை; சொல்லிக் கொள்ளவில்லை; செயல் படவில்லை." என்பது ஆகும்.



## 3. வால்மீகி கண்ட இராமன்

வால்மீகி இராமாயணத் தொடக்கமே நாரதரிடத்தில் வால்மீகி கேட்பதும், நாரதர் அதற்குப் பதில் சொல்வதும் ஆகும்.

**எவன் மகன்? (நரோத்தமன்)**

நாரதரைப் பார்த்து வால்மீகி கேட்பதாவது:

''இந்த உலகத்தில் இப்போது நேர்மை உடையவன் எவன்? வீரியம் உடையவனும்; தர்மம் அறிந்தவனும்; நன்றி அறிவு உள்ளவனும்; உண்மையையே பேசுபவனும்; விரதத்தில் உறுதி உடையவனும் எவன்? எல்லாப் பிராணிகளிடத்தும் இதன் எவன்? குலாசாரத்தோடு கூடினவனும் எவன்? வித்தியா நிபுணன் எவன்? வல்லவனும் எவன்? பிரியமானதாகவே உள்ள பார்வை உடையவன் எவன்? தைரியம் உடையவன் எவன்? கோபத்தைத் தன்வசப் படுத்தினவன், காந்தி உள்ளவன், அசூயை இல்லாதவன் எவன்? போரில் கோபம் கொண்ட எவனுக்குத் தேவர்கள் கூட நடுங்குகிறுர்கள்? இதனே அறிந்துகொள்ள நான் இச்சைப்படுகிறேன். ஏன் எனில், என்னுடைய தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆசை அதிகமாக உள்ளது. இவ்வாறுள்ள மானுடனே உள்ளபடி அறிய, மகரிஷியே! தேவரீர் வேண்டிய யோக்யதை உடையவராய் இருக்கிறீர்''

(பால காண்டம் 1, சர்க்கம் 5 சுலோகங்கள் 2 - 5.)

**இவன் மகனே! (நரஸ்ரேஷ்டன்)**

இதற்கு நாரதர் இறுத்த விடையாவது:

"முனிவரே! உம்மாலே கூறப்பட நற்குணங்கள் எவைகளோ அவைகள் அநேகங்கள். கிடைத்தற்கரி யனவுமே. நான் ஆலோசித்து விவரித்துச் சொல்கிறேன். அவைகளோடு கூடிய மனிதன் இன்னுர் என்று அறிந்து கொள்ளப்படட்டும். இராமன் என்று ஜனங்களால் பெயர் சொல்லப் பட்டவர்; இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவர்; நிர்விகாரர்; மகா சக்தியை உடையவர்; காந்தி உள்ளவர்; உறுதி உள்ளவர்; எல்லோரையும் தம் வசத்தில் அடக்கி ஆளுகிறவர்; புத்திமான்; நீதி உடையவர்; வாக்குச் சாமர்த்தியம் உள்ளவர்; சம்பத்து நிறைந்தவர்; சத்துருக்களை அழிப்பவர்; உயர்ந்த தோள்களை உடையவர்; மகா பாஹு; சங்கு போன்ற கழுத்து உடையவர்; தசைப்பற்றுள்ள கன்னங்கள் உள்ளவர்; விசாலமான மார்பு உள்ளவர்; பெரிய வில்லை உடையவர்; தசைப் பற்றிஞல் மறைந்த தோள் எலும்பு கள் உள்ளவர்; சத்துருக்களை அடக்குபவர்; முழந்தாள் அளவுள்ள புஜங்களை உடையவர்; அழகான தலையை உடையவர்; அழகான நெற்றியை உடையவர்; சரியான உயரம் உடையவர்; சரியான உறுப்பு நலன் அமையப் பெற்றவர்; சரியாகப் பிரிக்கப்பட்ட அவயவங்களை உடையவர்; நேசிக்கத் தக்க நிறம் உடையவர்; பிரதாபம் உள்ளவர்; பெருத்த மார்பு உள்ளவர்; அகன்ற கண்களை உடையவர்; சோபை உடையவர்; மங்களகரமான லக்ஷணங்களை உடையவர்; தர்மம் அறிந்தவர்; சத்திய சந்தர்; பிரஜைகளின் நன்மையில் நோக்கம் உடையவர்; கீர்த்தி உடையவர்; ஞானத்தால் நிறைந்த பேரறிவினர்; பரிசுத்தர்; தம்மை அடைந்தவர்க்கு வசப்பட்டு நடப்பவர்; அவர்களைப் பாதுகாப்பதிலே கவலை கொண்டவர்; பிரம்மதேவருக்கு ஒப்பானவர்; சகல பாக்கியமும் நிரம்பியவர்; போஷிக்கின்றவர்; சத்துருக்

களைப் போக்கடிப்பவர்; பிராணி சமூகத்திற்கு இரக்ஷகர்; தர்மத்தினுடைய அன்பான இரக்ஷகர்; தம்முடைய தர்மத்திற்கு இரக்ஷகர்; தமது ஜனத்திற்கும் அன்பான இரக்ஷகர்; வேதவேதாந்த தத்துவங்களை அறிந்தவர்; தனுர் வேத்தில் முழுவதும் தேர்ச்சி அடைந்தவர்; எல்லா சாஸ்திரார்த்தங்களின் உண்மைகளையும் அறிந்தவர்; ஞாபக சக்தி உடையவர்; மேன் மேலும் விஷயங்கள் விளங்கப் பெற்ற ஞான விசேஷம் உடையவர்.

சகல லோகங்களுக்கும் இஷ்டமானவர்; நல்லவர்; கம்பீர ஸ்வபாவம் உள்ளவர்; வெகு சமர்த்தர்; நதிகளால் கடல் போல், நல்லவர்களால் எப்பொழுதும் அடையப் பெற்றவர்; பூஜ்யர்; எல்லாரிடத்தும் சமமாக இருப்பவர்; மேலும் எப்பொழுதும் பிரியமானதாகவே உள்ள பார்வை உடையவர்; அவர் கௌசல்யைக்கு ஆனந்தத்தை விருத்தி செய்பவர்; மேலும் சமஸ்த நற்குணங்களோடு கூடியவர்; காம்பீர்யத்தில் சமுத்திரம் போன்றவர்; தாங்குவதில் இமயமலை போன்றவர்; பராக்கிரமத்தில் விஷ்ணுவோடு சமமானவர்; சந்திரன் போல் இஷ்டமான பார்வை உடையவர்; கோபத்தில் பிரளய காலத்து அக்கினிக்குச் சமானர்; பொறுமையில் பூமிக்குச் சமானர்; கொடுப் பதில் குபேரனோடு சமானர்; உண்மை பேசுவதில் மற்றொரு தர்ம தேவதை போன்றவர்.''

(பாலகாண்டம், சர்க்கம் 1, சுலோகம் 7-18.)

இதில் கவனிக்கத் தக்கது என்ன என்றால், வால்மீகி தன் கேள்வியிலும், நாரதர் தம்முடைய பதிலிலும் ஒரு மனிதனை (நரனை)ப் பற்றியே குறிப்பிடுகிறார்கள்.

இப்படி இராமனுடைய நற்குணங்களை விரிவாக எடுத்துக் கூறிய நாரதர், இராமகாதையை மிகச்

சுருக்கமாகச் சொல்லிவிட்டு தேவலோகம் சென்று விடுகிறார்.

இவை அனைத்தும் பால காண்டம் முதல் சர்க்கத்தில் இடம் பெற்றிருப்பவை.

### இராமாயண காவ்யம் பிறந்தது

இரண்டாம் சர்க்கத்தில் வால்மீகி கங்கை ஆற்றை அடுத்த தமஸை நதிக்கரைக்கு நீராடச் சென்றதும் அங்கு ஆணும் பெண்ணுமாய் இனிமையுடன் கொஞ்சிக் கொண்டிருந்த கிரௌஞ்ச பக்ஷிகளில் ஒன்றை வேடன் ஒருவன் அம்பினால் வீழ்த்தியதும், அது பொருது அதன் துணையும் வீழ்ந்து உயிர் விட்டதும், அதனால் பெரிதும் மனம் வருந்திய வால்மீகி வாயிலிருந்து வெளியான ஸ்லோகமும், பின்னர் பிரமன் வால்மீகி முன் தோன்றி இராமாயணத்தைப் பாட அவரைக்கேட்டுக் கொண்டதும் இராமாயணக் காட்சிகளின் விரிவு அவருக்குத் தன் அநுக்ரகத்தினால் தோன்றும் என்று கூறிச் சென்றதும், அதன்படியே கண்ட வால்மீகி, காப்பியம் பாடியதும் கூறப் பெறுகிறது.

மூன்றும் சர்க்கத்தில் வால்மீகியின் யோக நிஷ்டையில், இராமகாதைச் சம்பவங்கள் முழுமையும் தோன்றியமை குறிப்பிடப் பெறுகிறது. இங்கு மீண்டும் இராமகாதை சுருக்கமாகத் தரப்பெறுகிறது.

### பிறவாது பிறந்தருளும்

இனி வால்மீகி இராமாயணப்படி, இராமனுடைய பிறப்பைக் காணலாம்.

வம்சத்தைப் பெருக்குகிற புத்திரன் இல்லையே என்று கவலையோடு சிந்தித்துக் கொண்டிருந்த தசரதனுக்கு,

'நான் ஏன் அஸ்வமேத யாகம் செய்யக் கூடாது?' என்ற எண்ணம் உண்டாயிற்று. அதன்மேல் அஸ்வமேத யாகம் செய்யவேண்டும் என்ற உறுதி கொண்டு சுமந்திரனை அழைத்து அதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்யுமாறு பணித்தான்.

இவ்வாறு புத்திரன் நிமித்தமாக அஸ்வமேத யாகம் செய்ய தசரதன் ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்த போது, அவனிடத்தில் தனிமையில், 'தசரதனுக்குப் புத்திர பாக்கியம் உண்டாக வேண்டும்' என்ற விஷயமாய், சநத்குமாரர் என்ற முனிவர் தன்னிடம் சொன்னதை அந்தரங்கத்தில் சுமந்திரன் சொல்கிறான்.

கலைக் கோட்டு மாமுனி

அப்பொழுது, அங்கதேசத்துக்கு ரிஸ்ய சிருங்கர் கொண்டுவரப்பட்டதையும், அதனால் அங்கதேசத்தில் மழை பெய்ததையும் சொல்லி, சநத்குமாரர் அந்த ரிஸ்ய சிருங்கர், தசரதனுக்குப் புத்திரர்கள் உண்டாகும் யாகத்தைச் செய்து வைப்பார் என்று சொன்னதாகச் சொல்கிறான்.

அதன்படி தசரதனும் தன்னுடைய அமைச்சர்கள், வசிஷ்டர், சம்மதத்துடன் அங்கதேசம் சென்று, அரசர் உரோமபாதரை அணுகி, ரிஸ்ய சிருங்கரையும், அவர் மனைவி சாந்தையையும் அயோத்திக்கு அழைத்துக் கொண்டு வருகிறான்.

ரிஸ்ய சிருங்கர் யாகத்தை நடத்தி வைக்கிறார். அஸ்வமேத யாகம் நிறைவு பெறுகிறது. அதற்குப் பிறகு ரிஸ்ய சிருங்கர் தசரதனைப் பார்த்து, "அதர்வண வேதத்தில் சொல்லி இருக்கும் மந்திரங்களுடைய பலத்தால், உம்முடைய மனோரதமாகிய புத்திரலாபத்

திற்காக, இன்னொரு யாகம் பண்ணி வைக்கிறேன்" என்று சொல்லி, அதன்படியே பிறிதொரு யாகத்தையும் செய்யத் தொடங்கி, மந்திர சாஸ்திர விதிப்படி அக்கினியில் ஹோமம் செய்யலானார்.

தேவ மகாநாடு

அப்பொழுது நேர் நின்று அவிர்ப் பாகங்களைப் பெற்றுக் கொள்ளும் பொருட்டு தேவர்கள், சித்தர்கள், கந்தர்வர்கள், மகரிஷிகள் அங்கு கூடினர். அவர்கள் அனைவரும் அங்கு ஒரு சபையாகச் சேர்ந்தபின் பிரம்ம தேவனைப் பார்த்து,

"பகவானே! இராவணன் என்ற இராக்ஷஸன் உம்முடைய அநுக்ரகத்தால் எங்கள் எல்லோரையும், பராக்கிரமத்தாலே வருத்துகிறான். அவனை அடக்க நாங்கள் சக்தி அற்றவர்களாக இருக்கிறோம். அவனிடத்தில் சந்தோஷம் அடைந்த நீர், அவனுக்கு வரம் கொடுத்து விட்டபடியால், நாங்கள் அதற்குப் பயந்து அவன் செய்யும் அனைத்தையும் சகித்துக் கொண்டிருக்கிறோம். துர்ப்புத்தி உள்ள அவனே, மூன்று உலகங்களையும், லோகபாலர்களையும், எப்போதும் பீடித்துக்கொண்டிருக்கிறான். வரத்தின் செருக்கால் தேவேந்திரன் உள்ளிட்ட அனைவரையும் திரணமாக எண்ணி அவனுக்குக் கீழ்ப்படியும்படிச் செய்கிறான். தன்னை ஜெயிப்பவர் எவரும் இல்லாமையால், மிகவும் கர்வம் கொண்டு, அவன், ரிஷிகள், யக்ஷர்கள், அசுரர்கள், கந்தர்வர்கள், பிராம்மணர்கள் முதலான எல்லோரையும் வருத்தப்படுத்துகிறான். அவனைக் கண்டு சூர்யன் கூட நடுங்கி அவன்மேல் மெதுவாக வெயில் படும்படிப் பிரகாசிக்கிறான். வாயு பகவானும் அவன் சமீபத்தில் மெதுவாக உலாவுகிறான். கொந்தளித்து அலை கிளரும் தன்மை உள்ள கடலும்

அவனைக் கண்டால் அஞ்சி அலை எறியாமல் அமைதி அடைகிறது. அந்தப் பாவி அரக்கனுல் எங்கள் எல்லோர்க்கும் உண்டாகும் பயத்திற்கு அளவே இல்லை. ஆகையால் அவனைக் கொல்ல எப்படியாவது நீர் ஓர் உபாயம் தேடவேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

அஞ்சல் என்று அயன் கையமர்த்தும்

தேவர்களின் இந்த வேண்டுகோளைக் கேட்ட பிரம்மன்,

''அந்த துராத்மாவை வதைப்பதற்கு உபாயம் ஒன்று முன்னமே தானுய் அமைந்திருக்கின்றது. அவன் வரம் கேட்ட காலத்தில், 'கந்தர்வர்களாலும், யக்ஷர்களாலும், தேவர்களாலும், அசுரர்களாலும், இராக்ஷஸர்களாலும் எனக்கு மரணம் சம்பவிக்கக் கூடாவண்ணம் வரமளிக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டான். 'அப்படியே ஆகட்டும்' என்று நானும் வரமளித்தேன்.

மனிதரால் தனக்கு மரணம் உண்டாகாமல் இருக்க வேண்டும் என்று அவன் அலட்சியத்தால் கேட்கவில்லை. அதுதான் இப்பொழுது நமக்கு உபாயம்.

மனிதரால் இராவணன் மாய, உபாயம் தேட வேண்டும். இதைத் தவிர நமக்கு வேறு மார்க்கம் இல்லை'' என்றுர்.

இதைக் கேட்ட தேவர்களும், பிறரும் மகிழ்ச்சி அடைந்திருந்த வேளையில், விஷ்ணு அங்கே தோன்றினுர்.

அவரைப் பார்த்து தேவர்கள் அனைவரும் ஸ்தோத்திரம் செய்து,

''விஷ்ணு பகவானே! உலகங்களுடைய க்ஷேமத்தின் பொருட்டு, நாங்கள் உம்மை ஒரு காரியத்துக்காகத்

தூண்டுகிறோம். தசரதன் அயோத்தியில் சிறப்பாக ஆட்சி செய்து கொண்டிருக்கிறான். அவனுக்கு மூன்று மனைவியர் உள்ளனர். நீர் அந்த மூன்று பெண்மணிகளின் வயிற்றில் உம்மை நான்கு பாகமாகப் பண்ணிக் கொண்டு மனித ரூபமாகப் பூலோகத்தில் அவதாரம் பண்ண வேண்டும். லோக கண்டகனான இராவணனை யுத்தத்தில் கொல்ல வேண்டும்'' என்று பிரார்த்தித்தனர்.

இந்தப் பிரார்த்தனையைக் கேட்ட விஷ்ணு அந்த தேவ சபையைப் பார்த்து,

''தேவர்களே! உங்கள் பயத்தை விட்டுவிடுங்கள். உங்கள் நன்மைக்காக இராவணனை, அவன் சார்ந்தாருடன் சேர்த்து வதை செய்கிறேன். நான் ஒரு மானுடனாய் அவதாரம் பண்ணி, பூலோகத்தைப் பரிபாலித்துக் கொண்டு, பதினோராயிரம் வருஷ காலம் வாசம் பண்ணப் போகிறேன்'' என்றார்.

இவ்வாறு தேவர்களால் தூண்டப்பட்ட நாராயண மூர்த்தி, தாம் இராவண வதையை நடத்தத் தக்க வழியை நன்றாய் அறிந்திருந்தும், அவர்களைப் பார்த்து,

''தேவர்களே! எந்த உபாயத்தை நான் கையாண்டால், முனிவர்களை இம்சிக்கிற இராவணனை நான் கொல்ல முடியும்?'' என்று வினவினார்.

அதற்குத் தேவர்கள், பிரம்மதேவன் இராவணனுக்குக் கொடுத்த வரத்தைக் குறிப்பிட்டு, ''நீர் மனித உருவம் கொண்டுதான் அவனை வதம் செய்ய வேண்டும்'' என்று சொன்னார்கள். தேவர்களுடைய இந்த வார்த்தையைக் கேட்ட விஷ்ணு, தசரதரைத் தன் தந்தையாக அப்பொழுதே நிச்சயித்தார்,

அந்த நிச்சயத்தோடு, பிரம்மனிடம் செய்தி சொல்லிவிட்டு, தேவர்களாலும், பிறராலும் பூஜிக்கப் பட்டவராய், மறைந்தார்.

புகையிடை புறப்பட்ட பேருரு

அவர் மறைந்த பிறகுதான், யாக குண்டத்திலிருந்து மிக்க காந்தியுடன் ஒரு பெரிய உருவம் வெளிப்பட்டு பாயசத்தைக் கொண்டு வந்தது. அதில் பாதியைக் கோசலைக்கும் மீதியில் பாதியை சுமித்திரைக்கும் தசரதன் கொடுத்தார். எஞ்சியிருப்பதில் பாதியைக் கைகேயியிக்குக் கொடுத்தார்.

அதன் பின்னரும் விஞ்சி இருந்த பாயசத்தை சுமித்திரைக்கே கொடுத்தார். இதற்குப் பிறகு அரசருடைய மூன்று மனைவியரும் கருத்தரித்தனர்.

விறல் விளங்கு வானரர் ஆவீர்

இவ்வாறு நாராயண மூர்த்தி, தசரத மன்னனிடம், புத்திரராய் அவதாரம் பண்ணச் சென்றவுடன், பிரம்மன் தேவர்கள் அனைவரையும் பார்த்து, "சொல் தவறாத வீரரான, நம் எல்லோருடைய நன்மையைக் கோருகிற விஷ்ணு பகவானுக்கு, வலுவுடைய, வேண்டிய வடிவம் கொள்ள வல்ல துணைவர்களை உண்டாக்கக் கடவீர்கள். மாயைகளை அறிந்த சூரர்களான, வேகத்தில் வாயுவின் வேகத்திற்கு ஒப்பான, நீதிகளை உணர்ந்த புத்தி மான்களான, விஷ்ணுவுக்கு ஒப்பான பராக்கிரமம் உள்ள எவராலும் வதைக்கப்படக் கூடாத, சகல உபாயங்களை அறிந்த, தேவதைகள் போன்ற பலம் உள்ள, சகல அஸ்திரங்களையும் அறிந்த அம்ருதம் உண்டவர்கள் போல் இருக்கின்ற, வானர உருவத்தோடு, தக்க பராக்கிரமம் உள்ள புத்திரர்களையே, சிறந்த அப்ஸரஸ்

ஸ்திரீகளிடத்தும், கந்தர்வர்களிடத்தும், யக்ஷ, வித்யா தரர்களிடத்தும், கின்னர, வானர ஸ்திரீகளிடத்தும் உண்டாக்கக் கடவீர்கள். நானும் அவ்வாறே முன்னர் ஜாம்பவான் என்ற கரடி வேந்தனை, என் கொட்டாவியி லிருந்து உண்டாக்கி இருக்கிறேன்'' என்றார்.

பிரம்மன் இவ்வாறு சொன்னதும் தேவர்கள் யாவரும் அவன் ஏவல்படியே வானர ரூபமாக அநேக வம்சங்களை உண்டாக்கினார்கள்.

மகாத்மாக்களான ரிஷிகளும், சித்தர்கள், வித்தியா தரர்கள், நாகர்கள், சாரணர்களும், வீரர்களான, வனத்தில் சஞ்சரிக்கிற, புத்திரர்களைச் சிருஷ்டித்தார்கள்.

வானர வீரர் பிறப்பு

இந்திரன் மகா பாக்கிய சாலியான, பலவானான, வானர சிரேஷ்டனான வாலியையும், ஜ்வலிக்கிறவர்களில் சிறந்த சூர்யன் சுக்கிரீவனையும், உண்டாக்கினர். பிரஹஸ்பதியும் தாரன் என்ற பெரிய வானரவீரனை உண்டுபண்ணினான். குபேரன் புதல்வன், ஸ்ரீமான் ஆன கந்தமாதனன் என்ற வானரன். விஸ்வகர்மா, நளன் என்ற பெரிய வானர வீரனை உண்டு பண்ணினான். அக்கினி பகவானின் புதல்வன் நீலன். அஸ்வனி தேவர்கள் மயிந்தனையும், துவிவிதனையும் உண்டாக்கினர். வருணன் சுசேஷணன் என்ற வானரனை உண்டு பண்ணினான். மழைக் கடவுள் ஆன பர்ஜன்யன் மகன் சரபன். ஹநுமான் வாயுதேவன் குமாரர். இவ்விதம் பல்லாயிரக்கணக்காய், வஜ்ஜிரத்துக்கு ஒப்பான சரீர பலமுள்ள வானரர் தோன்றினர். வேகத்தில் கருடனுக்கு ஒப்பான சூர்யானன் என்ற பலமுள்ள வானரன் பிரபுவான ருத்திரருடைய பிள்ளை,

இராவண வதையில் நிச்சயம் கொண்டவர்களான, அளவிட முடியாத பலம் உள்ள வீரர்களான, மிக பராக்கிரமசாலிகளான, வேண்டிய வடிவம் கொள்ள வல்லவர்களான, பல ஆயிரக் கணக்கானவர்கள் சிருஷ்டிக் கப்பட்டனர்.

எவரெவர் எந்தெந்த தேவதை இடமிருந்து பிறந்தனரோ, அவரவர், அந்தந்த தேவதையின் உருவம், பராக்கிரமம் ஆகிய எல்லாம் அமைந்தவராய் அவர்க்குச் சமானமானவராய் இருந்தனர்.

**மனிதன்**

ஆக, இராவணனுக்கு பிரம்மா கொடுத்திருந்த வரத் தினை மதித்து அவனை மனிதன் ஒருவனுல்தான் வெல்ல முடியும் என்ற முடிவில், அவனைக் கொல்வதற்காகத் திருமால் இராமன் என்ற மனிதன் ஆகப் பிறக்கிருன்.

இந்த மனிதனுடைய குணங்களைத்தான் வால் மீகிக்கு, காப்பியத்தின் தொடக்கத்தில் நாரதர் விளக்கு கிருர்.

**பேச்சும் செயலும் மனிதத்துவமே**

இப்படி மனிதன் ஆகப் பிறந்த இராமன், காப்பியம் முழுமையிலும், மனிதன் ஆகவே பேசுகிருன்; தொழிற் படுகிருன்; நடந்து கொள்கிருன்.

அப்படி நடந்து கொள்ளும்பொழுதும்கூட, நாம் அனைவரும் புரிந்து கொள்ளக் கூடிய மனிதன் ஆகவும், நம் போன்ற உணர்ச்சிகள் உடைய மனிதன் ஆகவும், நம் போன்றே சில சூழ் நிலைகளில் தர்ம சங்கடத்திற்கு உள்ளாகிற மனிதன் ஆகவுமே, இராமன் காட்டப் பெறுகிருன்,

இவற்றைக் காண்பிக்கும் சில நிகழ்ச்சிகளை மாத்திரம் நோக்குவோம்.

அரசிழந்தது

கைகேயியின் வேண்டுகோளுக்கு இணங்க, தசரதன் அவள் கோரிய இரு வரங்களைக் கொடுத்து விட்ட பிறகு சுமந்திரனால் அழைக்கப் பெற்று, இராமன் அங்கு வருகிறான். அப்பொழுது தன்னுடைய தந்தையாகிய தசரதனுடைய நிலை எப்படி இருந்தது என்பதையும் அதைக் கண்ட இராமன் உணர்ச்சிகள் என்னவாக இருந்தன என்பதையும் வால்மீகி சற்று விரிவாகவே விளக்குவார்.

தந்தை தசரதர், வாடிய திருமுக மண்டலத்தோடு ஏதோ மன வேதனைப் பட்டுக்கொண்டு இருப்பவராய் இருப்பதை, இராமன் காண்கிறான். தசரதரோ, கடுந் துயரம் கொண்டவராய், நீர் தேங்கிய கண்களை உடையவராய் "இராமா!" என்ற ஒரு சொல்லை மாத்திரம்தான் சொன்னார். கண்களைத் திறந்து பார்க்கவும் திறன் அற்று இருந்தார். வாய் திறந்து பேசவும் சக்தி இல்லாதவராய் இருந்தார்.

ஒரு நாளிலும் அவ்வாறு இராத தனது தந்தை, சகிக்க ஒண்ணாத சோகத்தால், துவண்டு கிடப்பதையும், மனத்தில் பயத்தை உண்டாக்கும் அவர் உருவத்தையும் கண்ட இராமன், காலினால் ஒரு சர்ப்பத்தை மிதித்தவன் போல் நடுங்கிவிட்டான்.

மிக்க துன்பம் அடைந்த இந்திரியங்களினால், அதிகமாய்ப் பொங்கும் துக்கத் தீயினால், வாடியும், அடிக்கடி பெருமூச்சு எறிந்தும், நொந்து குழம்பிய மனத்துடன் கூடியும் இருந்த தசரதர், கலங்கும் தன்மை அற்றிருந்தும்

கலக்கம் அடைந்த கடல் போலவும், இராகுவால் பீடிக்கப்பட்ட சூரியன் போலவும், பொய்யைச் சொல்லிவிட்டு மனம் கலங்கி நிற்கும் மாமுனிவர் போலவும், இராமனுக்குத் தோன்றுகிருர்.

இராமன், காரணம் தெரியாது தசரதருடைய சோகத்தை நினைத்து பருவ காலத்துக் கடல் பொங்குவது போல் துக்கத்தால் மிகவும் பொங்கினுன். அன்றியும் இராமன் எப்பொழுதும் தன் தந்தையினுடைய க்ஷேமத்தையே விரும்பியவன் ஆகையால், தனக்குள்ளேயே "என் தந்தை இன்றைக்கு என்னைப் பார்த்து ஏன் ஆனந்திக்கவில்லை? என்னைக் காணுதபோது கோபத்தில் இருந்தபோதிலும், என்னைக் கண்டவுடன் தனது கோபத்தை மறந்து புன்னகையோடு, அன்பாக இருப்பாரே? அப்படிப்பட்ட இவருக்கு என்னைக் கண்டவுடன் வருத்தம் வர வேண்டிய காரணம் என்ன?" என்று எண்ணினுன்.

இராமன், பின்பு, ஏழைபோல் சோகத்தால் வருந்தி முகத்தில் ஒளிகுறையப் பெற்று, கைகேயியை வணங்கி அவளைப் பார்த்து, "அறியாமையினுலேனும் நான் எனது தந்தைக்குக் குற்றம் பண்ணியதில்லையே? ஏன் என் தந்தை கோபித்துக் கொண்டிருக்கிருர்? அதனைச் சொல்லுங்கள். அவரைச் சமாதானப்படுத்துங்கள். எப்பொழுதும் என்னைக் கண்டால் ஆசையோடு இருப்பவர் இப்பொழுது ஏன் இவ்வாறு மனக்கலக்கத்தோடு இருக்கின்ருர்? இவர் என்னைக் கண்டும், முகம்வாடி பரிதவித்துக் கொண்டு ஏன் பேசாமல் இருக்கிருர்? இவர் உடலைநோய் ஏதாவது வருத்துகின்றதா? இவருக்கு மனவருத்தம் உண்டாக ஏதேனும் காரணம் உண்டா?" என்று பலவாருகக் கேட்கிருன்.

இது, இராமனுடைய ஆழ்ந்த மனிதத்தன்மையை வற்புறுத்துவதாகவே அமைந்திருக்கிறது.

வால்மீகி முனிவர் தாம் படைத்த இராமனுடைய நுண் உணர்வுகளை எல்லாம் மிக்க நளினமாகவும், மென்மை படைத்தன ஆகவும் விளக்குகிறார்.

## சீதை - இராமன் சந்திப்பு

இறுதியாகத் தன் தாயாகிய கௌசல்யை இடமிருந்து, ஒருவாறு வனத்துக்குப் போக அவளுடைய வாழ்த்தைப் பெற்ற பிறகு தான் காட்டுக்குப் போகும் செய்தியை சீதைக்கு அறிவிக்க இராமன் போகிறான். இராமனுக்கும், சீதைக்கும் இடையே நடந்த பேச்சு வார்த்தைகளையும் இறுதியாகச் சீதையை இராமன் காட்டுக்கு அழைத்துப்போக சம்மதித்ததையும் அயோத்தியா காண்டம் சர்க்கம் 26—30 வரை வால்மீகி விரிவாகப் பாடுவார்.

அப்படி சீதை இடத்துச் செய்தி தெரிவிக்கச் சென்ற இராமனுடைய தோற்றம் எப்படி இருந்தது என்பதையும் மிக்க அழகாக எடுத்துக்காட்டுவார். அதனோடல்லாமல், சீதைக்கும், இராமனுக்கும் இடையே நடந்த மிக்க விரிவான பேச்சுவார்த்தைகளைக் கொஞ்சம்கூட ஒளிவு மறைவின்றி இருப்பதற்கு ஒத்ததாக உள்ள ஒரு பின்னணியையும் அமைத்துக் கொள்கிறார்.

அது 27ஆம் சர்க்கம், முதல் ஸ்லோகமாக அமைந்திருக்கிறது.

காட்டுக்குப் போகப் போவதாகவும் சீதையை அயோத்தியிலேயே தங்கி இருக்குமாறும் சொன்ன இராமனிடத்து, சீதை தன்னை அழைத்துப் போகப் பிரார்த்திப்பதற்கு முகவுரையாக அது, அடியிற்கண்டவாறு அமைந்திருக்கிறது:

"மேற்கண்ட வாக்கினைக் செவியுற்றவளும், குணங் களால் மனம் கோணுமல் நடக்க வேண்டிய உரிமை பெற்றவளும், எப்பொழுதும் இனிய சொல் கொண்டே பதில் உரைப்பவளுமாகிய சீதை, கணவன் என்கிற சொந் தத்தாலும், அவர் மட்டும் தன் முன் தனியாக இருக்கிறுர் என்ற காரணத்தாலும், இவ் விஷயத்தில் மிகச் சினம் கொண்டவளாகி, கணவனைப் பார்த்து, பின்வருமாறு சொன்னுள்."

அவள் சொன்னவற்றில் உள்ள ஒரு நுண்மையான செய்தியைக் காண்பதற்கு முன்னுல், தனக்குச் செய்தி சொல்ல வந்த கணவனுடைய தோற்றம் எப்படி இருக்க, அவள் கண்டாள் என்று வால்மீகி முனிவர் கூறு வதைக் காண்பது பயனுடையதாகும்.

இராமனுக்குப் பட்டாபிஷேகம் என்ற செய்தியை அறிந்த சீதை மனமகிழ்ச்சி உடையவளாய், தெய்வ பூஜையைச் செய்து விட்டு, சக்கரவர்த்தித் திருக்குமாரனை எதிர்பார்த்துக்கொண்டு இருக்கிறுள்.

"அப்பொழுது இராமனே, நன்றுய் அலங்கரிக்கப் பெற்று விளங்குகிறதும், மகிழ்வுற்ற ஜனங்களால் நிறை வுற்றதுமாகிய தனது மாளிகைக்குள், காலத்திற்கு ஏற்ற ஒரு மாதிரியான கூச்சத்தினுல் கீழ்நோக்கியவண்ணமாய் வந்து சேர்ந்தான்.

அப்பொழுது சீதை, ஆசனத்திலிருந்து எழுந்து, அந்தக் கணவனைச் சிந்தையால் கலங்கிய இந்திரியங்களை உடையவராய், மனவேதனையால் திருமேனி ஒளி குறைந்து இருக்கப் பெற்றவராயும் இருக்கக் கண்டாள்.

அதனுல் மனக்கலக்கம் உற்றவள் ஆயினுள். தர்மாத்மா ஆகிய அந்த இராமர் அவளை எதிரில் கண்டதுமே, மனத்

தினில் சுழன்று கொண்டிருந்த அந்தக் கவலேயை வெளிப் படாதபடி உள் அடக்கிவிட முடியாதவராய் இருந்தார். அதனுல் சிந்தையில் ஏதோ ஒன்று சுழன்று கொண்டிருக் கிறது என்பதனே வெளிக்காட்டும் சின்னங்களே, வெளிக் காட்டும் தன்மையை அடைந்து விட்டார். திருமுக மண்டலத்தில் காந்தி குன்றி இருப்பவராயும், சினம் உற்ற வராயும், திருமேனி எல்லாம் வியர்வை உண்டாகப் பெற்றிருக்கிறவராயும், இருப்பதைக் கவனித்து, அவள் மனவேதனேயால் திருமேனி துவட்சிஅடையப் பெற்ற வளாய், அவரைப் பார்த்து பின்வருமாறு கூறினுள்.''

இந்தக் கட்டத்தில் இராமனது தோற்றத்தை வால் மீகி முனிவர் காட்டி இருப்பது மிக அற்புதமானது. எப்பேர்ப்பட்ட மனிதனும், அந்த நிலேயில்தான் இருப் பான். தந்தையினுடைய வாக்கை நிறைவேற்ற வேண்டும்; அவனேச் சத்திய சந்தனுக ஆக்கவேண்டும்; அதுதான் தன்னுடைய கடமை என்று உறுதி கொண்டு, ''காட்டுக்குப் போக வேண்டா'' என்று தசரதன் கேட்டுக் கொண்டபோதும் அதற்கு இணங்காமல், அவர் கைகேயி யிக்கு அளித்த வரத்தின்படி தான் கானகம் செல்ல முற்படுவது அறத்தின்பால் இராமனுக்கு உள்ள உறுதி யைக்காட்டுகிறது.

அதே சமயத்தில் அவனும் ஒரு மனிதன் என்பதை மறந்துவிடக் கூடாது. தந்தையை விட்டு, தாயைவிட்டு, மனேவியை விட்டு, இலக்குவனேவிட்டு, காட்டிற்குச் சென்று பதினுன்கு ஆண்டுகள் தவம் செய்வது என்பது, யார்க்குமே மனத்தில் வருத்தத்தையும் நோயையும் கொடுக்கக்கூடிய செய்தி ஆகும்.

(இராமன் இந்தத் தோற்றத்தில் சீதை முன் நின்ற போது, சீதை இராமன் உடன் வனம் செல்வதும், இலக்கு

வன் இராமன் உடன் செல்வதும் முடிவு செய்யப்பட வில்லை.)

கானகத்தில் உள்ள பல கஷ்டங்களை விரிவாக எடுத்துக் கூறி, சீதை அயோத்தியிலேயே இருந்து, அதிகாலை யில் எழுந்து, தசரதனுக்கும் அவனுடைய மனைவிமார்க் கும் செய்யவேண்டிய கடமைகளை, பணிவிடைகளைச் செய்து கொண்டிருக்கவேண்டும் என்று, இராமன் கூற சீதையோ ஒரு பத்தினிக்கு, அவள் கணவனோடு எந்தக் கட்டத்திலும், எந்தக் காலத்திலும், எந்த இடத்திலும் உடன் இருப்பதுதான் அவள் சுதர்மம் ஆகும் என்றும், எவ் வாறாயினும் அவன் தன்னை உடன் அழைத்துச் செல்லவே வேண்டும் என்றும் இராமனைக் கேட்டுக் கொண்டதோடு அல்லாமல், அப்படி, அவன் தன்னை அழைத்துச் செல்லா விட்டால், தான் உயிரை விட்டுவிடப் போவதாகவும் சொல்கிறாள். அப்படிச் செல்லும்பொழுது ஒரு நுணுக்க மான செய்தியையும் அவனிடத்தில் சொல்கிறாள்.

தவம் செய்யக் காட்டுக்குச் செல்லும் தன் கணவ னோடு தானும் செல்வதனால் அவனுடைய தவத் திற்குப் பங்கம் உண்டாகும் என்று பயந்து, அவன் தன்னை அழைத்துச் செல்ல மறுக்கிறானோ என்ற எண்ணத்தில் அவள் இராமனிடத்தில் சொன்னதாவது:

"பிராணநாதரே! மனோகரமான வாசனை கொண்டு விளங்கும் வனப்பிரதேசங்களில், நியமத்தோடு கூடிய வளாய், ஐம்புலன்களையும் வென்றவளாய், தேவரீர்க்கு ஓயாமல் திருப்பணி செய்து உபசரிப்பவளாய், தேவரீர் கூடவே இருந்துகொண்டு, ஆனந்தமாய் அடியேன் காலம் கழிப்பேன்."

இங்கு, பிரம்மச்சாரிணி என்ற ஆரியச் சொல்லே 'ஐம்புலன்களை வென்றவளாய்' என்று மொழிபெயர்க்கப் பட்டுள்ளது.

''பிரம்மச்சாரிணி'' என்ற சொல்லே, சீதையின் வாய்மொழி மூலமாக ஆண்டிருப்பது எவ்வளவு நுண்ணியதும் ஆழமானதும் ஆகும் என்பது வியந்து பாராட்டத் தக்கது.

இராமனுடைய ஆழ்ந்த மனிதத் தன்மைக்கு வால்மீகி முனிவர் காட்டுகின்றபடி இன்னெரு நிகழ்ச்சி யையும் பார்க்கலாம்.

பரதன் இராமன் சந்திப்பு

எப்படியாகிலும் இராமனே அயோத்திக்குத் திரும்பி அழைத்துக் கொண்டு வந்து அவனையே நாட்டை ஆளச் செய்ய வேண்டும் என்ற உறுதியோடு பரதன் காட்டுக்கு வந்து, இராமன் இடத்துப் பற்பல காரணங்களைச் சொல்லி அவனை நாட்டுக்குத்திரும்பி வரவேண்டும் என்று வேண்டிக்கொள்கிறான்; அவனைக் கேட்டுக்கொள்கிறான்; அவனிடம் மன்றாடுகிறான்; அவனைப் பிரார்த்தித்துக் கொள்கிறான்.

இவற்றுக்கானவற்றில் எந்தெந்த நியாயங்களை இராமன் முன் வைக்க வேண்டுமோ அவ்வளவையும் அவன் முன் வைக்கிறான். அதுமாத்திரம் அன்று. வசிஷ்டர், ஜாபாலி முனிவர், ஆகியவர்களும் இராமன் அப்படித்தான் செய்ய வேண்டும் என்று வற்புறுத்து கிறார்கள்.

இராமனே ஒன்றுக்கும் மசியவில்லை. தான் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழ்வதில் பிடிவாதமாய் நிற்கிறான். இறுதியாகப் பரதன் இராமனது பாதுகைகளைப் பெற்றுக் கொண்டு திரும்புகிறான். அப்பொழுது ஒவ்வொருவராக இராமனிடம் விடை பெற்றுக் கொண்டு செல்கிறார்கள். இந்தச் செய்தி, அயோத்தியா காண்டம் 112ஆம் சர்க்கத் தில் இடம்பெறுகிறது, இந்த சர்க்கத்தின் கடைசியில்

உள்ள இரு ஸ்லோகங்கள் உன்னிப்பாக நோக்கத் தக்கவை. அவையாவன:

"அதன்மேல், இமயமலே போலவே, தனது தர்மத்தில் சலியாது நின்றவரும், இரகு குலத்தைப் பெருமைப் படுத்துபவருமான (இராமர்) அவர், அந்த ஜனத்தையும், குருக்களேயும் மந்திரிமார்களேயும், அவ் வண்ணமே, மற்றுமுள்ள அதிகாரிகளேயும், இரு தம்பிமார்களேயும், ஒவ்வொருவரிடத்தும் இனிய சொல் கூறி விடை கொடுத்தனுப்பினுர். தாய்மார்கள், மனத்துயரால், கண்ணீரால் அடைபட்ட கண்டம் உடையவர்களாய் அவரிடம் விடைகொள்ள முடியாது இருந்தனர்.

அந்த ஸ்ரீராமர்தான், தாய்மார்கள் எல்லோரையும் சேவித்துவிட்டு, அழுதுகொண்டே தனது பர்ணக சாலே யில் புகுந்தார்."

இங்கும் அதே மனிதத் தன்மையையே காண்கிருேம். வந்திருந்த அனேவரும் பற்பல காரணங்களே எடுத்துக் காட்டி தன்னே அயோத்திக்குத் திரும்ப வேண்டும் என்று பன்னிப் பன்னி வேண்டிக்கொண்டபொழுது, அந்த வேண்டுகோளேக் கண்டிப்பாக மறுத்து, தான் பதினுன்கு ஆண்டுகாலம் கானகத்தில் வாழத்தான் போவதாகக் கூறி உறுதி மாருது நின்ற அதே இராமன்தான், அவர்கள் அனேவரையும் அனுப்பிவிட்டு துக்கமும் துயரமும் தாளா மல், தனியாகப் பர்ணக சாலேக்குள் புகுந்து அழத் தொடங்குகிருன்.

### விராதன் பிடியில் சீதை

ஆரண்யகாண்டத்தில், இரண்டாவது சர்க்கத்தில் விராதனுல் சீதை அபகரிக்கப்பட்டதைக் கூறும் வால்மீகி முனிவர், சீதையை விராதன் எடுத்துத் தன் இடுப்பில் வைத்துக் கொண்டான் என்றும், அது கண்ட இராமன்

வாடிய முகத்துடன் இலக்குவனைப் பார்த்து, அடியிற் கண்டவாறு சொன்னான் என்றும் பாடுவார் :

"புண்ணிய ஆத்மாவே! ஜனகமன்னன் திருமகளும், பதிவிரதையும், மிக சுகமாய் வளர்ந்தவளும், ராஜபுத்ரியும் புகழ் பெற்றவளும், எனது மனைவியுமான இவள், விராதன் இடுப்பில் நடுங்கித் துடிப்பவளாய் இருப்பதைப் பார். லட்சுமணா! கைகேயி தேவியாருடைய, நமது விஷயத்தில் உத்தேசம் எதுவோ, வரத்தால் அடையப்பட்ட மனோரதம் எதுவோ, அது எல்லாமும் சீக்கிரத்திலேயே நடந்தேறி விட்டது.

எவள் தீர்க்காலோசனை உடையவளாய், புத்திரன் விஷயத்தில் ராஜ்யத்தால் மட்டும் திருப்திகொள்ள வில்லையோ, எனக்கு நடுத்தர வயதிலிருக்கும் தாயா கிறவள் எவளோ, எல்லாப் பிராணிகளுக்கும் ஹிதன் ஆகிற நான் எவளால் காட்டிற்கு அனுப்பி விடப்பட் டேனோ, அவள் இப்பொழுது இக்காரியத்தால் மனோரதம் கைகூடப் பெற்றவளானாள்."

இராமனுடைய இந்தக் கூற்று எந்த மனிதனுடைய உணர்ச்சிப் பெருக்கும் இந்தக் கட்டத்தில் எவ்வாறு இருக்குமோ அதனை, வெளிப்படுத்துவதாக அமைந் திருப்பதைக் காணலாம்.

கைகேயியிக்குத் தசரதன் கொடுத்த வரத்தின் காரணம் ஆக, தன் தந்தையைச் சத்திய சந்தன் ஆக ஆக்க வேண்டுமென்று மன உறுதியோடு எந்த இராமன் காட்டுக்குப் போனானோ, அந்த இராமன், இப்பொழுது கைகேயியின் மனோரதம் நிறைவேறிற்று என்று பேசுகிறான்.

நாட்டை விட்டு காட்டுக்குத்தான் வந்தான் வந்த இடத்தில், கணவனைப் பிரிந்திருக்க மாட்டேன் என்று

சொல்லி உடன் வந்த மனைவியையும், விராதனைப் போன்ற அரக்கன் பற்றிக் கொள்வானேயானால், எந்த மனிதனுடைய மனநிலையும் இப்படித்தான் இருக்கும் என்று எடுத்துக்காட்டத் தேவை இல்லை.

கவற்சி

அதுபோலவே, இன்னொன்றும் பார்க்கலாம். ஆரண்ய காண்டத்தில் 16ஆம் சர்க்கம் கூறுவதாவது :

பனிக்காலத்தில் ஒரு நாள் காலையில் தூநீராடப் போகும்பொழுது, லட்சுமணன், அக்காலத்து ஹேமந்த ருதுவை வர்ணித்துப் பேசுகிறான்:

"புருஷோத்தமனான பரதனும், நகரில் இந்தக் காலத்தில் கஷ்டப்படுகிறவனாய், இராமபக்தியால் தர்மநெறி வழுவாதவனாய், தவம் புரிந்துவருகிறான். பலவகையான போகங்களையும், ராஜ அதிகாரத்தையும், பெருமையையும் துறந்து தபஸ்வியாய், நியமமான உணவை உண்பவனாய், குளிர்ந்திருக்கும் தரையில் படுத்திருக்கிறான். அவனும் இந்த வேளையில் நீராடுவதற்காக எழுந்திருந்து பரிவாரங்களால் சூழப்பட்டவனாய், பிரதி தினமும் சரயு நதிக்குப் போய்க் கொண்டிருக்கலாம். மிக சுகங்களிலேயே வளர்ந்தவனும், திருமேனியனும் ஆன அவன் அதிகாலையிலேயே பனியால் பீடிக்கப்பட்டவனாய் எப்படி சரயு நதியில் நீராடுவான்?". இவ்வாறு பலபடப் பரதனைப் புகழ்ந்து கூறிக் கொண்டு வரும்பொழுது,

"உலகத்தில் மனிதர்கள் விசேஷமாகத் தங்கள் தந்தையின் குணத்தைக் கொள்ளாமல், தங்களது தாயின் குணத்தையே கொள்கிறார்கள். பிரசித்தமாக வழங்கி வரும் உலக வசனமானது பரதன் விஷயத்தில் பொய்யாகி விட்டது. தசரத மன்னரை நாயகராகவும், பரதனைக்

குமாரனுகவும் உடைய நமது தாய் கைகேயியிக்கு மட்டும் இந்தக் கொடிய எண்ணம் எவ்விதமாக உதித்தது?'' என்றும் கேட்கிருன்.

இலக்ஷ்மணன் இவ்வாறு சொன்ன மாத்திரத்தில் இராமனுடைய உள்ளத்தில், பரதனைப் பற்றிய எண்ணம் ஆழமாக இடம் பெற்றுவிடுகிறது. அப்பொழுது இராமன் இலக்குவனைப் பார்த்து,

''குழந்தாய்! உன்னுல், பக்ஷபாதமில்லாத தாய், எந்த வகையிலும் நிந்திக்கத் தக்கவள் அல்லள். இக்ஷ்வாகு வம்சத்தின் திலகனுன பரதனைப் பற்றியதான அந்த பேச்சை இன்னும் வேண்டிய மட்டும் சொல். காட்டில் தவம் புரிந்து வசிப்பதில் என் மனம் எவ்வளவோ தைரிய மாக இருந்தபோதிலும், பரதனிடத்து அன்பினுல் கலக்கம் உள்ளதாய் இப்பொழுது தடுமாற்றம் அடைகிறது. அவனது பிரியமானவைகளும், மதுரமானவைகளும் அமிருதத்துக்கு ஒப்பாயும், மனத்தைச் சாந்தப்படுத்தி வைப்பதில் அதிக ஆற்றல் உடையவைகளாயும், உள்ள மொழிகளை நான் நினைத்துக்கொண்டே இருக்கிறேன். லட்சுமணு! நான் மகாத்மா ஆகிய பரதனேடும், வீரன் ஆன சத்துருக்கனனேடும், உன்னேடும் எப்பொழுது சேர்ந்திருப்பேனே?'' என்கிருன். இவ்வாறு கூறி துயரப் பட்டுக்கொண்டே, இராமன் நீராடச் சென்ருன் என்று வால்மீகி முனிவர் கூறுவார்.

சகோதர வாஞ்சை எந்த அளவிற்கு இராமன் உள்ளத்தில் பெருக்கு எடுத்து ஓடுகிறது என்பதனை இங்கே காண்கிருேம்.

## தனித்து விடப்பட்ட சீதை

மாரீசனைக் கொன்று விட்டுத் திரும்பி வரும் இராமன், எதிரில் வரும் இலக்ஷ்மணனைக் கண்டு, அரக்கர் வாழும்

இக் காட்டில்சீதையைத் தனியாக விட்டு வந்ததற்காக குறைக் கூறுகிருன்.

இலக்குவனைத் தன் இடக்கையால் பிடித்துக் கொண்டு மனம் நொந்து, அடியிற்கண்ட வார்த்தைகளைக் கொட்டுகிருன்:

"ஐயோ! லக்ஷ்மணு! நீ செய்தது பெருங்குற்றம். சீதையைத் தனியாக விட்டு நீ வந்தாயே! அவள் க்ஷேம மாக இருக்கிருளா? அவளை அரக்கர்கள் கொன்றிருப் பார்கள் அல்லது புசித்திருப்பார்கள் என்பதில் ஐயம் இல்லை. இப்போது என் மனம் துடிக்கிறது; சாந்தம் அற்று இருக்கிறது. இடக்கண் அபசகுனமாய்த் துடிக் கிறது. லட்சுமணு! சீதை இருக்கமாட்டாள். இதற்கு ஐயம் இல்லை. மாண்டவள், அல்லது திருடிக் கொண்டு போகப்பட்டவளாய் இருப்பாள். கஷ்டத்தில் உயிரோடு இருக்கிருளோ என்னவோ?" என்று கூறுகிருன்.

இதனேடு அமையாமல் 58ஆம் சர்க்கத்தில் இராமன் மேலும் அடியிற் கண்டவாறு பேசுவதாக வால்மீகி முனிவர் கூறுவார்:

"லட்சுமணு! தண்டக வனத்திற்குப் புறப்பட்ட என்னை எவள் ஒருத்தி தொடர்ந்து வந்தாளோ, எவள் ஒருத்தியை நீ தனிமையில் விட்டு இங்கு வந்திருக் கிருயோ, அந்த ஜானகி எங்கே?

ராஜ்யத்தை இழந்து, எளிமையுற்று, துன்பமடைந்து தண்டகாவனத்தில் கால் நடையாய்த் திரியும் எனக்கு கஷ்டத்திலும் பக்கலிலே இருக்கிறவளும், நுண்ணிடை யாளுமான அந்த ஜானகி எங்கே?

வீர! எவள் ஒருத்தியை விட்டுப் பிரிந்து ஒரு நொடிப் பொழுதும் உயிர் வைத்திருக்க நான் ஒப்பமாட்டேனே,

அந்த எனது உயிர்த்தோழியும், தெய்வப் பெண் என விளங்குபவளும் ஆன சீதை எங்கே?

லட்சுமணா! பொன்னிறத்தாளான அந்த ஜானகியைப் பிரிந்து அமரர்களுக்குத்தான் ஆகட்டும், உலகுக்குத் தான் ஆகட்டும் அரசையும்கூட நான் பெரிது எனக் கொள்ளேன்.

அப்பா! எனக்கு உயிரினும் அரிய ஜானகி, பிழைத் திருக்கின்றாளா? எனது வனவாசம் பயனற்றதாய்ப் போகாமல் இருக்குமா? லட்சுமணா! சீதை காரணமாய் நான் மாளவும், நீ நாடு திரும்பிவிடும்பொழுது அந்த கைகேயி தன் மனோரதம் நிறைவேறிவிட்டதைப்பற்றி மகிழ்ச்சி அடைவாளோ? என்னவோ? அப்பா! தனது குமாரன் ஆகிய நான் மாண்டுவிட கௌசல்யா தேவியார் மனம் நொந்து, அந்தப் புத்திரனுக்கு ராஜ்யம் முடிவுறப் பெற்றுக்கொண்ட கைகேயியினிடம் தாழ்ந்து நிற்க வேண்டுமே!

லட்சுமணா! ஜானகி உயிருடன் இருப்பாளாயின் நான் என் ஆசிரமத்திற்கு மீளவும் திரும்பிவிடுவேன். பதிவ்ரதையான அவள் மாண்டாள் என்றால் நான் என் உயிரை விடப்போகிறேன்.”

தற்புலந்து நாப்புலர்ந்து வாடும் நாயகன்

60ஆம் சர்க்கத்தில் இராமன் சீதைபற்றிப் புலம்புவது இன்னும் உருக்கமாக இருக்கும்.

ஒரு மரத்தின் அருகில் இருந்து, மற்றொரு மரத்துக்கு ஓடியும், ஒரு மலையில் இருந்து, மற்றொரு மலைக்குச் சென்றும், ஒரு நதியிலிருந்து, மற்றொரு நதிக்குப்போயும், இராமன் புலம்பிக் கொண்டே துக்க சாகரத்தில் மூழ்கு கிறான், கடம்ப மரத்தைப் பார்த்து,

"ஓ! கடம்ப மரமே! கடம்ப வனத்தில் ஆசையுள்ள சீதையை நீ கண்டதுண்டா?" என்று கேட்கிறான்.

வில்வமரம், மருதமரம், அசோக மரம், பனைமரம் முதலிய ஒவ்வொரு மரத்தைப் பார்த்தும் இப்படியே புலம்புகிறான்.

மர இனங்களைக் கேட்டவாறே விலங்குகளையும் கேட்கிறான்.

மானைப் பார்த்து,

"ஓ! மானே! மானைப் போன்ற விழிகளை உடைய என் காதலி, பெண் மான்களோடு கூடி இருப்பவளாய் இருப் பாளே! மான்குட்டிகள் போன்ற கண்களை உடைய ஜானகி பற்றி நீ ஏதேனும் அறிவாயோ?" என்று கேட் கிறான்.

யானையைப் பார்த்து,

"ஓ! யானையே! உனது துதிக்கை போன்ற தொடை உடைய வளான ஜானகி போன இடம் உனக்குத் தெரியுமா? நீ கண்டாயா?" என்றுகேட்கிறான்.

இவ்வாறாகப் புலி முதலிய, பிற விலங்குகளையும் கேட்கிறான்.

64 ஆம் சர்க்கத்தில் கோதாவரி நதியைப் பார்த்து "சீதை எங்கே?" என்று கேட்கிறான். மலைகளைப் பார்த்தும் அவ்வாறே கேட்கிறான்.

இவை எல்லாம் தன்னுடைய மனைவி இடத்தில் தணியாத அன்பு கொண்ட ஒருவனுடைய இயல்பான தன்மையை அழகாக எடுத்துக் காட்டுகின்றன.

அரண்மனை விட்டு, அதன் சுகங்களை விட்டு, பிற உறவினர்களை விட்டு, அந்த அரண்மனையின் அநுபவ

போகங்களை விட்டு, கணவன் ஒருவனே கதி என்று, அவன் வனவாசத்தின் இன்னல்களை எல்லாம் எடுத்துச் சொல்லியும் கேட்காமல், அவன் பின் தொடர்ந்த மனைவியை இழந்த எந்தக் கணவனுடைய மனோ நிலையும் இப்படித் தான் இருக்க முடியும்.

சூளாமணி பெற்ற இராமன் நிலை

சுந்தர காண்டம் 65 ஆம் சர்க்கத்தில் அநுமான் இலங்கை சென்று திரும்பியதையும், அவனிடம் சீதை சொல்லி அனுப்பிய சில அடையாளங்களை இராமனிடத்து அவன் தெரிவிப்பதையும், அவள் கொடுத்து அனுப்பிய சூளாமணியை இராமனிடம் அவன் கொடுப்பதைப் பற்றியும் வால்மீகி முனிவர் எடுத்துக் கூறுவார்.

66 ஆம் சர்க்கம் சூளாமணியைப் பெற்றுக் கொண்ட இராமனுடைய நிலையையும், பேச்சையும் எடுத்துக் கூறுகிறது.

அந்த உத்தமமான ஆபரணத்தைப் பார்த்த உடனே, இராமன் நீர்ததும்பும் கண்களோடு, மனோ வேதனையால் வருந்தி கலக்கம் அடைந்தவனாய், அடியிற் கண்டவாறு கூறினான் என்று வால் மீகி முனிவர் கூறுவார்:

"ஆபரண உத்தமத்தின் தரிசனத்தால் எனது ஹிருதயமும், கன்றினிடம் வாத்ஸல்யம் உடைய ஒரு பசு கன்றுக்கு அன்பினால் எப்படியோ, அப்படியே உருகுகின்றது. இந்த ஆபரணோத்தமம் வைதேகிக்கு எனது மாமனாரால் கொடுக்கப்பட்டது. விவாக காலத்தில் தலையில் அணியப் பெற்றதால், சேர்ந்த இடத்தின் காரணமாக, மேலும் அழகு பெற்று விளங்கிற்று. நீரில் பிறந்ததும், நல்லவர்களால் நன்கு மதிக்கப் பெற்றதுமான

இந்த மணிதான், மதிமானுய் மிகவும் மனம் மகிழ்ந்த இந்திரனுல், யாகத்தில் பரிசாகக் கொடுக்கப் பெற்றது.

ஓ! சௌம்யரே! இப்பொழுது இந்த ஆபரணோத்தம மானதைப் பார்த்து தகப்பனுரையும், ஜிதேந்திரியரான ஜனகரையும், தரிசித்தவனைப் போல் இருக்கிறேன்.

இந்த மணி எனது காதலியான அவளது முடியில் ஆபரணமாக அழகு பெற்று விளங்கக் கூடியது. ஆகை யால், நான் இப்பொழுது இதனுடைய தரிசனத்தால் அவளையே அடைந்தது போல் எண்ணுகிறேன்.

ஓ! சௌம்யரே! விதேக ராஜ புத்திரியாகிய சீதை தாகம் கொண்டவனைத் தண்ணீரால் எப்படியோ, அப் படியே வாக்கியங்கள் ஆகிய ஜலத்தினுல் நனைப்பவளாய் என்ன சொன்னுள்? பின்னும் ஓர் தரம் சொல்லும்.

ஓ! லக்ஷ்மணு! வைதேகி என்னை விட்டுப் பிரிந்து கையில் கிடைத்திருக்கிற, இந்த நீரில் பிறந்த மணியையும் பார்க்கிறேன் என்கிற இதைக் காட்டிலும் பெரியதுக்கம் வேறு என்ன உண்டு?

நேசனே! வைதேகி ஒரு மாத காலம் உயிர் தரித்திருப் பாள் என்ருல், தீர்க்காயுள் உடையவள் ஆகிருள் கருங் கண்ணுளான அவளை விட்டுப் பிரிந்து இனி ஒரு கணப்பொழுதும் உயிரை வைத்திரேன்.

என் மனைவி எங்கு காணப்பட்டாளோ, அந்த இடத் திற்கு என்னையும் அழைத்துக் கொண்டு போய் விட்டு விடு. அவளுடைய செய்தியைக் கேட்ட பிறகும் கூட கணப் பொழுதும் நான் காலஹரணம் செய்யேன்.

நுண்ணிடையாளான எனது கற்புடைய மனைவி எந்த வேளையிலும் பயமுறுத்தி வருகின்ற அரக்கர்களிடை

யில் நடுநடுங்கியவளாய் என்ன பாடு படுகிருளோ? அவளுடைய முகம், அரக்கர்களால், மறைக்கப் பட்டதாய், சரத் காலத்து மங்கலில்லாத மேகங்களால் சந்திரன் எப்படியோ, அப்படியே சோபை அற்று இருக்குமே!

அநுமனே! சீதை யாது சொன்னுள்? ஏற்றக் குறை வின்றி எனக்குச் சொல்லு.

நோயில் பட்டவன் மருந்தைக் கொண்டு எப்படியோ, அப்படியே, இப்பொழுது இதைக் கொண்டு தானே நான் உயிர் தரிக்க வேண்டும்.

சர்வாங்க சுந்தரியும், காதலியும், ஹிதமாய் நடப் பவளும், தேன் மொழியாளும் என்னை விட்டுப் பிரிந்திருக் கிறவளுமான என்னுடைய கட்டழகி, என்ன சொல்லி அனுப்பினுள்?

அநுமனே! எனக்கு விவரமாய்ச் சொல்லும்.''

இராமனுடைய இந்தக் கூற்று எவ்வளவு இயற்கையாக அமைந்திருக்கிறது என்பதனை எல்லோ ராலும் உணர முடியும்.

சீதை இராமனிடமிருந்து அபகரித்துக் கொண்டு செல்லப்பட்டு விட்டாள். அவள் உயிரோடு இருக்கிருளா? இல்லையா? என்பது கூடத் தெரியாது. உயிரோடு இருந்தாலும் எங்கு இருக்கிருள் என்பது தெரியாது. சுக்கிரீவன் அனுப்பிய வானரப் படையினர் தெற்கு நோக்கிச் சென்றவர் தவிர, பிறர் அவளைக் காணமல் திரும்பிவிட்டனர்.

தெற்கு நோக்கிச் சென்றவர்கள் திரும்பி வர வேண்டிய கால கட்டமும் தாண்டிக் கொண்டிருக்கிறது.

இந்த நிலையில் வருந்திக் கொண்டிருந்த இராமன் முன்னுல் அநுமான் தோன்றி, சீதை உயிரோடு இருக்

கிருள் என்றும், அவள் கற்புடையவளாக இருக்கிருள் என்றும் இன்னும் ஒரு மாத காலமே உயிர் வைத்திருக்கப் போவதாக அவள் சொன்னுள் என்றும், அநுமான் சொன்னதோடல்லாமல் தன் கூற்றுக்கு ஆதாரமாக அவள் சொல்லி அனுப்பிய அடையாள மொழிகளையும் சொல்லி, கொடுத்து அனுப்பிவிட்ட சூளாமணியையும் கொடுக்கிருன்.

மனைவியைப் பிரிந்த ஒரு கணவன் நிலை, வால்மீகி முனிவர் கூறியுள்ளதைப் போலத்தான் இருக்க முடியும் என்பதை வலியுறுத்தத் தேவை இல்லை.

வீழ்ந்த இலக்குவனைக் கண்டு

யுத்த காண்டம் 45 ஆம் சருக்கத்தில் நாகபாசத்தால் இந்திரஜித்து, இராம இலக்குவரைக் கட்டுவதை வால்மீகி முனிவர் பாடுவார். சினங்கொண்டிருந்த இந்திரஜித்தால், இராம இலக்குவரது தேகங்கள், பாணங்களாகக் காணப் பட்ட ஸர்ப்பங்களால் கட்டப்பட்டன. அவர்களது உடம்பில் பாணங்கள் தைத்த இடங்கள் தோறும் இரத்தம் அதிகமாகப் பெருகவே, அவ்விருவரும் பூத் திருந்த பலாச மரங்களைப் போல் காணப் பட்டார்கள்.

இந்திரஜித்து இராம இலக்குவரைப் பார்த்து வீராவேசமாகப் பேசிவிட்டு, அவர்கள்மீது மேலும் தனது கூரான பாணங்களை விடுத்துப் பிளந்து, மிக்க களிப்பு கொண்டு அட்டகாசம் பண்ணுகிருன்.

கருநிறமுள்ள அந்த இராக்ஷஸன், யுத்தத்தில் பெரு வில்லை வளைத்துப் பயங்கரமான பாணங்களை அவர்கள்மீது இடைவிடாமல் தொடுக்கிருன். போர்க்களத்தில் அவ் விருவரும் பாணங்களால் கட்டுப் படவே, ஒரு நொடிப்

பொழுதில் தலைகளை மேலெடுத்துப் பார்க்க முடியாத வர்கள் ஆகி விடுகிறார்கள்.

அதன் பிறகு தேகங்களின் ஒவ்வொரு பாகமும் பாணங்களின் நுனி பதிந்து, கைந்நுனி வரை ஒரு விரல் கிடை அளவாவது பாணத்தால் அடிக்கப்படாமலும், ஸர்ப்பங்களால் பிளக்கப் படாமலும் உள்ள இடம் அவர்கள் உடலில் இல்லை.

இந்திரஜித்தால் அடிக்கப்பட்ட அவ்விருவரின் தேகங்களிலிருந்தும் பிரஸ்ரவண மலையிலிருந்து நீரருவி பெருகுவது போல, இரத்தமானது பெருகுகிறது.

இராமர் தனது வில்லை உறுதியாகப் பிடியாமல் கை நழுவவிட்டவராய், வீரப் படுக்கையில் படுத்திருக்கிறார்.

இந்நிலையைக் கண்ட வானரர்கள் பெரிதும் பெருந் துக்கத்தில் மூழ்கினார்கள். விபீஷணனும், சுக்கிரீவன் முதலி யோரும், வானர விரர்களைத் தேற்ற, இந்திரஜித்து வீரக் களிப்போடு இலங்கை நகர்க்குத் திரும்புகிறான்.

இராவணன் சீதையைப் புஷ்பக விமானத்தில் ஏற்றி, இராம இலக்குவர் நிலையைக் காட்டுகிறான். இந்த நிலையைக் கண் ட சீதை, பரிதாபமாகப் புலம்பு கிறாள்.

திரிசடை தேற்ற, ஒருவாறு அமைதி உற்ற சீதை. இலங்கைக்குத் திரும்ப எடுத்துச் செல்லப்படுகிறாள்.

அதற்குப் பிறகுதான், இராமன், தான் சரங்களால் கட்டப்பட்டவனாய் இருந்தபோதிலும், தனது அழிவின்மை யாலும், தெய்வத்தன்மையாலும், மூர்ச்சை தெளிந்து, தனது தம்பியாகிய லக்ஷ்மணன் வீழ்ந்து கிடப்பதைப் பார்த்து துக்கம் மேலிட்டவனாய்ப் புலம்பலானான்.

இலக்குவனது இந்த நிலை கண்டு இராமன் எப்படிப் புலம்பினான் என்று வால்மீகி முனிவர் கூறியதைக் காண்பதற்கு முன்னால் இங்கு ஒன்றைக் காண வேண்டும்.

கம்பன் காப்பியப்படி, இவ்வாறு இந்திரஜித்து போர் செய்யும் பொழுது, இராமன் போர்க்களத்திலேயே இல்லை. இலக்குவன், இந்திரஜித்து இடையே போர் நடக்கிறது. இந்தப் போரில்தான் இலக்குவன் இந்திரஜித்தின் நாக பாசத்தால் கட்டப்பட்டு விடுகிறான். இது அறிந்த இராமன் போர்க்களத்திற்குவந்து இலக்குவனது நிலை கண்டு, துக்கம் தாளாமல் அவன்மேல் விழுந்து கிடக்கிறான்.

சீதை களங்காண் நிகழ்ச்சியோ பின்னர். இந்திரஜித்து விடுத்த பிரம்மாத்திரத்தினால் கட்டுண்டு கிடக்கும் பொழுது; நாகபாசத்தால் கட்டுண்டு கிடக்கும் பொழுது அன்று.

இனி நாக பாசத்தால் கட்டுண்டு கிடந்த இலக்குவன் நிலைகண்டு, அவ்வாறு கட்டுண்டு, ஆனால் சற்று மூர்ச்சை தெளிந்த இராமன் புலம்புவதை வால்மீகி முனிவர் கூறுகிறபடியே இனிபார்ப்போம்:

''இப்பொழுது தம்பியை, போரில் தோல்வியுற்றுப் படுத்துக் கிடப்பவனாய் நான் காண்கின்றேனே! எனக்குச் சீதையால் ஆவது என்ன? உயிரினால் தான் ஆவது என்ன? இம்மானிட உலகத்தில் நன்றாகத் தேடிப் பார்த்தால் சீதையைப் போன்ற பெண்ணை என்னால் காணமுடியும். லக்ஷ்மணனுக்கு ஒப்பான மந்திரியும், போர் வீரனுமான தம்பியும் எங்கும் கிடைக்க மாட்டானே! லக்ஷ்மணன் மரணத்தை எய்தி விட்டான் எனில், நான் வானரர்கள் பார்த்துக்கொண்டு இருக்கும் பொழுதே என் உயிரை ஒழிக்கப் போகிறேன். நான்

இனி லஷ்மணன் இல்லாமல் அயோத்திக்குச் சென்றால் கோசலா தேவியார்க்கு என்ன சொல்வேன்? கைகேயித் தாய்க்கு என்ன சொல்வேன்? புதல்வனைக் காண்பதிலேயே கருத்துற்று விளங்கும் சுமித்திரைத் தாய்க்குத்தான் எவ்விதம் பதிலளிப்பேன்? அவனின்றிச் செல்வேனே ஆகில், கன்று இழந்த பெண்மானைப் போலத் துடிதுடித்துக் கதறும் அவளை நான் எவ்வாறு தேற்றரவு செய்வேன்? மகா புகழ் படைத்த பரத சத்துருக்கனனிடமும் எப்படி முகம் கொடுத்துப் பேசுவேன்? என்னுடன் காட்டிற்குக் கூடவே வந்தவன் அவன். அவனில்லாமல் திரும்பிச் செல்லும் நான சுமித்திரையால் ஏற்படும் கடுஞ் சொற்களை எவ்வாறு ஏற்க வல்லேன். அந்தோ! என்ன கஷ்டம்? இவ்விடத்திலேயே உடலை ஒழித்து விடுகிறேன். உயிருடன் இருக்கவே நான் விரும்பவில்லை. எவனுக்காக இந்த லக்ஷ்மணன் பாணங்களாலான படுக்கையில் வீழ்ந்து உயிரற்றவன் போல் கிடக்கின்றானோ, அந்த தீவினை புரிந்த பாவியான என்னை வைத்துப் பொசுக்க வேண்டும். லக்ஷ்மணா! துயரமடைந்த என்னை நீ எப்பொழுதும் தேற்றுவாயே. அப்படிப்பட்ட நீ இப்பொழுது உயிரிழந்த வனாகி புலம்பித் தவிக்கும் என்னிடம் பேசுவதற்கும், முடியாது இருக்கின்றனையே! எவனால் இப்பொழுது போரில் அரக்கர்கள் கொல்லப்பட்டு வீழ்த்தப்பட்டார் களோ, அப்பேர்ப்பட்ட வீரன் தரையில் சத்துருக்களால் வீழ்த்தப்பட்டவனாய்க் கிடக்கிறான். இந்த சரங்களாலான படுக்கையில் கிடக்கும் இவன், இரத்தம் தோய்ந்த பாணங்களால் வதைக்கப்பட்டவனாய் அஸ்தமனத்தை அடைந்து கொண்டிருக்கும் சூரியன் போல விளங்கு கிறான்.

மிக்க தேஜோவானான இவன் காட்டிற்குப் பிரயாணமான என்னை எப்படிப் பின்பற்றி வந்தானோ

அப்படியே நானும் இவனை யமலோகத்துக்குப் பின்பற்றிச் செல்வேன்.

எக்காலத்திலும் உடன் பிறந்தவனிடம் உகந்த இவன், என்னையே சதா பின்பற்றியவன். இப்பொழுது அதற்கு உரிமை அற்ற எனது தீர்க்கதரிசனமற்ற செயல்களால் இந்தக் கதியை எய்தினான்.

வீரனாகிய இந்த லக்ஷ்மணன், எவ்வளவுதான் கோபம் கொண்டிருந்தாலும், என்னைப் பார்த்து, தர்ம விரோத மான சொல்தான் ஆகட்டும், கடுமையான சொல்தான் ஆகட்டும், அவன் ஒருபொழுதும் சொன்னதே இல்லையே.

ஒரு தரம் வில்லை வளைத்து நாண் ஏற்றி ஒரே மூச்சில் ஐந்நூறு பாணங்களைப் பிரயோகிக்க வல்ல கார்த்த வீரியனைக்காட்டிலும் இலக்ஷ்மணன் வில் வித்தையில் வல்லவனாயிற்றே. தேவராஜனான இந்திரனே, அஸ்திரங் களைத் தொடுத்த போதிலும் அவற்றையும் தனது அஸ்திரத்தால் நிர்மூலமாக்குபவன் ஆயிற்றே. சிறந்த படுக்கையில் படுத்தற்கு உரிய இவ் வீரன் வெறுந்தரையில் உயிரிழந்து படுத்திருக்கிறான். நான் விபீஷணனை அரக்கருக்கு அரசனாக்குவதாகச் சொன்னபடி செய்ய வில்லையே. என்னுடைய வாக்குத் தத்தம் பயனற்றதாகப் போய்விட்டதே. அது என்னை எரிக்கின்றதே! சுக்கிரீவரே! நான் வல்லமை அற்றவன் என்பதை அறிந்து கொண்டு மகாராஜரே, அங்கதனை முன் இட்டுக் கொண்டு, சேனை யுடனும், நண்பர்களுடனும் பலசாலி ஆகிய இராவணன் உங்களைத் துரத்துவதற்கு முன்னரே, நீங்கள் இவ்விடத்தை விட்டுத் திரும்பிச் சென்று விடுவது நன்மை.

அனுமானாலும், கரடி மன்னனாலும் கோலாங்கூலன் என்னும் வானர மன்னனாலும் போரில் பிறர் செய்ய முடியாத காரியங்கள் செய்யப்பட்டன.

அங்கதனுலும், மயிந்தனுலும், துவிவிதனுலும், பெருஞ் சாகசங்கள் செய்யப்பட்டன. சம்பாதியாலும் கேசரியாலும், போர்க்களத்தில் பயங்கரமாக யுத்தம் புரியப்பட்டது. கவயன், கவாக்ஷன், சரபன், கஜன் என்ற வானரர்களும், இன்னும் எனக்காக உயிர் இழக்குமாறு நிச்சயித்த மற்றைய வானர வீரர்களும், செய்த போரைக் கண்டதனுல் மகிழ்வு எய்தினேன்.

சுக்கிரீவரே! விதியை மனிதர்களால் வெல்ல முடியாது. சூர்ய குமாரரே! பகைவரைத் தவிக்கச் செய்பவரே! நீங்கள் என்மீது வைத்துள்ள நட்பிற்கும் உங்கள் பருவத்துக்கும் தக்கபடி, எவ்விதமாக நடந்து கொள்ள வேண்டுமோ, அவ்விதமாக, தருமத்திற்கு அஞ்சி நீங்கள் நடந்து கொள்ளுங்கள்.

வானர வீரர்களே! நீங்கள் அனைவரும் உங்கள் நண்பனுக்குச் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்து விட்டீர்கள். இனி நான் உங்களுக்கு விடை கொடுத்து விட்டேன். உங்களுக்கு இஷ்டமான இடங்களுக்குச் செல்லலாம்'' (49ஆம் சர்க்கம்)

இராமனுடைய இந்தப் புலம்பலில் அவலத்தின் எல்லையைக் காண்கிறோம். தானே எல்லாம் என்று கொண்டு, தன் பின் தொடர்ந்து, பதினுன்கு ஆண்டுகள் உறக்கமின்றி அண்ணனுடைய சேவையையும், பாது காப்பையுமே தன்னுடைய கடமை எனக் கொண்டிருந்த தன்னுடைய தம்பி இறந்துபட்டமை குறித்த அண்ண னுடைய அவல நிலையை வேறு விதமாகவும் விளக்க முடியுமா?

விரக்தியின் உச்சத்திற்குச் சென்று விட்ட இராமன் இனி, தனக்கு எதுவுமே தேவை இல்லை; எதுவுமே

வேண்டா என்ற நிலையில் நிற்பதனை அற்புதமாக வால்மீகி முனிவர் காட்டுவதைப் பார்க்கிறோம்.

நின்ற சீதையை நிந்திப்பான்

இராவண வதத்திற்குப் பின்னால் வீடணன், சீதையை இராமன் முன் அழைத்து வருகிறான். சீதையை இராமன் கடுஞ்சொற்களால் நிந்திக்கிறான்.

சீதை தன்னுடைய புனிதத்தன்மையை எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் இராமன் அதனை ஏற்றுக்கொள்ள வில்லை.

அப்பொழுது இலக்குவனைப் பார்த்து, சீதை, தீ மூட்டச் சொல்லி, தான் அக்கினிப் பிரவேசம் செய்யப் போவதாகச் சொல்கிறாள்.

தீ மூட்டப் பெறுகிறது. கற்பின் கனலி கனலில் பாய்கிறாள்.

அப்படிச் சீதை தீயில் விழும்பொழுது, சூழ நின்ற அரக்கர், வானரர், உள்ளிட்ட அனைவரும் ''ஹா! ஹா!'' என்று பேரொலி எழுப்புகின்றனர். யாவரும் வியப்பு அடைகின்றனர்.

''தர்மாத்மாவான ஸ்ரீராமர் மேற் சொல்லியபடி பேரொலி இடுபவரின் செயல் கண்டு, கேட்டு, அதனால் குழப்பம் அடைந்த மனத்தராய்க் கண்ணீரால் கலங்கிய கண்கள் உடையவராய்ச் சற்று நேரம் சிந்தனையில் மூழ்கினார்''. (யுத்த காண்டம் 120 ஆம் சர்க்கம்)

வால்மீகி முனிவருடைய இந்த ஒரு ஸ்லோகத்திலுள்ள கருத்தின் ஆழத்தைச் சற்றுச் சிந்தித்துப் பார்த்தால்தான் உணர முடியும்.

சீதை எந்நிலையில் இலங்கையில் இருந்தாள் என்பதனை, அநுமான் இராமனிடம் முன்னமே சொல்லி விட்டான். அநுமானுடைய மொழிகளை இராமன் முற்றும் நம்பாமல் இருப்பதற்குக் காரணமே இல்லை.

அதே சமயத்தில், வேறொருவனுடைய அந்தப் புரத்திலிருந்த தன் மனைவியைத் தான் உடனே அழைத்துக்கொண்டு, அயோத்தி சென்று, முடிசூடிக் கொண்டு, அவளும் பட்டமகிஷியாகத் தன் அருகில் இருப்பாளேயானல், அவளைப் பற்றி பிறர் என்ன சொல் வார்கள், என்ற நினைவையும் அவனால் தவிர்க்க முடிய வில்லை.

எனவேதான், சீதையை மிகக் கொடூரமாக இராமன் பேசுகிறன். எனினும் அந்தப் பேச்சுக்குப் பிறகு சீதை தீக்குளித்த உடன், அவனுடைய மனம் அதனைத் தாள முடியாமல் தவிக்கிறது.

பிறர் அவளைப் பற்றித் தரக்குறைவாகப் பேசக் கூடாதே என்ற எண்ணம் ஒரு புறம்; தன்னுடன் பதினன்கு ஆண்டுகள் வனவாசம் செய்வதற்காக அனைத்தையும் துறந்து விட்டுத் தன்னைப் பின்பற்றி வந்த தன் அன்பு மனைவி, தன் கடுஞ் சொற்களைத் தாங்க முடியாமல் இப்பொழுது தீக்குளித்து மடிகிறளே என்கிற வருத்தம் ஒரு புறம்.

இவை இரண்டனுக்கும் இடையே அகப்பட்டுக் கொண்டு, இராமன் மனக்கலக்கம் அடைவதிலும், அவன் கண்களில் நீர் பெருகுவதிலும் என்ன வியப்பு இருக்க முடியும்?

இங்கும் ஓர் உண்மையான மனிதனையே வால்மீகி முனிவர் காட்டுகிறர்.

வந்த வானவர் வாழ்த்தி நிற்பரால்

இந் நிலையில், அங்கு குபேரன், யமன், மகேந்திரன், வருணன், முக்கண்ணன், பிரம்மன் ஆகியோர், சூரியனுக்கு ஒப்பான விமானங்களில் ஏறிக் கொண்டு இலங்கை நகர்க்கு வந்து ஸ்ரீராமனை அடைகிறுர்கள்.

அவர்களைக் கண்டு இராமன் அஞ்சலி செய்கிறுன். அவனைப் பார்த்து அத்தேவர்கள் பின்வருமாறு கூறு கிறுர்கள்:

"சகல உலகங்கட்கும் கர்த்தாவும் ஞானி களுக்குள் உத்தமரும், சிரேஷ்டர் எனப் பெயர் பூண்டவரும் ஆன நீர் சீதை அக்கினியில் குதிப்பவளாய் இருப்பதனை, ஏனே பார்த்துக் கொண்டிருக்கிறீர்? தம்மை தேவகணங்களின் சிரேஷ்டராய், ஏன் தானே தெரிந்து கொள்ளாமல் இருக்கின்றீர்? தேவரீர் சிருஷ்டிக்கு முன் வசுக்களுக்குள், 'ருததாமா' என்ற பெயர் பூண்ட வசு; சிருஷ்டிக்கும் தெய்வம்; தானுய் உண்டானவர், தேவரீர் ஒருவரே! மூன்று உலகங்களுக்கும் முதல்கர்த்தா; ருத்திரர் களுக்குள் எட்டாவதான சங்கரர் எனப் பெயர் பூண்ட ருத்திரராயும், சாத்யர்கள் என்ற தேவர்களுக்குள் வீரியவான் என்ற ஐந்தாவதாயும் ஆகிறீர். உம் இரு செவிகள் அஸ்வனி தேவர்களே. உம் இரு கண்களும் சந்திர சூரியர்களே.

பகைவர்களைத் தவிக்கச் செய்கிறவரே! தேவரீர் உலகங்கள் படைக்கப்படும் முன்னரும், இவ்வுலகங்கள் அழிந்த பின்னரும் காணப்படுகின்றீர்!

அப்படி இருந்தும் ஒன்றும் அறியாத மானுடன் போல் வைதேகியை ஏனே அசட்டை செய்கின்றீர்?"

(யுத்த காண்டம் 120ஆம் சர்க்கம்)

இந்தக் கூற்றில் ஓர் அடிப்படையான உண்மையைக் காண்கிறேம். இராமனைத் துதிக்கும் அவர்கள், அவன்

பரம்பொருளே என உடன்பாடாக அவனிடமே கூறுவ தோடு அல்லாமல், 'ஒரு மானுடனைப் போல நடந்து கொள்கிறீரே!' என்று எதிர் மறையாகவும் நேரிடை யாகக் கேட்டுவிடுகிறார்கள்.

இதற்கு இராமன் அளிக்கும் பதிலில்தான் நாம் ஆய்ந்து கொண்டிருக்கும் கருப்பொருள் அமைந்து இருக்கிறது.

இதற்கு இராமன் அளித்த பதிலாவது:

"என்னை நான் தசரதனின் புத்திரனாய், இராமன் என்னும் பெயர்பூண்டவனாய், மானுடன் எனவே அறி வேன். ஆகையால் நான் யாரோ? யாருடன் சம்பந்தம் உடையவனோ? எது காரணமாய்ப் பிறந்தவனோ? அதனை எனக்கு நீங்கள் உபதேசியுங்கள்" என்று சொல்கிறான்.

அதற்குப் பின்னர்தான், பிரமன், அவன் பரம் பொருள் என்று கூறி அவன் அவதார ரகஸ்யத்தை வெளியிடுகிறான்.

இப்படி பிரம்மனுடைய கூற்றினோடு 120ஆம் சர்க்கம் முடிவு பெறுகிறது.

உடனடியாக 121ஆம் சர்க்கத்தின் ஆரம்பத்தில் அக்கினி, சீதையை எடுத்துக் கொண்டு வெளிப்பட்டு இராமனிடம் அவளை ஒப்படைத்து, இராமனைப் பற்றியும், சீதையின் பதிவிரதத்தன்மை பற்றியும் எடுத்துக் கூறுகிறான்.

அதற்குமேல் இராமன், சீதையை ஏற்றுக்கொள் கிறான்.

இராமன், தான் சீதையைக் கொடூரமாகப் பேசியதன் காரணத்தை விளக்கிக் கூறி, சீதையை அங்கீகரித்துக் கொள்கிறான்,

இங்கு கூர்ந்து நோக்கத்தக்கது என்ன என்றால் தன்னைத் துதித்த தேவ கணத்திடம், இராமன் தான் தசரதன் மகன் என்றும், இராமன் என்னும் பேருடைய மானுடன் என்றும், எண்ணிக் கொண்டிருப்பதாய்த் திட்டவட்டமாய்க் கூறுவதாகும். அதற்குப் பிறகு, பிரமன் இராமன் அவதார ரகஸ்யத்தை விரிவாக எடுத்துக் கூறிய போதும்கூட, அதனை ஏற்றுக் கொண்டதாகவோ, மறுத்த தாகவோ, காண்பித்துக் கொள்ளாமல் இருந்துவிடுகிறான்.

காப்பியம் படைத்த வால்மீகி முனிவரும், காப்பியத் தில் பங்கு பெறும் பிற பாத்திரங்களும், இராமனைப் பரம் பொருள் என்று துதித்த போதும் கொண்டாடிய போதும், கதையின் எந்தக்கட்டத்திலும், இராமன் தான் கடவுள் என்று காட்டிக் கொள்ளாததுமட்டும் அன்று, ஒரு மனிதன் என்றே தன்னை எண்ணிக்கொண்டு செயல் படுவதாக ஐயத்திற்கு இடனின்றி கூறிவிடுகிறான் என்பார்.

எனவே இராமனுடைய சிந்தனையையும், செயலையும் சீர்தூக்கிப் பார்க்கும்பொழுது, அவை ஒரு மனிதனுடைய சிந்தனை, செயல் என்றுதான் பார்க்க வேண்டுமே அன்றி அவை தெய்வத்தினுடைய சிந்தனை, செயல் என்று பார்க்கக் கூடாது.



# 4. கம்பனின் இராமன்

## மகவு வேண்டி மாமகம்

கோசல நாட்டின் மன்னன் ஆகிய தசரதன் அறுபதினுயிரம் ஆண்டுகள் ஆட்சிபுரிந்த போதிலும், அறுபதினுயிரம் மனைவியரோடும், கோசலை, கைகேயி, சுமித்திரை ஆகிய மூவரோடும் வாழ்ந்த போதிலும், தன் பின், நாட்டை ஆள்வதற்குத் தனக்கு மகன் ஒருவன் இலனே என்பதற்காக வருந்துகிறுன்.

நெஞ்சு நிறை கொண்ட தன் துயரினை, நிறைமொழி முனிவன் வசிட்டனிடம் கூறுகிறுன்.

'வசிட்டரும் தன் மனத்தில் முன் நிகழ்ந்தது ஒன்றை நினைத்தார்' என்று கம்பன் கூறிவிட்டு, அவர் நினைத்தது என்ன என்பதை அடுத்து வரும் பாடலில் குறிப்பிடுவான் அதுதான்.

அலைகடல் நடுவண், ஓர் அனந்தன் மீமிசை,
மலை என விழி துயில் வளரும் மாமுகில்,
'கொலைதொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பென்' என்று
உலைவுறும் அமரர்க்கு உரைத்த வாய்மையை.

(கம்பன் 185)

என்பதாகும்.

## நிறை மொழி வசிட்டன் நினைவில் கொண்டன

இந்த வாய்மை எந்த நிலையில் உரைக்கப்பட்டது என்பதையும் வசிட்டர் முழுமையாக நினைவில் கொள் கிறுர்.

அதுதான்;

விண் உலகத்தில் உள்ள இந்திரன் முதலிய தேவர்கள் அரக்கர்களால் மிகவும் துன்பம் அடைந்து, காரி உண்டிக் கடவுள் கழல் சார்ந்தனர். தங்கள் துன்பமெல்லாம் எடுத்துச் சொல்லினர்.

எடுத்தியம்பின எஞ்சாது கேட்ட எரி மழுவாளன் "நாம் இப்பொழுது அவனை அழிப்பதற்கே இல்லை" என்று, மறுத்துக் கூறி, அவர்களோடு நான்முகக் கடவுளை நண்ணினான்.

அப்போது பிரமன், முன்னர் இராவணன் திக்கு விஜயம் செய்து வரும்போது, இந்திரலோகம் அடைந்த தையும், விண்ணவர் கோமானுடன் விறல்போர் விளைத்த தையும், இராவணன் மகனான மேகநாதன் இந்திரனை பாசப் படையால் தளைப்படுத்தியதையும், இலங்கை நகரில் சிறைவைத்ததையும், தான் அங்கு சென்று நயம்பட உரைத்து, இந்திரனைச் சிறைவீடு செய்ததையும் கூறி "என்னால் இனி ஆவது ஒன்றும் இல்லை" என்றும் சொல்லி "காக்கக் கடவியவன் கருநிறமாலே" என்று அவர்கட்கு அமைதி கூறினான்.

அவ்வாறே, அனைவரும் அங்கு அடைந்து, குறை இரந் தனர்; பணிந்தனர்.

இயன்ற எல்லாம் பயின்று அகத்து அடக்கிய அவ் வேத முதல்வன் அவர் முன் தோன்றினான்.

அமலன் அடிதொழுது நின்ற அமரர்கள், அரக்கர் களால் தமக்கு ஏற்பட்டுள்ள தீங்குகளை எடுத்துக் கூறினர்.

தங்களிடம் பெற்ற பெரிய வரங்களின் பலத்தால் அரக்கர்கள் மூவுலகங்களையும் அடித்து அழித்து வரு கின்றனர் என்றும், அவர்களை அழித்து இக் கொடுமை

களைத் தீர்க்காவிடின், ஒரு நொடிப் பொழுதில் உலகையே விழுங்கி விடுவர், என்றும் கூறினர்.

அந்த தேவர்களிடத்துத் திருமால், "நீங்கள் வருந்த வேண்டா! வஞ்சகனான இராவணனது தலைகளை அறுத்து, பூமிக்கு உண்டான துன்பங்களைப் போக்குவேன். நீங்கள் நான் சொல்வதனைக் கேளுங்கள்" என்று கூறி, அமைதி படுத்தினான்.

மேலும் அம்மேகவண்ணன் கூறியதாவது :

"தேவர்களாகிய நீங்கள் அனைவரும் வானரங்களாக, காடுகளிலும், மலைகளிலும், சோலைகளிலும், சேனையோடு சென்று அவதரித்துவிடுங்கள். நாம் தசரதன் மகனாய்ப் பூமியிலே அவதரிப்போம். விரிகதிர் ஆழியும், வெண்சங்கும், ஆதிசேடனும், எம் உடன் பிறந்தாராக அவதரிப்பர். நாம் அயோத்தி நகரில் பிறப்போம்".

இதனைக் கேட்ட தேவர்கள் மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

இவ்வாறு கூறிய மணிவண்ணன் போயின பின்னர் பிரமன், வானவரை நோக்கிக் கூறுவான்:

"நான் முன்னரே கரடிகள் அரசனான ஜாம்பவானாக அவதரித்துவிட்டேன். நீங்களும் அவ்வாறே செய்தல் வேண்டும். குறை தவிர்தல் வேண்டி, குரக்கு உருப் பெறுக".

மகவான், "எனது அம்சம் வாலியும், அவன் மகனும்" என, சூர்யன் கூறுவான், "அவனுக்கிளையவன் என் அம்சம் ஆவான்" என.

இயங்கியல் காற்று இயம்புவான், "மாருதி என் கூறு" என; அங்கியங் கடவுள், "நீலன் ஆவேன் நான்" என்றான். மணி மிடற்றோன், "யானும் காற்றின் சேய்" எனப் புகன்றான்.

கேட்ட பிறரும், "நாங்களும் குரங்குகள் ஆகக் குவலயத்தே பிறக்கத் துணிந்துவிட்டோம்" என்று கூறினர்.

வானவர் வானரர் ஆயினர். நான்முகனும், முக்கண்ணனும் தத்தமது இருக்கை சார்ந்தார்.

### வேட்டது பெற, வேள்வி மேவுக

இந்த நிகழ்ச்சியைத்தான் இப்போது வசிட்டர் நினைத்துக் கொள்கிறார். அதன் காரணமாக, தசரதனைப் பார்த்து, "நீ! வருந்த வேண்டா. புதல்வரை அளிக்கும் வேள்வியை நீ செய்தால், உன் சிந்தை நோய் தீரும்" என்று கூறுகிறார்.

தசரதன் அவ்வேள்வியை எப்படிச் செய்ய வேண்டும் என்று கேட்க, வசிட்டன் கலைக்கோட்டு முனிவனைக் கொண்டு வேள்விசெய்ய வேண்டும் என்று உரைக்கிறார்.

அவ்வாறே கலைக்கோட்டு மாமுனியைக் கொண்டு வேள்வி நடத்தப்பெறுகிறது.

வேள்வித் தீயிடை எழுந்த வியன் பூதம், பிண்டம் ஒன்று வைத்து மறைகிறது. வைத்த பிண்டத்தைத் தசரதன் தன் மனைவியர் மூவர்க்கும் பகிர்ந்தளிக்கிறான்.

வயிறு வாய்க்கப்பெற்ற அரசமாதேவியர், கரு உயிர்த்தனர்.

கோசலை இராமனையும், கைகேயி பரதனையும், சுமித்திரை இலக்குவ, சத்துருக்கனனையும் ஈன்றெடுக்கின்றனர்.

### மூவர்க்கும் முதலோன் பிறந்தான்

எனவே கம்பன் காப்பியப்படி இராமனாக அவதரித்தது திருநெடுமாலே ஆகும்.

இதனைக் காப்பியம் முழுமையும் தன் கூற்றாகவும் அவன் கூறிவிடுகின்றான்.

தான், அவன் திருமாலே என்று கூறுவதோடல்லாமல் அவனே முத்தேவர்க்கும் முதல்வனாகிய பரம்பொருளே என்றும் குறிப்பிடுகிறான்.

எதிர் நின்று புகழ்வர்

கவிக்கூற்றாக அல்லாமல், பிற பாத்திரங்கள் வாயிலாகவும் கூறுமாறு வைப்பான்.

அவை, இராமன் எதிர்நின்று, இவ்வாறு புகழ்வதோடன்றி, அவனைப் பற்றி, அவனில்லாப் போழ்தும் பிறரிடத்தும் போற்றவும் செய்கின்றன.

பெற்றெடுத்த தந்தையாகிய தசரதனே, பரசுராமனுடைய தற்செருக்கினைத் தன் மகன் அடக்கியது கண்டு வியந்து,

'மெய்ம்மை இச் சிறுவனே, வினை செய்தோர்களுக்கு,
இம்மையும் மறுமையும் ஈயும்'

(கம்பன் 1306)

என்கிறான்.

நிழலின் நீங்காத நிறை, குணத்துத் தம்பியான இலக்குவன், இந்திர ஜித்தைக்கொல்வதற்காகத் துணிந்து,

'மறைகளே தேறத்தக்க, வேதியர் வணங்கற்பால
இறையவன் இராமன் என்னும் நல் அற மூர்த்தி என்னின்,
பிறை எயிற்று இவனைக் கோறி' என்று ஒரு பிறைவாய் வாளி
நிறை உற வாங்கி விட்டான் .........

(கம்பன் 9166)

இராமனை மீட்டும் அயோத்தி நகர்க்கு அழைத்துக் கொண்டு வந்து, அவனை அரியணை

யில் அமர்த்தி, அரசனுக ஆக்க, வேண்டிக்கொள்ளல் பொருட்டு தாயரோடும், சேனையொடும் கான்நோக்கிப் புறப்பட்டான் பரதன்.

கங்கை ஆற்றிடை, நாவாயில், தேவியர் மூவர் தம்மை ஏற்றித் தானும் ஏறினுன்.

அவரிடை, சுற்றத்தார் தொழநின்ற பெருந்தேவியார் கண்ட குகன், பரதனை விளித்து 'குரிசில்! இவர் ஆர்?' என வினவ, அதற்கு விடை இறுக்கும் முகமாக, பரதன்,

......................'கோக்கள் வைகும்
முற்றத்தான் முதல்தேவி; 'மூன்று
உலகும் ஈன்றானை முன் ஈன்றானைப்
பெற்றத்தால் பெறும் செல்வம், யான்
பிறத்தலால், துறந்த பெரியாள்'
(கம்பன் 2366)

என்ருன்.

விராதன் சாபம் நீங்கி, விண்ணில் தோன்றி, இராமனைத் துதிக்கிருன்.

"நீ ஆதி பரம்பரமும்; நின்னவே உலகங்கள்;
ஆயாத சமயமும் நின் அடியவே; அயல் இல்லை;
தீயாரின் ஒளித்தியால்; வெளி நின்ருல் தீங்கு உண்டோ?
வீயாத பெருமாய விளையாட்டும் வேண்டுமோ?
(கம்பன் 2569)

என்று புகழ்வான்; துதிப்பான்.

சரபங்கன் குடில் சார, இராமன் கருதியபொழுது, அவ்விடை அமரர்கோன், அடைந்தான்.

ஆயிரங் கண்களும் அலர்ந்து நோக்க, தூண் ஆகிய தோள் கொடு தொழத் தொடங்கினுன்.

"மேவாதவர் இல்லை. மேவினரும் இல்லை;
வெளியோடு இருள் இல்லை, மேல் கீழும் இல்லை;
மூவாதமை இல்லை, மூத்தமையும் இல்லை;
முதல் இடையோடு ஈறு இல்லை,
முன்னொடு பின் இல்லை;
தேவா! இங்கு இவ்வோ நின் தோன்று நிலை என்றால்,
சிலை ஏந்தி வந்து, எமமைச் சேவடிகள் நோவ,
காவாது ஒழியின், பழி பெரிதோ? அன்றே;
கருங் கடலில் கண்வளராய்! கைம்மாறும் உண்டோ?
(கம்பன் 2614)

"ஒன்று ஆகி, மூலத்து உருவம் பல ஆகி,
உணர்வும் உயிரும் பிறிது ஆகி, ஊழி
சென்று ஆசறும் காலத்து அந்நிலையது ஆகி,
திறத்து உலகம்தான் ஆகி, செஞ்செவே நின்ற
நன்று ஆய ஞான தனிக் கொழுந்தே! எங்கள்
நவைதீர்க்கும் நாயகமே! நல்வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி; அயலாரைக் காய்தி;
நிலை இல்லாத் தீவினையும் நீ தந்தது அன்றே?"
(கம்பன் 2616)

என்று போற்றி நின்றான் பொன்னுலக வேந்தன்.

தீயிடை நுழைவது ஓர் தெளிவுடை நெடுந்தவன் ஆய, சரபங்கன் நோக்கி, இராமன் "நீ புரிதொழில் எ(ன்)னை? புகலுதி" என வினவ, அவனும்,

"திருமகள் தலைவ! செய்திருவினை உற, யான்
எரிபுக நினைகுவென்; அருள்"
(கம்பன் 2624)

என வேண்டுகிறான்.

நீண்ட தமிழால் உலகை நேமியில் அளந்த அகத்தியன் இராமனைக் கண்டான்; வரவேற்றான்; உவந்தான்.

அவன் 'உணர்ச்சியின் உவப்பான்' என்று கூறிய கம்பன் அவன் கருதியது யாது எனக்குறிப்பான்.

"இரைத்த மறை நாலினெடு இயைந்த பிற யாவும்
நிரைத்த நெடு ஞானம் நிமிர் கல்லில் நெடுநாள் இட்டு
அரைத்தும், அயனுலும் அறியாத பொருள் நேர்நின்று
உரைக்கு உதவுமால்......"

(கம்பன் 2673)

என்று எண்ணினன் என்பான்.

வரிசிலே ஒன்றும், வாளிக் குழுவும் வழுவில் புட்டிலும் வாழ்த்துடன் வழங்கி, விடை தந்தான் அகத்தியன்.

"விலங்குவேன்" என வீங்கிய வெங்கண் கபந்தனது எழுந்த தோள்களே வாள்களால் அரிந்தனர், இராம இலக்குவர். மூளும் சாபத்தின் முந்திய தீவினே முடித்த கபந்தன், 'விரிஞ்சனே முதலினேர் யார்க்கும் கண்ணில் நின்றவன் இவன்' என உணர்ந்து, எண் இல் அன்னவன் குணங்களே வாய் திறந்து இசைத்தான்.

"மண்பால்—அமரர் வரம்பு ஆரும் காணுத,
எண்பால் உயர்ந்த, எரி ஓங்கும் நல் வேள்வி
உண்பாய் நீ; ஊட்டுவாய் நீ; இரண்டும் ஒக்கின்ற
பண்பு ஆர் அறிவார்? பகராய், பரமேட்டி!"

(கம்பன் 3687)

என்று நாநவின்று ஏத்துகிருன்.

ஓவியம் அமைந்த நகர் தீ உண, உளைந்த இராவணன் தெய்வத் தச்சனே 'அழகு முற்றுற இயற்று' என ஏவ, 'முன்னேயின் அழகு உடைத்து' எனப் பலர் புகழுமாறு அவனும் அது செய்ய, முனிவு மாறினன்.

அவன் ஏவல் வழி தனித்த மந்திராலோசனே மண்டபத்தில், பண்டிதர், பழையவர், கிழவர், பண்பினர், மந்திரத் தலைவர் சார்ந்தனர்.

அவரிடை இராவணன் வகுத்த உரை கேட்டு, அவரவர் தம் கருத்தைத் தெரிவித்தனர்.

தன்முறை வந்தபோது, முறை திறம்பா வீடணன்,

—...........................................

"இனையர் என்று உணர்தியேல்,
இருவரும் ஒருவநும் எதிர் இலாதார்;
முனிவரும் அமரரும், முழுது
உணர்ந்தவர்களும், முற்றும் மற்றும்,
நினைவு அருந்தகையர்; நம் வினையினால்
மனிதராய் எளிது, நின்றார்"

(கம்பன் 6155)

என்பான்.

இராமன் முந்நீர்ப் பரப்பைக் கடப்பது எவ்வாறு என வினவியபோது, வீடணன், "ஐய! எறி திரைப் பரவையை படைசெல, வழி வேறு இரந்து வேண்டுதி. வேண்டின் பரிவாய் இந்த மாக்கடல் வரம்தரும்" என்கிறான்.

கேட்ட இராமன் நல் நூல் அடுக்கிய புல்லணையில் கருங்கடல் நோக்கி, வருணமந்திரம் எண்ணி, விதிமுறை வணங்கி வேண்டிக் கிடந்தான். ஏழு நாட்கள் வறிது போயின.

"என் இவன் செருக்கு இருந்தவாறு? உண்டு, இல்லை என்னும் மாற்றம் உரைக்கக் காண்கிலேன்" என்று கூறிச் சினந்த கொண்டல் நிறத்தான், 'தருதி வில்' என்ன, தம்பி தர, ஏற்று குனித்தனன் வில்லை; சுடுசரம் பாய்ந்தது. எதிர் நின்ற வாரி மட்டோ, அண்ட மூலத்துக்கு அப்பால் உள்ள ஆழியும் கொதித்தது.

வருணன் வருந்தி அழுது அழி கண்ணனாய்த் தோன்றி,

"நாயக! நீயே சீறின், நாங்கள் என்ன செய்வோம்? அவயம், நின் அவயம்! முனிந்து அருளல்", என வேண்டி,

"சண்ட வான் கிரண வாளால் தயங்கு
இருள் காடு சாய்க்கும்
மண்டலத்து உறையும் சோதி வள்ளலே!
மறையின் வாழ்வே!
பண்டை நான்முகனே! ஆதி, சராசரத்து,
உள்ளப் பள்ளப்
புண்டரீகத்து வைகும் புராதன! போற்றி, போற்றி''
என்பான். (கம்பன் 6658)

கை இரண்டொடு, கால்களும் துணிந்தும், மெய்யிடைப் பகழி தைத்து வெரிந் உறத் தொளை போயும், தறுகண்மை போகிலான் ஆய கும்பகருணன், இராமனிடத்து வேண்டுவான்:

.........................................
.........................................

"ஆதியாய்! உனை அடைந்தான்;
அரசர் உருக்கொண்டு அமைந்த
வேதியா! இன்னம் உனக்கு அடைக்கலம்
யான் வேண்டினேன்"

(கம்பன் 7625)

இந்திரஜித்து விடுத்த வெப்பு ஆரும் பாசத்தால் இலக்குவன் கட்டுண்டான்; 'இப் பாசம் மாய்க்கும் மாயம், யான் வல்லென்' என்பது ஓர்ந்தான். ஆயினும், அந்நாக பாசம் வீச, ஆற்ருது, அழிந்த நல் அறிவு போன்ருன்.

தம்பியின் தளர் நிலே கண்ட தயாவான தத்துவன் வீடணனைக் கடிகிருன். தன் துணைத் தம்பி தன்மேல், துணைவர் மேல், தாழ்ந்த அன்பான் வருந்தி நிற்கும் அவ் வேளை வல் விரைந்து அங்கு வந்த உவணச் சேவல் உரவோன் (கருடன்) இராமனைத் துதிக்கிருன்.

''உன் ஒக்க வைத்த இருவர்க்கும் ஒத்தி;
ஒருவர்க்கும் உண்மை உரையாய்;
முன் ஒக்க நிற்றி; உலகு ஒக்க ஒத்தி;
முடிவு ஒக்கின், என்றும் முடியாய்;

"என் ஒக்கும், இன்ன செயலோ" இது?" என்னில்,
இருள் ஒக்கும் என்றும் விடியாய்;
அந்நொப்பமே கொல்? பிறிதே கொல்?—ஆர் இவ்
அதிரேக மாயை அறிவார்? (கம்பன் 8254)

என்றும்,

"வினைவர்க்கம் முற்றும் உடனே படைத்தி;
அவை எய்தி, என்றும் விளையா,
நினைவர்க்கு, நெஞ்சின் உறுகாமம் முற்றி,
அறியாமை நிற்றி, மனமா;
முனைவர்க்கும ஒத்தி, அமரர்க்கும் ஒத்தி,
முழுமூடர் என்னும் முதலோர்
அனைவர்க்கும் ஒத்தி. அறியாமை—ஆர், இவ்
அதிரேக மாயை அறிவார்?"
(கம்பன் 8260)

என்றும் ஏத்துவான்.

இப்படி எல்லாம் துதிப்பவன் எவன் தெரியுமா? வைணவர் வாய் குளிர 'பெரிய திருவடி' எனப்போற்றும் கருடாழ்வார். விடம் உடை அரவின் உடல், உயிர் உருங்கு உவணம், திருமாலின் உயர் கொடி ஆகவும் ஊர்தி யாகவும் அமைவது. அவர் இராமனைப் போற்றுகிறார்.

அத்தகு கருடன் வரவால், பதகன் துரந்த உரகம் அகன்றது. தெய்வ நெறியால், கருமத்தில் நின்ற கவி சேனை வெள்ளம் உயிரோடு எழுந்தது.

வியந்த வல்விலி,

"ஐய! நீ யாரை? உயிரும் வாழ்வும் ஒருங்கு ஈந்த உரவோய்! எம்பால் கையுறை கோடற்கு ஒத்த காட்சியை அல்லை. உண்டு, இல்லை என்ன நின்ற, உயிர் தந்த உதவியோனே! கண்டிலை முன்பு; சொல்லக் கேட்டிலை;

பண்டு இலே நண்பு; நாங்கள் செய்வது யாது? பகர்தி'' என்று வேண்டுகிருன்.''

''ஐய! பழைய நின்னேடு எமக்கு உள உறவின் தன்மை உணர்த்துவன் பின். நல்கு விடை'' என வேண்டிப்பெற்று, பெயர்ந்து போயது, பெரும் பெயர்ப்புள்.

தளமலர்க் கிழவன் தந்த படைக்கலம் பயனின்றி போனது கண்டு வியந்த இராவணி, தந்தையை அணுகி,

'ஐய! விட்ட படைக்கலம் வீண் ஆகிப் போயின'', என்று கூறி,

'மானிடன் அல்லன்; தொல்லே வானவன் அல்லன்;
மற்றும்,
மேல் நிமிர் முனிவன் அல்லன்; வீடணன்
மெய்யின் சொன்ன,
யான் எனது எண்ணல் தீர்ந்தார்
எண்ணுறும் ஒருவன் என்றே,—
தேன் உகு தெரியல் மன்ன!—
சேகு அறத் தெரிந்தது அன்றே;'
(கம்பன் 8851)

என்று கூறி பகையை வியப்பான்.

மூண்ட இறுதிப் போரில், முற்றும் இழந்தும், துணிவு இழவா இராவணன், வல்வாய் வெங்கண் சூலம் என்னும் காலனே வள்ளல் நோக்கி விடுத்தான்.

விட்ட சூலம் விரைந்து வந்தது. பொங்கு ஆரத்தான் மார்பு எதிர் ஓடிப்புகத் தலேப்படும் அளவில் வெங்காரத் தான் முற்றும் முனிந்தான். உங்காரம் செய்தான். உருத்து வந்த சூலமும், உக்கது பல் நூறு உதிர் ஆகி.

கண்ட இராவணன், உங்காரத்திடை அச்சூலம் உக்கு ஒடுதல் கண்டான்; நின்றுன்; இளவல் அந்நாள் இயம்பிய நினேந்தான்.

"சிவனோ? அல்லன்; நான்முகன் அல்லன்; திருமாலாம்
அவனோ? அல்லன்; மெய்வரம் எல்லாம் அடுகின்றான்;
தவனோ என்னின், செய்து முடிக்கும் தரன் அல்லன்;
இவனோதான் அவ் வேத முதல் காரணன்?"...

(கம்பன் 9837)

என்று நினைக்கிறான்.

எனினும் பேராத் தனியாண்மை, மேல் தொடர் வினையைத் தடை செய்கிலது.

அரக்கர் கோன் உரம் சுட, அல்லை ஆண்டு அமைந்த மேனி அழகன் உந்திய சரம், மார்பில் புக்கு, ஓடி உயிர் பருகி, புறம் போயிற்று.

இப்படியாகக் கவிஞனும், காப்பியப் பாத்திரங்களும் இராமனைத் திருமால் என்றும், பரம்பொருள் என்றும் அவன் முன் நின்று பரவியும், புறத்தில் புகழ்ந்தும் மகிழ்வர்.

ஆயினும், இராமன் எந்தக் கட்டத்திலும் தான் திருமால் என்றோ, பரம்பொருள் என்றோ, சொல்லாலோ, செயலாலோ காட்டிக் கொண்டது இல்லை.

அஃதன்றியும், அவனைத் திருமால் என்று போற்றி வந்த பிற கதா பாத்திரங்களும், அவன் திருமால் ஆகச் செயல்பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டதும் இல்லை.

எப்படி அவன் ஒரு சாதாரண மனிதனாகவே நடந்து கொண்டான் என்பதனைச் சில நிகழ்ச்சிகளில் இப்பொழுது காணலாம்.

## மனிதனாகவே நடந்து கொண்டான்

முதலாகவும், முழுமையாகவும் இராமன் திருமாலின் அவதாரம் என்பதையும், அந்த அவதார நோக்கம் யாது என்பதையும் நன்கறிந்தவர் நற்றவர் வசிட்டர் ஆவார்.

அந்த வசிட்டர் தாம், இராமனுக்கும் இளேயர் மூவர்க்கும், சவுளமொடு உபநயனம் விதிமுறை தந்து, இவ்வளவு என்று ஒரு கரை பிறிது இலாதவாறு உவள் அருமறையிெைடு, ஒழிவு அறு கலேயும், கற்பித்து மேம் படுத்துகிருர்.

தசரதன், இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என எண்ணிஞன். உற்றது கொண்டு, உறுவது உரைக்கும் அமைச்சர்களும், அயனேயே நிகர் தூயமா முனிவனும் அவன் அழைப்பு ஏற்று மந்திராலோசனே மண்டபத்துச் சேர்கின்றனர்.

அவரிடை அரசன் “திருமகள் மணவினே தெரியக் கண்டேன். அருமகன், அவனியாம் ஒரு மகள் மணமும் கண்டு உவப்ப உன்னினேன். எனவே இராமனுக்கு அரசை நல்கி, இப் பேதைமையாய் வரும் பிறப்பு அறுக்க மாதவம் தொடங்குவேன். யாது நும் கருத்து?” என வினவுகிருன்,

அது பொழுது வசிட்டர்,

“மனிதர், வானவர், மற்றுளோர் அற்றம் காத்து அளிப்பார்
இனிய மன் உயிர்க்கு இராமனின் சிறந்தவர் இல்லே;
அனேயது ஆதலின், அரச! நிற்கு உறு பொருள் அறியின்,
புனித மாதவம் அல்லது ஒன்று இல்!”......

(கம்பன் 1353)

என்று கூறுவார்.

அங்கு குழுமிய அனேவரும், ஒருமித்த கருத்தினராய் ‘நம்பியை நளி முடி சூட்டி நின்று, நின்றது விரைவினில் செய்க’ எனக் கோரினர்.

பின்னர் தயரதன், வசிட்டரிடம் ‘ஐய! வில் இயல் தோளவற்கு, நல் உறுதி வாய்மையும் சொல்லுதி, பெரிது’ எனக் கோருகிருன்.

அவ்வாறே காமமொடு கடுஞ்சினம் கடிந்த காட்சி வசிட்டரும், "துன்று தாரவ! ஒன்று கூறுவது உண்டு. நன்று கேட்டு கடைப்பிடி நன்கு" என்று உறுதிப் பொருள்களை உளம் கொளக் கூறுகிறார்.

"கானுள, நிலமகளைக் கைவிட்டுப் போனானைக் கொணர்வேன். முறைமை வேந்தற்குச் சூட்டுவென் முடி. எழுக! கான் போவோம்" என்று பரதன் ஏவ, தாயர் மூவரும் அமைச்சர் குழாமும், வசிட்டர் உள்ளிட்ட, ஆறிய சிந்தை முனிவரர் பலரும் கான் அடைகின்றனர்.

அண்ணல் இராமனைக் கண்டு நடந்தன கூறினன். பின் "உந்தை தீமையும், தாய் செய் தீமையும், எந்தை! நீங்க, ஏற்றருள்க அரசுப் பொறுப்பு" என வேண்டினன். ஏவர் ஏது கூறினும் கொண்ட குறிக்கோள் குலையா இராமன் மறுக்கிறான். மறுக்கம் உறுகிறான் பரதன்.

துறக்கச் சிந்தை, தூய முனிவரன் இராமனை நோக்கி "யான் உனை எடுத்து விஞ்சைகள் ஒன்று அலாதன பல உதவிற்று உண்மையால், அன்று எனது இன்று எனது ஆணை; ஐய! நீ நன்று போந்து உனக்கு உரிய நாடு அளித்தி" என்பார்.

'கௌசல்யா சுப்ரஜா ராமா! பூர்வா சந்த்யா பிரபத்யதே' என்ற தொடர் முதன் முதலில் விசுவா மித்திரன் நா நாவின்ற தொடர் என்பர். அத்தகைய கோதில் கோசிக மாமுனி இ ரா ம ன் திருமாலின் அவதாரம் என்பதனை அறியாதவன் அல்லன்.

தயரதப் பெருவேந்தனிடம், கோசிகன், "தகை வேள்வித் தடை செய்யும் நிருதர் நீறுக, நின்மக்கள் நால்வரில், கரிய நலந்திகழ் ஒருவனைத் தருக" என வேண்டிப் பெறுகிறான்.

நிழலின் நீங்கா நிறை நெஞ்ச இலக்குவன் உடன் தொடர, மூவரும் சென்று, அங்க நாட்டில் உள்ள காமன் ஆச்சிரமம் அடைகின்றனர்.

மறுநாள், இருது வேறு அறியா இரும்பெரும் பாலை நிலம் சார்கின்றனர். அருந்தவன் 'அளவு இல் ஆற்றலைப் பொருந்தினர், இவர் பூவின் மெல்லியர். வருந்துவர்' என மனத்துக் கருதி அவர் முகம் நோக்குகிறான். நான்முகன் ஆக்கிய விஞ்சைகள் இரண்டும் அவ்வழி ஊக்குகிறான்; அவர் அது உள்ளினர்.

உள்ளிய அளவில், கொள்ளியின் காந்தும் எள்ளூறு பாலையும் தெள்ளு தண் புனல் ஆயது காண்கிறார்.

இராம இலக்குவர் துணையால் வேள்வி இனிது முடித்த கோசிகன், உவக்கிறான்.

"பாக்கியம் எனக்கு உளது என நினைவுறும் பான்மை
போக்கி,நிற்கு இது பொருள் என உணர்கிலென்—புவனம்
ஆக்கி, மற்று அவை அனைத்தையும்
அணிவயிற்று அடக்கி,
காக்கும்நீ, ஒரு வேள்வி காத்தனை எனும் கருத்தே"
(கம்பன் 449)

என்று நெஞ்சு நெகிழ்ந்து பாராட்டுகிறான்.

பருந்துண்ணப் பாதகி யாக்கைப்படுத்த, அக் கைவண்ணக் காகுத்தற்கு, தவத்தின் மிக்க கோசிகன் படைக்கலம் பல அருள்கிறான். உம்பர் அருள் மேய அவை, தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்கள், குழக்கன்று தாய்நாடிச் சேறல்போல், மாறிய பிறப்பிலும் வந்து சேர்வது ஒப்ப வருகின்றன. "ஏவின செய்து உவப்போம்; இளையவன் போல்வேம்" என்று கூறுகின்றன. ஏற்றான்; உவந்தான், எழிலிவண்ணன்.

வசிட்ட, விசுவாமித்திரரைப் போலவே வீடணனும் இராமன் திருமாலின் அவதாரம் என்பதனை நன்கு அறிந்தவன். அது காரணம் பற்றியே கால்நிலம் தோய வந்து, கட்புலன் ஆக நின்ற, கடவுள் மாட்டு அடைக்கலம் புகுகிறான். இராமன் "வெங்கடலினைக் கிளர் பெருஞ் சேனை கடக்கும் வண்ணம் எவ்வாறு?" என வீடணனை வினவிய போழ்து, வீடணன்,

"கரந்து நின்ற நின் தன்மையை, அது, செலக் கருதும்;
பரந்தது, உன் திருக்குல முதல் தலைவரால்; பரிவாய்
வரம் தரும், இந்த மாக்கடல்; படைசெல, வழிவேறு
இரந்து வேண்டுதி, எறி திரைப் பரவையை" என்றான்
(கம்பன் 6590)

இப் பாடலில் நாம் இப்பொழுது ஆய்ந்து கொண் டிருக்கும் சிறப்பினை உணர்த்தும் பல அம்சங்கள் இருப்பதனைக் காணலாம்.

கடலானது (வருணன்) பரம் பொருள் இராமன் உருவில் கரந்து வந்திருக்கிறது என்பதனை அறியும், என்று இராமனிடத்திலேயே கூறுகிறான்.

அதுவன்றியும்,

அப்பெருங்கடலை, இராமனின் முன்னோரில் ஒரு வரான சகர புத்திரர் தொட்டார் (தோண்டினார்), என்பதனையும் எடுத்துக் கூறி, இத்தகைய தொடு கடல் அவனுக்குப் பரிவுடன் வரம் தரும்; வழி விடும், என்று அவனிடமே கூறுகிறான்.

அப்படி வரம் பெறல் பொருட்டு, 'வருணனை இரந்து வேண்டுக' என்று குறிப்பிடுவான்.

ஆக, இராமன் பரம்பொருளாக இருப்பினும், அந்த தன்மையை மறைத்து அவன் மனிதனாகவே வந்திருப்ப

தனுல், இராமன் வருணனே இரந்து வரம் பெறல் வேண்டும் என்று கூறுகிறுன்.

அப்படி வரம் பெற்ருல், படைகள் எளிதில் அக்கரை அடைய வழி வகுக்கலாம் என்றும் கூறுகிறுன்.

* * *

பொன் மதில் மிதிலேபுக்க மூவரும் கன்னி மாடத்து உம்பரின்மாடே களி பேடோடு அன்னம் ஆடும் முன்துறை காண்கிருர்.

மாடத்தும்பர் மானின் விழியாள் காண்கிருன் இராமன். அண்ணல் நோக்க அவளும் நோக்குகிருள். ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தலால் இருவரும் மாறிப்புக்கு இதயம் எய்துகின்றனர். பின்னர் மைந்தன் முனியொடு மறையப் போகிருன். கண்ட சீதை காதல் வயப்பட்டவளாய்த் தளர்கிருள்; துகிலும், குழலும் சோர்கிருள்.

இராமனும் நகர் சேர்ந்து அரசனுல் தமக்கு என ஒதுக்கப்பட்ட மாளிகையில், நள்ளிருட் கங்குலிலும் கண் உறக்கம் பெருது வருந்துகிருன். சீதையின் நினேவால் வாடும் அவன் நீடு நினேகிருன்; ஒடு மனம் தேற்றுகிருன்; ஆற்ருது வருந்துகிருன். சீதையின் உரு வெளிப்பாடு காண்கிருன். தேருன், தெளியான், திகைக்கிருன். அப்படி வருந்தும்போது ஓர் எண்ணம் உள்ளத்து மிக்கு எழுகிறது.

தான் கண்டு, காதல் கொண்ட அக்காரிகை மணமான வளோ? அன்றி குமரியோ? என்று, தெளிகிலான்.

'ஆகும் நல்வழி; அல்வழி என் மனம்
ஆகுமோ? இதற்கு ஆகிய காரணம்,
பாகுபோல் மொழிப் பைந்தொடி, கன்னியே
ஆகும்; வேறு இதற்கு ஐயுறவு இல்லையே' (கம்பன் 626)

என்று ஒருவாறு மன அமைதி பெறுகிறான்.

இந்த இராமன் எண்ணத்தோடு, 'எல்லி எதிர் கண்ட எழில் கமலம்' அன்னாள் ஆய சீதை மன நிலையை, ஒப்பிடுவது நன்றாம். கம்பன் இதுபற்றியும் பாடியே உள்ளான்.

இராமன், சிவ தனுசை முறித்த பிறகு, நீலமாலை என்னும் தோழி அச்செய்தியைச் சீதைக்குத் தெரிவிக்கிறாள்.

"இராமன் என்னும் பெயரினன்; இளைய கோவொடும், அருந்தவ முனிவனுடனும், நம் நகர் அடைந்தவன்; வேள்விய காணிய வந்தான்; வில்லும் கண்டான்; நாண் இனிது ஏற்றினான்; வேத்தவை நடுக்குற வில்லும் முறிந்தது" என்கிறாள்.

சீதைக்கு ஓர் ஐயம் தோன்றுகிறது. தன் உள்ளம் பறி கொண்டவன்தான் வில்லை முறி கொண்டானோ அல்லது பிறன் ஒருவனோ? என்பதே அது.

ஏன் எனில், வில்லை வளைப்பானுக்கே வில் நுதலாளை மணம் முடிப்பதென சனகன் முடிவு செய்திருந்தான்; அறிவித்ததும் அங்ஙனமே.

அப்படி சிவதனுசை முறித்தவன் தான், தான் முன் நாள் கண்டவனோ? அவன் அல்லனேல், காதல் கொண்டானை விடுத்து பிறன் ஒருவனை அல்லவா பெற்றோர் முடிவுப்படி மாலை சூட்ட நேரிடும்.

இந்நிலையில், நீலமாலை கூறியதைச் சிந்தித்துப் பார்க்கிறாள்.

“கோமுனிபின் வரு கொண்டல்” என்ற ஒரு தொடர் மட்டுமே ஒடு உயிர் காத்தது. ‘தாமரைக்கண்ணன்’ என்ற சொல் அவள் ஐயம் இறை அகற்றியது. “ஆம் அவனே!” என்ற முடிவு பெறுகிருள் எனினும் “அவனே கொல்?” என்ற ஐயமும் தலை காட்டாமல் இல்லை.

மனிதத் தன்மை நன்கு உணர்ந்தவர்களுக்கு ஒன்று நிச்சயமாகத் தெரியும். அப்படி நீங்கிய ஐயம். திடமான மன அமைதியைத் தராது. தானே, தன் கண் குளிர நேரிற் கண்டாலன்றி-முன் தினம் தான் கண்டவனே, வில் இறுத்த விறலோன் என்பதனை உறுதி செய்து கொண்டாலன்றி, அமைது பெருது. ஏற்பட்ட ஐயம், தொடர்ந்து மனத்தை உறுத்திக் கொண்டுதான் இருக்கும்.

நீலமாலை உரைத்த உடனேயே வில்லை முறித்தவனைக் காண சீதைக்கு வாய்ப்பில்லை.

இந்த நிலையில்,

“சொல்லிய குறியின், அத் தோன்றலே அவன்;
அல்லனேல், இறப் பென்”என்று, அகத்துள் உன்னிஞள்
(கம்பன் 728)

எனினும் அந்த ஐயம் இறுதியாக ஒரோவழி நீங்க வேண்டுமானுல், சீதை இராமனைப் பார்த்தே ஆக வேண்டும்.

இதனைத்தான் கோலம் காண் படலத்தில் கம்பன்,

எய்ய வில் வளைத்ததும் இறுத்ததும் உரைத்தும்,
மெய் விளவு இடத்து, முதல் ஐயம் விடல் உற்ருள்,
ஐயனை, அகத்தும், வடிவே அல, புறத்தும்,
கைவளை திருத்துபு, கடைக்கணின் உணர்ந்தாள்
(கம்பன் 1153)

என்பான்.

இராமனுக்கு முடிசூட்ட விரும்பிய தயரதன், மந்திரக்கிழவர், மாமுனி வசிட்டன் ஆகியோரைக் கலந்து அவர்களுடைய முழு ஒப்புதல் பெற்று, சுமந்திரனை அழைத்து, "நீயே சென்று, கொண்டு அணை, திருமகள் கொழுநனை" என்று ஏவுகிறான்.

சுமந்திரன் தேர்மேல், தூய தம்பியும் தானுமாக ஏறி, இராமன் அகம் குளிர் புரவலன் இருந்துழி அடைகிறான்.

வந்த இராமன் மாதவன் தனைவரன் முறை வணங்கி, தாதை தன் தாமரைத் தாள்பணிந்தனன். துளி உலாம் கண்ண தயரதன் நலம் கொள் மைந்தனைத் தழுவினன். 'நின்னை வேண்டி, எய்திட விழைவது என்று உளது' எனக் கூறி, அகக் கருத்து முற்றும் அவற்கு அறிவித்தான். பின்னர் "புனையும் மாமுடிபுனைந்து இந்த நல் அறம் புரக்க நினையல் வேண்டும். யான் நின்வயின் பெறுவது ஈது. என்ன,

................................தாமரைக் கண்ணன்
காதல் உற்றிலன்; இகழ்ந்திலன்; 'கடன் இது' என்று உணர்ந்தும்,
"யாது கொற்றவன் ஏவியது அது செயல் அன்றோ,
நீதி எற்கு" என நினைந்தும், அப் பணி தலை நின்றான்.
(கம்பன் 1382)

* * *

தயரதன் கைகேயியிக்குத் தந்த வரத்தின்படி இராமன் கான் ஏக முடிவு செய்ததைக் கேட்ட கோசலை பெரிதும் துயருற்றாள். வாசகம் என்னும் அனல், கோசலையின் வளவிய செவியிடைப் பாய்ந்ததும், ஏங்கி, இளைத்து, திகைத்து, மனம் வீங்கி, விம்மி, விழுகிறாள்.

தாய் பெறு தவிப்பைத் தவிர்க்க வேண்டி, "அண்ணல் ஏவல் மறுக்க அடியனேற்கு ஒண்ணுமோ?" என இராமன் வினவிட, "மன்னன் ஆணை அன்னதேல், என்னையும் நின்னொடு துன்னுகானம் கொண்டனை போவாய்" எனக் கோசலை கூறுகிறாள். அதனைத் தடுத்து, தாய்க்கு ஆறுதல் கூறும் வகையில் இராமன்,

"சித்தம் நீ திகைக்கின்றது என்? தேவரும்
ஒத்த மாதவம் செய்து உயர்ந்தார் அன்றே?
எத்தனைக்குள ஆண்டுகள் ஈண்டு? அவை
பத்தும், நாலும் பகல் அலவோ?"

(கம்பன் *1626*)

என்கிறான்.

இப்பாடலில் இரண்டொரு சிறப்புகளைக் காணலாம். தேவரும் என்ற சொல்லில் உள்ள உம்மை உயர்வுச் சிறப்பும்மை என்பர்,

தேவர், தன்னைவிட உயர்ந்தவர் என்று கூறும் இராமன் தன்னை மானுடனாகவே குறிப்பிட்டு விடுகிறான்.

அதே சமயத்தில், பிள்ளைப் பாசத்தால் தாய் உற்ற துயரைத் துடைக்கும் வகையில், தான் கானகத்தில் வாழ்வது பதினான்கு ஆண்டுகள் எனினும் அவை பதினான்கு நாட்கள் போலவே வல்விரைந்து போம் என்றும் கூறுகிறான்.

அப்பொழுதும் பதினான்கு என்னாது, பத்தும் நாலும் என்று கூறுவதன் நயத்தையும் காணலாம்.

இந்தக் கூற்று, அற்புதம் ஆக ,மனிதத்தன்மை மிக்க உணர்ச்சியை எடுத்துக் காட்டும்.

இது போலவே சுமித்திரையிடம் சென்று கான் ஏக விடை கேட்பான் காகுத்தன். வனம் செலச் சமைந்த வல்வில்லாளரைக் கண்டாள்; புண்தாங்கு நெஞ்சத்

தளாய்ப் பூமியில் புரண்டாள். உண்டாய துயர்க்குக் கரை காணுள்; கலங்கினுள்; சுருண்டாள்; சோர்ந்தாள்.

இவ்வாறு,

சோர்வாளை, ஓடித் தொழுது ஏந்தினன்; துன்பம் என்னும்
ஈர்வாளை வாங்கி, மனம் தேறுதற்கு ஏற்ற செய்வான்;
'போர் வாள் அரசர்க்கு இறை பொய்த்தனன் ஆக்க
கில்லேன்;
கார்வான் நெடுங்கான் இறை கண்டு, இங்ஙன்
மீள்வென்' என்ருன்.
(கம்பன் 1745)

இங்கும் மனிதத்தன்மையின் உணர்ச்சி வெளிப்பாடு காணலாம். பதினுன்கு ஆண்டுகள், தான், காட்டில் வாழப் போவதை, "கார் வான் கானம் இறை கண்டு மீள்வன் வருந்தலை" எனத் தேற்றுகிருன். இறை என்பது மிகக் குறுகிய அளவைக் குறிப்பது ஆம்.

கானிடைச் சேர்பவர் பெருந்துயர் உழப்பர் என்று கருதுவது உலகியல். அவ்வாறு கருதி சுமித்திரை வருந்துகிருள் போலும் என்று எண்ணி,

'கான் புக்கிடினும், கடல் புக்கிடினும், கலிப்பேர்
வான்புக்கிடினும், எனக்கு அன்னவை மாண் அயோத்தி
யான் புக்கது ஒக்கும்; எனையார் நலிகிற்கும் ஈட்டார்?
ஊன் புக்கு, உயிர் புக்கு, உணர் புக்கு, உலையற்க!'
என்ருன் (கம்பன் 1746)

* * *

வன்மாயக் கைகேயி, வாக்கால் தன் மா மகனும் தானும் தரணி பெற்ருள் என்றும், நன்மா மகனைக் 'கான் ஏகு' என விதித்தாள் என்றும், கேட்டான் இளையோன் இலக்குவன். காலக் கடைத் தீ என மூண்டு எழு சினத்தனுய் முனைந்து நின்ருன். 'பேருலகத்தில் பெண்

நாட்டம் ஒட்டேன். காக்குநர் காமின்' என்று யுத்த சன்னத்தனுய்த் தனு ஏந்தினன்.

கனன்று, பொங்கும் வடவைத் தீயின், ஆருக் கனல் ஆற்றும் அஞ்சன மேகம்போல் இராமன் அவ்வழி அடைகிருன்.

சினந்த தம்பியிடம்,

"நதியின் பிழை அன்று நறும்புனல் இன்மை; அற்றே
பதியின் பிழை அன்று; பயந்து நமைப் புரந்தாள்
மதியின் பிழை அன்று; மகன் பிழை அன்று; மைந்த!
விதியின் பிழை; நீ இதற்கு என்னை வெகுண்டது?''

(கம்பன் 1734)

என்ருன்.

விதியின் பிழை என்று இராமன் சொல்வது இங்கு கருதத்தக்கது.

சாதாரண மனிதன் ஒருவன் தன் வாழ்வில் நடக்கும் எதனையும் விதியின் செயல் என்றே கூறுவான்.

*       *       *

பின்னர் இராமன் தன் அரண்மனை புகுகிருன். மர உரியுடன் வரும் கணவனைக் கண்ட சீதை, 'இவ்வன் துயர் என்னை உற்றது இயம்புக' என வேண்டுகிருள். அதற்கு

"பொருஇல் எம்பி புவி புரப்பான்; புகழ்
இருவர் ஆணையும் ஏந்தினென்; இன்று போய்,
கருவி மாமழை கல்—கடம் கண்டு, நான்
வருவென் ஈண்டு; வருந்தலை நீ...''......

(கம்பன் 1822)

என்று இராமன் கூறுகிருன்.

இங்கு நோக்கத் தக்கது என்ன என்ருல், சுமித்திரை யிடம் 'கார் வான் நெடுங்கான் இறை கண்டு மீள்வென்'

என்று சொன்ன இராமன், இவளிடமும் 'கருவி மாமழைக் கல்-கடம் கண்டு, நான் வருவென் ஈண்டு. வருந்தலை' என்கிறான்.

அரண்மனையில் வளர்ந்து சுக போகங்களை அனுபவித்த ஒரு மனைவியிடம், ஒரு கணவன் என்ன சொல்வானோ அதனையே இங்கும் இராமன் சீதையிடம் கூறுகிறான்.

கானத்தின் வெம்மையைச் சீதையின் பாதங்கள் தாங்கமாட்டா, என்பது இராமன் கருத்து.

இந்நாட்டு மரபுப்படி, தன் கணவனுடன், அவன் எங்கு செல்லினும் உடன் சென்று, அவன் எத்துணைத் துன்பம் அநுபவித்த இடத்தும் தானும் உடனிருந்து அநுபவித்து, அவனுக்குப் பல்லாற்றானும் உதவுவதே கற்புடைய ஒரு பெண்ணுக்கு அறமும், அழகுமாம்.

அதற்கு ஏற்பவே,

'பரிவு இகந்த மனத்து ஒரு பற்று இலாது
ஒருவுகின்றனை; ஊழி அருக்கனும்
எரியும் என்பது யாண்டையது? ஈண்டு, நின்
பிரிவினும் சுடுமோ, பெருங்காடு...?'

(கம்பன் 1827)

என்று சொல்லி, அவள், தானே மரவுரி உடுத்து இராமன் அருகில் வந்து நின்று, அவனுடன் செல்லத் துணிந்து பனையின் நீள் கரம் பற்றுகிறாள்.

மறுபடியும் வனம் புகு படலத்தில், கம்பன் அற்புதமான மனோ தத்துவத்தைக் காட்டுவான்.

கொண்டானில் துன்னிய கேளிர் பிறர் இல்லை என்று நம்பி, தன்னுடன் வந்த சீதையை, வழியிடைத்துயர் நலியாவாறு எவ்வளவு மகிழ்ச்சியுடன் வைத்துக் கொள்ள வேண்டுமோ, அவ்வளவு மகிழ்ச்சி நிலையில் அவளை

வைத்துக் கொள்ள இராமன் முயல்வதாகக் கம்பன் கூறுவான்.

**நலம் புனந்துரைத்த நயப்படு கிளவி**

வழியிடைக் காட்சிகளை, சீதைக்குக் காட்டுகிருன்.

அப்படிக் காட்டும் பொழுது, அவ்விருவர்க்கும் இடையே உள்ள அழியாப் பிணைப்பினையும், வரம்பில் அழகினையும் எடுத்துக்கூறி, 'துன்பம்' என்ற எண்ணமே அவள் மனத்தில் எழாத வகையில் இருக்குமாறு பார்த்துக் கொள்கிருன்.

'மன்றலின் மலி கோதாய்!'

'மயில் இயல் மட மானே!'

'கவின் ஆரும் மாந்தளிர் நறு மேனி மங்கை!'

'கைஞ் ஞிறை நிமிர் கண்ணுய்!'

'அருந்ததி அனையாளே!'

'அமுதினும் இனியாளே!'

'எழுத அரு எழிலாளே!

'அகில் புனை குழல் மாதே!'

'வில் திரு நுதல் மாதே!'

'அன்ன மென் நடையாய்!

'குயிலே!'

'வாள் புரை விழியாய்!'

என்றெல்லாம் நலம் பாராட்டுகிருன். மகிழ்ச்சி நிறைந்த இயற்கைக் காட்சிகளைக் குறிப்பிட்டு, அவளது அழகையும் எழிலையும் புகழ்வதன் மூலம், அவள் பால் தனக்குள்ள

காதலை வெளிப்படுத்தி, அவள் மனத்தை மகிழ்ச்சியில் நிலைத்திருக்கவைக்க முயல்கிறான்.

### யாண்டு பல ஆயினும்

இது போலவே பின்னரும்,

"ஓதிமம் ஒதுங்கக் கண்ட உத்தமன், உழையள் ஆகும்
சீதை தன் நடையை நோக்கி, சிறியது ஓர் முறுவல்
செய்தான்;
மாது அவள் தானும், ஆண்டு வந்து, நீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கி, புதியது ஓர் முறுவல் பூத்தாள்."
(கம்பன், 2736)

பின்னர்ச் சுட்டிய நிகழ்ச்சி, கோதாவரிக் கரையது. முன்னர்க் காட்டிய நலம் புனைந்துரைகள், நகர் நீங்கி, வனம் நண்ணிய சில நாட்களில் நிகழ்ந்தவை.

இவ்விரண்டனுக்கும் இடைவெளி பத்து ஆண்டுகட்கும் மேல். (தண்டக வனத்தில் தங்கிய காலம் பத்து ஆண்டுகள் என்பான் கம்பன்.

ஐந்தும், ஐந்தும், அமைதியின் ஆண்டு, அவண்,
மைந்தர் தீது இலர் வைகினர்.
(கம்பன், 2656)

என்பது அக் குறிப்பு.)

மாறிலா மகிழ்ச்சியில் சீதையை நிலை நிறுத்த இராமன் தொடர்ந்து முயன்றான் என்பதற்கு இதுவே சான்று ஆகும்.

### அழியா ஆர்வினன்

இராமனுடைய ஆர்வத்தின் இந்தப் பின்னணியில் தான், மாயமான் நிகழ்ச்சியைக் காண வேண்டும்.

சூர்ப்பணகையின் வருணனையாலும் தூண்டுதலாலும், சீதையினிடத்துக் காமப்பித்துக் கொண்ட இராவணன், அவளைக்கவர மாரீசன் உதவியை நாட, 'மாரீசனும்' பொன் மானுய்த் தோன்றுகிருன்.

அந்த அற்புதமான மானைக் கண்ட சீதை அதனைப் பற்றித்தருக என இராமனைக் கேட்கிருள்.

சீதையை மகிழ்ச்சியில் வைக்க விரும்பிய இராமன் அவ்வாறே செய்ய முற்படுகிருன். அது மாயமானுக இருத்தல் கூடும் என்ற இலக்குவன் எச்சரிக்கையை அவன் ஏற்றுக் கொள்ளவில்லை. இறுதியாக இலக்குவன் தானே சென்று அதனைப் பற்றித் தருவதாகச் சொல்ல,

.........அன்னம் அன்னுள், அமுது உகுத்தனைய செய்ய,
வாயிடை, மழலை இன்சொல் கிளியினின் குழறி, மாழ்கி,
'நாயக! நீயே பற்றி நல்கலை போலும்' என்னு,
சேயரிக் குவளை முத்தம் சிந்துபு சீறிப் பானுள்
(கம்பன், 3303)

இங்கும் அதே மனித உணர்ச்சியின் உச்ச நிலையையே காண்கிறேம். மானின் மாயத்தில் முழுமையாகத் தன்னை இழந்து விடுகிருள் சீதை.

அதனைப் பற்றித் தர வேண்டும் என, தன் அன்புக் கணவனை வேண்டிக் கொள்கிருள்.

தானே பற்றி நல்க

மான் பற்றி இராமனுக்கும் இலக்குவனுக்கும் இடையே உண்டான மாறுபாடு காரணமாக இலக்குவன் தான் சென்று அதனைப்பற்றி வருவதாகக் கூறுகிருன்.

எந்தப் பெண்ணும் தன் மனத்தைக் கவர்ந்து விட்ட பொருள் ஒன்றை தன் கணவனே தனக்குக் கொடுக்க வேண்டும் என்றே விரும்புவாள்-எனவே தான் இங்கும்

"நீயே பற்றித் தர மாட்டாயா?" என்று இராமனைப் பார்த்துக் கேட்கிறாள்.

அப்படிக் கேட்கும் பொழுது கூட அவள் சொற்களில் இருந்த குழைவினைக் கம்பன் அற்புதமாகக் காட்டுகிறான்.

மனைவி ஒருத்தி, அதுவும் அரண்மனையை விட்டு, தன்னொடு வாழ்வதற்காகவே அனைத்தையும் துறந்து விட்டு வந்த மனைவி—இப்படிக் கேட்கும் பொழுது எந்தக் கணவன் தான் அதன்படி நடக்க மாட்டான்?

"போனவள் புலவி நோக்கி, புரவலன்...
மான் இது நானே பற்றி, வல்லையின் வருவென், நன்றே;
..................................................என்று,
வேல் நகு சரமும், வில்லும், வாங்கினன் விரையலுற்றான்.
(கம்பன், 3304)

இராமனுக்கும், சீதைக்கும் இடையே இருந்த நெருக்கமான, இறுக்கமான இந்தக் காதலின் பின்னணி யில் தான், சீதையை இராவணன் கவர்ந்து கொண்டு சென்ற பிறகு, சீதையைப் பறி கொடுத்துவிட்ட நிலையில், இராமனுடைய துயரைக் காண வேண்டும்.

பிரிவாற்றான் பேதுறுவான்

சீதையை பர்ணசாலையை அடிமண்ணோடு கீண்டி எடுத்து உயர்தேர் மிசை வைத்து வான் வழி பறந்து செல்கிறான் இராவணன். இராவணனுடன் போரிடுகிறான் சடாயு. சங்கரன் கொடுத்த வாளால் இராவணன் எறிய, சிறைகள் அற்று, சடாயு மண்ணில் சாய்கிறான்.

இவ்வாறு வீழ்ந்து கிடக்கும் சடாயுவைக் கண்டு இராமன் புலம்புகிறான்.

இந்தப் புலம்பல் சடாயுவின் நிலே கண்டு அவன் வருந்துவதையும், சீதையைத் தான் இழந்து விட்ட நிலே யில் நின்று வருந்து வதையும் ஒருங்கே காட்டும்.

'மாண்டேனே அன்ரே? மறையோர் குறை முடிப்பான்
பூண்டேன் விரதம்; அதனுல் உயிர் பொறுப்பேன்;
நீண்டேன் மரம் போல, நின்று ஒழிந்த புன் தொழிலேன்;
வேண்டேன், இம் மாயப் புன்பிறவி வேண்டேனே!'

'என்தாரம் பற்றுண்ண ஏன்ருயை, சான்ருேயை,
கொன்ருனும் நின்ருன்; கொலேயுண்டு நீ கிடந்தாய்;
வன் தாள் சிலே ஏந்தி, வாளிக் கடல் சுமந்து,
நின்றேனும் நின்றேன்; நெடுமரம் போல் நின்றேனே!'

'சொல் உடையார் என்போல் இனி உளரோ? தொல் வினேயேன்
இல் உடையாள் காண, இறகு உடையாய்! எண் இலாப்
பல் உடையாய்! உன்னேப் படை உடையான் கொன்று அகல,
வில் உடையேன் நின்றேன்; விறல் உடையேன் அல்லேனே?'
(கம்பன், *3499-3501*)

என்று புலம்புவான்.

சடாயு மரணம் எய்திய பிறகு இராமன்,

'அறம் தலே நின்றிலாத அரக்கனின், ஆண்மை தீர்ந்தேன்;
துறந்தனென், தவம் செய்கேனே? துறப்பெனே உயிரை? சொல்லாய்;
பிறந்தனென் பெற்றுநின்ற பெற்றியால், பெற்ற தாதை
இறந்தனன்; இருந்துளேன் யான்; என்செய்கேன்? இளவல்!' என்ருன்.
(கம்பன், *3532*)

மேலும் சீதையின் பிரிவாற்ருது இராமன் துயருறும் நிலேயை,

'மயில் இயல் பிரிந்தபின், மான நோயினால்,
அயில்விலன் ஒரு பொருள்; அவலம் எய்தலால்,
துயில்விலன் என்பது சொல்லற் பாலதோ?
உயிர், நெடிது உயிர்ப்பிடை, ஊசலாடுவான்.
(கம்பன், 3635)

என்று காட்டுவான் கம்பன்.

சாதல் முந்துவான்

கபந்தனது 'நெடும்பகுவாய்' பார்த்து இராமன் இலக்குவனிடம்,

'தோகையும் பிரிந்தனள்; எந்தை துஞ்சினன்;
வேக வெம்பழி சுமந்து உழல வேண்டலேன்;
ஆகலின், யான், இனி, இதனுக்கு ஆமிடம்;
ஏகுதி ஈண்டு நின்று, இளவலே' என்றான்.
(கம்பன், 3664)

மேலும்,

'ஈன்றவர் இடர்ப்பட, எம்பி துன்புற,
சான்றவர் துயருற, பழிக்குச் சார்வுமாய்த்
தோன்றலின், என் உயிர் துறந்தபோது அலால்,
ஊன்றிய பெரும்படர் துடைக்க எண்ணுமோ?'

'"இல் இயல்புடைய நீர், அளித்த, இன் சொலாம்
வல்லி, அவ் அரக்கர் தம் மனை உளாள்" எனச்
சொல்லினென், மலை எனச் சுமந்த தூணியென்,
வில்லினென், செல்வெனோ, மிதிலை வேந்தன் பால்?

'"தளை அவிழ் கோதையைத் தாங்கல் ஆற்றலன்,
இளை புரந்து அளித்தல் மேல் இவர்ந்த காதலன்,
உளன்" என, உரைத்தலின், "உம்பரான்" என
விளைதல் நன்று; ஆதலின், விளிதல் நன்று' என்றான்.
(கம்பன், 3665-3667)

இந்த நான்கு பாடல்களும் இராமன் எந்த அளவிற்கு நொந்து, துயரில் மூழ்கி, நம்பிக்கை இழந்து தன் உயிரை மாய்த்துக் கொள்ள விரும்புகிறான் என்பதை மிக்க அழகாக எடுத்துக் காட்டும்.

* * *

**கலன் கண்டான்: கலங்கிறான்**

பம்பையை அணுகிய பொழுதும் சீதை நினைவால் இராமன் புலம்புவதைக் காண்கிறோம். சுக்கிரீவனைச் சந்தித்து அவனுடன் நட்பு கொண்ட பிறகு, இராவணன் தூக்கிச் செல்லும் பொழுது, சீதை ரிஸ்ய மூகபர்வதத்தில் எறிந்துவிட்டுச் சென்ற அவளுடைய கலன்களைச் சுக்கிரீவன் இராமனிடம் காட்டுகிறான்.

அவற்றைக் கண்ட இராமன் நிலை எப்படி இருந்தது என்பதை, மிக விரிவாகவும், அழகாகவும் கம்பன் பாடுவான்.

ஈர்த்தன, செங் கண்நீர் வெள்ளம், யாவையும்;
போர்த்தன, மயிர்ப்புறம் புளகம்; பொங்கு தோள்,
வேர்த்தன என்கெனோ? வெதும்பினான் என்கோ?
தீர்த்தனை, அவ்வழி, யாது செப்புகேன்?

(கம்பன், 3909)

என்ற இவ்வொரு பாடலே இராமன் நிலையை உணர்த்தப் போதுமானது.

இவ்வாறாகவே சீதையின் பிரிவினால், வாடி வதங்கி இராமன் புலம்பும் கட்டங்கள் காப்பியத்தினூடே பல இடங்களில் அமைந்திருக்கின்றன.

அநுமன், இராவணனது அசோக வனத்தில் சிறையுண்ட சீதையைக் கண்டு அவளுடன் உரையாடி, ஆழி தந்து, அவளுடைய சூளாமணியைப் பெற்று வருகிறான்.

அதனை இராமனிடம் கொடுக்க, பெற்ற இராமன் நிலை எப்படி இருந்தது என்பதை,

> பொடித்தன உரோமம்; போந்து பொழிந்தன கண்ணீர்; பொங்கித்
> துகுத்தன, மார்பும் தோளும்; தோன்றின வியர்வின் துள்ளி;
> மடித்தது, மணிவாய்; ஆவி வருவது போவது ஆகித்
> தடித்தது, மேனி; என்னே, யார் உளர் தன்மை தேர்வார்?
> (கம்பன், 6054)

என்று கம்பன் பாடுவான்.

* * *

பொலங் கொடி தானும் பொன்றினளோ?

இந்திர சித்து மாயா சீதையை அநுமன் முன் வாளால் வெட்ட, சீதையை அவன் கொன்று விட்டான் என்று தவருக எண்ணி, அநுமன் இராமனிடம் செய்தி கூறுகிருன்.

அப்பொழுது இராமன் என்ன நிலை அடைந்தான் என்பதைக் கம்பன்,

> துடித்திலன்; உயிர்ப்பும் இல்லன்; இமைத்திலன்; துள்ளிக் கண்ணீர்
> பொடித்திலன்; யாதும் ஒன்றும் புகன்றிலன்; பொருமி, உள்ளம்
> வெடித்திலன்; விம்மிப் பாரின் வீழ்ந்திலன்; வியர்த்தான் அல்லன்;
> அடுத்து உள துன்பம் யாவும் அறிந்திலர், அமரரேயும்.
> (கம்பன், 8895)

சித்திரத் தன்மை உற்ற சேவகன், உணர்வு தீர்ந்தான்,
மித்திரர் வதனம் நோக்கான், இளையவன் வினவப்
பேசான்,
பித்தரும் இறை பொருத பேர் அபிமானம் என்னும்
சத்திரம் மார்பில்தைக்க, உயிர் இலன் என்னச் சாய்ந்தான்.
(கம்பன், 8897)

என்ற இரு பாடல்களில் விளக்குவான்.

* * *

நிழலின் நீங்கா நிறை நெஞ்சத் தம்பி

சீதையிடம் காட்டிய இதே உணர்ச்சிக் குவியலை, அனைத்தையும் விட்டு தன்னையே எல்லாம் ஆகக்கொண்டு தன்னுடன் கான் தொடர்ந்த தம்பி இடமும் காட்டு கிறான்.

பரத்து வாச முனிவரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டு இராமன், சீதை, இலக்குவன் உடன் யமுனையைக் கடந்து அக்கரை சேர்கிறான்.

யமுனையைக் கடக்க, இலக்குவன் தெப்பம் ஒன்று அமைத்து அவ்விருவரை அதில் இருத்தி, தன் கைகளையே துடுப்பு ஆக்கி, அந்த நெடுநதி இருகையால் நீந்தி அப்புறம் சேர்கிறான் என்பதனைக் கம்பன்,

'வாங்கு வேய்ங் கழை துணித்தனன்; மாணையின்
கொடியால்,
ஓங்கு தெப்பம் ஒன்று அமைத்து, அதன் உம்பரின்,
உலம் போல்
வீங்கு தோள் அண்ணல் தேவியோடு இனிது வீற்றிருப்ப,
நீங்கினன், அந்த நெடுநதி, இருகையால் நீந்தி.
(கம்பன், 2034)

என்பான்.

இதற்கு ஏற்பவே, சித்திரகூடப் படலத்தில் இராமனும், சீதையும் தங்கு வதற்காக இலக்குவன் பரண சாலே அமைக்கிருன்.

பல்கலே வித்தகன்

இலக்குவனிடத்து இணையிலா அன்பு கொண்டிருந்த இராமன் அதனே அடிக்கடி வெளியில் காட்டிக் கொள்வ தில்லே. இலக்குவன் தெப்பம் அமைத்து தங்களே, யமுனே கடந்து அக்கரை சேர்த்தமை குறித்து எதுவும் சொல்லாமல் பார்த்துக் கொண்டிருந்தவன் தான்.

ஆனுல் இலக்குவன் பர்ணசாலே அமைத்து முடிந்த பொழுது, இலக்குவன் பால் அவன் கொண்டிருந்த அன்பும், பரிவும் இராமனது மனத்திண்மையையும் மீறி வருத்தம் நிறைந்த சொற்களாக வெளிப்பட்டு விடு கின்றன.

"என்று கற்றனே நீ இது போல்?"

(கம்பன், 2096

என்ற இராமன் கேள்வி ஒன்றிலேயே அவனுடைய உணர்ச்சிப் பெருக்கு, அதாவது தயரதச் சக்கரவர்த்தியின் குமாரன் ஆகிய இலக்குவன், இவ்வாறெல்லாம் செய்ய நேர்ந்ததே என்ற துன்பத்தின் பின்னணியில் தோன்றிய அன்பு, பாசம், வேதனே அத்தனேயும் பரிமளிக்கின்றன.

இவ்வாறு வினவும் அளவிலேயே விரவிய துன்பினுல் துன்று தாமரைக் கண் பனி சோர்கின்ருன், என்பான் கம்பன்.

உள்ளக் கிளர்ச்சியை அடக்கிக் கொள்ள முடியாத வனுய்,

அடரும் செல்வம் அளித்தவன் ஆணையால்,
படரும் நல் அறம் பாலித்து, இரவியின்
சுடரும் மெய்ப் புகழ் சூடினென் என்பது என்?
இடர் உனக்கு இழைத்தேன் நெடுநாள்

(கம்பன், 2097)

என்றான்.

சீதையைத் தேடிக் கொண்டு போகும் வழியில், நீர் கொணர, நீர் நிலை தேடிச் சென்ற இலக்குவனைக் கண்டு அவன் மேல் காமம் கொண்டு, அயோமுகி எடுத்துச் சென்று விடுகிறாள்.

வாரான் கொல்லோ வருந்தும் என் நெஞ்சே!

வெகு நேரம் ஆகியும் இலக்குவன் திரும்பி வராத போது, அவனுக்கு என்ன ஆயிற்றோ என்று துயர்ந்து அத்துயர் மிகுதியால் இராமன் புலம்புகிறான். இந்தப் புலப்பத்தினூடே அவன் சொல்லும் சொற்கள், மாயா சீதைப் படலத்தில், சீதை இறந்து விட்டாள் என்று எண்ணி, இனி தான் வாழ்வதற்கு என்ன இருக்கிறது என்று விரக்தி கொண்டு, தன் உயிரைப் போக்கிக் கொள்ள எண்ணிக் கூறிய அதே உண்ர்ச்சிப் பாங்கினை ஒத்து இங்கு வெளிப்படக் காண்கிறோம்.

'என்னைத் தரும் எந்தையை, என்னையரை,
பொன்னைப் பொருகின்ற பொலங் குழையாள்
தன்னை, பிரிவேன்; உளென் ஆவதுதான்,
உன்னைப் பிரியாத உயிர்ப்பு அலவோ?

(கம்பன், 3610)

'இன்றே இறவாது ஒழியேன்: எமரோ,
பொன்றாது ஒழியார், புகல்வார் உளரால்;
ஒன்றாகிய உன் கிளையோரை எலாம்
கொன்றாய்; கொடியாய்! இதுவும் குணமோ?'

(கம்பன், 3612)

என்றுள்ள கம்பனின் இரண்டு பாடல்களும், இதனை எடுத்துக் காட்டும். உண்மையில், இராமன் இங்கே ஒரு படி மேலே சென்று விடுகிறான்.

**நீயும் போயினை ஓ! ஓ! கொடிதே**

இலக்குவனை அரக்கர்கள் கொன்று விட்டார்கள் போலும், என்று பயந்த இராமன், தான் தன் உயிரை விட்டுவிடப் போவதாகப் புலம்புவதோடு அல்லாமல், சீதையும் காணுமல் போய், இலக்குவனும் இறந்து, பிரிவாற்ருது, தானும் மடிவதாயின், கிளை முழுமையும் மாளும் என்றும் சொல்லி, அப்படி அக்கிளைஞர் மாள்வார் ஆயின், அதற்கு இலக்குவனே காரணம் ஆவான் என்றும், அவன் கூறும் பொழுது அவலத்தின் உச்சியைக் கண்டு விடுகிறோம்.

பின்னர் அயோமுகியின் பிடியில் இருந்து விடுபட்டு வந்த இலக்குவன், இராமனை அடைகிறான். வந்த தம்பியைப் பல்முறை தழுவுகிறான். இந்த, இவன் தன்மையை,

ஊற்று உறு கண்ணின் நீர் ஒழுக நின்றவன்,
ஈற்று இளங் கன்றினைப் பிரிவுற்று, ஏங்கி நின்று,
ஆற்றலாது அரற்றுவது, அரிதின் எய்திட,
பால் துறும் பனிமுலை ஆவின் பான்மையான்.

(கம்பன், 3624)

என்பான் கம்பன்.

**மனக்கினியை! எனக்கினியை**

அது மாத்திரம் அன்று. இலக்குவனை விட மேலானவர் தனக்கு எவரும் இலர், என்பதையும், அவன் வீரம் ஒன்றே தன்னுடைய துன்பம் துடைக்கப் போதுமானது என்பதையும்,

'பிரிபவர் யாவரும் பிரிக; பேர் இடர்
வருவன யாவையும் வருக; வார் கழல்
செரு வலி வீர, நின் தீரும் அல்லது,
பருவரல், என் வயின் பயிலற்பாலதோ?'

(கம்பன், 3629)

என்பதன் மூலம் எடுத்துக் காட்டி விடுவான்.

**களம் படு வீரன்கண்டு குளம் படு விழிகள்**

போரில் இந்திரசித்து விடுத்த நாகபாசத்தால் கட்டுண்டு கிடந்த இலக்குவனைக் கண்டு, அவன் இறந்தே விட்டான் என்று எண்ணி இராமன் அநுபவித்த துயரைக் கம்பன் மிக அற்புதமாகப் பாடுவான்.

உழைக்கும்; வெய்து உயிர்க்கும்; ஆவி உருகும்; போய்
உணர்வு, சோரும்,
இழைக்குவது அளிதல் தேற்றான், 'இலக்குவா!
இலக்குவா!' என்று,
அழைக்கும்; தன் கையை வாயின், மூக்கின் வைத்து,
அயர்க்கும்; 'ஐயா!
பிழைத்தியோ!' என்னும்—மெய்யே பிறந்தேயும்
பிறந்திலாதான்.

(கம்பன், 8223)

தாமரைக் கையால் தாளைத் தைவரும்; குறங்கைத் தட்டும்;
தூமலர்க் கண்ணை நோக்கும்; 'மார்பிடைத் துடிப்பு
உண்டு' என்னா,
ஏமுறும்; விசும்பை நோக்கும்; எடுக்கும்; தன் மார்பின்
ஏற்றும்;
பூமியில் வளர்த்தும்; 'கள்வன் போய்
அகன்றானோ?' என்னும்.

(கம்பன், 8224)

வில்லினை நோக்கும்; பாச வீக்கினை நோக்கும்; வீயா
அல்லினை நோக்கும்; வானத்து அமரரை நோக்கும்;
'பாரைக்
கல்லுவென், வேரோடு' என்னும்; பவளவாய் கறிக்கும்;
கற்றோர்
சொல்லினை நோக்கும்; தன்போல் புகழினை நோக்கும்—
தோளான்.
(கம்பன், 8225)

வீரரை எல்லாம் நோக்கும்; விதியினைப் பார்க்கும்; வீரப்
பாரவெஞ் சிலையை நோக்கும்; பகழியை நோக்கும்; 'பாரில்
யார் இது பட்டார், என் போல் எளி வந்த வண்ணம்?,
என்னும்
'நேரிது, பெரிது' என்று ஓதும்—அளவையின் நிமிர
நின்றான்.
(கம்பன், 8226)

இந்த நிலையில் இலக்குவன் இறந்து பட்டானே யானால், இனி தனக்கு புகழ்தான் என்னே? பழிதான் என்னே? அறம் தான் என்னே? என்று அகம் கலாய்த்து விரக்தியின் ஆழத்திற்கே போய் விடுகிறான்.

அது போழ்து, வீடணன் நிகழ்ந்தன, அனைத்தையும் கூறி, நாகபாசவரலாற்றையும் செப்பி, யாரும் இன் உயிர் துறந்தார் அல்லர் என்றும் சொல்லி அமைதிப் படுத்த முயல்கிறான்.

அவலம் பொருது ஆர்த்தெழு சினத்தன்

கேட்ட இராமன் கிளர்ந்த சிந்தையனாய், சினத்தின் உச்சத்திற்கே சென்று விடுகிறான்.

'ஈந்துள தேவர் மேலே எழுகெனோ? உலகம் யாவும்
தீந்து உக நூறி, யானும் தீர்கெனோ? இலங்கை சிந்தப்

பாய்ந்து, அவர் சுற்றம் முற்றும் படுப்பெனே? இயன்ற
பண்போடு
ஏய்ந்தது பகர்தி' என்ருன், இமையவர் இடுக்கண்
தீர்ப்பான்.
(கம்பன், 8239)

'வரம் கொடுத்து இனேய பாசம் வழங்கினுன் தானே
நேர் வந்து
இரங்கிடத் தக்கது உண்டேல், இகழ்கிலென்; இல்லே
என்னின்,
உரம் கெடுத்து, உலகம் மூன்றும், ஒருவன் ஓர் அம்பின்
சுட்ட
புரங்களின் தீய்த்து, காண்பென் பொடி, ஒரு கடிகைப்
போழ்தின்.
(கம்பன், 8240)

என்று இவ்வாறெல்லாம் விறல் விளம்பல், இலக்குவ னிடத்து இராமனுக்கு இருந்த பாசத்தினின்றும் பிறந்த வெஞ்சினச் சொற்களாகும்.

பட முடியாதினித் துயரம்; பட்டதெல்லாம் போதும்

இவ்வாருகவே பின்னர் இந்திரசித்து விடுத்த பிரம்மாத்திரத்திஞல் கட்டுண்டு களத்திடை இலக்குவன் சாய்ந்தமை கண்டு, இன்னுயிர் பொன்றினன் என்ன நினேத்து,

பொருமினுன், அகம்; பொங்கினுன்; உயிர் முற்றும்
புகைந்தான்;
குரு மணித் திருமேனியும், மனம் எனக் குலேந்தான்;
தருமம் நின்று தன் கண் புடைத்து அலமர, சாய்ந்தான்;
உருமினுல் இடியுண்டது ஓர் மராமரம் ஒத்தான்.
(கம்பன், 8638)

உயிர்த்திலன் ஒரு நாழிகை; உணர்ந்திலன் ஒன்றும்;
வியர்த்திலன், உடல்; விழித்திலன், கண் இணை;
விண்ணோர்,
'அயிர்த்து இலன் கொல்?' என்று அஞ்சினர்; அங்கையும் தாளும்
பெயர்த்திலன்; உயிர் பிரிந்திலன்-கருணையால் பிறந்தான்.
(கம்பன், 8639)

தாங்குவார் இல்லை; தம்பியைத் தழீஇக் கொண்டதடக்கை
வாங்குவார் இல்லை; வாக்கினால் தெருட்டுவார் இல்லை;
பாங்கர் ஆயினார் யாவரும் பட்டனர்; பட்ட
தீங்குதான் இது; தமியனை யார் துயர் தீர்ப்பார்?
(கம்பன், 8640)

என்றமைந்த, மூன்று பாடல்களில் இராமன் அடைந்த மெய்ப்பாட்டினை மிக்க அற்புதமாக விளக்குவான் கம்பன்.

வன் துணைத் தம்பியே! வாழேன், வருவேன்

பின் அண்ணலும், சிறிது உணர்வினோடு அயாவுயிர்ப்பு அணுகிக் கண்விழிக்கிறான்; தம்பியைத் தெரிவுறக் காண்கிறான்; துயரினன் ஆகிப் புலம்புகிறான். இதனைக் கம்பன்,

'எந்தை இறந்தான்' என்றும்'இருந்தேன்; உலகு எல்லாம்
தந்தனென் என்னும் கொள்கை தவிர்ந்தேன்; தனி அல்லேன்;
கந்தன் இருந்தாய் நீ என நின்றேன்; உரை காணேன்;
வந்தனென், ஐயா! வந்தெனன், ஐயா! இனி வாழேன்!
(கம்பன், 8645)

'தாயோ நீயே; தந்தையும் நீயே; தவம் நீயே;
சேயோ நீயே; தம்பியும் நீயே; திரு நீயே;
போயோ நின்றாய்; என்னை இகந்தாய்; புகழ் பாராய்,
நீயோ; யானோ, நின்னினும் நெஞ்சம் வலியேனோ?
(கம்பன், 8646)

'மாண்டாய் நீயோ; யான் ஒரு போதும் உயிர் வாழேன்;
ஆண்டான் அல்லன் நானிலம், அந்தோ, பரதன் தான்!
பூண்டார் எல்லாம் பொன்றுவர், துன்பப் பொறையாற்ருர்;
வேண்டாவா, நான் நல் அறம் அஞ்சி, மெலிவுற்ருல்?
(கம்பன், 8652)

'அறம், தாய், தந்தை, சுற்றமும், மற்றும், எனே அல்லால்,
துறந்தாய்! என்றும் என்னே மருதாய்! துணே வந்து
பிறந்தாய்! என்னேப் பின்பு தொடர்ந்தாய்! பிரிவு அற்ருய்!
இறந்தாய்; உன்னேக் கண்டும் இருந்தேன், எளியேனே?
(கம்பன், 8653)

என்ற நான்கு பாடல்களில், பாசமும் சோகமும் சேர்ந்து தொனிக்க, அழகாக எடுத்துக் காட்டுவான்.

தான் ஆடாவிட்டாலும்...

'மாயா சீதையை வெட்டிக் கொன்றதோடல்லாமல் இந்திரசித்து படைகளோடு அயோத்தி சென்ருன்' என்று அநுமன் சொன்ன இடத்து, இராமன், முற்றும் மனம் அழிந்து விடுகின்ருன். இதனேக் குறிப்பிடும் கம்பன் சாதாரண ஒரு மனித உணர்ச்சியை மிக அற்புதமாக எடுத்துக் காட்டுவான்.

ஒரு துயர நிகழ்ச்சி நிகழ்ந்து விட்டது. அதற்காக வருந்துகிருேம். அதனே அடுத்து இன்னெரு துயர நிகழ்ச்சியும், (அதுவும் இதைவிடப் பெரியது) நடக்க இருக்கிறது என்றும் கேட்கிருேம்.

அப்பொழுது முன்னேய நிகழ்ச்சியினுல் உண்டான துயரம் எங்கோ போய் மறைந்து கொள்கிறது. இனி நடக்க இருக்கும் துயர நிகழ்ச்சியை எப்படித் தவிர்ப்பது என்பதிலேயே சிந்தையும், செயலும் முழுமையாக ஈடுபட்டு விடுகின்றன. இதனே வெளிப்படுத்தும் வகையில் தான்,

தாயரும் தம்பிமாரும் தவம் புரி நகரம் சாரப்
போயினன் என்ற மாற்றம் செவித் துளை புகுதலோடும்,
மேயின அடியின் நின்ற வேதனை கனைய, வெந்த
தீயிடைத் தணிந்தது என்ன சீதைபால் துயரம் தீர்த்தான்.
(கம்பன், 8913)

என்று இராமனைப் பற்றிக் கம்பன் பாடுவான்.

அந்த, துயர நிகழ்ச்சியைத் தவிர்க்க வேண்டும் என்ற ஆவேசத்தில் வீடணனைப் பார்த்து,

''மாக ஆகாயம் செல்ல, வல்லையின், வயிரத் தோளாய்!
ஏகுவான் உபாயம் உண்டேல், இயம்புதி; நின்ற
எல்லாம்
சாக; மற்று, இலங்கைப் போரும் தவிர்க; அச்சழக்கன்
கண்கள்
காகம் உண்டதற் பின், மீண்டும் முடிப்பென்
என் கருத்தை''
(கம்பன், 8919)

என்றான்.

இராவண வதத்தை முடித்து விட்டு அயோத்திக்குத் திரும்பி வரும் வழியில், இராமன், பரத்துவாச முனிவர் உபசரிப்பை ஏற்று அவருடைய ஆசிரமத்தில் சற்று தங்கிவிடுகிறான்.

பரதனை நன்கறிந்த அவன் மனமோ, பரதன்பால் சென்று விடுகிறது.

பதினான்கு ஆண்டுகள் கானக வாழ்வு கழிந்த பின் திரும்பி நாடு வராவிட்டால், தான் உயிரை மாய்த்து கொள்ளப்போவதாகப் பரதன் சொன்னதை அவன் மறந்து விடவில்லை.

"......................ஏழ் இரண்டு ஆண்டில், ஐய! நீ
நாம நீர் நெடுநகர் நண்ணி, நானிலம்
கோமுறை புரிகிலை என்னின், கூர் எரி
சாம் இது சரதம்; நின் ஆணை சாற்றினேன்!"

(கம்பன், 2507)

என்பதுதான் பரதன் சொன்னது.

எனவேதான், தான் வந்து கொண்டிருக்கும் செய்தியைப் பரதனிடம் தெரிவிப்பதற்காக, அநுமனை அயோத்திக்கு அனுப்புகிறான். அநுமனும் தக்க சமயத்தில் அங்கு போந்து பரதன் தீயில் விழுமுன் காத்து, விளம்பு வான் அனைத்தும்,

* * *

தாதை பிரி துயர் தவிர்தல் வல்லனோ?

இந்த முறைப்படி பார்க்கும் பொழுது, இன்னும் ஒரே ஒரு நிகழ்ச்சியைக் காண்பதும் பொருத்தம் உடையது ஆகும்.

இராமனை, அயோத்திக்கு அழைத்து வரச் சென்ற பரதன், தசரதன் இறந்த செய்தியை அவனிடம் தெரிவிக்கிறான்.

உள்ளம் கலங்கி, உணர்வு அழிந்து, உயிர் நொந்த இராமன், இறந்த தந்தை பற்றிப் பலபடப் புலம்புகிறான்.

"வேண்டும் திறத்தாரும் வேண்டா அரசாட்சி
பூண்டு, இவ்வுலகுக்கு இடர் கொடுத்த புல்லனேன்,
மாண்டு முடிவது அல்லால், மாயா உடம்பு இது கொண்டு
ஆண்டு வருவது, இனி, யார் முகத்தே நோக்கவோ?"

(கம்பன், 2438)

என்று புலம்பும் அளவிற்கு அத்துயரம் சென்றுவிடுகிறது.

துயர மிகையால் துவண்டு விழுந்த, இராமனைத் தம்பியரும், வந்து அடைந்த மன்னவரும், சென்று எடுத்துத் தாங்கினர். சோகம் தெளிவித்தனர். அப்பொழுது வசிட்டன்,

"துறத்தலும், நல் அறத் துறையும் அல்லது
புறத்து ஒரு துணை இலை, பொருந்தும் மன்னுயிர்க்கு;
'இறத்தலும், பிறத்தலும் இயற்கை' என்பதை
மறத்தியோ, மறைகளின் வரம்பு கண்ட நீ?"

என்றும், (கம்பன், 2444)

"சீலமும், தருமமும், சிதைவு இல் செய்கையாய்!
சூலமும், திகிரியும், சொல்லும் தாங்கிய
மூலம் வந்து உதவிய மூவர்க்கு ஆயினும்,
காலம் என்று ஒரு வலை கடக்கல் ஆகுமோ?"

(கம்பன், 2447)

என்றும், ஆறுதல் மொழிகள் அன்புடன்கூறி அமைதிப் படுத்துகிறான்.

* * *

இது வரையில் இராமன் தன் உற்றார் உறவினர் மேல் வைத்திருந்த பாசத்தையும், அவர்களுக்கு ஊறு நேர்ந்த போதெல்லாம் எப்படி உணர்ச்சி வயப்பட்டான் என்பதையும் கண்டோம்.

யாவர் மாட்டும் பேரன்பினனே

இதுபோலவே, தன்னுடைய நண்பர்கள், சகோதரர்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டவர்கள் ஆகிய குகன், சுக்கிரீவன், வீடணன் ஆகியோரிடம் அன்பையும், பாசத்தையும் இராமன் காட்டியிருக்கிறான்.

'போதுவென் உடன்' என்ற போர்த் தொழில் குகனிடம், அவன் தன் உயிர் அனையான் என்றும், தன்

இளவல் அவன் இளையான் என்றும், தன் மனையாள் அவன் கேள் (கொழுந்தி) எனவும் நளிர் கடல் நிலம் எல்லாம் அவனதே என்றும், தான் அவன் தொழில் உரிமையின் உள்ளதாகவும் கூறுகிறான் இராமன்.

சேனுறு நெடு நெறி சேறல் முன்னர், அவனிடம் கூறுவான்,

> "அங்கு உள கிளை காவற்கு அமைதியின் உளன்,உம்பி;
> இங்கு உள கிளை காவற்கு யார் உளர்? உரை செய்யாய்;
> உன் கிளை எனது அன்றோ? உறு துயர் உறல் ஆமோ?
> என் கிளை இது கா, என் ஏவலின் இனிது........"
>
> (கம்பன், 1997)

என.

பின் விடைபெற்று, அணி இழை மயிலொடும் திணிபுய இளவலொடும் கான் புகுகிறான்.

சுக்கிரீவன் சம்பந்தப்பட்ட வரையில் நடந்தன சில காண்போம்.

இராமன் கடல் கடந்து, இலங்கை நகர்ப்புறத்தே வெள்ளிடை ஒன்றில் அரிக்குலம் சூழ படைவீடு கொள்கிறான்.

செய்தி அறிந்த இராவணன், ஒரு செம்பொற் கோபுர உம்பர்ச் சேர்கிறான். அவனை இராமனும் காண்கிறான். வானர சேனையைக் காண, பரிவாரம் சூழ நின்ற இராவணனையும் பிறரையும், இன்னார் இவர் என்று தனக்கு அறிவிக்க வீடணனை இராமன் கோருகிறான்.

வீடணனும் தன் முன்னோனைச் சுட்டி 'இவனே புன் தொழில் இராவணன்' என்கிறான்.

அடுத்தவர் இவர், என வீடணன் கூறுமுன், சுக்கிரீவன் கண்கள் கனல் கால இராணன் மேல் பாய்கிறான்.

இருவரும் கை கலந்து, விட்டிலர், புரண்டு உருண்டு அகழியில் வீழ்கின்றனர். இதற்கிடையில் சுக்கிரீவனைக் காணுது, அவன் விரைவில் திரும்பி வாராமை கண்டு, இராமன் அவனுக்கு என்ன ஆயிற்ருே என்ற எண்ணக் கவற்சி மேவி, பெருந்துயரில் மூழ்குகிருன்.

"ஒன்றிய உணர்வே ஆய ஓர் உயிர்த் துணைவ! உன்னை
இன்றியான் உளனுய் நின்று, ஒன்று இயற்றுவது
இயைவது அன்ருல்;
அன்றியும், துயரத்து இட்டாய் அமரரை; அரக்கர்க்கு
எல்லாம்
வென்றியும் கொடுத்தாய்; என்னைக் கெடுத்தது உன்
வெகுளி"...
(கம்பன், 6921)

"அழிவது செய்தாய், ஐய! அன்பினுல்; அளியத்தேனுக்கு
ஒழிவு அரும் உதவி செய்த உன்னை யான் ஒழிய வாழேன்;
எழுபது வெள்ளம் தன்னின் ஈண்டு ஓர் பேர் எஞ்சாது
ஏகி,
செழுநகர் அடையின் அன்ருே, இத் துயர் தீர்வது
உண்டோ?"
(கம்பன், 6925)

என்று வாய்விட்டுக் கதறுகிருன்.

பின்னர் இந்திரசித்து விட்ட பிரம்மாத்திரத்தினுல் பிணிக்கப்பட்டு, வானரப் பெருஞ்சேனை உள்ளிட்ட பலரும் மண்ணிடை மடிந்து வீழ்கின்றனர்.

தாமரைச் சேவடி நுடங்குறச் சார்ந்த இராமன் நிணப் பறந்தலை அழுவத்துள் புக்கான். காக்கும் வன் துணைத் தலைவரைத் தனித்தனி கண்டான்.

சுக்கிரீவனை நோக்கி, தன் தாமரைத் துணைக்கண்
உக்க நீர்த்திரள் ஒழுகிட, நெடிது நின்று உயிர்த்தான்;
'தக்கதோ, இது நினக்கு!' என்று, தனி
மனம் தளர்ந்தான்.
.......................................
(கம்பன், 8631)

இவ்வாறே, அக்களத்து வீழ்ந்து கிடக்கும் அங்கதன் கண்டு அலமருகின்ருன்.

விடைக் குலங்களின் நடுவண் ஓர் விடை கிடந்தென்ன,
கடைக்கண் தீஉக, அங்கதக் களிற்றினைக் கண்டான்;
'படைக் கலங்களைச் சுமக்கின்ற பதகனேன், பழிபார்த்து,
அடைக்கலப் பொருள் காத்தவாறு அழகிது' என்று
அழுதான்.
(கம்பன், 8636)

'அடைக்கலப் பொருள் காத்த அழகு' என்ற சொல் ஆட்சியில் அடங்கியிருக்கும் உணர்ச்சி, உன்னி, உன்னி அநுபவிக்கத்தக்கது.

பறந்தலை அழுவத்துப் பக்கம் நோக்கினன்; மாருதி தன்மையைப் பார்த்தனன்.

'கடல் கடந்து புக்கு, அரக்கரைக் கரு வொடும் கலக்கி,
இடர் கடந்து நான் இருக்க, நீ நல்கியது இதற்கோ?
உடல் கடந்தனவோ, உனை அரக்கன் வில் உதைத்த
அடல் கடந்த போர் வாளி?' என்று, ஆகுலித்து அழுதான்.
(கம்பன், 8632)

பின்னர், அநுமன் கொணர்ந்த மருத்து மலையிலிருந்து காற்று வந்து அசைத்தலும், களத்திடை வீழ்ந்து கிடந்த கவிக்குலம் உள்ளிட்ட பலரும் ஏற்றமும், பெருவலி அழகும் கூடி, உயிர் பெற்று எழுந்தார்.

தகை சால் மாருதி, இராமன் தாள் உறத் தொழுது நிற்கிருன். வரு பனி கரந்த கண்ணனுய் அவன் நோக்கி,

"முன்னின் தோன்றினோர் முறையின் நீங்கலாது,
என்னின் தோன்றிய துயரின், ஈறு சேர்
மன்னின் தோன்றினேம் முன்னம்; மாண்டுளோம்;
நின்னின் தோன்றினேம், நெறியின் தோன்றினுய்!"
(கம்பன், 8812)

என்பான்,

இப்படிக் கூறுவதன் மூலம் தாங்கள் மறு பிறப்பு எடுத்ததாகவும், அம் மறு பிறப்பு அநுமனினின்று தோன்றியதாகவும் இராமன் கூறக் காண்கிறோம்.

* * *

எளிய மனிதன்

இனி மிகச் சாதாரண மனிதனைப்போல், இராமன் நடந்து கொண்ட ஓரிரு இடங்களையும் காணலாம். இராவணன் வேண்டுகோளுக்கு இணங்கி, மாரீசன் மாயமானாக உரு எடுத்து, சீதை முன் விளையாடுகிறான். அதனைப் பிடித்துத் தரவேண்டி சீதை இராமனிடம் கோருகிறாள். இலக்குவன் அது மாயமான் என்று கூறுகிறான்.

'காயம், கனகம்; மணி, கால், செவி வால்;
பாயும் உருவோடு இது பண்பு அலவால்;
மாயம் எனல் அன்றி, மனக் கொளவே
ஏயும்? இறை மெய் அல'...........

(கம்பன், 3288)

என்பான்.

இராமன் "இந்த நிலை பெருத உலகத்தினுடைய தன்மையை நல்லவர்கள் கூட உணர்ந்தவர்கள் அல்லர். இந்த உலகில் பல்லாயிரக் கோடிக்கணக்கான மன் உயிர்கள் பரந்துகிடக்கின்றன. இன்னதுதான் இவ்வுலகில் இருக்கிறது, இன்னது இவ்வுலகத்தில் இல்லை என்று சொல்வதற்கில்லை. எனவே இல்லாதன இல்லை" என்பான்.

"ஆக, இந்த மான் உண்மையான மான் அன்று என்றோ மாய மான் என்றோ சொல்வதற்கும் இல்லை" என்றும் கூறுகிறான்.

இளவலாகிய இலக்குவன் எடுத்துக் கூறிய போதும் கூட, அதனைத் தடுத்துப் பேசிய இராமனின் இந்தச்

செயலும், ஒரு சாதாரண மனிதச் செயலே உணர்த்துவதே ஆகும்.

சிறியோரை இகழ்தல் இலன் ஆதி

வாலி வதத்திற்குப் பிறகு சுக்கிரீவன் முடி சூட்டப் பெறுகிருன். சுக்கிரீவன் எப்படி அரசாட்சி செய்ய வேண்டும் என்று சில அறிவுரைகளே இராமன் கூறுகிருன். அப்படிச் சொல்லும் அறிவுரைகளில் ஒன்று அவனுடைய சொந்த அநுபவத்தில் அமைந்தது ஆகும்.

''சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல்; மற்று, இந்
நெறி இகழ்ந்து, யான் ஓர் தீமை இழைத்தலால், உணர்ச்சி நீண்டு,
குறியது ஆம் மேனி ஆய கூனியால், குவவுத் தோளாய்!
வெறியன எய்தி, நொய்தின் வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்''
(கம்பன், 4126)

என்பது இது பற்றிய கம்பன் பாடல்.

''யாரையும் சிறியர் என்று எண்ணி இகழ்ந்து அவர்களுக்குத் துன்பம் செய்ய வேண்டா. அத்தகைய துன்பம் செய்ததால் தான், குறுகியமேனி மந்தரை ஆகிய கூனியால், எல்லாவற்றையும் இழந்து வெகுவிரைவிலேயே வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்'' என்று கூறுகிருன்.

'வெறியன எய்தி' என்ற சொல் ஆட்சி, எல்லாவற்றை யும் இழந்து, என்ற பொருள் கொடுத்து, அரசையும் அதனேடு சேர்ந்து அநுபவிக்கத் தக்க அனைத்தையும் இழந்ததைக் குறிப்பிடும்.

வெந்துயர்க் கடலிடை வீழ்ந்தேன், என்பது சீதையை இழந்து, அதனல் பெருந்துயர்ப்பட்டதைக் குறிப்பிடும்,

தன் தந்தை வாக்கைக் காப்பதற்காக முழுமனத்தோடு நாட்டை விட்டு வந்தவன்தான்; எனினும், ஒரு மனிதன் என்ற முறையில் அது தனக்குத் துயரத்தைக் கொடுக்கும் நிகழ்ச்சி என்பதையும், அதற்குக் காரணம் மந்தரை என்பதனையும், அந்த மந்தரையைப் பரிகசிக்கும் வகையில் அவள் கூன் முதுகின்மேல் தான் வேடிக்கையாக மண் உண்டை அடித்தமைதான் என்றும் கூறுகிறான்.

இந்த நிகழ்ச்சிதான் அந்த மந்தரை உள்ளத்தில் இராமனைப் பற்றிய காழ்ப்புணர்ச்சி உண்டாக்கிற்று என்பதனை இராமனால் மறக்க முடியவில்லை.

மீட்டும் ஒரு வாய்ப்பு தருதும்.

போர் தொடங்கு முன்னால், இராமன் இராவணனிடம் தூது விட விரும்புகிறான். இராமனின் இச்செயலைக் கம்பன்,

"தூதுவன் ஒருவன் தன்னை இவ்வழி விரைவில் தூண்டி
'மாதினை விடுதியோ?' என்று உணர்த்தவே, மறுக்கும் ஆகின்.
காதுதல் கடன் என்று உள்ளம் கருதியது; அறனும் அஃதே;
நீதியும் அஃதே" என்றான்-கருணையின் நிலையம் அன்னான்.
(கம்பன், 6975)

என்பான்.

இந்தச் செயலில் நாம் கூர்ந்து நோக்கத் தக்கது ஒன்று உண்டு.

இராம அவதாரத்தின் நோக்கமே, இராவண வதம். அப்படி இருந்தும்கூட, அந்த இராவணனுக்கே உயிர்

வாழ்வதற்கு ஒரு சந்தர்ப்பத்தைக் கொடுக்க இராமன் விரும்புகிறுன்.

"சீதையை விட்டு விடுகிறுயா? அல்லது சாவைச் சந்திக்கிறுயா?" என்பதுதான் அந்தத் தூதுச் செய்தி.

இப்படித் தூது அனுப்புவதன் மூலம், அறத்தையும், நீதியையும், கடமையையும் பின்பற்ற முயலுகின்ற ஒரு மனிதனுகவே இராமன் காட்சி அளிகிறுன்.

**கரம் விதிர்ப்பான்**

கும்பகருணன் இராமனுடன் போரிடுகிறுன். அவ்விருவர்க்கும் இடையே மாபெரும் போர் நடக்கிறது. கும்பகருணனது வலக்கையினை இராமன் வாளியால் அறுக்கிறுன். அப்படி அறுபட்ட வலக்கையை அறுபடாத இடக்கையால் இறுகப் பற்றி எடுத்துக் கொண்டு வானரக்குலம் முழுவதும் எயிறு இளித்து ஓட அவற்றைத் தாக்குகிறுன்.

'உள்ள கையினும் அற்ற வெங்கரத்தையே அஞ்சின, உலகு எல்லாம்' (7610), என்பான் கம்பன்.

இந்த சமயத்தில்,

'ஈற்றுக் கையையும் இக்கணத்து அரிதி' என்று
இமையவர் தொழுது ஏத்த,
தோற்றுக் கையகன்று ஒழிந்தவன் நாள் அவை
தொலேயவும், தோன்றுத
கூற்றுக்கு ஐயமும் அச்சமும் கெட, நெடுங்
கூற்றுவன் கொலே அம்பால்,
வேற்றுக் கையையும் வேலேயில் இட்டனன்,
வேறும் ஓர் அணே மான.

(கம்பன், 7612)

கைகளே இழந்த கும்பகருணன், தன் போரை நிறுத்தவில்லே. இராமன் அவனுடைய கால்களேத்

துணிக்கிறான். அந்த நிலையிலும் கும்பகருணன் தன் பகுவாயால், காதம் நீளிய மலைகளைக் கடித்து இறுத்து எடுத்து வீச, வானரக்குலம் உருமின் வீழ் உயிர் என உலந்த.

இந்தச் சாதனையைக் கண்டான் இராமன்; வியந்தான்; விதிர்த்தான். இதனைக் கம்பன்,

தீயினால் செய்த கண்ணுடையான், நெடும்
சிகையினால் திசை தீய
வேயினால் திணி வெற்பு ஒன்று நாவினால்
விசும்புற வளைத்து ஏந்தி,
பேயின் ஆர்ப்புடைப் பெருங்களம் எரிந்து எழ,
பிலம் திறந்தது போலும்
வாயினால் செல, வீசினன்; வள்ளலும்
மலர்க் கரம் விதிர்ப் புற்றான்.

(கம்பன், 7621)

என்று பாடுவான்.

இங்கு கூர்ந்து நோக்கத்தக்கது ஒன்று உண்டு. அதுதான், "வள்ளலும் மலர்க்கரம் விதிர்ப்புற்றான்' என்ற சொல் ஆட்சி.

வாசவன் தேரிடை வயங்கு வயவன்

இராம, இராவணப் போர் தொடங்குகிறது. இராவணன் தேரேறி களத்திற்கு வருகிறான். அதுகண்ட அரன், தேவரை விளித்து,

"பூண்ட மணி ஆழி வய மா நிமிர்பொலந் தேர்
ஈண்ட விடுவீர், அமரில்"

(கம்பன், 9681)

என்று ஏவுகிறான்,

ஏவல் புரி இந்திரனும், தன் சாரதி மாதலிக்கு ஆணை யிட, மாதலி அவ்வாறே கடுகினன் முடுகி, கடுந்தேர்ப் பண்ணி, களத்திடை இராமன் முன் நிறுத்துகிருன்.

அது கண்ட இராமன் வியந்து,

"..............................
.............................. ...வந்தாய்,
பொன்னின் ஒளிர்தேர் இது கொடு, ஆர்புகல?'' என்ருன்;
அன்னவனும் அன்னதனை ஆக உரை செய்தான்;
(கம்பன், 9694)

தான், தேவரும், முனித் தலைவரும், சிவனும், மூவுலகு அளித்த பிரமனும் முன் நின்று ஏவ, சுரர்க்குத் தலைவன் இந்திரன் கூற, வந்ததாகக் கூறுகிருன்.

அப்பொழுதும் கூட,

ஐயன் இது கேட்டு, 'இகல் அரக்கர் அகல் மாயச்
செய்கை கொல்?' எனச் சிறிது சிந்தையில் நினைந்தான்;
(கம்பன் 9700)

என்று கம்பன் கூறுவான்.

பின்னர், வந்தவன் மாதலிப் பெயரினன்; மாவின் (குதிரை) மனம் உணர்பவன் என்பதனை அறிந்து,

மாருதியை நோக்கி, இளவாள் அரியை நோக்கி,
'நீர் கருதுகின்றதை நிகழ்த்தும் ' என, நின்ருன்
ஆரியன்; வணங்கி, அவர், 'ஐயம் இலை, ஐயா!
தேர் இது புரந்தரனது' என்றனர், தெளிந்தார்.
(கம்பன், 9702)

என்றும் கம்பன் கூறுவான்.

இவ்வாறு அவர்கள் உறுதி கூறிய பின்னரே அந்தத் தேரில் ஏறுகிருன்.

பின்னர்த் தொடர்ந்த போரில் இராமன் எண்ணற்ற அரக்கர்களைக் கொன்று குவிக்கிருன்,

கண்டு சினந்த இராவணன், 'மாயையின் படை தொடுப்பன்' என்று மனத்திடை மதித்தான்.

மாயையின் படை அவன் விட, முன்பு இராமனுல் கொல்லப்பட்டு இறந்த அரக்கர்கள் அனைவரும், எழுந்து ஆரவாரிக்கின்றனர்.

இதனைக் கண்ட இராமனது நிலையையும், செயலையும் கம்பன்,

> "இனைய தன்மையை நோக்கிய இந்திரை கொழுநன்,
> 'வினையம் மற்று இது மாயமோ? விதியது விளைவோ?
> வனையும் வன்கழல் அரக்கர் தம் வரத்தினே? மற்றே?
> நினைதியாமெனின், பகர்' என, மாதலி நிகழ்த்தும் :
> (கம்பன், 9822)

என்று கூறுவான்,

### யாரையோ நீ?

இராவண வதத்திற்குப் பின்னல் வீடணன், இராமன் ஏவல் ஏற்று சீதையை அழைத்து வந்து அவன் முன் செல்ல விடுகிருன்.

வந்து வணங்கிய வணங்கு இயல் மயிலினை, பணம் கிளர் அரவு எனப் பார்த்து, கொடூரமான சொற்களால் கடிந்து கூறுகிருன்.

கேளத்தகாதன கேட்டு, துயரம் அடைந்த சீதை தீயிடைப் புகுகிருள். அவள் கற்பின் தீயினல் தீய்ந்தது அவ்எரி. அங்கியங்கடவுள் அவன் முன் தோன்றி சீதையின் தூய்மையை உணர்த்துகிருன்.

"யாரையோ நீ? இயம்பியது என்னை?" என வினவிய இராமனுக்கு, தன்னைப் பற்றிக் கூறி, "யாதும் ஓர் பழிப்பிலள், ஏற்க" என்றும் சொல்கிருன் தீப்புத்தேள்.

கருணை உள்ளத்தன், அங்கி கூறிய சீதையைக் கழிப்பிலள் என்று கூறி ஏற்றுக் கொள்கிறான்.

அவ்வேளையில் பிரம்மதேவன் அவ்விடை தோன்றி இராமனைப் பலபடப் போற்றிப் புகழ்ந்து, அவனே பரம் பொருள் என்றும், மனிதனாக அவதரிக்க நேரிட்டதும் கூறி, இன்னான் என்று உணர்த்த வேண்டிய வேளை வந்து விட்டது எனவும் சொல்கிறான்.

இராமனது பரம்பொருள் தன்மையைப் பலபடியாக எடுத்துக் காட்டுகிறான்.

**காணிய வந்த காவல் தேவர்**

ஏறு அமர் செல்வன் சிவபெருமானும், அதே உண்மையை அவனுக்கு உணர்த்துகிறான். மேலும் துறக்கத்தில் இருந்த தயரதனைச் சென்று கண்டு, "நின் மைந்தனைத் தெருட்டி, நீ முன் பெற்ற வன்துயர் நீக்குதி" என்கிறான்.

தயரதனும் காணிய உவந்தது ஓர் கருத்தால் பூதலத்திடைப் புகுகிறான். வணங்கிய இராம, இலக்குவரைத் தழுவிக் கொள்கிறான். அடி பணிந்த சீதைக்கு வாழ்த்தொடு ஆறுதல் மொழிகள் கூறுகிறான்.

பின்னர் இராமனை நோக்கி, "யான் உனக்கு ஈவது ஒன்று கூறுக" எனப் பணிக்க,

"தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்,
தாயும் தம்பியும் ஆம் வரம் தருக".........

(கம்பன், 10079)

என வேண்டுகிறான் இராமன்.

அப்படியே தயரதனும் அருள்கிறான்.

அவ்விடைக் குழுமி இருந்த அமரர் தம் குழாங்கள், இராமனை நோக்கி "வீர நீ வேண்டு வரங்கள் கேட்டியால்" என, அதற்கு இராமன், 'கிளர் பெருஞ் செருவில்

வீட்ட, மாண்டுள குரங்குகள் எலாம் எழுக' என வேண்டுகிருன்.

மேலும், 'குரக்கினம் வாழ்கின்ற வனம், மலைச்சாரல், பிற இடங்கள் அனைத்தும், காய் கனி, கிழங்குகள் தேனடைகள் நிரம்பியனவாக (பல வளம் பொருந்தியன வாக)' அருள்க எனக் கோர, அமரர்கள் 'நீ வேண்டிய வேண்டியாங்கு அவர் பெறுவர்' என்று வரம் வழங்கினர்.

செயற்படு மனிதன்

இவ்விடத்து நோக்கத் தக்கது ஒன்று உண்டு.

பிரம்மனும், சிவனும், பிறதேவர்களும் தோன்றி இராமனைப் பரம்பொருள் என்று சொன்ன போதிலும் கூட, அவன் அத்தேவர்களிடமே தன்னவர்க்காக வரம் கோரிப் பெறும் நிலையினனுகவே நடந்து கொள்கிருன்.

இவ்வாருகக் கம்பனுடைய இராமன், திருமாலின் அவதாரமாக, பரம்பொருளின் அவதாரமாக, இருந்த போதிலும், அவன் இம்மண்ணில் தயரதப் பெருவேந்தன் மகனுக, மன்னு புகழ்க் கோசலைதன் மணி வயிறு வாய்த்தவனுகப் பிறந்ததிலிருந்து, ஓர் சாதாரண மனிதனுகவும், அவதார நோக்கத்தை நிறைவேற்று வதற்குத் தக்க வீரத்தைப் பெற்றவனுகவும், விசுவாமித்திரர், அகத்தியர் முதலியோரால் ஆசியும் அஸ்திரங்களும் அருளப் பெற்றவனுகவுமே இருக்கிருன். எந்த நிலையிலும், எந்தக் கட்டத்திலும் தன்னைத் திருமாலின் அவதாரம் என அவன் சொல்லிக் கொண்டது மில்லை;பிறர் சொன்னபோது ஆமோதித்ததுமில்லை.

அவன் அவதாரமாகச் செயற்பட்டதுமில்லை; அவனை அவதாரபுருஷனுகக் கொண்டு போற்றியவர்களும் கூட, அவன் அவதார புருஷனுகச் செயல்பட வேண்டும் என்று, சொன்னதும் இல்லை.

காப்பியத்தை இப்படி அணுகும் பொழுது, வால்மீகி காட்டும் இராமனுக்கும், கம்பன் காட்டும் இராமனுக்கும் இடையே பொதுத் தன்மையில் வேறுபாடு இல்லை. இருவர் காப்பியப்படியும் இராவண வதத்திற்காக திருமாலே மனித உருவில் இவ்வுலகில் அவதாரம் செய்த போதும், இம்மண்ணுலகில் தோன்றிய நாள்முதல் இறுதி வரையில் ஒரு மனிதன் ஆகவே செயல்படுகிறுன்.



## 5. வாலிவதை-வால்மீகியின் படி

### கபந்தன் கூறுவ

சீதையைத் தேடிக் கொண்டு, இராம இலக்ஷ்மணர் கள் செல்லும் வழியில், கபந்தனைக் காண்கிறார்கள். கபந்தனுடைய கைகளை வெட்டுகிறார்கள். கபந்தன் தன் வரலாற்றைச் சொல்கிறான்.

ஆரண்ய காண்டம் 72ஆம் சர்க்கத்தில் சீதையைக் காண, இராம இலக்ஷ்மணர்களுக்குக் கபந்தன் வழி சொல் வது கூறப் பெறுகிறது. அவன் கூறுவதாவது:

"இராகவா! எப்படி சீதையை நிச்சயமாக அடையலாம் என்பது பற்றி நான் சொல்வதைக் கேளும். இராம! உலகில் ஒன்றை அறியும் விஷயத்தில், ஆறு உபாயங்கள் உள்ளன. எவனொருவன் விஷயத்தில் கஷ்டத்தை அநுபவித்து, கஷ்டத்தின் அந்தி பாகத்தை அடைந்த ஒருவனால், நட்புப் பெற்றவன் பேருதவி புரியப் படுகிறான். இலக்ஷ்மணன் உடன் இருக்கும் நீர், கஷ்ட தசையில் இருப்பவராய், மனம் நொந்திருக்கின்றீர். மனைவி காணாமற்போன பெருங்கஷ்டம், உமக்கு ஏற்பட்டு இருக்கிறது. ஆபத்தில் காத்தருள்பவர்களில் உத்தமரே! ஆகையால் அவன் சிநேகிதராக தேவரீரால் அவசியம் அடையத்தக்கவன். நான் தீர்க்காலோசனை செய்தும் அப்படிச் செய்யாவிடில் தேவரீர்க்கு காரியம் கை கூடும் வகையை அறியேன்.

### காய்கதிர்ச் செல்வன் சேய்

இராமா! விளங்கக் கூறுகிறேன், கேட்டுக் கொள்ளும். சுக்கிரீவன் என்ற வானரன், இந்திரன் புதல்வனும், சினம்

கொண்டவனும், தமையனுமான வாலியால் ஊரை விட்டுத் துரத்தப்பட்டிருக்கிருன். நற்சிந்தை உள்ள சூரஞன அவன், நான்கு குரங்குகளோடு கூட, பம்பாநதிக் கரையில் அழகு வாய்ந்து விளங்கும் ரிஸ்யமூகம் என்னும் உத்தம மலையில் வாசம் செய்துவருகிருன்.

இராமா! மகா தைர்யசாலியும், மகாதேஜஸ்வியும், அபரிமித அழகு வாய்ந்தவனும், சொன்ன சொல்தவருத வனும், ஜிதேந்திரியனும், உறுதியாய் இருப்பவனும், நல்ல புத்திமானும், மகானும், சாமர்த்தியசாலியும், பெரும் புகழ் படைக்கப் பெற்றவனும், மிகப் பெருமை வாய்ந்தவனும், மகா பலவானும் எப்பொழுதும் வீண் போகாத விடா முயற்சியை உடையவனும் ஆன, வான ரோத்தமன், ராஜ்யத்தின் பொருட்டு, ஊரை விட்டுத் துரத்தப்பட்டு இருக்கிருன்.

இராமா! சீதையைத் தேடும் விஷயத்தில் தேவரீர்க்கு அவன் பேருதவி புரிபவனுகவும், தேவரீரின் ஆப்த சிநேகி தன் ஆகவும் ஆவான். துக்கத்தில் தேவரீர் மனத்தைச் செலுத்தல் ஆகாது.

இக்ஷ்வாகு குல திலகமே! விதிப் பயன் மட்டும் ஒரு வராலும் வெல்ல முடியாது. ஆனபடியால் இவ்வுலகில் விதிப்பயன் அநுபவித்துத் தீரவேண்டியதாய் இருக்கிறது. எது நடக்க இருக்கிறதோ, அதை மாற்ற முடியாது.

**நட்டற்குரியவன், நம்பி அவனே**

இராமா! இப்பொழுதே இங்கிருந்து புறப்பட்டுச் சென்று மகாபலசாலியான சுக்கிரீவனை அடையும்.

இராமா! நண்பர்களாய் இருக்கும் உடன்படிக்கை மாருதிருக்கும் பொருட்டு, பிரகாசிக்கின்ற அக்கினியின்

முன் அவனை இப்பொழுதே ஆப்த நண்பனுகச் செய்து கொள்ளும்.

வானரத் தலைவனும், உதவியைப் பிரார்த்திக்கின்றவனும், நன்றி மறவாதவனும் நினைத்த உருவம் எடுக்க வல்லவனும், வீரியவானுமான அந்த சுக்கிரீவன் தேவரீரால் அலட்சியம் செய்யத் தக்கவன் அல்லன். இப்பொழுது அவனது மனேரதமான காரியத்தை, செய்து முடிக்க நீங்கள் இருவருமே வல்லவர்கள். காரியம் கை கூடப் பெற்றவனுய் இருந்தாலும், கை கூடப்பெருதவனுய் இருந்தாலும், தேவரீருடைய காரியத்தைச் செய்து முடிப்பான்.

அவன் ரிக்ஷரஜஸ் என்ற வானரனுடைய புதல்வன். சூர்ய பகவானுடைய சிருஷ்டிப் புதல்வன். வாலியினுல் துவேஷிக்கப்பட்டு, சதா ஆபத்துக்கு அஞ்சியவனுய் பம்பா நதிக்கரையில் சஞ்சரித்து வருகிருன்.

இராமா! கால தாமதம் இன்றி ரிஸ்யமூக பர்வதத்தில் இருக்கும் வனவாசியான அவ்வானரனை ஆயுதத்தின் மீதும் ஆணையிட்டு நண்பனுகச் செய்து கொள்ளும். அந்த வானர உத்தமன் உலகில் நரமாமிசம் தின்பவர்களின் எல்லா இருப்பிடங்களையும், சாமர்த்தியத்தால் முற்றிலும் அறிந்திருக்கிருன். சத்துரு சம்ஹாரனே! இராமா! பல கிரணங்களை உடைய சூர்யபகவான் எது வரை ஒளி வீசுகிருனே, அது வரையில் உலகில் அவனுக்குத் தெரியாதது யாது ஒன்றும் இல்லை. அவன் நதிகளிலும், அடர்ந்த மலைகளிலும், மலைக் குகைகளிலும், பிலங்களிலும், வானரர்களோடு கூடி, தேடி உமது மனைவியைக் கண்டு பிடிப்பான்.

இராமா! அவன், உம்மைப் பிரிந்ததால் இடைவிடாது துன்புறும் அந்தச் சீதையைத் தேட, எல்லாத்

திக்குகளுக்கும் மகா புண்ணியாத்மாக்கள் ஆன வானரர் களை அனுப்புவான். அவன் இராவணனுடைய அரண்மனை யில், அந்த உத்தமியைக்கற்புக்குத் தோஷம் உண்டாகாத வளாய்க்கண்டு பிடிப்பான். வானரர்களுக்குள் உத்தமனான அவன், உமது மனைவியை, மேரு சிகரத்தின் உச்சியில் இருப் பவளாய் இருந்தாலும், பாதாளலோகத்தில் இருப்ப வளாய் இருந்தாலும், குற்றமற்றவள் ஆகிய அவளைக் கண்டு, அரக்கர்களைக் கொன்று மீளவும் கொண்டு வந்து கொடுப்பான்.''

### செல் நெறி செப்புவான்

இவ்வாறு கூறிய கபந்தன் 73ஆம் சர்க்கத்தில் ரிஸ்யமூக பர்வதத்திற்குச் செல்லும் வழியும் கூறுகிறான். அப்படிச் சொல்லும் பொழுதே, மதங்க மாமுனிவர் ஆஸ்ரமம் பற்றிச் சொல்லி, அந்த மதங்க முனிவர்க்கும் அவர் சிஷ்யர்களுக்கும் தொண்டு செய்து கொண்டிருந்த சபரி என்னும் ஒரு தவ மூதாட்டி இப்பொழுதும் அங்கே வசித்துக்கொண்டிருக்கிறாள், என்றும் எப்போதும் தர்மமே செய்யும் அத் தவ மூதாட்டி, கடவுளைப் போல எல்லா ராலும் வணங்கப்படும் இராமனைத் தரிசனம் செய்த பின் சுவர்க்கம் அடையப் போகிறாள் என்றும் கூறுகிறான்.

### கட்புலம் காண விட்புலம் மேவினான்

இப்படிச் சொல்லி முடித்த பிறகு, இராம இலக்ஷ் மணர்களிடம் விடை பெற்றுக் கொண்டு. தன் பழைய அழகைப் பெற்று, ஆகாயத்தில் நின்று கொண்டே இன்னும் ஒரு முறை விண்ணப்பம் செய்கிறவனாய் ''சுக்கிரீவனிடம் நட்புச் செய்து கொள்ளும்'' என்று சொல்லி விட்டு மறைந்து விடுகிறான்.

எழுபத்து நான்காம் சர்க்கம் சபரி சுவர்க்கம் சென்றது பற்றிக் கூறும். இந்த சர்க்கத்தில், இராம இலக்ஷ்மணர்கள் கபந்தனுல் காண்பிக்கப்பட்ட வழியைப் பின் பற்றிக் காட்டில் மேற்கு நோக்கிச் செல்கிருர்கள்; சபரியைக், காண்கிருர்கள். சபரியினுடைய பூசையையும், அவன் கொடுக்கும் கனி வகைகளையும் ஏற்றுக் கொள்கிருர்கள். பின்னர் சபரி மோட்சமடைகிருள்.

### பொய்கைக் கரையில்

அடுத்து எழுபத்தைந்தாம் சர்க்கத்தில், இராம இலக்ஷ்மணர்கள் சுக்கிரீவனைக் காண விரும்பி பம்பைக் கரையைச் சேர்கிருர்கள்.

அங்கு சேர்ந்த உடன், இராமன் அதனுடைய தோற்றத்தில், சீதையைப் பற்றிய நினைவினுல் வருந்திப் புலம்பி இலக்ஷ்மணனைப் பார்த்து,

"கபந்தன் சொன்ன ரிஸ்யமூக பர்வதம் அதோ நிற்கிறது. மகாத்மா ஆன ரிக்ஷரஜஸ் குமாரனுன சுக்கிரீவன் என்னும் புகழ் பெற்ற வானரத் தலைவனும், வீரனும் அங்கேதான் வசிக்கிருன். புருஷோத்தம! வானரோத்தமனுன அந்த சுக்கிரீவனிடம் நீ போய், வா" என்று சொல்கிருன்.

அப்படிச் சொல்லிய பிறகும்கூட, "இராஜ்யத்தை இழந்தும், சீதையை இழந்தும் பரிதவிக்கும் நான் என் உயிர் ஆன சீதை இன்றி எவ்வாறு உயிர் வாழ்வேன்" என்று புலம்புகிருன்.

இதனுடன் ஆரண்ய காண்டம் முடிவு பெறுகிறது.

### புதுவர் வரவால் கலங்கிய கவிக்குலம்

கிஷ்கிந்தா காண்ட முதல் சர்க்கம் இராமன் பம்பையைக் கண்டு, சீதையை நினைந்து புலம்புதலைக்

குறிக்கிறது. அதனேடு இந்த சர்க்கத்தில் மேலும் ரிஸ்யமூக பர்வதத்தைச் சமீபித்து வந்து கொண்டிருக்கிற இராம இலக்ஷ்மணர்களைக் கண்ட சுக்கிரீவன், திகைத்து நின்றதை யும், அவனும், அவன் உடன் இருந்த வானரர்களும் பயந்து தாங்கள் சுகமாக வாசம் செய்துவருகிற புகலிடமாகிய ரிஸ்யமூக பர்வத புண்யாஸ்ரமத்தில் புகுந்து கொண்டதையும் இச் சர்க்கம் குறிப்பிடும்.

இரண்டாம் சர்க்கம், இவ்விரு வீரர்களும், வாலியினுல் ஏவப்பட்டு, பொய்வேடம் பூண்டும், மரஉரி தரித்தும், யாரும் புகுதற்கரிய வனத்தைக் கடந்து வந்திருக்கின்றனர் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை என்று சுக்கிரீவன் கூறியதையும் குறிப்பிடும்.

**கோடற்குரிய நட்பினரோ? சென்று அறிதி**

அநுமானைப் பார்த்து "வாலி தன் காரியத்தை முடிப்பதில் மிகச் சமர்த்தன். அரசர்கள் பலவிதமான தந்திரங்களால், சத்துருக்களைக் கொலை செய்வார்கள். இவர்கள் எண்ணத்தை மாறுவேடம் பூண்ட ஒற்றர் களால் அறிய வேண்டும்" என்று கூறியதோடு அல்லாமல், "வானரனே,நீர் மாறு வேடம் (வேற்றுருவம்) கொண்டு சென்று அவர்களை இன்னர் என்று தெரிந்து, அவர்களுடைய முகக் குறி, தோற்றம், பேச்சுகளை நன்ருகக் கவனித்து, அவர்களுடைய காரியம் யாது என்று அறிவீராக.

அவர்கள் நம்மிடத்தில் நல்ல எண்ணம் உடையவர் கள் எனத் தெளிவீராகில், அவர்களை மிக ஜாக்கிரதை ஆகப் புகழ்ந்து பேசி, மகிழ்ச்சி உண்டாகும் வகையில் நடந்து கொள்வீராக. பிறகு உம்முடைய முகத்தை நான் காணும்படியாக வைத்துக்கொண்டு, அவர்கள் இங்கு

வில்லேந்தி வந்ததன் நோக்கத்தைக் கேட்டு அறிய வேண்டும். அவர்கள் எனக்கு விரோதம் ஆன எந்த விதமான தீய எண்ணமும் கொண்டவர் அல்லர் என்பதை நீர் நிச்சயப்படுத்திக் கொள்ள வேண்டும். அவர்களுடைய சொற்களாலும், அவர்களுடைய தோற்றத்தாலும், அவர்கள் நம்மிடம் நல்ல எண்ணம் கொண்டவர்களா, அல்லது நம்மிடம் விரோதம் பாவிப்பவர்களா, என்று உம்மால் தெரிந்து கொள்ள முடியும்'' என்கிறுன் சுக்கிரீவன்.

**நட்புறுதி**

இப்படிச் சுக்கிரீவன் ஆணையிட, அநுமான் இராம இலக்ஷ்மணர்கள் இருக்கும் இடம் போகப் புறப்படுகிறுன்.

மூன்ருவது சர்க்கம் இராம இலக்ஷ்மணர்களை அநுமான் சந்தித்து சுக்கிரீவனிடம் நட்புச் செய்து கொள்ளும்படி வேண்டிக் கொண்டதைப் பேசும்.

**சொல்லின் செல்வன் சொல்வன்**

அநுமான், சுக்கிரீவன் சொன்னபடியே பிரம்மச்சரிய வேடம் பூண்டு, இராம, இலக்ஷ்மணர் முன் சென்று அதிக விநயத்துடன் பணிந்து, விதிப்படி பூஜித்து, அவர்களைப் பார்த்து, வெகு அழகானவையும், அவர்கள் மனத்தைக் குளிரச் செய்யத் தக்கனவுமான வார்த்தைகளைப் பேசுகிறுன். அவர்களுடைய தோற்றத்தையும், காம்பீர்யத்தையும், வீரத்தையும், வெகுவாகப் புகழ்கிறுன். அப்படிப் புகழ்ந்து கொண்டிருக்கும் பொழுதே, "நான் இவ்வளவு பேசியும், நீங்கள் ஏன் என்னுடன் வார்த்தையாடாமல் இருக்கிறீர்கள்" என்று கேட்டு விட்டு, மகா வல்லமைசாலியும், தர்மாத்மாவாகவும் விளங்குகின்ற சுக்கிரீவன் என்ற பேருடைய வானராதிபன் ஒருவன், தன் தமையனுல் துரத்

தப்பட்டு, அலைந்து திரிந்து கொண்டிருக்கிறுன் என்பதை யும், தான் அந்த மகாத்மாவினுல் அனுப்பப்பட்டு அங்கு வந்ததையும், தன் பெயர் அநுமான் என்றும், தான் அவனுடைய மந்திரி என்றும், ஜாதியில் வானரன் என்றும், வாயு குமாரன் என்றும், நினைத்த உருவம் எடுக்க வல்லவன் ஆதலால் பிரம்மச்சரிய வேடம் தரித்து, சுக்கிரீவனுக்கு இதத்தைச் செய்யும் பொருட்டு, ரிஸ்ய மூக பர்வதத்தை விட்டு அங்கு வந்ததாகவும், சுக்கிரீவன் இராமன் நட்பை விரும்புவதாகவும் கூறுகிறுன்.

அநுமானுடைய பேச்சைக் கேட்ட பிறகு, இராமன் இலக்ஷ்மணன் உடன் அநுமானைப் புகழ்ந்து பாராட்டிப் பேசி, "இவரிடத்திலிருந்து வரும் இனிய வசனத்தைக் கேட்டால், கத்தியை ஓங்கிக் கொண்டு வரும் சத்துருக் களும் இரங்குவார் அன்றே? இவ்விதமான தூதன் இல்லா அரசனுக்கு என்ன காரியம் நிறைவேறும்? இவ்வகைக் குணங்களோடு விளங்கும் தூதர் இருப்பின் அவர் களுடைய சொற்களால் அரசர்களுடைய சர்வ காரியங் களும் சித்தி அடையும் அன்றே?" என்கிறுன்.

**யாம் அறிகுவம் அவன் நல்லியல்புகளை**

அதன் மேல்,இலக்ஷ்மணன் அநுமானிடத்து, "மகாத் மாவாகிய சுக்கிரீவனது கல்யாண குணங்களை நன்றுக அறிந்திருக்கின்றேம். அவரையே நாங்கள் இருவரும் தேடிக்கொண்டு வந்திருக்கிறேம். இப்பொழுது அவரு டைய உத்தரவுப்படி நீர் எப்படிச்செய்யச் சொல்கிறீரோ அதன்படியே செய்வோம்" என்கிறுன்.

இலக்ஷ்மணனுடைய இச் சொற்களைக் கேட்ட அநுமான்,மிக்க மகிழ்ச்சி அடைகிறுன்.காரியம் கை கூடும் விஷயத்தில்—அதாவது வாலியை வெல்வது—உறுதி

கொண்டவனாக இராம, சுக்கிரீவரிடையே நட்பு ஒப்பந்தத்தைச் செய்து வைப்பதில் முனைகிறான்.

மேலும் இலக்ஷ்மணனது இந்தப் பேச்சிலிருந்து 'இராமன் ஏதோ ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடன்தான் வந்திருக்கிறான்; எனவே சுக்கிரீவன் வெகு விரைவிலேயே ராஜ்ஜியத்தைப் பெறுவது நிச்சயம்' என்று மனத்தில் நிதானித்துக்கொண்டு, மேலும் அவன் (அநுமான்) பேசத் தொடங்கினான்.

இவற்றை நான்காம் சர்க்கம் எடுத்துக் கூறும்.

**வந்த காரணம் வரன்முறை கூறுவான்**

அப்படிப் பேசும் பொழுது 'இந்த பயங்கரமான காட்டுக்கு நீங்கள் வந்த காரணம் என்ன?' என்று கேட்கிறான். அக் கேள்விக்குப் பதிலாக, இராமன் உத்திரவின் படி இலக்ஷ்மணன் பதில் சொல்கிறான்.

தாங்கள் யாவர் என்றும், வனத்துக்கு எப்படி வந்தனர் என்பதையும் சொல்லி, வனத்தில், வந்த இடத்தில், இராமன் மனைவி சீதையை, அரக்கன் உரு மாறி வந்து, அவளை அபகரித்துச் சென்றுவிட்டான் என்றும், அந்த அரக்கன் இன்னான் என்று தங்களுக்குத் தெரியவில்லை என்றும், அவளைத் தேடி தாம் திரிந்து கொண்டிருக்கும் பொழுது, திதியின் குமாரனாகிய தனு என்பவன் சாபத்தால் குரூரத் தன்மை அடைந்திருந்தான் என்றும், அவன் 'சுக்கிரீவன் என்னும் ஒரு வானரத் தலைவன் இருக்கிறான், அவன் இராமனுடைய மனைவியைக் கவர்ந்து சென்றவனை அறிவான்' என்றும் சொன்னான் என்றும், சொல்லி இராமனும் தானும் சுக்கிரீவனைச் சரண் அடைந்ததாகவும் சொல்கிறான்.

### அநுமான் தம் நிலை தெரிவித்தல் உற்றுன்

இவ்வாறு நீர் ததும்பும் விழிகளோடு, இலக்ஷ்மணன் கூறி முடித்த பிறகு, அநுமான் அவனைப் பார்த்து, "இத்தகைய சாமர்த்தியம் உடைய நீங்கள். சுக்கிரீவனைத் தேடி வந்திருப்பது அவனுடைய அதிருஷ்டமே ஆகும். அவனும், தமையனுன வாலியால் ராஜ்ஜியத்தை விட்டுத் துரத்தப்பட்டதால், வாலியுடன்பகைமை கொண்டு இருக்கிறுன். அவனுடைய மனைவியை வாலி அபகரித்துக் கொண்டு, அவனை அல்லல் செய்து வருவதால், அவன் பயந்து வனத்தில் வசிக்கிறுன். அந்த சூரிய புத்திரன் ஆன சுக்கிரீவன், சீதா தேவியைத் தேடிக்கண்டு பிடிக்கும் விஷயத்தில், உங்கள் இருவருக்கும் வேண்டிய உதவியைச் செய்வார்" என்பான்.

இவ்வாறு சொல்லிவிட்டு, "நாம் சுக்கிரீவனைக்காணச் செல்வோம்"என மரியாதையுடன் அனுமான் பேசுகிறுன்.

அநுமானுடைய வார்த்தைகளுக்குப் பொருத்தமான மதிப்பளித்த இலக்ஷ்மணன், இராமனைப் பார்த்து, அநுமானுடைய பேச்சிலிருந்து சுக்கிரீவனுக்கும் தம்முடைய உதவி தேவைப்படுவதாகத் தெரிகிறது என்றும், ஆகவே இராமன் தன்னுடைய காரியம் நிறைவேறி விட்டது என்று வைத்துக் கொள்ளலாம் என்றும் சொல்கிறுன்.

இதற்குப் பிறகு, அநுமான் தான் வந்த காரியம் கை கூடியதாக மகிழ்ந்து,இராம இலக்ஷ்மணர்களை அழைத்துக் கொண்டு சுக்கிரீவனிடம் செல்கிறுன்.

### இருவரும் கொண்ட நட்புறுதி

சுக்கிரீவனைச் சேர்ந்த உடன், அநுமான் இராம, இலக்ஷ்மணர்களுடைய வரலாற்றையும், பெருமையையும்

சொல்லி, வந்த இடத்தில் இராமன் மனைவியை இராவணன் அபகரித்துச் சென்ருன் என்றும், ஆதலின் அவர்கள் சுக்கிரீவனைச் சரண் அடைந்திருக்கிருர்கள் என்றும் சொல்கிருன். அநுமான் இவ்வாறு சொல்லியதைக்கேட்ட சுக்கிரீவன், அழகிய மானுட உருவம் தரித்து, இராமனைப் பிரீதியுடன் பார்த்து "நீர் வானரனை என்னுடன் நட்புக் கொள்ள விரும்புவது எனக்கு மிக்க மேன்மையும், பெரிய லாபமும் ஆகின்றது. என்னுடைய சிநேகம் உமக்கு வேண்டுமாகில் இதோ நான் நீட்டிய என் கையை உம்முடைய கையால் பற்றிச் செய்ய வேண்டிய உறுதியைச் செய்து கொள்ளும்" என்று சொல்கிருன்.

இராமனும், அவ்வாறே அவன் கையைப் பற்றியதோடல்லாமல், அவனை மகிழ்ச்சியுடன் தழுவிக் கொள்ளவும் செய்கிருன். அந்த வேளையில் அநுமான் பிரம்மச்சரிய வேடம் விட்டுத் தன் ஸ்வய ரூபம் கொண்டு, இரண்டு கட்டைகளில் தீயை உண்டு பண்ணுகிருன்.

அப்பொழுது மலர்களால் அதனை அர்ச்சித்து அவர்கள் இருவர்க்கும் இடையில் வைக்கிருன். இராம, சுக்கிரீவர்கள் அத் தீயை வலம் வந்து சிநேக உறுதி செய்து கொள்கிருர்கள்.

அப்பொழுது சுக்கிரீவன், இராமனைப் பார்த்து "ஐயா! நீர் என் மனத்துக்கு இயைந்த நண்பர். சுகமும் துக்கமும் நமக்குப் பொதுவாயின" என்று கூறுகிருன்.

### வாலி ஆம் பகைவன்

பின் சுக்கிரீவன் இராமனைப் பார்த்து "நான் என் தேசத்தையும், மனைவியையும், இழந்து மிக்க பயம்

அடைந்து என் சத்துருக்கள் அணுக முடியாத இம்மலையை அடைந்து பிழைத்திருக்கிறேன். என் தமையன் ஆன வாலியால் பகைக்கப்பட்டு, அவன்மீது கொண்ட பயத்தால் மதி கலங்கி, இங்கு வசித்துக் கொண்டிருக்கிறேன். வாலியை நினைந்து பயம் கொண்டு திரியும் என்னை நீர் அபயப் பிரதானம் செய்து காத்தருள வேண்டும். நான் இனி அஞ்சாதவண்ணம் செய்வது உம் கடமை" என்கிறான்.

இதனைக் கேட்ட இராமன் புன்முறுவல் கொண்டு, அவனை நோக்கி "வானர சிரேஷ்டனே! நட்பு என்பது உபகாரத்தைத்தான் பிரயோஜனமாக உடையது என்பது எனக்குத் தெரிந்த விஷயம். உம்து மனைவியை அபகரித்த அந்த வாலியை இப்பொழுதேவதைக்கிறேன்" என்று கூறித் தன்னுடைய பாணங்களுடைய சக்தியை எடுத்துக் குறிப்பிட்டு, "கூரிய நுனியை உடையவைகளும், நேரான கணுக்கள் உள்ளவையும் ஆன இப்பாணங்கள் சீறிவரும் பாம்புகள் போலவே, சுறுசுறுப்பு உடையவை களாய், அந்தக் கொடிய வாலியின் மேல் விழப்போகின்றன. கொடிய சர்ப்பங்களை நிகர்த்த பாணங்களால் அந்த வாலியைப் பூமியில் சிதறி விழுந்த மலையைப் போலவே மடிந்து முறிந்து விழுந்து கிடப்பவனாய் இப்பொழுதே நீர் பார்ப்பீர்" என்றும் கூறுகிறான்.

இந்த, தன் மனத்துக்கு மகிழ்ச்சி தரக் கூடிய இராமன் கூற்றைக் கேட்ட சுக்கிரீவன், மிக்க களிப்புற்று "புருஷோத்தம! அரசே! இராமா! தேவரீரது பேரருளால், மனைவியையும் இராஜ்யத்தையும் நான் அடைய வேண்டும். எனக்குச் சத்துருவாய்த் தீங்கு செய்யும் தமையனை இப்பொழுதே எவ்விதமாய்க் கொல்வீரோ அங்ஙனமே செய்தருள வேண்டும்" என்று கோருகிறான்.

### சுக்கிரீவன் கூறிய உறுதி

பின்னர் சுக்கிரீவன், அரக்கனுல் அபகரித்துச்செல்லப் பட்ட சீதையை மீட்டுத் தருவதாக இராமனுக்கு உறுதி கூறுகிருன். அதுவன்றியும் "முழுகிப் போன வேதங்களை மீட்டுக் கொண்டு வந்தது போல் அப்பெண்மணியை நான் மீட்டுக் கொண்டு வந்து விடுகிறேன். பாதாளத்தில் இருப்பினும், ஆகாயத்தில் இருப்பினும், எப்படியாவது நான் அவளைக் கொணர்ந்து உமக்குச் சமர்ப்பிக்கின்றேன். நான் சொல்வதை உண்மை என்று நம்பும்" என்றும் கூறி, இராமனுக்குத் தேறுதல் கூறுகிருன்.

பிறகுதான், இராவணன் சீதையைத் தூக்கிச் சென்ற போது அவள் எறிந்து விட்டுப் போன கலன்களைத் தான் பத்திரம் ஆக வைத்திருந்ததை இராமன் முன் கொண்டு வந்து காட்டுகிருன். அவற்றைக் கண்ட இராமன் மிக்க துக்கத்திற்கு ஆளாகி, கோபத்தோடு பேசுகிருன்.

அவனைத் தேற்றத் தொடங்கிய சுக்கிரீவன், "மகா பாவியான அந்த ராக்ஷஸன் இருப்பிடம், சாமர்த்தியம் பராக்கிரமம், குலம் முதலியவற்றில் ஒன்றையும் நான் அறியேன். ஆயினும், மைதிலியை நீங்கள் அடையும் படியான பிரயத்தனம் செய்கிறேன்; இது சத்தியம். ஆணை யிட்டுச் சொல்கிருறேன். நீங்கள் உங்களுடைய சோகத்தை விட்டுவிடுங்கள். உங்களுடை பெரிய பராக் கிரமத்தைக் காண்பித்து, இராவணனை அவன் கூட்டத் தாரோடு சம்ஹரித்து மகிழ்சியுறுமாறு, நான் தாமத மின்றிச் செய்யக் காத்திருக்கிறேன். இதுகாறும் மனம் கலங்கியது போதும். இனி தைரியத்தை மேற்கொள்ளல் வேண்டும். நானும் எனது மனைவியை ஒருவன் கவர்ந்து கொண்டதால் உண்டான பெரிய துக்கத்தை அடைந் திருக்கிறேன். ஆயினும் இவ்விதமாய் ஒரு பொழுதும்

துக்கப்படவும் இல்லை; தைரியத்தை இழக்கவும் இல்லை. நான் ஓர் அற்ப வானரனே ஆயினும், என் மனைவியை நினைத்து, இவ்வாறு துக்கித்தது இல்லை. அப்படி இருக்க மகாத்மாவாயும், பரம சாந்த மூர்த்தியாயும், தீர புருஷனுயும் விளங்கும் நீங்கள் இவ்வாறு மனச்சோர்வு அடையலாகுமா?" எனப் பலபடப் பேசுகிறுன்.

### தேற்றத் தேறினுன்

சுக்கிரீவன் வார்த்தையினுல் ஓரளவு இயற்கை நிலைமை அடைந்த இராமன், சுக்கிரீவனைத் தழுவிக் கொண்டு "இவ்விதமான நண்பன், இத் துக்க காலத்தில் கிடைப்பது மிகவும் அரிது. இனி நீர் மைதிலியைக் கண்டு பிடிக்கவும், துஷ்டனும், கொடியவனுமான அரக்கன் ஆகிய இராவணனை வதைக்கவும் முயற்சி செய்ய வேண்டும். அன்றியும் நான் உமக்காகச் செய்ய வேண்டிய காரியம் இன்னதெனத் தெளிவாகச் சொல்ல வேண்டும். மாரிக் காலத்தில் நல்ல வளப்பமுள்ள நிலத்தில் விதைத்த விதை போல உம்முடைய எண்ணம் எல்லாம் முடிவு பெறும்.வானரோத்தம! நான் நட்பினுல் சொன்ன வார்த்தைகள் எல்லாம் உண்மையே என்று நீர் நிசமாய் நம்பும். நான் முன் ஒரு போதும் பொய் உரைத்ததில்லை.இனி ஒரு போதும் பொய் உரைப்பதும் இல்லை. நான் உமது விருப்பத்தை முடித்து வைக்கிறேன் என்று சத்தியமாய் வாக்குத் தத்தம் செய்கிறேன்" என்கிறுன்.

இராமனது, இக் கூற்றைக் கேட்ட சுக்கிரீவன் தன்னுடைய காரியம் முடிந்ததாகவே எண்ணிக் கொள்கிறுன். அந்த எண்ணத்துடன் தன் வரலாற்றை இராமனுக்குச் சொல்கிறுன்.

**காத்தல் கடன்**

தான் தன் தமையனால் இடுக்கண் எய்தி, மனைவியை இழந்து, துக்கமும், அச்சமும் கொண்டுள்ளதாகவும், தன்னைக் காப்பது இராமனது கடன் எனவும் திரும்பத் திரும்பச் சொல்கிறான்.

இராமனும், சுக்கிரீவனை நோக்கி "உபகாரம் இயற்றுதல் நட்புக்கு லக்ஷணம்; தீங்கிழைத்தல் பகைவர் செயல். ஆதலால் உமது மனைவியை அபகரித்தவனை இன்றே சங்கரித்து விடுகிறேன்" என்று கூறுகிறான்.

தன் வரலாற்றைச் சொல்லி வந்த சுக்கிரீவன், "வலிமையால் புகழ் பெற்ற என் தமையன் வாலி எனக்குச் சத்துரு; அவன் செத்தால்தான் என் துக்கம் நீங்கும். என்னுடைய உயிரும் சுகமும் அவன் இறந்தால்தான் நிலைக்கும். நான் என் துக்க நிவாரணத்துக்கு வழி சொல்லிவிட்டேன். சுகத்திலும், துக்கத்திலும் ஒருவனுக்கு நண்பன்தான் கதி" என்று கூறுகிறான்.

இதனைக் கேட்ட இராமன் வாலிக்கும், சுக்கிரீவனுக்கும் பகை நேர்ந்ததன் காரணத்தை வினவுகிறான். மாயாவிக்கும், வாலிக்கும் நடந்த சண்டையின் வரலாற்றையும், பின் நடந்ததையும் சுக்கிரீவன் இராமனிடம் எடுத்துக்கூறி ரிஸ்யமூக பர்வதத்தில் தான் வாலிக்குப் பயந்து கொண்டு வசிப்பதையும் சொல்லி வாலியினிடத்தில் பயந்து நடுங்கும் தனக்கு அபயம் தந்தருள வேண்டும் என்றும் வேண்டுகிறான்.

இராமன் "இலக்குத் தவறாதனவும், நன்றாகத்தீட்டப் பெற்று சூரியனைப் போல் விளங்குவனவுமாகிய எனது பாணங்கள் உம்முடைய மனைவியை அபகரித்துக் கொண்ட அந்தக் கொடிய பாவியான வாலியின் மேல்

பாயப் போகின்றன. என் கண் முன் எதிர்ப்படும் வரையில்தான் அவன் உயிரோடு இருப்பான். நீர் துயர்க் கடலில் ஆழ்ந்திருக்கிறீர் என்பதை என்னுடைய சொந்த அநுபவத்தால் உணர்கின்றேன்.

நான் உம்மைக் கஷ்டத்திலிருந்து விடுவிக்கின்றேன். நீர் விரும்புவனவற்றை அடைவீர்'' என்று கூறுகிமுன்.

துந்துபி என்புக் குவை

இதற்குப்பின் வாலியினுடைய வல்லமையையும் வீரத்தையும், துந்துபியுடன் அவன் போர் செய்து வென்றதையும்,விரிவாக கூறிவிட்டு, ''இதோ காணப்படுகின்றதே இதுதான் துந்துபியின் எலும்பு. பர்வதம் போன்ற அவனது சரீரத்தை வாலி தன்னுடைய வலியின் செருக்கால் சுழற்றி எறிந்தான். இதோ நிற்கும் ஏழு ஆச்சா மரங்களேயும் வாலி தன் பலத்தால் ஒரே சமயத்தில் ஒரே காலத்தில்,ஓர் இலேயேனும் இல்லாது போகுமாறு செய்ய வல்லன். வாலியின் பராக்கிரமம் இவ்வகைத்து. ஐயா! அத்தகைய வாலியை நீர் எவ்வாறு போரில் கொல்வீர்?'' என்று சுக்கிரீவன் வினவுகிமுன்.

இதைக் கேட்ட இலக்ஷ்மணன் புன்னகை செய்து, ''ஐயா! எந்தக் காரியம் செய்தால், இராமர் வாலியை வதம் செய்ய வல்லவர் என்று கொள்வீர்?'' என்று கேட்கிமுன்.

சுக்கிரீவன் வாலி அந்த ஏழு ஆச்சா மரங்களேயும் முன்னர் ஏக காலத்தில் துளேத்திருப்பதையும், தனித்தனியாகத் துளேத்திருப்பதனேயும், எடுத்துக்கூறி இராமர், அம் மரங்களில் ஒன்றை ஒரு பாணத்தால் பிளந்து எறிவார் ஆயின், வாலியால் கொல்லப்பட்ட அசுரனுடைய இவ் வெலும்பை அவர் தமது ஒற்றைக் காலால் எற்றி இரு நூறு

விற்கிடை தூரம் எறிவார் ஆயின், வாலி மாண்டதாக எண்ணுவதாகக் கூறுகிறான்.

இப்படிச் சொல்லி விட்டு, வாலியினுடைய வீரத்தை மேலும் பலபட எடுத்துக் கூறுகிறான்.

சுக்கிரீவன் இவ்வாறு சொன்ன பிறகு, இராமன் "என்னுடைய பராக்கிரமத்தில் உமக்குச் சந்தேகம் இருக்குமானால் அதனை இப்போதே தீர்த்து விடுகிறேன்" என்று சொல்லி துந்துபியின் தசைக் கழி முழு எலும்பை தனது கால்பெருவிரலால் விளையாட்டுப் போல, பத்து யோசனைக்கு அப்பால் எற்றி விடுகிறான்.

### மராமரம் ஏழ் தொளை தொட்டான்

அப்படியும் சுக்கிரீவன் ஐயம் தீரவில்லை. அதற்குக் காரணம் வாலி எறிந்தபோது, துந்துபியின் உடல் சதைப் பற்றுடன் ஈரமாக இருந்தது; இப்போது அது தசை கழிந்து, புல்லைப் போல லேசாக இருக்கிறது; அதுவன்றியும் வாலி அதனைத் தூக்கி எறிந்தபோது அவன் யுத்தம் செய்து களைத்தும், கள் உண்டு மயங்கியும் இருந் தான்; இராமனோ இப்போது நல்ல அறிவுடன் இருக் கிறான்; ஆகையால், இராமன் இப்போது அவ் வெலும்புக் கூட்டைத் தூக்கி எறிந்ததில் இருந்து, வாலி இராமன் இருவர்க்கும் இடையே பலவான் யார் என்று அறியக் கூடவில்லை; தன்னுடைய ஐயம் இன்னும் நீங்கவில்லை, என்று சொல்லி அங்கிருந்த ஆச்சா மரங்களில் ஒன்றை இராமன் துளைத்தால் இராமனது பலம் எவ்வளவு எனத் தான் அறிந்து கொள்வதாகவும் சொல்கிறான். பின்னர் இராமன் ஒரே பாணத்தால் ஏழு ஆச்சா மரங் களையும் துளைக்க சுக்கிரீவன்மகிழ்ச்சி அடைந்து இராமனைப் பெரிதும் பாராட்டி, "என் நன்மை கருதி என்

தமையனே இன்றே சங்கரித்து அருள வேண்டும் என நான் கை கூப்பிவேண்டுகிறேன்'' என்கிருன்.

இராமன் மகிழ்ச்சி அடைந்து, சுக்கிரீவனேக் கட்டித் தழுவி, இலக்ஷ்மணன் சம்மதிக்க, அவனே நோக்கி ''நாம் சீக்கிரம் கிஷ்கிந்தைக்குப் போவோம். நீ முன் போய் உன் கொடிய சகோதரனே சண்டைக்கு அழை'' என்கிருன்.

பின்பு எல்லோரும் கிஷ்கிந்தைக்கு வேகமாய்ச் சென்று] காட்டின்கண் உள்ள அடர்ந்த மரங்களுக்கு இடையே மறைந்து நிற்கிருர்கள்.

போர்க்குரல்

அப்போது சுக்கிரீவன் தனது ஆடையை இறுக்கிக் கட்டிக் கொண்டு, அண்ட முகடு கிழிந்து போவதுபோல் வாலியைப் போருக்கு அழைத்து, பயங்கரமாகக் கூச்சலிடு கிருன். இக் கூச்சலேக் கேட்ட வாலி பெருங்கோபமடைந்து நகரத்தை விட்டு வெளியே வருகிருன். இருவரும் பயங்கரமாகப் போர் புரிகிருர்கள்.

கணே தொடகில்லான்

வில்லும் கையுமாக இருந்த இராமன் அவர்கள் (வாலி சுக்கிரீவர்) இருவரும் உருவத்தில் பேதமின்றி, அஸ்வனி தேவர்களேப்போலக் காணப்படுவதை நினேத்துப் பார்க் கிருன். அதன் காரணம் ஆக, அவர்களில் வாலி யார் என்று தெரிந்து கொள்ள முடியாமல் தனது பாணத்தைப் பிரயோகிக்காமல் இருக்கிருன்.

ஓட்டந்தான்

இதற்கிடையில் சுக்கிரீவன் வாலிக்குத் தோற்று, இராமனேக் காணுது ரிஸ்யமுக பர்வதத்தை நோக்கி

ஓடுகிருன்.அடிபட்டுக் களைத்து, தேகம் முழுவதும் இரத்தம் தோய்ந்து, ஓடிப் போகும் சுக்கிரீவனை வாலி துரத்திக் கொண்டு சென்று, அவன் மதங்க வனத்தில் புகுந்து கண்டு தனக்கு நேர்ந்த சாபத்தின் பயத்தால், அங்கு செல்லாதவனுகி, "இன்று நீ தப்பினுய்" என்று சொல்லி நகர்க்குத் திரும்புகிருன்.

### நன்று செய்தனை

அப்போது இராமன் இலக்ஷ்மணனுடனும் அநுமானுடனும், சுக்கிரீவன் இருந்த காட்டுக்குத் திரும்பிச் செல்கிருன். அவர்களைக் கண்ட சுக்கிரீவன் வெட்கமடைந்து, தரையைப் பார்த்துக்கொண்டு, பரிதாபமாக "இராகவா! வாலியைச் சண்டைக்கு அழை என்று என்னை ஏவி, உம் பராக்கிரமத்தை எனக்குக் காட்டி, என்னைச் சத்துருவினுல் அடியுண்ணப் பண்ணி, செய்யாத காரியம் செய்தீர். 'நான் வாலியைக் கொல்லமாட்டேன்' என்று நீர் அப்போதே சொல்லியிருந்தால் நான் அங்கே போயிருக்கமாட்டேனே" என்கிருன்.

### மாலை இது அணிந்து மலைதல் மேவுக

இவ்வாறு சுக்கிரீவன் பரிதாபமாகச் சொன்னதைக் கேட்ட இராமன், சுக்கிரீவனிடம், அவர்கள் இருவருக்கிடையில் தன்னுல் எந்தவிதமான வேற்றுமையையும் காண முடியவில்லை என்றும், சுக்கிரீவன் எல்லாவற்றுலும் வாலியை ஒத்திருந்தமையால், எங்கே தனது பாணம் சுக்கிரீவன்மேல் பாய்ந்து விடுமோ என்று பயந்ததாகவும், தன் செயலால் சுக்கிரீவனுக்கு ஏதாவது அபாயம் நேரிட்டால் அது தனது அறிவீனத்தையும், சிறுபிள்ளைத்தனத்தையும் உலகெங்கும்பறைசாற்றும்என்றும், தஞ்சம் அடைந்தோரைக் கொல்வது மகாபாதகம்

என்றும், தானும், இலக்குவனும், சீதையும், அந்தக் காட்டில் சுக்கிரீவன் சொல்லின் கீழ் உள்ளதாகவும், அவனே அவர்களுக்குப் புகலிடம் என்றும் கூறி, ''நீர் போய் மறுபடியும் யுத்தம் செய்யும். பயப்படவேண்டா. இக் கணமே வாலி எனது பாணம் பாய்ந்து பூமியில் விழுந்து உருளுவதைப் பாரும். போர் புரியும்பொழுது உம்மை நான் தெரிந்து கொள்ளும்படி நீர் உம்முடைய உடலில் ஓர் அடையாளத்தைத் தரித்துக் கொள்ளும். இலக்ஷ்மண! 'இந்த நாக புஷ்பக் கொடியைப் பிடுங்கி மகாத்மாவாகிய சுக்கிரீவன் கழுத்தில் போடு''' என்கிருன். உடனே இலக்ஷ்மணன் அப்படியே செய்ய, தன் மனம் தேறிய சுக்கிரீவன் முகமலர்ச்சி அடைந்து கிஷ்கிந்தைக்குப் போகிருன்.

அதன் மேல் அவர்கள் கிஷ்கிந்தை நோக்கிச் செல்கிருர்கள். ஓர் அடர்ந்த காட்டில் மரங்களின் பின் மறைந்து நிற்கிருர்கள்.

சுக்கிரீவன் முன்போல் கர்ஜித்துக் கொண்டு வாலியைச் சண்டைக்கு அழைக்கிருன். அந்த நிலையிலும் இராமன், வாலி அன்றைய தினமே தன் பாணம் பட்டு மடிவது திண்ணம் என்று உறுதி கூறுகிருன்.

சுக்கிரீவனுடைய கூவலைக் கேட்டு வாலி தன் அந்தப்புரத்திலிருந்து புறப்பட்டு வருகிருன்.

**தகையாளனைத் தகைத்த தாரை**

அப்பொழுது தாரை, பெரிதும் பயந்து, முக வாட்டம் உற்று, வாலியைத் தழுவிக் கொண்டு, அவன் போருக்குச் செல்வதைத் தடுத்துப் பின் வருமாறு கூறலானுள்:

"உம்முடைய கோபத்தை விட்டு விடும். சுக்கிரீவனுடன் நீர் நாளைக்குப் போர் செய்யலாம். உமது பகைவன் அற்பனுய் இருத்தலின், உமக்கு ஒரு குறையும் வராது. நீர் இவ்வாறு அவசரப்பட்டு வெளியில் செல்லுதல் எனக்குப் பிடிக்கவில்லை. நான் ஏன் உம்மைத் தடுக்கின்றேன் என்பதைக் கேளும். சுக்கிரீவன் வெகுண்டு உம்மைச் சண்டைக்கு அழைத்து, உம்மால் அடிபட்டுத் தோற்று ஓடியவன். அத்தகையவன் மீண்டும் வந்து உம்மைப் போருக்கு அழைப்பதைப் பார்த்தால், எனக்குக் குழப்பமும், சந்தேகமும் உண்டாகின்றன. அவனுடைய செருக்கும், உற்சாகமும், அவனிடும் வெறும் பூசலும் அசட்டை செய்யக் கூடியவை அல்ல என்பது திண்ணம். அவன் துணையாருமின்றி வந்திருப்பதாக நான் எண்ணவில்லை. அவன் உண்மையில் பேருதவி பெற்று வந்திருப்பதாகவே கருதுகிறேன். அதனுல்தான் அவன் இவ்வண்ணம் பெருங் கூச்சல் இடுகிருன். இயற்கையாகவே அவன் வெகு புத்திமான்; காரியத்தில் நிபுணன். அவன் ஒருவன் வன்மையைப் பரீட்சித்துப் பார்க்காமல், தனக்குத் துணையாகக் கொள்ளமாட்டான். தலைவ! நமது குமாரன் அங்கதன் சொல்ல நான் இன்று கேள்விப் பட்டதைக் கேளும். அவன் காட்டில் திரிந்தபோது தன்னுடைய சாரணர்களால் (ஒற்றர்) சுக்கிரீவனைப்பற்றி அறிந்த விஷயத்தை என்னிடம் சொன்னுன். அதாவது:

அயோத்திமா நகரத்து மன்னன் புதல்வர் இருவர் இராமர், இலக்ஷ்மணர் என்னும் பேருடையவர்கள்; மகா சூரர்கள்; போரில் வெல்லற்கரியவர்கள்; காட்டில் வந்திருக்கிருர்கள்; அவர்கள் சுக்கிரீவனுக்கு நன்மை செய்யவேண்டி இவ்விடம் வந்திருக்கிருர்கள். உம்முடை சகோதரன் சுக்கிரீவனுக்கு யுத்தத்தில் துணை இராமர். அவர் ஊழித் தீயை ஒத்தவர்; புகைவரை அழிப்பவர்; சாதுக்களுக்குச்

சரணமாய் உள்ளவர்; இடர் உற்றவர்களுக்குப் புகலிடமானவர்; பகைவரால் நலிந்தோரைப் பரிந்து காப்பவர்; புகழுக்கு இருப்பிடமானவர்; நல் ஞானமும் நற்புத்தியும் உள்ளவர்; தந்தை சொற்படி நடப்பவர்; பலவித தாதுக்களுக்கு இருப்பிடமான ஹிமவான் போல, குணங்களுக்கெல்லாம் இருக்கை ஆனவர். இத்துணைப் பெரிய ஆற்றல் உடைய இராமனோடு நீர் முரணுவது யுக்தம் அன்று. சூரனே! இன்னும் ஒன்று யான் சொல்வது உளது. என்னிடத்தில் சினம் கொள்ளாது, அதனைக் கேளும். இக்கணமே சுக்கிரீவனை அழைத்து இளவரசு ஆக்கும். நீர் உமது தம்பியை வெறுக்காதேயும். இராமனிடம் சிநேகிதம் செய்து சுக்கிரீவனிடம் உள்ள பகையை ஒழித்து அவனுடைய அன்பை மீட்டும் பெறுவது, உமக்கு நன்மை என்று எண்ணுகின்றேன். உம்முடைய தம்பியாகிய சுக்கிரீவனோடு நீர் வாத்சல்யத்தோடு இருப்பது நல்லது என்று எண்ணுகிறேன். அருகில் இருப்பினும், தூரத்தில் இருப்பினும் அவன் உம்முடைய பந்து அல்லவா?

இவ்வுலகில் அவனைப் போன்ற பந்து உமக்கு வேறு எவரும் இருப்பதாக நான் காணவில்லை.

ஆகையால் அவனை ரட்சித்தல், கௌரவித்தல், முதலிய அநுசரணைகளால் அவனை உம்முடன் மீளச் சேர்த்துக் கொள்ளும். அவனோடு பகை பாராட்டாது உமது பக்கத்தில் இருத்தி வையும். சுக்கிரீவன் உமக்கு உற்ற துணைவன். அவனுடைய அன்பைப் பெறுவதனினும் உமக்குச் செய்யத் தக்கது வேறு உளது என்று நான் எண்ணவில்லை. உம்முடைய நன்மையைக் கருதுகிறவள் என்று, என்னுடைய எண்ணத்தின்படி நடக்க உமக்கு இஷ்டமானல், நான் வேண்டிக் கொள்வதை, பெரிய மனது பண்ணி ஏற்றுக் கொள்ளும். நான் கூறும் நற்புத்தி

களைக் கேளும். கோபத்திற்கு இடம் கொடுக்க வேண்டா. இந்திரனுக்கு ஒப்பான வலிமை உடைய உமக்கு கோசலைக் கோமானேடு போரிடுதல் யுக்தம் அன்று. இது திண்ணம்.''

பிழைத்தனே, பேதாய்

இப்படிக் கூறிய தாரையை வாலி கடிந்து கொண்டு, ''ஆரணங்கே என் தம்பியும் சத்துருவும் ஆன சுக்கிரீவன் இவ்வாறு உறுமி கர்ஜிக்க, நான் அதனைக் கேட்டும் எப்படிப் பொறுத்திருப்பேன்? பயந்தவளே! போர் முகத்தில் புறமுதுகு காட்டாதவர்களும், தோல்வி அடையாதவர்களும் ஆன வீரர்கள், இவ்வித அவமரியா தையைச் சகிப்பதனினும் உயிரையே விட்டு விடுவார்கள். போரைக் கோரி கர்ஜிக்கும் சுக்கிரீவனுடைய ஆர்ப்பரிப் பைக் கேட்டும் நான் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டேன்.

இராமரால் எனக்குக் கெடுதி நேரும் என்று, நீ பயப் பட வேண்டா. தர்மம் உணர்ந்தவரும், நன்றி அறிந்த வருமான இராமர் எங்ஙனம் தீமை செய்வார்? நீ ஏன் என்னை இன்னும் தொடர்ந்து வருகிருய்? மற்ற பெண் களோடு திரும்பிச் செல். என்னிடத்தில் அன்பும், பக்தியும் உள்ளவள் என்பதை நீ முன்னரே காட்டி விட்டாய்.

நான் அங்கு சென்று, சுக்கிரீவனுடன் போர் செய்து அவனைக் கொல்லாது, அவனுடைய செருக்கை மாத்திரம் அடக்கப் போகிறேன். உனது விருப்பப்படி போரில் அவனை நெருக்காது கையாலும், தடியாலும், அடித்து ஓட்டி விடுகிறேன். அவன் எனது பலத்தையும், பேராற்றலையும் சகிக்க வல்லவன் அல்லன். நீ எனக்கு நல்ல புத்திமதிகள் சொல்லி, உன் அன்பைக் காட்டி

விட்டாய். என் ஆணை. நீ திரும்பி விடு. நான் என் தம்பி சுக்கிரீவனைப் போரில் வென்ற பின் திரும்புவேன்.''

இவ்வாறு கூறிய வாலியைத் தாரை •தழுவிக் கொண்டு, கண்களில், நீர் பெருக அவனை வலம் வந்து, அவனுக்கு வெற்றி உண்டாக வேண்டும் என்று, மந்திர சஹிதமாய் வாழ்த்தி. துக்கத்தால் மீதூரப்பட்டு, மற்ற பெண்களோடு அந்தப்புரத்திற்குச் செல்கிருள்.

மலைந்தனர் போர்

அவள் அப்படிச் சென்றபின் வாலி வெளியே வந்து, சுக்கிரீவனோடு போரிடுகிருன். வாலியின் பெருவலி யினும் திறலினுலும், சுக்கிரீவன் பலம் குன்றுகிருன்.

வரவர, சுக்கிரீவன் இளைத்து இராமர் இருக்குமிடத் தைப் பார்த்துக்கொண்டே இருக்கிருன்.

ஓ! வீழ்ந்தனனே, வாலி!

இவ்வாறு சுக்கிரீவன் சங்கடத்தில் இருப்பதைக் கண்ட இராமர் வாலியை வதைப்பதற்காக, சர்ப்பம் போன்ற ஒரு பாணத்தை எடுத்து வில்லில் பூட்டி யமனுடைய காலச் சக்கரத்தைப் போல அவ்வில்லை வளைக்கிருர். அந்த வில்லின் நாணோசை கேட்டுப் பறவை களும், விலங்குகளும் யுகாந்த காலத்தைப் போல நடுங்கி நாற்றிசைகளிலும் ஓடுகின்றன. இராமனுடைய வில்லி லிருந்து விடப்பட்ட பெரும்பாணம் தனது மார்பில் பாய அதனல் உக்கிரமாய் அடியுண்டவனய், வாலி பூமியில் சாய்ந்து விடுகிருன்.

அறிவிழந்து, தேகம் முழுவதும் இரத்தம் தோய, இந்திரனது துவஜம் போல் அவன் பூமியில் விழுந்து கிடக்கிருன்.

பூமியில் வீழ்த்தப்பட்ட அந்த மகாத்மாவினது உடலை விட்டு, உடலின் ஒளியும் மாறவில்லை; உயிரும் போக வில்லை; உடலின் அழகும் மாறவில்லை; மனோ தைர்யமும் மழுங்கவில்லை.

வானர மன்னனுடைய பொன்மயமானதும் வைரங்கள் இழைக்கப் பெற்றதும், இந்திரனால் அளிக்கப் பட்டதுமான அந்த உத்தமமான காஞ்சனமாலை, உயிரையும், உடலின் ஒளியையும், உடலின் அழகையும், நிலைத் திருக்கச் செய்கிறது. அப்படி விழுந்து கிடக்கும் வாலியை இராமன், இலக்குவன் பின் தொடர, நெருங்கி, அவனைப் பார்க்கிறார். அப்பொழுது வாலி, இராமனிடம் அடியிற் கண்டவாறு பேசுகிறான்

மாசிலான் ஏசுவான் பேசலுற்றான்

"நீவீர் இராஜ குமாரர்;பிரதாபம் உடையவர்; கண்ணுக்கு இனியர்; காந்தி உடையவர்; விரதம் பூண் டவர்; அப்படி இருந்தும், எதிர்த்துப் போர் புரிய வராது இருந்த ஒருவனுடைய-இன்னொருவரிடம் போர் புரிவதில் முழுவதும் ஈடுபட்டிருந்த ஒருவனுடைய—மார்பில் பாணத்தை விட்டு நீர்என்ன பயன் அடைந்தீர்? இவ்வுலகில் அனைவரும் உம்மைக் கருணைக் கடல் என்றும், குடிகளுடைய நன்மையில் நாட்டம் உள்ளவர் என்றும், ஐம்புலன்களையும் அவித்தவர் என்றும் புகழ்ந்து கொண்டாடுகிறார்கள்.

தமம்,சமம், க்ஷமை, தர்மம், தைர்யம், சத்தியம், பராக்கிரமம், அபராதம் செய்தவர்களைத் தண்டித்தல் ஆகிய இவை எல்லாம் அரசர்க்கு உரிய குணங்கள். நீர் இந்தக் குணங்களை உடையவர் என்றும், உயர் குலத்து உதித்தவர் என்றும் எண்ணி, தாரை என்னைத் தடுத்தும் சுக்கிரீவன் உடன் நான் அமர் செய்ய வந்தேன்.

நான் உம்மைக் கண்டிராதபோது, வேறொருவனோடு சினம் கொண்டவனாய், உம்மைக் கவனியாது இருந்த என்னை, எதிர்க்க நீர் உடன் படீர் என்று நிச்சயமாக எண்ணியிருந்தேன். நீர் தருமத்தை நிலை நிறுத்துவதாக வீண் கொடி கட்டிக் கொண்டு, அதற்கு மாறாய் நடந்து பாவத் தொழிலைச் செய்கிறவர் என்றும், புல்லால் மறைக்கப்பட்ட பாழ்ங் கிணறு போல்பவர் என்றும், ஆன்மாவை அழித்துக் கொண்டவர் என்றும், பரிசுத்த வேடம் பூண்டு தீச் செயல் புரிபவர் என்றும், சாம்பல் மூடிய நெருப்பைப் போல தர்மப் போர்வை போர்த்துத் திரியும் கொடியவர் என்றும் இதுகாறும் நான் அறிந்திலேன்.

உமது நாட்டிலோ, நகரத்திலோ, நான் அபகாரம் செய்திலேன். உமக்கு அவமரியாதை பண்ணவுமில்லை. அப்படி இருக்கையில், யாது காரணம் பற்றி, நீர் எப் பொழுதும் வனத்தில் திரிந்து கொண்டு கனிகளையும், கிழங்குகளையும் உணவாய்க் கொண்ட, வானரனும், வேறொருவனோடு போர் புரிந்து கொண்டிருந்தவனும் உம்மைச் சீண்டாதவனும், உமக்கு ஒரு பாவமும் செய்யா தவனும் ஆன என்னை, இப்போது வதைக்கிறீர். க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவரும், கசடறக் கற்றறிந்தவருமான எவர், தரும மூர்த்தி என வெளி வேடம் தரித்தவராய்க் கொடிய செயலைச் செய்யத் தலைப்படுவார்?

இராமா! இராஜகுலத்தில் பிறந்தவர் என்றும், தர்மவான் என்றும், பெயர் கொண்டு, விளங்குகிறீர். தீத் தொழில் உற்றவனாய், நல்லவன் போல் ஏன் நீர் திரிகின்றீர்?

அரசே! சாமம், தானம், க்ஷமை, தர்மானுஷ்டானம், சத்தியம், ஆண்மை, ஆற்றல், அபகாரம் செய்தவர்

களை மாத்திரம் தண்டித்தல் ஆகிய இவைகள் அரசர்க் குரிய குணங்கள்.

இராமா! கிழங்குகளையும், கனிகளையும் உணவாக்கிக் கொண்ட நாங்களோ காட்டில் சஞ்சரிக்கும் மிருகங்கள்; அரசே! இது எங்களது இயற்கை. நீரோ மானுடன். மண்ணும், பொன்னும், வெள்ளியும் கலக விஷ்யத்தில் ஏதுக்கள் ஆகின்றன. இவைகளினுல்தான் ஆகட்டும் அல்லது எனது விவகாரங்களில்தான் ஆகட்டும் உமக்குக் காட்டில் ஆவதென்ன?

அறநெறி வழுவா இராஜதந்திரமும் தணிந்து போகுதலும் ஆகிய இரண்டும், சிக்ஷித்தல், அநுக்ரகித்தல் ஆகிய இரண்டும், இவை யாவும் தேர்ந்த அரசநெறி யானது விபரீதமாகப் பிரயோகிக்கத் தக்கது அன்று.

மன்னர்கள் மனம் போனபடி எல்லாம் எதையும் செய்து முடிக்கின்றவர்களாக இருத்தல் ஆகாது. நீரோ மனத்தில் தோன்றியதையே சர்வமுமாய்க் கொண்டவராய் இருக்கின்றீர். கோபத்திற்கு ஈடுபட்டவராயும் இருக்கின்றீர். அரச நெறிகளிலோ அசுத்தமாய், தர்மப்பற்று அற்று இருக்கின்றீர். பாணம் எய்வதையே எதற்கும் சிறந்த வழியாய்க் கொண்டவராய் இருக்கின்றீர். தர்மத்தில் உமக்கு, சலியாது கௌரவித்தல் என்பது இல்லை ஒரு காலத்தில் புத்தியானது நிலை பெற்றதாக இல்லை. மனம் போகிற படி எதையும் செய்கின்றவராய் இருந்து கொண்டு, ஐம்புலன்களால் அலைக்கப் படுகின்றீர்.

இப்பொழுது குற்றம் செய்யாத என்னை பாணத்தால் அடித்துத் தள்ளி விட்டு, எப்படிப் பார்த்தாலும் அடாத காரியத்தைச் செய்து விட்டு, புண்ணியாத்மாக்களிடம் இதை எப்படி நியாயப்படுத்துவீர்?

அரசனைக் கொன்றவனும், அந்தணனைக் கொன்றவனும், கோவதை செய்தவனும், பிறர் பொருளை அபகரித்தவனும், பிராணிகளின் ஹிம்சையில் அசூயைப் படாதவனும், தெய்வம் ஒன்றை ஒப்புக் கொள்ளாதவனும் (நாஸ்திகன்), தமையன் கல்யாணம் ஆகாதிருக்க, தான் கல்யாணம் செய்து கொண்டு விட்ட தம்பியுமாகிய இவர்கள் எல்லோரும் நரகத்திற்குப் போய்ச் சேர்கிறவர்கள்.

ஒருவருக்கு மட்டும் தெரிதிருக்கிற ரகஸ்யங்களை எல்லோரும் அறிய, பகிரங்கப் படுத்துபவனும், பேராசை உற்றவனும், நம்பினவனைக் காட்டிக் கொடுக்கிறவனும் குருபத்தினியைக் கற்பழித்தவனும், ஆகிய இவர்கள் எல்லோரும் பாவிகளுக்கு உரிய உலகத்தை அடைகிறார்கள். இதில் ஐயம் இல்லை.

உம் போன்ற தர்ம அநுஷ்டானம் உடைய புண்ணியாத்மாக்களால் எனது தோல் அணியத் தகாதது. உரோமங்களும், எலும்பும், நீக்கத் தக்கன. மாமிசமும் புசிக்கத் தக்கது அன்று. அந்தணராலும், க்ஷத்திரியராலும், ஐந்து நகமுள்ள ஐந்துக்களில் புசிக்கத் தக்கவை ஐந்தே. முள்ளம்பன்றி, பன்றி, உடும்பு, முயல், ஆமை ஆகிய ஐந்துமே அவை. எனது தோலையும் எலும்பையும் பெரியோர்கள் தொடமாட்டார்கள். மாமிசமும் புசிக்கத்காதது. ஐந்து நகமுள்ள நான் புடைத்து வீழ்த்தப் பட்டேன்.

தாரை கூறிய நன்மை தரும் உண்மைச் சொற்களைக் கேளாது நான் காலன் வாய்ப்பட்டேன். அசட்டுத்தனத்தால் உல்லங்கனம் செய்து எமனது ஆளுகைக்கு அடிமையானேன்,

நல்லொழுக்கமுள்ள ஒரு பெண்ணுக்கு, நலன் கெட்ட நாயகன் வாய்த்தாற்போல் இப்பூமாதிற்கு நீர் நாயகனுக வாய்த்தீர். மகாத்மா ஆகிய தசரதர்க்குச் சிறுமையும் கொடுமையும், பொய்ம்மையும் உள்ளவரும், உயிர்களுக்குத் துன்பம் செய்பவரும், பாவியும், ஆகிய நீர் எப்படித் தான் பிள்ளையாய்ப் பிறந்தீரோ? நற்குணம் என்ற கயிற்றை அறுத்து, தர்மம் என்னும் அங்குசத்துக்கு அடங்காது, சான்ருேர்களின் நெறியை மீறி, கண்டபடி திரியும் இராமன் என்ற வேழத்தால் நான் கொல்லப் பட்டேன். தீமை தருவதும், தகுதி அற்றதும், சாதுக்களால் நிராகரிக்கப்பட்டதுமான, இக்காரியத்தைச் செய்துவிட்டு, பெரியார் சபையில் சென்று நீர் யாது சொல்வீர்?

அபகாரம் செய்தவரிடத்தில், நீர் ஒரு போதும் காட்டாத பராக்கிரமத்தை, உமக்கு ஓர் அபகாரமும் செய்யாத என்னிடம் காட்டினீர். என் முன் நின்று நீர் போர் செய்திருப்பீர் ஆகில், இந்நேரம் என்னுல் கொல்லப்பட்டு, இதுவரை, யமதேவனை நேரில் கண்டிருப்பீர்.

போரில் வெல்ல முடியாதவனுன நான் மறைந்திருந்தே உம்மால், குடித்து மயங்கித் தூங்கித் கொண்டிருக்கும் ஒரு மனிதன், பாம்பினுல் எப்படிக் கடிக்கப் படுவானே அப்படியே, உம்மால் கொல்லப்பட்டேன்.

எதை உத்தேசித்து நீர் சுக்கிரீவனுக்கு நன்மை செய்ய எண்ணினீரோ, எதற்காக உம்மால் நான் கொல்லப் பட்டேனே, அது பற்றி என்னிடமே, நீர் முன்னமேயே சொல்லி இருந்தால், மைதிலியை நான் ஒரே நாளில் உம்மிடம் கொண்டு வந்து சேர்த்திருப்பேனே. இதற்கு ஐயமும் உள்ளதோ?

உம்து மனேவியை அபகரித்த தீய அரக்கனுன இரா வணனேயும் கழுத்தில் சுருக்கிட்டு உம்மிடமே கொண்டு வந்து சேர்த்திருப்பேனே.

சமுத்திரத்திலிருந்தாலும், பாதாளத்திலிருந்தாலும், வெள்ளேக் குதிரை ரூபமான வேதங்களே மகாவிஷ்ணு மீட்டுக் கொணர்ந்ததைப்போல், நான் மைதிலியைக் கொண்டு வந்திருப்பேன்.

நான் சுவர்க்கம் புகுந்த பின், சுக்கிரீவன் அரசாள வேண்டியது நியாயமே ஆயினும் எம் இருவர்க்கிடையில் நடந்த போரில் என்னே நீர் வஞ்சகமாய்க் கொன்றது நியாயம் அன்று.

போனது போகட்டும். இப்படித்தான் உலகம் விதி யால் நடத்தப் படுகிறது. உம்மால் செய்யப்பட்டது நியாயமாக இருக்கிறது என்ருல், ஒப்புக் கொள்ளத் தக்கது ஆகிய பதில் ஆலோசிக்கப்படட்டும்''

இவ்வாறு கேட்டு விட்டு, இராமனுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டு, வாலி மௌனமாகக் கிடக்கிருன்.

வில்லி விளம்புவான்

அவனேப் பார்த்து இராமன் கூறுகிருன்:

''தர்மத்தையும், அதனுல் விரும்பப்படுகின்றதான புருஷார்த்தத்தையும், உலகக் கோட்பாட்டையும் பரி பூரண ஞானம் இன்மையால் உள்ளபடி அறியாது இப் போது,இதுவிஷயத்தில் என்னே ஏன் குற்றம் கூறுகின்ருய்? நுட்பங்களே அறிந்தவர்களும், ஆச்சார்யர்களால் அங்கீ கரிக்கப்பட்டவர்களுமான, பெரியோர்களேக் கேட்டறி யாது குரங்கின் குறுகுறுத் தன்மையால் என்னே இவ்விஷ யத்தில் ஏன் நிந்திக்கத்துணிந்தனே? மலேகளும், வனங் களும்,உபவனங்களும்அடங்கிய இந்த உலகம்,மிருசங்கள்,

பக்ஷிகள், மானிடர் இவர்களுக்கு சிக்ஷித்தல், ரக்ஷித்தல் என்கிற காரியங்களில் இக்ஷ்வாகு மன்னர்களுக்கே உரிமை.

தர்மாத்மாவும், சத்திய சந்தனும், நேர் வழி ஒழுகு பவனும், தர்மத்தால் கோரப் படுகிறது புருஷார்த்தம் தான் என்ற நுட்பத்தை உள்ளபடி அறிந்தவனும், சிக்ஷித்தல், ரக்ஷித்தல் ஆகிய இவற்றில் ஜாக்கிரதையுடன் இருப்பவனுமான பரதன் அதைப் பரிபாலித்து வருகிறுன்.

எவனொருவனிடத்தில், சத்தியம் குடி கொண்டிருக் கிறதோ, ராஜ நீதியும், பெரியோர்களிடத்தில் பக்தியும் ஆகிய இவ்விரண்டும் அப்படியே குடி கொண்டிருக் கின்றனவோ, சாஸ்திரங்களில் அங்கீகரிக்கப்பட்ட ஆற்றல் கள் அப்படியே குடி கொண்டிருக்கின்றனவோ, தர்ம நுல்களையும், ஏற்ற காலங்களையும் நன்கு அறிந்த அவன் தான், சக்கரவர்த்தியாய் இருக்கிறுன்.

தர்மத்தைப் பயனுகக்கொண்ட, கடமைகளை உடைய நாங்களும், இதர மன்னர்களும் தர்மம் நழுவாதிருத்தலைக் கோருகிறவர்களாய், அவனது பூமி எங்கும் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறேம்.

அந்த ராஜோத்தமனும், தர்மத்தில் அசஞ்சலப் பற்றுடையவனுமான பரதன், எல்லாப் பூமியையும் பாது காத்து வருகையில், எவன் தர்மத்தினின்றும் விலகிநடக்க வல்லவன்? அந்த நாங்கள், சிறந்த எங்கள் தர்மத்தில், சலியாப்பற்று உடையவர்களாய்ப் பரதனுடைய கட்டளை யை சிரமேற்கொண்டு, அறநெறி தவறியவனை சிக்ஷித்து வருகின்றேம். நீயோ அறம் குன்றியவன். இழி தொழில் உற்றவன்; காம வெறியில் முழுகி விட்டவன்; ராஜநெறி யில் பற்றற்றவன்; தர்ம வழியில் ஒழுகுகிற ஒருவனுக்குத் தமையனும், தந்தையும், எவன் ஒருவன் வித்தையைப் புகட்டுகிறுனே அவனும், ஆகிய இம் மூவரும், பிதாக்க

ளாகப் பாவிக்கப்பட வேண்டியவர்கள். தம்பியும், புதல்வனும், நற்குணம் அமைந்த சிஷ்யனும் ஆகிய இம்மூவரும் புத்திரனுகப் பாவிக்கப்பட வேண்டியவர்கள். இதற்கு தர்மமே பிரமாணம்.

வானர! புண்யாத்மாக்களுடைய நுட்பமாயுள்ள தர்மம் ஆனது, பிறரால் கஷ்டப்பட்டும் அறிய முடியாதது.

சர்வ பூதங்களுடைய உள்ளத்தில் உள்ளதை, உள்ள படி அறியும் பரமாத்மாவே, நன்மையையும், தீமையை யும் அறிவார். பிறவி மூடன் ஒருவன் பிறவி மூடர்களோடு எவ்வண்ணமோ, அவ்வண்ணமே சபல சித்தனுன நீ, சபல சித்தர்களும், சிக்ஷைபெறுதவைகளுமான வானரர் களோடு கூட ஆலோசனை செய்து, எதைத்தான் அறிந்து கொள்ளப்போகின்ருய்?

நானே உனக்குத் தெளிவாய்ச் சொல்கிறேன். நீ கோபத்துக்கு முற்றும் ஆட்பட்டு என்னைக் குற்றம் கூறக் கூடாது. நீ என்னுல் கொல்லப்பட்ட காரணத்தைத் தெரிந்து கொள். புராதனமான தர்மத்தை விட்டு விட்டு நீ தம்பியினுடைய மனைவியைக் கவர்ந்தாய் என்பது தான் அது. நீ, உயிருடன் இருக்கும் மகாத்மாவான இந்தச் சுக்கிரீவனுக்குத்தீங்கை விளைவிப்பவனுய்,காமத்திற்கு ஆட் பட்டு மருமகளான உருமையோடு சேர்ந்து வாழ்கிருய்.

வானர! நீ தர்மத்தினின்றும் விலகி காமத்துக்கு ஆளாகி, உன் தம்பியின் மனைவியோடு வாழ்வதற்காகவே நான் உன்னைத் தண்டித்தேன். வானர மன்னு! தர்மத் திற்கு விரோதமாய், உலக தர்ம அநுஷ்டானத்திலிருந்து மீறி நடக்கிறவனுக்கு, சரீர தண்டனையைக் காட்டிலும் வேறு தண்டனையைப் பொருத்தம் ஆனதாக நான் காணவில்லை.

நற்குலத்தில் பிறந்த க்ஷத்திரியன் ஆன நான், உனது பாபச்செய்கையை ஒருக்காலும் மன்னிக்க மாட்டேன்.

எந்த மானிடன் புதல்வியைத்தான் ஆகட்டும், சகோதரியைத்தான் ஆகட்டும், உடன் பிறந்தவனது மனைவியைத்தான் ஆகட்டும் காமவெறி கொண்டு சேர்ந்து வாழ்கிறானோ, அவனுக்கு மரணம்தான் தண்டனையாய் விதிக்கப் பட்டிருக்கிறது. பரதன்தான் சக்கரவர்த்தி; நாங்கள் தர்ம நெறி தவறாதவர்கள். நீயோ தர்மத்தினை மீறி நடந்தவன். ஆகையால் நாங்கள் எப்படி இதனை அலட்சியப்படுத்த முடியும்? மனம் போன படி எல்லாம் நடப்பவர்களது நெறி தவறிய செயலுக்காக நெறி தவறாது நடைபெறுமாறு காத்து வரும் அறிவாளியும், சக்கரவர்த்தியுமான பரதன் சிக்ஷிப்பதில் உறுதியாக இருக்கிறான்.

வானர மன்னா! நாங்களோ என்றால் பரதனுடைய கட்டளையை, கடமையாகக் கொண்டு, உன்போல் வரம்பு மீறியவர்களைச் சிக்ஷிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டு இருக்கிறோம்.

இலக்ஷ்மணன் எப்படியோ, அப்படியே சுக்கிரீவனோடு எனக்கு ஏற்பட்ட நட்பு இருக்கிறது. அவனுடைய மனைவிக்காகவும், ராஜ்யத்திற்காகவும், இந்த நட்பு ஏற்பட்டது. அவனும் என்னுடைய நலத்தில் அக்கறை கொண்டவனாக இருக்கிறான்.

வானரர்கள் முன்னிலையில் நான் அவனுக்குப் பிரதிக்ஞை செய்து கொடுத்திருக்கிறேன். என் போன்றவர்களால் எப்படி அந்த பிரதிக்ஞையைப் புறக்கணிக்க முடியும்? ஆகையால் தர்ம சாஸ்திரங்களை அநுசரித்து, சிறந்திருக்கும் இந்தக் காரணங்கள் எல்லாவற்றாலும் நீ

முறைப்படி தண்டிக்கப்பட்டாய். அதனை முறை என்று நீயும் ஒத்துக் கொள்ள வேண்டும். உன்னைத் தண்டித்தது, எவ்வகையாலும் தருமம் என்றே நீ உணர்தல் வேண்டும். ஒரு நண்பனுக்கு உதவி செய்வதைத் தன்னுடைய கடமையாகக் கொண்டிருப்பதும், தர்மம் ஒன்றையே கடைப் பிடித்து ஒழுகுவதாகும் என்பதையும் நீ ஒத்துக் கொள்ள வேண்டும்.''

இப்படிக் கூறிவந்த இராமன் மநு தர்ம சாஸ்திரத்திலிருந்து இரண்டு ஸ்லோகங்களை எடுத்துக் காட்டுகிறான். ''பாவம் செய்தவர்கள் அரசனால் தண்டிக்கப்பட்டு, பாவம் நீங்கி, புண்ணியம் புரிந்தோரைப் போல, புனிதராகி, சுவர்க்கம் அடைகின்றனர். பாவம் செய்தோர் தங்களது குற்றத்தை ஒப்புக் கொண்டு அதற்குத் தக்க தண்டனை அடைந்தாவது, மன்னிக்கப்பட்டாவது, அப்பாவத்திலிருந்து விடுபடுகின்றனர்; பாவத்திற்குத் தக்கதண்டனை விதிக்காத அரசன், அப் பாவத்தைத் தானே அநுபவிப்பான்.'' என்பன போன்ற பொது நியதிகளை எடுத்துக் கூறிய இராமன், மேலும் சொல்கிறான்:

''வானர மன்னா! ஆகையால் பரிதாபப் பட்டது போதும். வதையானது தர்மத்தை அநுசரித்துத்தான் செய்யப்பட்டிருக்கிறது. நாங்கள் மனம் போனபடி எல்லாம் செய்பவரில்லை.

உன்னை நான் வதைத்ததற்கு, மற்றும் ஒரு காரணமும் உண்டு. அதையும் சொல்கிறேன்; கேட்பாயாக.

அதனைக் கேட்டபின், என்மீது கொள்ளும் கோபத்தை ஒழித்து விடு. ராஜரிஷிகளாகிய மானிடர்களும், தர்மம் நன்கு உணர்ந்த மானிடர்களும், மிக மாமிச வெறி கொண்டு, பல துஷ்ட மிருகங்களையே, பள்ளங்களைத் தோண்டியும், வலைகளாலும், பல்வகை

இயந்திரங்களாலும், எதிர்ப்பட்டும், மறைந்து நின்றும் பிடிக்கிறார்கள்.

பயந்து ஓடுகின்றவைகளாக இருப்பினும், தைரியம் கொண்டு நின்று கொண்டிருப்பினும், வெறி கொண்டு இருப்பினும், அடங்கிக் கிடப்பினும் வேட்டையாடுகின்றார்கள்; பிடிக்கின்றார்கள்; வெட்டித் தள்ளுகின்றார்கள்.

நீயோ, போரில் எதிர்த்து நின்று போர் புரிபவனாக இருந்தாலும் சரி, எதிர்க்காதவன் ஆக இருந்தாலும் சரி, துஷ்ட மிருகங்களின் வகுப்பில் ஒருவனாக நீ இருக்கின்றாய். ஆனது பற்றி என்னால் ஒரு கணையால் அடிக்கப்பட்டாய். இவ்விஷயத்தில் தோஷம் என்பதே இல்லை. இதில் எனக்கு மனஸ்தாபமும் இல்லை. அற்பத்தனமும் இல்லை. மன்னர்கள் நல்லதாகிய தருமத்தையும், தீங்கற்ற வாழ்வையும்தான் அளிப்பவர்கள். இதற்கு ஐயம் இல்லை. இவர்கள்தாம் (இந்த ராஜாக்கள்தாம்) மானுட உருவம் கொண்டு பூமியை ஆளுகின்றார்கள். அவர்களை வருத்தக் கூடாது. அவர்களைக் குறை கூறக் கூடாது. அலட்சியம் செய்யக் கூடாது. கோபம் வரும்படியான சொல்லைச் சொல்லக் கூடாது. நீயோ தருமத்தை உள்ளபடியே அறியாது, முன்னோர்கள் அநுஷ்டித்து வந்த தர்மத்தில் பற்றுடைய என்னைத் தூஷிக்கின்றாய்."

கூறிய மனத்துள் கொண்டான்

இராமன் இவ்வாறு சொல்லக் கேட்ட வாலி, தருமத்தை அறிந்து, தன்னையே பலவாறாக நிந்தித்து, இராமனிடத்தில் யாதொரு தோஷமும் காணாதவன் ஆகிறான். பிறகு அவன் தன் இரு கைகளைக் கூப்பிக் கொண்டு இராமனை நோக்கி, பின் வருமாறு பேசுகிறான்.

"புருஷோத்தம! நீர் சொல்வன யாவும் உண்மையே. அதில் சந்தேகம் இல்லை. சான்றோனிடத்தில், இழிந்தோன் மீறிப் பேசுவதே தகாது.

நான் இதற்கு முன் அறிவின்மையால் உம்மைக் குறித்துத் தகாதனவும், பிரியமில்லாதனவுமான சொற்களைச் சொன்னேன். அதற்காக என்னைக் குறை கூற வேண்டா.

நீரோ சகல தர்மங்களையும் அறிந்தவர்; எப்பொழுதும் குடிகளுடைய நன்மையை நாடுபவர்; இது செய்யத் தக்கது. இது செய்யத் தகாதது என்பதைத் தெளிவாக உணர்ந்தவர். நான் தர்மமார்க்கத்தை விட்டு நீங்கிய பெரும்பாவி.

அறநெறி உணர்ந்தவரே! தர்மத்தை அறியாதவனும் மரியாதை கடந்தவனுமான என்னையும், அறநெறிக்கு ஒத்ததாகிய சொற்களைக் கொண்டு காத்து அருளும்."

மகன் முகம் நோக்கி

இவ்வாறு கூறிய வாலி, கண்ணீர் விட்டு, தொண்டை அடைத்துக் கொள்ள, மீண்டும் இராமனைப் பார்த்து, தீனஸ்வரத்தில் அங்கதனைப் பற்றிப் பேசுகிறான்.

அங்கதன் குழந்தைப் பருவம் முதல் தன்னை விட்டுப் பிரியாமல் மிகச் செல்வமாக வளர்ந்தவன் என்றும், தன்னுடைய பிரிவால் அவன் பெருந்துயரத்தில் மூழ்கு வான் என்றும், அவன் தாரையினிடத்துத் தனக்குப் பிறந்த ஒரே குமாரன் என்றும், அவன் யாதும் அறியாப் பாலகன் ஆயினும், மகா பலவான் என்றும், அவனை இராமன் காப்பாற்ற வேண்டும் என்றும், இராமன், பரதன், இலக்ஷ்மணன் ஆகியவர்களிடத்து அன்பு காட்டு வது போல, அவனிடத்தும் அன்பு காட்ட வேண்டும் என்றும், இராமனை வேண்டிக் கொள்கிறான்.

அரிக்குலத் தோன்றல்! அஞ்சல்

அதற்குப் பதிலாக இராமன் வாலியைப் பார்த்து, "இவ்விஷயத்தில் உனக்கு மனக் குறை எதுவும் தேவை இல்லை. உன்னால் நாங்கள் தவறு செய்து விட்டவர்கள் என்று நினைக்கப்படுதல் கூடாது. நீயும் அந்த விதமே நினைக்கவேண்டிய தில்லை. உன்னைக்காட்டிலும் நாங்கள் தர்மானுசாரம் ஆகவே, எதிலும் துணிபவர்கள். எவ னொருவன் தண்டிக்கப்பட வேண்டியவன் விஷயத்தில் தண்டனையை விதிக்கின்றானோ, எவன் ஒருவன் குற்ற வாளியாய்த் தண்டிக்கப் படுகிறானோ, அதன் விளைவைப் பெறும் இருவருமே குறை நீங்கினவர்கள் ஆகிறார்கள்.

நீ, இந்த தர்ம சாஸ்திரங்களில் கண்ட அநுஷ்டானங் களை ஒத்தே, தண்டனை அடைந்தமையால், பாவம் ஒழிந் தவன் ஆயினாய்; எனவே நியாயப்படி அடைய வேண்டிய தான உனது நல்லறிவைப் பெற்றாய்.

மனவேதனையையும், அஞ்ஞானத்தையும் சஞ்சலத் தையும் உள்ளத்திலிருந்து ஒதுக்கி விடு. விதியால் வருவ தனை விலக்க உன்னால் முடியாது. அங்கதன் உன்னிடத்தில் எப்படி இருந்து வருகிறானோ, அவ்வண்ணமே சுக்கிரீவ னிடத்தும், என்னிடத்தும் எப்போதும் இருந்து வருவான். இதில் உனக்கு ஐயம் வேண்டா," என்று கூறுகிறான்.

பிழையா நன்மொழி தேறினன்

இராமனுடைய இனியமொழிகளைக் கேட்ட வாலி இராமனை நோக்கி, "இந்திரனுக்குச் சமமான பராக் கிரமம் உடைய நரேந்திரரே! உமது பாணத்தால் அடிக் கப்பட்டு, புத்தி மயங்கிய அவிவேகியான நான் உம்மை இகழ்ந்து பேசியதை மன்னித்து, என்னை அநுக்ரகிக்கு மாறு வேண்டுகிறேன்" என்கின்றான்.

### அமர்க்களத்திடை அன்புறு சிந்தையள்

இந்த நிலையில் 'வாலி இராமன் அம்பினால் அடி பட்டுக் கிடக்கிறான்?' என்ற செய்தியைக் கேள்வியுற்ற தாரை, தன் குமாரனாகிய அங்கதனுடன், வாலி வீழ்ந்து கிடக்கும் இடத்துக்கு வருகிறாள்.

அங்கதனைச் சூழ்ந்து வானர வீரர்கள் வருகிறார்கள். அவர்கள் வில்லும் கையுமாய் நிற்கும் இராமனைக் கண்டு அஞ்சி, வெருண்டு ஓட்டம் பிடிக்கிறார்கள். அவர்கள் ஓடு வதைத் தடுக்க தாரை முயல்கிறாள்.

அவர்கள் தாரையினிடத்து, உடனே திரும்பிச் சென்று அங்கதனுக்கு முடிசூட்டி, பகைவர்கள் உள்ளே நுழையாமல் கோட்டைக் கதவுகளை மூடிவிடவேண்டும் என்றும் கூறுகிறார்கள்.

இதனைக் கேட்ட தாரை, "மகாபாக்கியம் பொருந்திய வானர சிங்கமான என் நாயகன் மாண்டதன் பின் எனக்குப் புத்திரன் ஏன்? இராச்சியம் ஏன்? என் உயிர் தான் ஏன்?

இராம பாணத்தால் உயிர் துறந்து கிடக்கின்ற அந்த மகாத்மாவின் திருவடிகளை, நான் அடைவேன்" என்று கூறிக்கொண்டு, இராம, இலக்ஷ்மண, சுக்கிரீவர் நின்று கொண்டிருக்கும் இடத்தையும் தாண்டி, வாலி கிடக்கும் இடத்திற்குச் சென்று, மெய் பதறி, மூர்ச்சை அடைந்து, பூமியில் விழுகிறாள்.

### வாய் திறந்து அரற்றல் உற்றாள்

தெளிந்து, அவனைக் கட்டி அணைத்துக் கொண்டு, அவ னுடைய வீரத்தையும், பிரதாபங்களையும் பலபட எடுத்துக் கூறி பிரலாபிக்கிறாள்.

"ஐயனே! போரில் பயங்கரமானவனே! வீரனே! வானர சிரேஷ்டனே! உமக்கு யாதொரு குற்றமும் செய்யாதவளும், இப்போது இங்கு பரிதாபமான நிலையில் இருப்பவளுமாகிய என்னிடத்தில் ஏன் பேசாமல் இருக்கிறீர்?

மன்னர்கள் வெற்றுத் தரையில் இவ்வாறு படுக்க மாட்டார்கள். எழுந்திருந்து நல்ல படுக்கையில் படுத்துக் கொள்ளும்.

பூபதியாகிய உமக்குப் பூமியினிடத்து அதிக பிரியம் போலும். உயிர் துறந்து, என்னை நீங்கியும், நீர் உமது உடலால் அவளைத் தழுவிக்கொண்டு இருக்கின்றீரே. நீர் போர் புரியும் போதே, சொர்க்கலோகம் சென்ற உடன் வசிப்பதற்கென்று வேறொரு கிஷ்கிந்தா நகரத்தை அங்கு நிர்மாணம் செய்து கொண்டீர் போலும். என் இதயம் மிகவும் கடினமானது. ஏன் எனில், எனது நாயகனாகிய நீர் இவ்விதம் விழுந்து மாண்டுகிடப்பதைக் கண்டும் அது துன்பம் மிகுந்து ஆயிரம் துண்டங்களாய் பிளந்து போகவில்லையே! சுக்கிரீவன் மனைவியைக் கைக்கொண்டு, அவனை ஊரைவிட்டுத் துரத்திய தீவினையின் பயன் அன்றோ நீர் இப்பொழுது அடைந்திருப்பது?

உம்முடைய நன்மையை நாடி, நான் சொன்ன இதமான வார்த்தைகளைக் கேளாது என்னை நிந்தித்தீரே! நீர் இன்று நல்லுருவமும், இளமையும் உடைய தேவ லோகத்து அப்ஸர ஸ்திரீகளுடைய மனத்தைக் கவரப் போகின்றீர். உமக்குக் கால இறுதி நேர்ந்தது. என்பதற்குச் சந்தேகம் இல்லை. அதனால்தான் எவர்க்கும் தோற்காத நீர் இன்று சுக்கிரீவனுக்குத் தோற்று மாண்டீர்"

எனப் பலவாறு புலம்பி தன் அருகில் இருக்கும் அங்கதனைப் பார்த்து 'குழந்தாய்! தர்மத்தில் அன்புள்ள உனது

தந்தையார் முகத்தை இப்போது நன்றாய்ப் பார். இனி மேல் அவரது முகதரிசனம் கிடைக்காது.' என்று கூறி மீண்டும் வாலியை விளித்து, "நீர் இப்பொழுது நெடும் பயணம் போகப் போகின்றீர். ஆதலால் உமது புத்திரனை உச்சி மோந்து சமாதானப்படுத்தி, அவனுக்குச் சொல்ல வேண்டியனவற்றைச் சொல்லும். உம்மைக் கொன்று இராமர் பெரியதொரு காரியத்தைச் செய்தார். இதனால் சுக்கிரீவனுக்குச் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றினார்" என்று புலம்பி, சுக்கிரீவனை விளித்து, "உம்முடைய மனோ பீஷ்டம் நிறைவேறிற்று. இனி நீர் உருமையைப்பெற்றுக் கொள்ளும். யாதொரு விக்கினமும் இன்றி இராஜ் ஜியத்தை அநுபவியும். உமக்குச் சத்துரு ஆய் இருந்த உம்முடைய தமையனார் கொல்லப்பட்டார்" என்று சொல்லிக் கதறிக்கொண்டிருக்கிறாள்.

அவளுடன் இருந்த வாலியின் மற்றைய மனைவிமாரும் அங்கதனை எடுத்து வைத்துக்கொண்டு, பலவாறு புலம்பு கிறார்கள்.

இறுதியாகத் தாரையோ, வாலியை விளித்து "நானா வது உமது குமாரனாவது உமக்குக் குற்றம் ஏதேனும் செய்ததுண்டோ? யாது காரணம்பற்றி என்னையும் அங்கதனையும் விட்டுத் தூரதேசம் போகின்றீர்? நான் ஏதேனும் குற்றம் செய்திருப்பின், அதனைப் பொறுத்து அருளவேண்டும். உம்முடைய பாதங்களில் வீழ்ந்து வணங்குகின்றேன்" என்று வெகு பரிதாபமாகக் கூறி, வாலி கிடந்த இடத்தில் தானும் பட்டினி கிடந்து உயிர் துறக்க நிச்சயிக்கின்றாள்.

வினையின் முடிவால் வந்தது விளைவு என

அநுமான் வந்து தாரையைத் தேற்ற முயல்கிறான்.

யாக்கை நிலையற்றது என்றும், உயிர்களுக்குப் பிறப்பும் இறப்பும் உண்மை என்றும், ஆயிரக்கணக்கான வானரர்கள் சூழ வாழ்ந்த வாலியும் இன்று தன் வினையின் படி முடிவு எய்தினன் என்றும், அவன் அறநூலில் கூறியபடி ராஜதர்மத்தை, நடத்தி கொடுத்தல், இன்சொல் கூறுதல், பொறுத்தல் முதலிய நற்செய்கைகளில் பயின்று வந்தான் என்றும், இப்போது தர்மம் செய்தார் சேரும் ஸ்வர்க்க லோகம் உற்றான் என்றும், ஆதலால் அவர் பொருட்டுத் துக்கப் படக்கூடாது என்றும், குமாரனான அங்கதனைப் பாதுகாத்து, மற்றும் செய்யவேண்டியவைகளைச் செய்தலே தாரைக்குத் தக்கது என்றும், தாரையின் சொல்லின் படியே அங்கதன் அரசாளட்டும் என்றும், புத்திரனால் செய்யப்பட வேண்டும் என்று சாஸ்திரங்களில் விதிக்கப் பட்டுள்ள சடங்குகளை இப்போது அங்கதன் செய்யட்டும் என்றும், அதற்குப்பின் அவனுக்கு முடிசூட்டி சிம்மாசனத்தில் வீற்றிருக்கக் காண, தாரையின் துக்கம் ஆறிவரும் என்றும் கூறுகிறான்.

தன் துயர் தவிரகில்லாள், தனித்த பேரன்பினள்

இதனைக் கேட்டதாரை, அநுமானைப் பார்த்து, "அங்கதன் போன்ற நூறு குமாரர்களை உடையவளாய் இருத்தலினும், இங்கு மாண்டு கிடக்கும் வீரனாகிய என் நாயகனோடு உயிர் துறப்பதே எனக்கு மேலானது. என் நாயகனுக்குச் செய்ய வேண்டிய பிரேத காரியங்களைச் செய்வதற்காகவாவது, அங்கதனுக்கு முடி சூட்டுவதற்காகவாவது, நான் உரியள் அல்லேன். அந்தக் கடமைகள் எல்லாம் அங்கதனுக்குச் சிற்றப்பன் ஆன சுக்கிரீவனைச் சேர்ந்தவை.

ஐயா! அநும! நான் இந்த இராஜ்ஜியத்தை அங்கதனுக்குக் கொடுக்கவேண்டும் என்று நீர் எண்ணு

வதை விட்டு விடும். இந்தக் காரியத்தில் பிள்ளைக்குப் பந்துவாய் உள்ளவன் தந்தையே அன்றித் தாய் அல்லள். எனக்கு என் கணவனைப் பின் தொடர்வதைத் தவிர இம்மையிலாவது, மறுமையிலாவது நன்மை தருவது வேறு ஒன்றும் இல்லை. இதோ மாண்டு கிடக்கும் என் நாயகன் படுக்கையே எனக்கு ஏற்றது'' என்று கூறுகிருள்.

வாலி கூறுவான்

இந்த நிலையில் வாலி சற்று மூர்ச்சை தெளிந்து, கண் விழித்து, மெதுவாக மூச்சுவிட்டு, நான்கு பக்கங் களிலும் பார்த்து, தன் முன் நிற்கும் சுக்கிரீவனைக் கண்ணுற்று, அவனைத் தன் அருகில் வரவழைத்து அவனிடம் அடியிற் கண்டவாறு கூறுகிருன்:

''சுக்கிரீவ! நான் உனக்குச் செய்த குற்றங்களை நீ மனத்தில் கொள்ளாதே. அவற்றை நான் அறியாமை யாலும், வீண் வலிமையினுலும் செய்தேன் என்று கொள். ஒரே காலத்தில் நாம் இருவரும் தமையனும், தம்பியுமாய் இந்த இராஜ்ஜியத்தை அநுபவிப்பதற்கு, நமக்கு விதி இல்லை என்று எண்ணுகிறேன். அன்றேல் இப்படிச் சம்பவிக்க வேண்டிய காரணம் என்ன? என்னை யமபுரம் சென்றவனுய்ப் பாவித்து நீ இன்றைக்கே இந்த இராஜ்ஜியத்தை வகித்துக் கொள்'' என்று சொல்லிவிட்டு, அங்கதனைப் பற்றி, அவன் குழந்தை, கஷ்டம் அறியாத வன், செல்வத்தில் வளர்ந்தவன், என்று எல்லாம் கூறி, தான் இறந்தபின் அவன் குறைகளைப் பொருட்படுத்தாது, அவனை, அவனுடைய சொந்தக் குழந்தையைப் போல் பாவிக்கவேண்டும் என்றும், தனக்குப்பின் அவனே, அங்கதனுக்குத் தந்தையும், பாதுகாவலனும், வேண்டிய வற்றைக் கொடுப்பவனும், வரும் தீங்குகளை அகற்று பவனும் ஆவான் என்றும், அவன் இளைஞன் ஆயினும்

வலிமை உடையவன் என்றும், வீரத்தில் சுக்கிரீவனை ஒத்தவன் என்றும், அரக்கர்களுடன் நிகழ்த்தும் போரில், சுக்கிரீவன் முன் நின்று பேராண்மை செய்யத் தக்கவன் என்றும் கூறுகிறான்.

அதுபோலவே, தாரையைப் பற்றி அவனிடம் சொல்லும்பொழுது, அவள் நுட்பமான காரியங்களை ஆய்ந்து அறிவதிலும், அபாயகாலத்தில் புத்தி சொல்வதிலும், வல்லவள் என்றும், அவள் ஆய்ந்து தெளிந்த விஷயம் ஒருகாலும் தவறுவது இல்லை என்றும், எனவே அவள் எந்தக் காரியத்தைச் செய்யச் சொல்கின்றாளோ, அதனைச் சுக்கிரீவன் சிறிதும் தயக்கம் இன்றிச் செய்ய வேண்டும் என்றும் கூறி, இறுதியாகச் சுக்கிரீவனைப் பார்த்து,

''இராமன் வேலைகளை, சிறிதும் பின்னிடாது செய்ய வேண்டும். பின் நிற்பாய் ஆயின் உனக்குப் பாபம் உண்டாகும். அவர் கோபம் கொண்டு, உன்னை தண்டிக்கவும் கூடும்.

சுக்கிரீவா! என் கழுத்தில் உள்ள பொன்மயமானதும் தெய்வத்தன்மை படைக்கப் பெற்றதுமான இந்த மாலையை எடுத்து, நீ அணிந்து கொள். இதில் இருக்கும் தண்ணளி உடைய லக்ஷ்மியோ, நான் இறந்தால் போய் விடுவாள்'', என்கிறான்.

இவ்வாறு வாலி கூற, சுக்கிரீவன் மனம் வருந்தி, அவன் கொடுத்த காஞ்சன மாலையைப் பெற்றுக் கொள்கிறான்.

### மகன் முகம் நோக்கி

அந்தப் பொன் மாலையைக் கொடுத்து விட்டு, உயிர் விட ஆயத்தமாகி, வாத்சல்யத்தால் பக்கலில் இருக்கின்ற தனது மகனாகிய அங்கதனைப் பார்த்து,

"மகனே! நீ இனி சுக்கிரீவன் சொற்படி நின்று, காலமும் இடமும் அறிந்து, சுகம் அடைதல் காரணமாக உனக்கு நேரும் துக்கங்களைப் பொறுத்து நடந்து கொள். என்னிடத்தில் வளர்ந்தது போல், நீ இன்னமும் இருப்பாய் ஆகில், சுக்கிரீவன் உன்னை மன்னிக்க மாட்டான். நீ ஒரு பொழுதும் சுக்கிரீவன் பகைவர்களோடு சேராதே. அவனுடைய நல்வாழ்விலேயே எப்பொழுதும் கருத்து உடையவனாய், அவனுக்கு அடங்கி நடந்து கொள். நீ யாருடனாவது அதிக நட்பு பாராட்டவும் கூடாது. நட்பு பாராட்டாது நடந்து கொள்ளவும் கூடாது.

இவை இரண்டும் மிக்க தீமை பயக்கும். ஆதலால் நடுத்தரமாக நடந்து கொள்" என்று சொல்லி அம்பு தைத்த வருத்தம் மேலிட்டமையால், கண்களைப் புரட்டி, வாயைத் திறந்து உயிரை விடுகிறான்.

### துயர் தாங்ககில்லாள்

கூடியிருந்த வானரத் தலைவர்கள் அனைவரும் துக்கம் தாளாமல் புலம்புகிறார்கள். தாரை தன் புலம்பலை நிறுத்தவில்லை. கணவன் இறக்கக் கண்டு, தனது நெஞ்சம் நூறு துண்டுகளாகப் பிளவாது இருக்கிறதே என்றும், தான் கைம்பெண் ஆகி விட்டதாகவும் புலம்புவதோடு, "உம்முடைய தேகம் முழுவதும் இரத்தம் தோய்ந்து புழுதி படிந்து இருத்தலினால், உம்மைக் கையினால் தழுவ எனக்கு இயலாது இருக்கின்றதே. இராமர் விடுத்த ஒரே பாணத்தால் இன்று சுக்கிரீவனின் பயமும் போய் அவனுடைய எண்ணம் எல்லாம் கை கூடின. நீர் இறந்து சுவர்க்கம் அடையவும், உமது மார்பில் தைத்திருக்கின்ற அம்பினால் உம்மை நான் தழுவ முடியாதவளாய் இருக்கின்றேனே," என்று புலம்புகிறாள்,

அது கேட்டு நீலன், வாலி மார்பில் பாய்ந்திருக்கிற பாணத்தை பிடுங்கி எடுக்கிறன். மலேயினின்று பெருகும், செந்தாது கலந்த நீர் போல வாலியினுடைய உடம்பினின்றும் இரத்தம் தாரை தாரையாக ஓடுகிறது. இரத்தம் தோய்ந்து புழுதி படிந்து கிடக்கின்ற தன் கணவன் உடலேத் தன் கண்ணீரால் கழுவி தாரை மேலும் புலம்புகிறுள்.

### நேசத் தாரைகள்

இந்தப் புலம்பலேக் கேட்டு, துக்கத்தில் ஆழ்ந்து, தனது தமையனுர் மாண்டதற்காகப் பெரிதும் வருந்திய சுக்கிரீவன், இராமனைப் பார்த்து பின்வருமாறு கூறுகிறுன்:

"நரேந்திர! உமது சொல்லே நீர் காப்பாற்றி விட்டீர். எளியேன் இன்று தொட்டு உலக சுகங்கள் எல்லாவற்றையும் நீக்கி விடுகின்றேன். இந்த வானரர் கோமகள் இவ்வாறு அழவும், அரசன் இழந்தமையால் குடிகளும், பரிவாரங்களும் புலம்பவும், அரசன் ஆவதற்கு எவ்வாறு என் மனம் உடன்படும்?

நான் அடைந்த அவமானத்தால் வந்த பகையை, கோபம் காரணம் ஆக நான் முன்பு என் தமையனுரைக் கொல்ல விரும்பினேன். அந்த வானரர் கோமகன் இறந்த பின்னர், நான் இப்பொழுது அளவு கடந்து பச்சாதாபப் படுகிறேன். வாலியைக் கொன்று வானுலகைப் பெறுவதிலும், ரிஸ்யமூக பர்வதத்திலேயே, எவ்வாருவது ஜீவனம் செய்து எந்நாளும் வசிப்பது நலம் என்று எனக்குப் புலப்படுகிறது.

'நீ எங்கேயாவது திரிந்துகொண்டு உயிரோடு இரு. உன்னேக் கொல்ல எனக்கு விருப்பமில்லே' என்று இப்

பெருந்தகைமை உடையான் எனக்குச் சொன்னான். அப்படிச் சொல்லும் தகுதியும் அவனுக்கே உரியது. இந்தச் சொல்லும், இந்தச் செய்கையும் பாவியாகிய எனக்கே பொருந்தும். இராஜ்ஜியம் அடைவதினால் வரும் இன்பத்தைப் பெருந்தகைமை உடைய சகோதரனைக் கொன்று அதனால் வரும் துன்பத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் எவன்தான், எவ்வளவு பேராசை உடையவன் ஆயினும் தன் சகோதரனைக் கொல்ல விரும்புவான்?

வாலி தன் பெருந்தகைமைக்கு ஏற்ப என்னைக் கொல்ல விரும்பவில்லை.

ஆனால், நான் என் இழிதகைமையினால் சகோதரனைக் கொன்று பெரும் பாவம் இயற்றினேன். நான் மரக்கிளை களால் அடியுண்டு, கதறி ஓடும்பொழுதும்கூட அவன் என்னைத் தேற்றி, 'இவ்வாறு செய்யாதே' என்று சொல்லி தனது சகோதர வாஞ்சையையும் பெருந்தன்மையையும், தருமத்தையும் அழியாது பாதுகாத்தான்.

நான் அதற்கு மாறாக என் கோபத்தையும் காமத்தையும், குரங்குத் தன்மையையும் காட்டி விட்டேன்.''

இவ்வாறு கூறியதோடல்லாமல் தகுதி இல்லாததும், தர்மம் அல்லாததும், குல நாசத்தை வருவிப்பதும் ஆகிய இக்கொலை புரிந்த தான், குடிகள் செய்யும் வழிபாட்டிற்கும் இளவரசுப் பதவிக்குமே அருகன் (அருகதை உடையவன்) அல்லாது இருக்கும்பொழுது, தான் எப்படி இராஜபதவிக்கு, அருகன் ஆக முடியும் என்றும், பெரும் பழியைத் தருவதும், உலகத்தாரால் நிந்திக்கப்படுவது மான கொடும்பாவத்தைத் தான் செய்து விட்டதாகவும், அங்கதன், தாரை இனி உயிர் வாழமாட்டார்கள்

என்றும், எனவே, தான், தன் தமையனேடும் அங்கத னுடனும் சேர்ந்து தீயில் விழுந்து இறக்கப் போவதாகவும், அவன் இறப்பினும் வானர வீரர்கள் இராமன் கட்டளைப் படி நடந்து, சீதையைத் தேடித் தருவார்கள் என்றும், கொடும்பாவியும், குலத்தை நாசம் செய்தவனும் ஆகிய தான் இவ்வுலகில் வாழ்வதற்குத் தகுதியற்றவன் ஆகையால், தானும் தீயில் குதிப்பதற்கு இராமன் உத்தரவு தரவேண்டும் என்றும், கேட்கிருன்.

### இராமன் துயர்

இப்படிச் சுக்கிரீவன் சொல்வதைக் கேட்ட இராமன், கண்களில் நீர் ததும்ப, சிறிது நேரம் மனம் கலங்கி இருந்து, துக்க சாகரத்தில் மூழ்கி, வருந்துகின்ற தாரையைக் கருணையோடு அடிக்கடி பார்க்கிருன்.

அப்பொழுது, வாலியைத் தழுவிக் கொண்டு தரையில் கிடந்த தாரையை, வானரத் தலைவர்கள் தூக்கி விடுகிருர்கள்.

### தாரை கூறுவ

முதன் முதலாக வில்லும் கையுமாக இராமனைக் கண்ட தாரை, துன்பத்தால் அலமந்து, அழுது, அவனை நோக்கி,

"நீர் வில்லும், அம்பும் கையில் பிடித்தவராயும், மிக்க வலியும், திண்ணிய தேகமும் உடையவராயும் இருக்கின்றீர். மானுட தேகத்திற்கு உரிய சுபாவத்தை விட்டு அமானுஷ்யமான தேக செளந்தர்யத்தால் விளங்குகின்றீர்.

வாலி என்னை அன்றிக் களிப்புருர். எனது கணவர் எந்த ஒரு பாணத்தால் உம்மால் கொல்லப்பட்டாரோ அதே பாணத்தாலேயே, தேவரீர் என்னைக் கொன்று அருளும்.

நான் என் நாயகனைச் சென்று கூடுவேன். என்னை அன்றி அவர் வேறு ஒருவரைச் சேர விரும்பார். அவர் சுவர்க்கம் சென்று, அங்கே என்னைக் காணுமல், சிறந்த ஆடை, ஆபரணங்களை அணிந்த தேவ அரம்பையரையும் கூடக் கண் எடுத்தும் பாரார். இந்த அழகிய மலையின் மத்தியில், வைதேகியைப் பிரிந்து வருந்தும் உம்மைப் போல், சுவர்க்கத்தில். என் நாயகர் என்னைப் பிரிந்தமையால் வருந்தி ஒளி இழந்து தோன்றுவார்.

மனைவியைப் பிரிந்த ஆண்மகன் உறும் துயரத்தை நீர் நன்ருய் அறிவீர். ஆகையால், என்னைப் பிரிந்து, என் நாயகன் அலக்கண் உருவண்ணம் என்னைக் கொன்று அருளும்.

மகாத்மா ஆகிய நீர், என்னைக் கொன்ருல், பெண் கொலை செய்த பாவம் வரும் என்று எண்ணுகின்றீர் போலும். என்னை வாலியின் ஆன்மா ஆகப் பாவித்து நீர் கொல்லும். அவ்வாறு செய்தால், நீர் பெண் கொலை செய்த பாவத்திற்கு உள்ளாக மாட்டீர்.

வேதங்களும் மற்றைய நூல்களும், பத்தினி தன் பதியினின்றும் வேறு அல்லள், என்று கூறுகின்றனவே. பத்தினியை அவளது பதியினிடத்துச் சேர்ப்பதைவிடச் சிறந்த தருமம் வேறு இல்லை, என்று தரும நூல் உணர்ந்தோர் கூறுகின்றனர்.

ஆதலால், நீர் என்னை என் பதியினிடத்துச் சேர்த்து விடும். அப்படிச் செய்யாதிருப்பது உமக்குத் தகுதி அன்று. மதயானை போல்பவனும், பொன் மாலை அணிந்தவனுமாகிய, அறிவிற் சிறந்த வானரர் கோமானைப் பிரிந்து நான் உயிர் வாழேன்'' என்றும் கூறுகிருள்.

**இராமன் கூறுவன**

இதனைக் கேட்ட இராமன் மிகச் சுருக்கமாகப் பதில் இறுக்கிறான்.

"வீர பத்தினியே! நீ கலக்கம் உறல் வேண்டா. இந்தப் பிரபஞ்சம் முழுவதும் கடவுள் ஆணையால் நடை பெறுகிறது. உயிர்களுக்கு வரும் இன்ப துன்பங்கள் அவர் ஏவலினால் வருகின்றன. இந்த மூன்று உலகங்களும், அவர் ஆணையின் வசப்பட்டனவே அன்றி அதனை மீறி நடப்பன அல்ல.

உன்னுடைய குமாரன் இளவரசன் ஆக்கப்படுவான்; அதனால் நீ இன்பம் அடைவாய்; இது வரம்பில் ஆற்றல் உடைய கடவுளால் விதிக்கப் பட்டுள்ளது. வீரபத்தினிகள் இவ்வாறு ஒரு போதும் கலக்கமுறார்கள்" என்று கூறி தாரையைத் தேற்றுகிறான்.

இதனால் ஒருவாறு தேறிய தாரை அழுகையை நிறுத்துகிறாள்.

பின்னர் வாலியின் உடல் தகனம் செய்யப்படுகிறது. சுக்கிரீவன் பட்டாபிஷேகம் செய்யப்படுகிறான். அங்கதன் இளவரசன் ஆகிறான்.

சுக்கிரீவன் மரியாதையைப் பெற்றுக்கொள்வதற்காக, கிஷ்கிந்தை நகருக்குள் இராமன் வருமாறு, அவனை அனுமான் அழைக்கிறான். இராமன் தன் தந்தையாரின் கட்டளைப்படி தான் இந்த பதினான்கு வருஷமும் கழியும் முன்னர் எந்த நகர்க்குள்ளும் நாட்டிற்குள்ளும் புகல் ஆகாது என்று கூறிவிட்டு சுக்கிரீவனைப் பார்த்து கார் காலம் முடிந்தபின்னர், 'சீதையைத் தேடும் முயற்சியில் ஈடுபடவேண்டும்' என்றும் சொல்கிறான்.

இதுதான் வாலிவதைபற்றி ஆதி காவியத்தில் வான்மீகி முனிவர் கூறுவது.

# 6. வாலிவதை-கம்பன் படி

### யாரையோ நீ?

கபந்தனுடைய தோள்களை இராம, இலக்குவர்கள் வெட்ட, கபந்தன் தன்னுடைய பண்டை உருப்பெற்று விண்ணில் மேவுகிறான். விண்ணில் நின்றபடியே இராமனைத் துதிக்கிறான். 'நீ யார்?' என இலக்குவன் வின வலும், கபந்தன் தன் வரலாறு கூறுகிறான். தன் வரலாறு கூறி முடித்துவிட்டு, 'எந்தைக்கும் எந்தை நீர்; யான் இசைப்பது கேண்மின்' என்கிறான்.

### கபந்தன் காட்டிய வழி

அவன் கூறுவதாவது :

''உங்களைக் காப்பதற்கு என யார் துணையும் உமக்கு வேண்டா. சீதையைத் தேடுவதற்கு ஆன காரியத்தை உங்களால் செய்ய முடியும். எனினும் புணை இல்லாமல் கடலைக் கடப்பது அரிது. அதுவேபோல் துணை இல்லாதவர் பகைப்புலம் தொலைத்து நீக்கல் அரிது.

உம்முடைய ஆண்மைபற்றிச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? எனினும் பிரம்மனால் படைக்கப்பட்ட உயிர் கள் அனைத்தையும் அழித்தற்கு உரியவன் ஆன உருத் திரன்கூட, வன்மை பொருந்திய பூத கணத்தோடு உறை வது உண்மை ஆகும்.

எனவே, செய்யத் தகுவ இன்னது என ஆய்க; அற நெறி வழாமை எண்ணுக; தீயவர்ச் சேர்க்கை தவிர்க; செவ்வியோர்ச் சேர்க; பின் செயல் மேவுக.

செல்நெறியில் தாயினும் உயிர்க்கு இனிய தவ மூதாட்டி சபரி காண்க. அவள் நீவிர் செல்லத்தக்கவழி யெலாம் கூறுவாள்; அவ்வழி மேவுக; இரலையின் குன்றம் அடைக.

அவ்விடைப் பொன் அவிர் மேனியனும், பொங் கொளி ஞாயிற்றின் புதல்வனும் ஆன சுக்கிரீவனைக் காண்க. அவன் நட்பை உவந்துகொள்க. அவன் துணை நீட, அமை பெருந்தோளினை நாடுதல் நன்று ஆகும்.'' (3696, 3697)

இவ்வாறு கூறி தொழுது, வாழ்த்தி அத் தூயவன் போயினன்.

**வல்வில் இருவரும் வழிச்செலல் மேயினர்**

பின்னர் அவ்விருவரும் மதங்கனது தவப்பள்ளிக்குச் சென்று அங்கு சபரியைக்கண்டு, அவள் அளித்த விருந் தினை உவந்து ஏற்றுக் கொள்கிறார்கள். பின் சுக்கிரீவன் இருந்த அந்த ரிஸ்யமூக பர்வதத்திற்குப் (இரலைக் குன்றம்) போகும் நெறி எலாம் சபரி நினைந்து சொல் கிறாள்.

அதன்பின் அவள் யோகத்தின் பெற்றியால் தன் உடல் துறந்து துறக்கம் மேவுகிறாள்.

**பொய்கைக் கரையில் பொருந்தினர்**

பின்னர் இராம, இலக்குவர் பம்பைப் பொய்கை சேர்கிறார்கள்.

பம்பையின் தோற்றத்தையும், பொய்கையில் நிகழும் செய்கைகளையும் கண்ட இராமன், சீதை நினைவால் புலம்பு கிறான். மாலைக்கடன் முடித்து சீதையைத் தேடியவராய் அவ்விருவரும் மேலும் நடந்து செல்கிறார்கள்.

### அரிக்குலம் கொண்ட அச்சம்

சபரி சொன்ன நெறியின்படி சென்று இரலேக்குன்றம் எய்தினர். அவர்கள் வருவதைக் கண்ட சுக்கிரீவன் அவர்கள் இருவரும் பகைவர் போலும் என்று எண்ணி, விரைவின் ஓடினன் ஓர் மலே முழைஞ்சிற்கு.

வாலி ஏவலினுல் இவர்கள், வில் ஏந்தியவராய் வந்திருக்கிறுர்கள் போலும், என்று கூறிய சுக்கிரீவனும், உண்மை உணராதவர்கள் ஆய அமைச்சர்களும், அப்படியே ஓடுகிறுர்கள்.

### அச்சம் தவிர்ந்த அநுமன்

இவர்கள் எல்லோரும் இப்படி பயந்து ஒளிந்து கொள்ள அநுமன் மட்டில் ஒரு மாணியின் படிவமொடு "இனிது இரும் ஈண்டு, அஞ்சலிர்" என்று கூறியவனுய் வருவார் எதிர் நோக்கிச் செல்கிறுன். "வெஞ்சமத்துத் தொழிலர்; தவம் சால் மெய்யர்; கை ஏந்து சிலேயர்" என்று எண்ணியவனுய், சற்று அவர்கள் பக்கம் அண்முகிறுன்.

### சிந்தனே ஓட்டம்

அவனுடைய சிந்தனேயில், வருபவர்கள் உலகில் ஒப்பாரில்லாதவர் என்றும், அவர்க்கு அரிய பொருள் உலகில் ஒன்றும் இல்லே என்றும், அவர்கள் நிலேயைத் தேர்வது அரிது என்றும், மனத்தில் சிறிய துயர் ஒன்று உற, நொந்து அயர்ந்து கிடப்பார்போல் இருக்கிறுர்கள் என்றும், நோதற்கு உரியர் அல்லர் என்றும், அந்தரத்து அமரர் அல்லர் என்றும், மயங்கும் மனத்துக்கு உரிய பொருளேத் தேடுகின்ற தன்மையினர் என்றும், அவர்களே தருமமும், தகவும் என்றும், தேவாம்ருதத்திற்கு ஒப்பான பொருள் ஒன்றை இழந்து விட்டு அதனேயே தேடி, இருபாலும் துருவிப் பார்க்கின்றனர்

என்றும், கோபம் என்ற தன்மை இல்லாதவர் என்றும், கருணைக்கடல் போல்வார் என்றும், இதம் என்ற பொருள் அன்றி, மற்ருேர் இயல்பு உணர்ந்திலார் என்றும், இந்திரனே அஞ்சும் நிலையர் என்றும், தருமதேவனும் அஞ்சத்தக்க நல்லொழுக்கம் உடையவர் என்றும், மன்மதனே அஞ்சத்தக்க வடிவழகு உள்ளவர் என்றும், யமனும் அஞ்சத்தக்க வல்லமை உடையவர்கள் என்றும், அவர்களைப் பற்றி நினைக்கிருன். இவ்வாறு பலபடியாக அவர்களைப் பற்றி எண்ணிய அநுமன் அவர்களே தருமம் என்ற முடிவுக்கு வருகிருன்.

நேர் கண்டு நெகிழ்ந்த நெஞ்சினன் ஆகி

அவர்கள் இருவரையும் நன்ருகப் பார்த்து, அன்புடையனுக, கரைகின்ற மனமும் உள்ளவனுக, நெருங்கிய அன்பர்களை முன்னொருகாலத்தில் பிரிந்து, இப்போது திரும்பவும் எதிர்ப்பட்டுக் கண்டவன் போல பேரன்பு கொண்டு நிற்கிருன்.

மேலும் அவனுடைய எண்ண ஓட்டம் தொடர்கிறது. 'காட்டு யானைகள் இவர்கள் பக்கல் தமது கன்றுகளைக் கண்டாற் போன்ற அன்பினை உடையனவாய் இருக்கின்றன. சிங்கம், புலி முதலிய துஷ்ட மிருகங்களும் தங்கள் கொடுமை மறந்து ஆசை மிகுந்து இவர்கள் பின் செல்கின்றன. பற்பல உயிரினங்களும் இவர்களை மதித்து மனம் இளகுகின்றன. எந்தப் பிராணிதான் இவர்கள்பால், சினம் கொள்ளும். மயில் முதலான பறவைகள் எல்லாம் இவர்கள் மேல் வெயில் விழுதல் பொருமல் இவர்களுக்கு மேல் தங்களது பெரிய சிறகுகளாகிய பந்தரைப் பரப்பி, மதில்போல சுற்றிலும் வளைத்துக் கொண்டு, உடன் வருகின்றன. வானத்தில் உள்ள மேகக் கூட்டங்கள் நெருக்கமாய் நீர்த்துளிகளைச் சிந்திக்

கொண்டு, இவர்கள் பக்கத்தில் மெல்ல, மெல்ல தொடர்ந்து வருகின்றன. வெயிலிற் காய்கின்ற, நெருப்பைப்போல் சுடுகின்ற பருக்கைக் கற்கள், இவர்களது துய்ய செந்தாமரை மலர்போன்ற திருவடிகள் படும் பொழுதெல்லாம், தேனை உடைய மலர்கள் போலவே குழைந்து தோய்கின்றன.

இவர்கள் செல்லும் இடங்களில் எல்லாம், மரம், புல் அனைத்தும், இவர்களை வணங்குவன போல் சாய்ந்து நிற்கின்றன. இக் காரணங்களால் இவர்கள் தருமமே ஆவர்' என்று அநுமன் எண்ணுகின்றான்.

### தன் அநுபவம்

இஃதன்றியும் தன்னிடத்தே நிகழ்கின்ற அநுபவத்தையும் அவன் காணத் தவறவில்லை. அதன் காரணம் ஆக,

"துன்பினைத் துடைத்து, மாயத் தொல்வினை தன்னை நீக்கி,
தென் புலத்து அன்றி, மீளா நெறி உய்க்கும் தேவரோ தாம்?
என்பு எனக்கு உருகுகின்றது; இவர்கின்றது அளவு இல் காதல்;
அன்பினுக்கு அவதி இல்லை; அடைவு என் கொல்? அறிதல் தேற்றேன்."

என்கிறான்! (கம்பன், 3763)

### வருக! வருக! வருகை நல்வரவாகுக

இவ்வாறெல்லாம் எண்ணுகின்ற அநுமன், இராம, இலக்குவர் முன்சென்று, 'கவ்வை இன்று ஆக, நுங்கள் வரவு' எனக் கூற, இராமனும், 'எவ்வழி நீங்கியோய்! நீயார்?' என வினவுகிறான்.

### தன் வரலாறு கூறல்

இதற்கு அநுமன், தான் காற்றுத் தேவற்கு அஞ்சனை வயிற்றில் வந்தவன் என்றும், தன் பெயர் அநுமன் என்றும், அந்த மலையில் இருந்து வாழும் சூரிய புத்திரனுக்கு ஏவல் செய்பவன் என்றும், அவர்கள் வருகையைக் கண்ட அவன் துன்ப முற்று ஏவ, செய்தி தெரிந்து கொள்ளத் தான் வந்ததாகவும் கூறுகிறான்.

அநுமனின் பேசும் திறமையைத் தெரிந்துகொண்ட இராமன், இலக்குவனிடத்து அவனை வெகுவாகப் பாராட்டு கிறான்.

### இராமன் வினா

பின்னர் அநுமனைப் பார்த்து,

'எவ்வழி இருந்தான், சொன்ன கவிக் குலத்து அரசன்? யாங்கள்,
அவ்வழி அவனைக் காணும் அருத்தியால் அணுக வந்தேம்;
இவ்வழி நின்னை உற்ற எமக்கு, நீ இன்று சொன்ன
செவ்வழி உள்ளத்தோனைக் காட்டுதி, தெரிய' என்றான்.
(கம்பன், 3770)

### யாம் பெற்ற பெருந்தவப்பேறு

அநுமன், இராம இலக்குவரைப் பார்த்து, முகமன் கூறி, சுக்கிரீவனைக் காண்பதற்கு அவர்கள் வந்திருப்பார் எனின், அந்த சுக்கிரீவன், ஐம்புலன்களையும் அவித்துச் செய்த பெருந்தவம் உடையவன் ஆவான் என்று குறிப் பிடுகிறான்.

அஃதன்றியும், சுக்கிரீவனை, இந்திரன் புதல்வனாகிய வாலி, இரக்கம் இன்றி, கோபித்துக்கொள்ள, துன்பத்

திற்கு ஆளாகி, இந்தக் குன்றில் தன்னேடு இருக்கிருன் எனவும், அவன்பால் செல்வம் வருவதுபோல் இராம, இலக்குவர் வந்திருக்கிருர்கள் என்றும் கூறி, உலகில் செய்யக்கூடிய தருமங்கள் அனைத்திலும், யமன் போன்ற பகைவனைக் குறித்து நடுங்குபவர்க்கு அபயம் நல்கும் அறத்தைவிட நல்லது உண்டோ? என்று பொதுவாக வினவி, சுக்கிரீவனுக்கும் தனக்குமாகச் சேர்த்து இராமனிடம் அபயம் கோருகிருன். இதனைக் கம்பன்,

''எம்மையே காத்திர்'' என்றற்கு எளிது அரோ? இமைப்பு இலாதோர்
தம்மையே முதல் இட்டு, ஆன்ற சராசரம் அமைந்த ஆற்றல்
மும்மை ஏழ் உலகும் காக்கும் முதல்வர் நீர்; முருகற் செவ்வி
உம்மையே புகல் புக்கேமுக்கு, இதின் வரும் உறுதி உண்டோ?'
(கம்பன், 3774)

என்ற அநுமன் கூற்றில் அமைப்பான்.

யாதெனச் சொல்லுகேன் யான்?

சுக்கிரீவன் இடத்து, இராம, இலக்குவர் பற்றி தான் என்ன சொல்ல வேண்டும், எப்படிச் சொல்ல வேண்டும் என்று அநுமன் கேட்க, இலக்குவன்,

''............மரபுளி, வாய்மை யாதும் சோர்வு இலன்,
நிலைமை எல்லாம் தெரிவுறச் சொல்லல் உற்ருன்''
(கம்பன், 3775)

இலக்குவன் சொன்னதை, முழுமையாகக் கேட்ட அநுமன், நெடிது உவந்து அடியில் தாழ்கிருன்.

அதைக் கண்ட இராமன், அந்தணன் சிறுவன், தன் அடி தாழ்தல் முறையன்று, எனக் கூற, அநுமன், 'பதுமச்

செங்கண் ஆழியாய்! அடியனேனும் அரிக் குலத்து ஒருவன்' என்று கூறி, தன் பெரிய வானர உருவத்துடன் நிற்கிருன்.

வில்லாளன் வியப்பு

அதனைக் கண்ட இராமன், மீண்டும் இலக்குவனிடம் அநுமனைப் பற்றி வியந்து பேசுகிருன்.

அப்படிப் பாராட்டும் பொழுது, இராமன் கூறிய தாகக் கம்பன்,

"நல்லன நிமித்தம் பெற்றேம்; நம்பியைப் பெற்றேம்; நம்பால்
இல்லையே, துன்பம் ஆனது; இன்பமும் எய்திற்று; இன்னும்,
வில்லினுய்! இவனைப் போலாம் கவிக் குலக் குரிசில் வீரன்
சொல்லினல் ஏவல் செய்வான்; அவன்நிலை சொல்லற் பாற்ரே?"
(கம்பன், 3784)

என்று அமைப்பான்.

இருத்திர் ஈண்டு

"சற்று நேரம் நீங்கள் இங்கே இருங்கள். நான் சுக்கி ரீவனை அழைத்து வருகின்றேன்'' என்று அவர்களிடம் கூறி விட்டு அநுமன் விரைந்து போகிருன்.

உளங்கொளக் கூறுவான்

அப்படிச் சென்ற அநுமன், சுக்கிரீவனிடத்து வந்து, இராம இலக்குவர் பற்றித் தன் மனம் எடை போட் டதையும், அவர்கள் வரலாற்றை இலக்குவன் கூறியதையும், விரிவாக எடுத்துச் சொல்லி,

'தந்திருந்தனர் அருள்; தகை நெடும் பகைஞன் ஆம்
இந்திரன் சிறுவனுக்கு இறுதி, இன்று இசை தரும்;
புந்தியின் பெருமையாய்! போதரு' என்று உரை
செய்தான்-
மந்திரம் கெழுமு நூல் மரபு உணர்ந்து உதவுவான்.
(கம்பன், 3800)

சுக்கிரீவன் அநுமனைப் பாராட்டிவிட்டு, அவனுடன் வந்து இராமனைக் காண்கிறுன். அப்படிக் கண்ட சுக்கிரீவன் செய்கையையும், சிந்தனையையும் கம்பன்,

நோக்கினுன்; நெடிது நின்றுன்; 'நொடிவு அருங் கமலத்து
அண்ணல்
ஆக்கிய உலகம் எல்லாம், அன்று தொட்டு இன்றுகாறும்,
பாக்கியம் புரிந்த எல்லாம் குவிந்து, இரு படிவம் ஆகி,
மேக்கு உயர் தடந்தோள் பெற்று, வீரர் ஆய விளைந்த!'
என்பான். (கம்பன், 3803)

தேறினன்—'அமரர்க்கு எல்லாம் தேவர் ஆம் தேவர்
அன்றே,
மாறி, இப் பிறப்பில் வந்தார் மானிடர் ஆகி மன்னே;
ஆறுகொள் சடிலத்தானும், அயனும், என்று இவர்கள்
ஆதி
வேறு உள குழுவை எல்லாம், மானுடம் வென்றது'
அன்றே!
(கம்பன், 3804)

என நினைந்தான், என்றும் பாடுவான்.

இராமனை நெருங்கிய சுக்கிரீவனைக் கண்டு, இராமன் மனத்தில் அன்பு மிக, புனை மலர்த் தடக்கை நீட்டி, "போந்து இனிது இருத்தி" என்கிறுன்.

### இன்னுரை அமர்ந்தார்

பின் சுக்கிரீவன் இராமனேடு உரையாடுகின்றுன் இராமன் தன்பால் வந்தது, தன்னுடைய விதியின் பலன்

என்றும், தனக்கு, கிடைக்கக் கூடாதன இனி எவையும் இல என்றும் சொல்ல, இராமன் அவனைப் பார்த்து, மை அறு தவத்தின் வந்த சபரி, இரலைக் குன்றத்தில் இருப்ப தாகச் சொன்னாள் என்றும், தாங்கள் உற்ற கையறு துயரம் சுக்கிரீவன் துணையினால் கடப்பது கருதி வந்த தாகவும், அத் துயரம் அவனால் தீர்க்கப்பட வேண்டும் என்றும் சொல்கிறான்.

புகல் புக்கோரைப் போற்றுதல் கடனால்

சுக்கிரீவனோ, தன்னுடைய அண்ணன், தன்னிடத்து முரண் கொண்டு, உலகெங்கும் தன்னைத் துரத்திவர, அந்த மலையில் அவன் ஒதுங்கி வாழ்வதாகவும் கூறி, 'ஆர் உயிர் துறக்கல் ஆற்றேன்; சரண் உனைப் புகுந்தேன்; என்னைத் தாங்குதல் தருமம்' என்கிறான்.

இப்படிச் சுக்கிரீவன் சொன்ன உடனேயே இராமன்,

..................................இரங்கி நோக்கி,
''உன் தனக்கு உரிய இன்ப துன்பங்கள் உள்ள,முன்நாள்
சென்றன போக, மேல் வந்து உறுவன தீர்ப்பல்; அன்ன
நின்றன, எனக்கும் நிற்கும் நேர்''...........
(கம்பன், 3811)

என்கிறான். மேலும்,

'மற்று, இனி உரைப்பது என்னே? வானிடை, மண்ணில், நின்னைச்
செற்றவர் என்னைச் செற்றார்; தீயரே எனினும், உன்னோடு
உற்றவர் எனக்கும் உற்றார்; உன் கிளை எனது; என் காதல்
சுற்றம், உன் சுற்றம்; நீ என் இன் உயிர்த் துணைவன்' ...
(கம்பன், 3812)

என்றும் கூறுகிறான்.

விம்மல் ஒழிந்தது; வேதனை தவிர்ந்தேம்

இராமன் இவ்வாறு சொன்னதும், குரக்குச் சேனை ஆர்த்தது; அநுமன் உரோமப் புளகங்கள் உடலில் போர்த்தான்; விண்ணோர் பூவின் மாரி தூர்த்தனர், என்று கம்பன் பாடுவான். (கம்பன், 3813)

அஞ்சன வண்ணன் அடியிணையில், அஞ்சனை சிங்கம் தாழ்ந்து,

> ..............................................'வாழி!
> தூண் திரள் தடந்தோள் மைந்த! தோழனும் நீயும் வாழி!
> ஈண்டு, நும் கோயில் எய்தி, இனிதின் நும் இருக்கை காண
> வேண்டும்; நும் அருள் என்?' என்றான்; வீரனும், 'விழுமிது' என்றான்
> (கம்பன், 3814)

இதற்குப் பிறகு எல்லோரும் புதுமலர்ச்சோலை ஒன்றில் சென்று சேர்கின்றனர்.

இராமனை, சுக்கிரீவன் விருந்துண்ண அழைக்கிறான்.

**நீயும் பிரிந்தனை?**

அப்படி விருந்துண்ணும் வேளையில் 'கனியும், கந்தமும், காயும், தூயன இனியயாவையும்,' ஆடவரே கொணரக் கண்ட இராமன், இல்லத் தலைவி அங்கு இல்லாமை கண்டு, வீட்டின் தலைவி விருந்து படையாமையால், மெய்ம்மை அன்பினொடு, இருந்து, நோக்கி, நொந்து, சிந்தித்தவனாய்,

> "பொருந்து நன்மனைக்கு உரிய பூவையைப்
> பிரிந்துளாய் கொலோ? நீயும் பின்?"
> (கம்பன், 3820)

என வினவுகிறான்.

இதற்கு விடை கூறும் முகத்தான், அநுமன் குறுக்கிட்டு, வாலி சுக்கிரீவன் வரலாற்றை விவரிக்கிருன்.

**வாலி சிறப்பை வல்லன் கூறுவான்**

முதன் முதலாக வாலியின் ஒப்பற்ற சிறப்பை விரிவாக விளக்குகிருன்:

''வாலி, வரம்பில்லாத ஆற்றல் உள்ளவன்; நான்கு வேதங்களையும் கற்றுத் துறைபோய முற்றறிவாளன். முக்கண்ணன் அருள் முற்றும் பெற்றவன்.

முன்னர் தேவாசுரர் பாற்கடலைக் கடைந்தபோது, தளர்ந்தமை கண்டு, அவர்களை அப்புறப்படுத்தித் தான் ஒருவனுகவே மந்தரமலை மெலிந்து உரு தேய, சுற்றிய நாகத்தின் நடு உடம்பும் தேயக் கடைந்து, அமிழ்து எடுத்து அவர்க்கு அளித்தவன்.

நீர், நெருப்பு, காற்று, நிலம் ஆய நான்கு பூதங்களின் ஆற்றல் அனைத்தும் ஓரிடம் தொக்காற்போன்ற வன்மையன். அலைகளை உடைய, ஏழு கடற்கும் அப்பாலைக்கு அப்பாலதாய சக்கரவாளக் கிரியினின்று இந்த கிஷ்கிந்தை மலைக்குத் தாவுவான்.

பொரக் கருதித் தன்னிடம் வருவாரது வலிமையில் செம்பாதி இவன் மாட்டுச் சேரும். சிவபெருமானது தாள், நாளும் மறவா நற்சிந்தையன்.

அவன் முன்னர் காற்றும் செல்லாது. அவன் மார்பில் கந்தன் கைவேலும் பாயாது. அவன் வால் செல்லாத இடம் அல்லது, இராவணன் கோல் செல்லாது.

அவன் புடை பெயர்வனேல், மேரு முதலிய பெருமலைகளும் வேரொடும் பறியும். அவனுடைய பரிய தோள்களால், கரு மேகங்களும், வானமும், விண் சுடர்களும் மறைபட்டுப் போம்.

கூர்ங்கோட்டால் குவலயத்தைக் குத்திச் சுமந்த வராகமும், மந்தரமலே பாற்கடலில் அழுந்துரு வகை தாங்கிய கூர்மமும்(ஆமை) இவனுக்கு ஒப்பாவன. மாவலி இரணியன் மார்பு இடந்த மடங்கலும், இவனே எதிர்த்து வெல்லும் ஆற்றல் இல்லது.

ஈரைஞ்ஞூற்று இருந்தலேப் பரப்பில் இவ்வுலகம் தாங்கும் ஆதிசேஷனேவிட இவன் மேலானவன். அது இருந்து தாங்க, இவன் நடந்து தாங்குவான்.

ஒவா ஒலியதாய்க் கடல் சலிப்பதும், காற்று இடம் பெயர்வதும், கதிரவன் ஒற்றை ஆழியில் உலகைச் சுற்றலும், இவனிடத்துக் கொண்ட அச்சத்திஞல் அன்றி வேறு இன்று.

விண்ணே இடிக்கும் தலேய மேரு தன்னேப் பொடிக்கும் தடக்கை ஆற்றல் கொண்ட ஈரேழைந்து வெள்ளத் தானேயன். கூற்றுவன் இவன் ஆளுகைப் பரப்பில் குறுக அஞ்சுவான். நெடிது உயிர்ப்பான்.

இவன் வலிக்கு அஞ்சி வானத்து இடியும் உராது. வயவெஞ்சீயமும் பிற விலங்குகள் நெஞ்சு அதிர முழங்காது. சண்டமாருதமும் மெல்லெனத் தவழும்.

அறச்சார்வில்லா அந்த இராவணன் தாளும், தோளும் தகைபெற முடக்கி, வாலிடை இறுக்கி, வானிடை இவன் பறந்தபோது, அவ்விராவணன் வாய் கான்ற குருதி வழியாத இடம் இல்லே.

வானவர் கோனின் வரப்பெரும் புதல்வன். வானத்து நிலவின் வண்ண மேனியன். கூற்றின் ஆற்றலேக் குமைக்கும் திறலன். இந்த சுக்கிரீவற்கு முன்னவஞய்த் தோன்றியவன் அந்த வாலி.

**பகை கொண்ட தன்மை விரிப்பான்**

இவ்வாறு வாலியினுடைய ஆற்றலை விரிவாகக் கூறிய அநுமன், சுக்கிரீவன் வாலியிடம் பகைமை கொண்ட காரணத்தையும் விரிவாகவே கூறுகிறான்.

அநுமன், "அத்தகைய வாலி அரசனாகவும், சுக்கிரீவன் இளவரசன் ஆகவும், ஆட்சி செய்து வரும் காலத்தில் மாயாவி என்ற அசுரன் வாலியோடு போர் செய்ய வந்தான்.

வாலி அவனை அடித்துத் துரத்த, அஞ்சி ஓடிய அம் மாயாவி ஒரு பெரிய பிலத்துக்குள் ஓடி ஒளிந்தான்.

அது கண்ட வாலி சுக்கிரீவனைப் பார்த்து 'நான் அவனைத் துரத்திச் சென்று விரைவில் கொன்று விட்டுத் திரும்புவேன். அதுவரை நீ இங்கே காவல் இரு' என்று சொல்லிவிட்டுப் பிலத்துக்குள் தானும் புகுந்தான்.

இருபத்தெட்டு மாதங்கள் கழிந்தன. மாயாவியைக் கொல்லும் முயற்சியில் வாலி ஈடுபட்டிருக்க, காவல் மேவிய சுக்கிரீவன், நடந்தன அறியாது கலங்கி துன்பம் அடைந்தான். அப்பொழுது என் போன்றவர்கள் அவ் விடம் அடைந்து, அழுது கொண்டிருக்கும் சுக்கிரீவனைத் தேற்றி, 'நீ அரசுப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்று வேண்டிக் கொள்ள, பரிவுடைய நெஞ்சினன் ஆகிய சுக்கிரீவன் 'அது தவறு ஆகும்' என்று கூறினான். அப்படிக் கூறியதோடன்றித் தானும் பிலத்துக்குள் சென்று அண்ணனைத் தேடுவதாகவும், அவனைக் கொன்றுள்ள பகைவனைக் கொல்வதாகவும், அப்படிக் கொல்ல இயலாமல் போனால், போரில், தான் இறப்பதாகவும் கூறி அப் பிலத்துக்குள் நுழையத் தலைப் பட்டான்.

அப்பொழுது அவனைத் தடுத்த நாங்கள், அமைதிப் படுத்தி, அவன் துயரத்தைப் போக்கி, அவனிடம் ஆட்சிப் பொறுப்பை ஒப்புவித்தோம்.

சுக்கிரீவன் தானாகவே ஆட்சிப் பொறுப்பை எடுத்துக் கொண்டவன் அல்லன். அது அப்படி இருக்க, அந்த பிலத்துவாரத்தின் வழியாக மாயாவி வெளிவந்து விடுவான் என்று அஞ்சிய நாங்கள், மேருமலை நிகர்த்த வேறுள குன்றுகள் எல்லாம் ஒன்றுசேர, அடுக்கி அத் துவாரத்தை அடைத்துவிட்டோம்.

நாங்கள் சுக்கிரீவனிடம் அரசாட்சியை ஒப்படைத்து, அவன் ஆளும் வேளையில், பிலத்துள் சென்ற வாலி மாயாவி யைக் கொன்றுவிட்டு வெளியில் வந்து பிலவாய் அடைக்கப் பட்டு கிடப்பது கண்டு சினந்து "தம்பியாகிய சுக்கிரீவன், பில வாயிலில் இருந்து அளித்தவாறு நன்று" என்று சொல்லி, தடைகளைத் தன் காலால் வேகமாக எற்ற அவற்றுள் சில விண் தடவின, சில கடலுள் ஆழ்ந்தன, சில பொடிந்து மண் துகள் ஆயின.

பிலத்தை விட்டு வெளி ஏறிய வாலி, எவரும் அஞ்சும் படியாகச் சீறினான். இம் மலை உச்சிக்கு வந்து சேர்ந்தான். சத்தியமான வழியில் செல்பவனாகிய, மனத்தில் வேறு பாடு இல்லாதவன் ஆகிய சுக்கிரீவன், வாலியைக் கண்டு, வந்து அடி வணங்கித் தாழ்ந்தான்.

அப்படி வணங்கியவனை வாலி பார்த்துச் சினக்க சுக்கிரீவன், 'ஐயா! நீர் வாராததால் உமக்கு என்ன நேர்ந் ததோ என்று வருந்தி, உம்முடன் வந்து சேர எண்ணிய என்னைப் பார்த்து, உம்முடைய அமைச்சர்கள் அனைவரும் நான் சம்மதியா இடத்தும் "எங்களைக் காத்தல் உம் கடன்" என்று அடிதொழுது, என்னை இப் பொறுப்பினை ஏற்குமாறு செய்து விட்டனர். அவர்கள் ஆணையை

மறுக்க அஞ்சி, இவ்வாட்சிப் பொறுப்பை அடைந்து, நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நாணமில்லாத என் குற்றத்தைப் பொறுத்துக் கொள்வீராக'' என்று சுக்கிரீவன் கூறவும் மனம் கோணியவன் ஆகிய வாலி, பெரிய கொடிய வார்த்தைகளைச் சொன்னான்.

அதனோடும் அமையாமல், முன் கடல் கடைந்த தன் வன் கரங்களால், சுக்கிரீவன் உடலை இறுகப்பற்றி உடல் கடைந்தான். சுக்கிரீவன் பெரிதும் வருந்தினான்.

வாலியினால் அடிபட்டுப் பெருந்துயர் அடைந்த சுக்கிரீவன் பயந்து ஓடினான்.

### இரலைக் குன்றத்து இனிது இருந்தனன்

வாலிக்குப் பயந்த சுக்கிரீவன் இந்த இரலைக் குன்றில் வந்து தங்கினான். இந்த வெற்பில் வந்து இவன் தங்கியமைக்கும் ஓர் காரணம் உண்டு. இவ்விடை வாலி வாரான். ஏனெனில், அவன் முந்தை உற்றதோர் சாபம் உண்மையால்.

### அஞ்சல் என்ற ஆறுதல்மொழி

அது மட்டும் அன்று.

உருமை என்று இவற்கு உரிய தாரம் ஆம்
அரு மருந்தையும், அவன் விரும்பினான்;
இருமையும் துறந்து, இவன் இருந்தனன்;
கருமம் இங்கு இது; எம் கடவுள்!'' என்றனன்.

(கம்பன், 3852)

வாலி, சுக்கிரீவர் வரலாற்றினை இவ்வாறே விரிவாக அநுமன் எடுத்துக் கூறக் கேட்ட இராமன், வாலியைக் கொல்வதாகச் சூளுரைக்கிறான்.

இதனைக் கம்பன்,

'உலகம் ஏழினேடு ஏழும் வந்து, அவன் உயிர்க்கு உதவி,
விலகும் என்னினும், வில்லிடை வாளியின் வீட்டி,
தலைமையோடு, நின் தாரமும், உனக்கு இன்று தரு
வென்;
புலமையோய்! அவன் உறைவிடம் காட்டு' எனப்
புகன்ருன்.

என்று பாடுவான். (கம்பன், 3855)

விம்மல் ஒழிந்தான்

இராமன் இவ்வாறு சொன்ன அளவிலே, சுக்கிரீவன் பெரிய மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி, முன் தான் மூழ்கிக் கிடந்த துயரத்திற்கு ஒரு முடிவு வந்தது என்று நம்புகிருன்.

'விழுந்ததே இனி வாலி தன் வலி!' என்று நினைக்க மகிழ்ந்தவனுய், தன்னவரோடு தனித்து இருந்து ஆலோசிக்கக் கருதி, இராமனிடம் "யாம் எண்ணுவது உண்டு" என மொழிந்து செல்கிருன்.

ஆற்றல் அயிர்த்தனை

தனித்து, தன் அமைச்சர்களோடு கூடிச் சுக்கிரீவன் ஆலோசனை நடத்தும்பொழுது, அநுமன் சுக்கிரீவனைப் பார்த்து, "உன் உள்ளத்தில் உள்ளதை நான் நன்கு அறிவேன். வாலியைக் கொல்வதற்கு இந்த வீரர்களிடத்து ஆற்றல் உண்டு கொல்? என்று அயிர்க்கின்றனை. நான் இப்பொழுது சொல்வதைக் கேட்டு, அவற்றைக் கடைப் பிடிப்பாயாக" என்று கூறி மேலும் சில கூறத் தொடங்கு கிருன்.

காமம் செப்பாது, கண்டது மொழிவேன்

"கண்டது மொழிவேன். இவ்விராமனது தடக்கையில் தாளில் சங்கு சக்கரக் குறிகள் உள்ளன. உத்தம புருஷ இலக்கணங்கள் அனைத்தும் இவரிடத்து அன்றி, பிறரிடத்துக் காணேன். இவ்வுலகம் தன்னுள் அறந்தலை நிறுத்தப் பிறந்த இராமனே அத் திரு நெடுமால்.

திரிபுரம் தீயெழ விழித்த, கன்றிய காலனைக் காலால் கடிந்த, அக் கண்ணுதற்பெருமான் தருவில்லினை முறிந்து விழச்செய் ஆற்றல், அந்த மாயவனுக்கு அன்றி பிறர்க்கு வாய்ப்பதோ?

எற்புத் தொளை தொறும் அற்பு நீர் பாயும்

தவிர,

என்னை ஈன்ற வாயுதேவன் என்னிடம் 'மூன்றுலகும் ஈன்றானை முன் ஈன்றானிடத்து, முழு மனத்தோடு அன்பு பூண்டொழுகு. ஆற்றத்தக்க தவமும் அதுவே. அவ்வாறு நீ அன்பு பூண்டொழுகுதல் உனக்கு மட்டும் அன்றி, ஈன்ற எனக்கும் பெரும் பயன் தரும்' என்றான்.

'அவ்வாறானவனை எவ்வாறு அறிவேன்?' என நான் வினவிய போது, 'துன்பம் தோன்றும் போதெல்லாம் உடன் தோன்றி அவை நீக்கும் அவன். அவனைக் காண்டற்கு அன்பே சான்று ஆகும்' என்றும் கூறினன்.

அவ்வாறே இவ்விராமன் கண்ட அளவில் எனக்கு என்புகள் உருகின. அளவு இல் காதல் இவர்ந்தது. எனவே அன்பினுக்கு அவதி இல்லை என்பது ஓர்ந்தேன். இவ் விராமனே திருமாலாம் என்பதும் தெளிந்தேன்.

### உபாயம் ஒன்று உண்டால்

அன்னவன் அருந்திறல் கண்டறிந்தே தீர வேண்டுமாயின், அதற்கும் ஓர் உபாயம் உண்டு.

இங்கே நிற்கின்ற ஏழு மராமரங்களில் ஒன்றையேனும் அவ்விராமன் விடு கணை துளைக்கும் ஆயின், அதிலிருந்தே அவன் ஆற்றலை நீ தெரிந்து கொள்ளலாம்'' என்று கூறுகிருன்.

### உரை தகுவது ஒன்று உண்டால்

அநுமனின் இக் கூற்றை ஆமோதித்த சுக்கிரீவன் இராமனை அடைந்து, 'ஐய! உம்மிடை உரைக்கத் தகுவது ஒன்று உளது' என்ன, இராமனும் 'உரைத்தி அஃது' என்கிருன்.

'விண் விழா வகை நிறுத்திய தூண்கள் என்ன நிற்கும் இவ் வேழ் மராமரங்களில் ஒன்றினை உருவ, நின் உருவ வெங்கணை போக்கின், என் மனத்து இடரும் போம்' என்கிருன்.

சுக்கிரீவன் சொன்ன சொல் செவியிடை ஏற்ற செவ்வியோன், 'நன்று' என முறுவல் செய்தான்; நாண் பூட்டினுன். ஆய மாமரங்கள் அனைத்தையும் நோக்கினுன். சேண் உளோர்களின் செவிகளும் பொத்துற, ஏய்வு இலாததோர் பெரும்பயம்தான் வர, வில்லின் நாண் எறிந்தான்.

வெய்ய வாளி ஒன்றை ஆளுடை வில்லியும் விட்டான்.

அவ்வம்பு எதிர் நின்ற ஏழு மராமரங்களையும் பொதுத்துப் புறம் போந்து, கீழ் ஏழ் உலகும் தொளைத்து, அடுத்து ஏழ் எனத் தொகைய எவையும் இன்மையால் மீண்டது.

அருக்கன் சேய் அதனைக் கண்டான். அளவிலா வியப்பில் ஆழ்ந்தான். ஆற்றல் சோதிக்கக் கருதிய தன் அறியாமைக்குத் தானே நாணினன்.

ஆர்த்து எழுந்த அன்பு, வார்த்தைகளாக வெளிப் பட்டது.

இசைச் சொல் அளவைக்கு நா நிமிரான்

'வையம் நீ! வானும் நீ! மற்றும் நீ! மலரின்மேல்
ஐயன் நீ! ஆழிமேல் ஆழி வாழ் கையன் நீ!
செய்ய தீ அனைய அத் தேவும் நீ! நாயினேன்,
உய்ய வந்து உதவினாய், உலகம் முந்து உதவினாய்!
(கம்பன், 3883)

என்றும்,

'என் எனக்கு அரியது. எப்பொருளும் எற்கு எளிது அலால்?
உன்னை இத்தலை விடுத்து உதவினார், விதியினார்;
அன்னை ஒப்புடைய உன் அடியருக்கு அடியென் யான்;
மன்னவர்க்கு அரச!' என்று உரைசெய்தான்—வசை
இலான்.
(கம்பன், 3884)

இத்தகைய ஆற்றருஞ் செயலைக் கேட்டும் அறியாத கிளர் மனக் குரங்குகள் தலைவர்கள்,

ஆடினார்; பாடினார்; அங்கும் இங்கும் களித்து
ஓடினார்; உவகை இன் நறவை உண்டு உணர்கிலார்;-
'நேடினோம் வாலி காலனை' எனா, நெடிது நாள்
வாடினார் தோள் எலாம் வளர, மற்று அவர் எலாம்,
(கம்பன், 3885)

என்று கம்பன் கூறுவான்.

### துந்துபி வரலாறு

பின்னர் அவ்விடை இருந்த மலையின் மேல் மலை எனக் கிடந்த என்புக் குவை கண்ட இராமன், சுக்கிரீவனை நோக்கி 'அன்பு உலப்பு அரியவ! இவ்வென்புக்குவை எதனது? எடுத்துரை' என்ன, சுக்கிரீவன் துந்துபி வரலாற்றைக் கூறத் தொடங்குகிறான்.

துந்துபி என்னும் சுடு சினத்து அவுணன், தன்னொடு பொருவார் தேடித் திரிந்து, இறுதியில் வாலிபால் வந்து சேர்ந்தான் எனவும், இருவர்க்கும் இடையே நடந்த போரில் வாலி துந்துபி உடலைப் பற்றி விண் எறிய, குருதி கான்று, உயிர் குலைந்து மலையில் வீழ்ந்து மாண்டு ஒழிந்தான் என்றும், துந்துபி உடலம் சிந்திய குருதியால், தசைத்துண்டங்களால், தன் ஆச்சிரமம் தூய்மை கெட்டது கண்ட மதங்க முனி சாபம் இட்டனர் என்றும் கூறி அவர் இட்ட சாபமே தனக்குத் சார்வு ஆக அமைந்ததையும் சுக்கிரீவன், விரிவாகக் கூறுகிறான்.

அனைத்தையும் கேட்ட இராமன் தன் இளவலை நோக்கி "இதனை, மைந்த! நீ ஒட்டு" என்கிறான்.

இளவலும் ஆணை ஏற்று கழல் விரலின் உந்துகிறான். அக்குவை விரிஞ்சன் (பிரமன்) நாடு உற்று மீள்கிறது.

### நலன் காண் நாயக! கலன் காண்

இதன் பின்னர் சுக்கிரீவன் "நாயக! நின்னிடை உணர்த்த ஒன்று உளது. உரைக்கவோ?" என்று கூறி குறிப்பறிந்து கூறலுறுகிறான்.

"முன்னோர் நாள், இவ்வழி யாங்கள் இயைந்து இருந்தோம். வானிடை நெடுந்தொலைவில் ஒரு விமானம் செல்வது கண்டோம். அவ்விமானம் கொடிய இராவணற்கு

உரியது. அவ் விமானத்திடை நின்று எழுந்த துன்பக் கதறல் ஒலி கேட்டோம். யார் என அறிகிலோம். ஒரு வேளை அது நும் தேவியாய் இருந்திருக்கக் கூடும்.

அவள் யாது கருதினளோ அறியக்கூடவில்லை. தான் அணிந்திருந்த நகைகளை ஒரு துகிலில் பொதிந்து அக் கிழியை இவ்விடை இட்டனள். கீழ் வீழ் முன் கைகளால் ஏந்திக் கண்டோம்.

அப் பொதியினைப் பத்திரமாக வைத்துள்ளோம். அதனைக் கொணர்கிறோம். கண்டு கூறுக" என வேண்டி கைத்தலத்து அன்னவை கொணர்ந்து காட்டுகிறான்.

காட்டிய கலன்கள் சீதை மேனியினை அலங்கரித் தனவே என்பதனைத் தெரிவுற நோக்கிய இராமன், தீயிடு மெழுகு என உருகுகின்றனன். சுக்கிரீவன் தேறுதல் மொழிகள் தெளிந்து கூறுகின்றான்.

துயரொடு அயர்வும் தவிர்தி தூயவ!

"ஐயா! திருமகள் அனையாளை வெருவரச் செய்த அவ் வெய்யவன் தோள்கள் இருபதும், ஈரைந்து தலைகளும் உன் ஒரு கணைக்கு உய்தலும் கூடுமோ? அவன் கிடக்க. இவ்வேழொடேழு உலகமும் நீ சீறின் நிற்க வல்லவோ? துயர் உழந்து அயிர்தல் தூயவ! தவிர்க.

எதற்கு யாங்கள் இருப்பது? இப் பதினான்கு உலகங் களில் தேவியை அவன் எங்கு சிறை வைத்திருப்பினும், தேடிக்கொணர்ந்து திருமுன் நிறுத்துவோம். அம்மட்டோ? அவன் ஐயிரு தலைகளையும் நொய்தாகப் பற்றித் திருகிப் பறியோமோ? மீட்டும் உரை வேண்டுவன இல்லை. ஈட்ட மேலவ! காட்டுவோம், செயலில்.

பல்கதிர் ஆழியான், பதும ஆதனத்தான், பாவை பங்கினன் ஆய அம் மூவரும் ஒன்று சேர்ந்தால் ஒருக்கால்

உனக்கு நிகர் ஆதல் கூடும். ஆனால் தனித்தனி ஒப்பாவரோ?

"ஐய! ஐயம் தவிர்தி. நொய்தில் இவை முடிப்போம்" என்றெல்லாம் கூறியதோடு அமையாது,

'என்னுடைச் சிறு குறை முடித்தல் ஈண்டு ஒரீஇப்
பின்னுடைத்து ஆயினும் ஆக! பேதுறும்
மின் இடைச் சனகியை மீட்டு, மீள்துமால்—
பொன் உடைச் சிலையினாய்!—விரைந்து போய்,
(கம்பன், 3918)

என்று கூறுகிறான்.

தற்கிரங்குவான்

இராமன் சிறிது தெளிகிறான்; எனினும் கலக்கம் தீர்ந்திலது. 'கணவன் இருக்கவேயும் கலன் கழித்தனளே' என்று நோகிறான். "நாண் சுமந்த வில்லினை நான் சுமந்து வாழ்வதோ? கரும்பு அழி சொல்லியைப் பிரிந்து பெரும் பழி சூடினேன். இன்னமும் இருந்து ஆவது என்ன?" என்று அலமருகின்றான்.

கதிர்ச் செல்வன் கனிவுரைகள் பல கூறி கலக்கம் தவிர்க்கிறான்.

பின்னர், இராமன் "இப் பழி தீர யான் மாய்ந்து போதலே நேரிது. ஆயினும் அதன்முன் நின் குறை முடிப்பேன்" என்று சொல்கிறான்.

கோறல் மேல் கொள்க

இவர்கள் இவ்வாறு உரையாடிக்கொண்டிருக்கும் பொழுது அநுமன் அவ்விடை வந்து வணங்கி, "குன்று

நேர் தோளினுய்! கூற ஒன்று உள்ளது'' என்று கூறி, தன் கருத்தைத் தெரிவிக்கத் தொடங்குகிருன்.

''கொடுந் தொழில் வாலியைக் கொல்ல வேண்டும்; கோமகன் ஆக கதிரவன் மகன் முடி சூட்டப் பெறல் வேண்டும். நாடு, படை, அதிகாரம் ஆகியன இவன் கைவசப்படவேண்டும்.

கைவளர் நெடும் படை

படை தன் வயம் ஆனுல்தான், அப் படையினர் துணை கொண்டு சீதையைத் தேடும் முயற்சி தலைப்படுதல் கூடும்.

எம்மவர் ஆற்றல் எடுத்து இயம்பினும் சொல்லில் அடங்கா. இவர்கள் எவ்வுலகங்களையும் இமைப் பொழுதில் சென்று கூடுவர். கண்டு, மகிழ்ந்தன கொண்டு மீள்வர். தப்பாமல் சாரும் வினைபோல, செயலில் தளரார்.

சீதையை அவன் சிறைவைத்துள்ள இடம் வானிலோ, மண்ணிலோ, வெற்பிலோ, நகரத்திலோ, மானுடர் ஆகிய நாம் இது பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ள இயலாமல் இருக்கின்ருேம். ஆதலால் அன்னதே அமைவது ஆம் என, நீதியாய்! நினைந்தேன்'' என்று நிகழ்த்துகிருன்.

தனுவின் செல்வனும் 'தக்கதே' என்று கூறி 'போதும் நாம் வாலிபால்' என்ன அனைவரும் போதல் மேயினர்.

என்னையோ செய்வது?

எல்லோரும் ஒரு சோலை வழியாகச் செல்கின்றனர். வாலி வாழ் மலையினை வந்து அணுகுகின்றனர். ஓரிடத்து அமைதி உறத் தங்கி 'செய்வது என்னை' என்று நடக்க

இருப்பன குறித்து, தமக்குள் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

### இது என் கருத்து

அப்பொழுது இராமன் சுக்கிரீவனை நோக்கி 'நீ சென்று வாலியை வலிய போருக்கு அழை; அவன் அது மருது வருவான். நீவிர் இருவரும் போரிட்டுக்கொண்டுருக்கையில் நான் வேறு நின்று, அவ் வெவ்வியோன் மார்புற வெங்கணை துரப்பன். இது என் கருத்து' என்று கூறக் கேட்ட சுக்கிரீவனும் ''ஐயா! அது நன்று ஆம்'' என்கிறான்.

### தகைசால் தாரை தகைத்தனள்

இவ்வேற்பாட்டின்படியே, வாலியை, தனித்துச் சென்று சுக்கிரீவன் போருக்கு அழைக்கிறான். முன்னோன் இளையவன் முழக்கம் கேட்டு, மூண்டெழு சினத்தனாய் முன்றில் சார்கிறான். தகவுடைத் தாரை தன் தலைவனைத் தடுத்து நிறுத்துகிறாள்.

'போர்க்குப் போகவேண்டா' என்று அவள் விலக்க,

'வில்நுதலாளே! விலக்கலை, விடு விடு. சுக்கிரீவன் உரத்தைக் கலக்கி, உயிரைக் கலக்கி ஒல்லையில் மீள்வேன். அஞ்சலை, என்று கூறி, முன்போக முயலுதல் கண்ட, தாரை, வாலியின் முகம் ஏறிட்டு நோக்கி, ''உன்னுடைய ஆற்றலுக்கு முன் நிற்க முடியாமல், முன்னம் ஓடியவன் இன்று போர்க்கு அழைப்பதற்குக் காரணம் இருக்கவே செய்கிறது.

இவ்விடைப்பட்ட காலத்தில் அவனுக்கு போராற்றல், பேராற்றல் மிகுந்து விட்டது என்று சொல்வதற்கு இல்லை. அப்படி இருந்தும் உம்மை மீண்டும் போர்க்கு

அழைக்கின்றுன் என்றுல் துணைவலி மிகுந்து விட்டான் என்று அன்றே ஆகிறது ” என்று கூறுகிருள்.

உடன்று மேல் வருநர் உளர் கொல்?

தாரையின் கூற்றுக்குப் பதிலாக வாலி, ‘இவ்வொரு மூன்று உலகும் எனக்கு எதிராக, அவனுடன் கூடிப் பொர வருமேல், அவை இல்லாது நில்லாதொழியும். நீ அறிந்திலேயோ?

அன்ருெரு நாள் அமிர்தம் பெறல் வேண்டி, அமரரும் அசுரரும் எதிர் எதிர் நின்றுகடைந்து பார்த்தும், கை தளர்ந்து சோர்ந்து போனபோது யான் ஒருவனே அவர்களை விலக்கி, கடைந்து அமிழ்து எடுத்து அவர்க்கு அளித்ததனை நீ மறந்தனையோ?

அமரராவது, அசுரராவது! ஆரே என்னை எதிர்க்கும் ஆற்றலர்? கூற்றுவனும் என் பெயர் கேட்டளவில் குறுகிப் போவானே. எதிர் பொர வருபவர் எவர் உளர்?

குன்று முட்டும் குரீஇ

தவிர அறியாமை மிகையால் அடர்க்க வருபவர் உளரேனும், அவர்கள் பெற்றுள வரங்கள், வன்மை, யாவற்றிலும் செம்பாதி என்னைச் சேருமே! அப்படியாக, அடர்க்கக் கருதுவரோ? வழி வழி வலி மேம்பட்ட என்னை முன் விழி வழி நீரொடு நின்று விலக்கவும் செய்வையோ? களம் புகல் தவிர்க என்று கூறவும் வல்லையோ? நீ, துயர் ஒழிக!, என்று கூறுகிருன்.

வாலி அமைதி கூறிய பின்னரும், தாரை, ‘அரசே! அச் சுக்கிரீவற்கு இராமன் என்பவன் துணைவனுகச் சேர்ந்திருக்கின்ருனும்; உம் உயிர் கோடற்கு அவனுக்கு உதவுவதாக உறுதி மொழி கொடுத்துள்ளானும்,

இவ்வாறெல்லாம் நம்மிடத்து ஆழிய அன்பினர், நெருங்கினர் உரைத்தார்', என்று கூறுகிறாள்.

பிழைத்தனே, பாவி! பேதை

கேட்ட வாலி கிளர்ந்த சினத்தன் ஆகிறான். இராமனை மிகவாகப் போற்றி,

உழைத்த வல்இரு வினைக்கு ஊறு காண்கிலாது
அழைத்து அயர் உலகினுக்கு அறத்தின் ஆறு எலாம்
இழைத்தவற்கு, இயல்பு அல இயம்பி என் செய்தாய்?
பிழைத்தனை; பாவி! உன் பெண்மையால்.........
(கம்பன், 3965)

என்று கூறிக் கடிந்து கொள்கிறான்.

'தம்பியர் அல்லது தனக்கு வேறு உயிர்
இம்பரின் இலது என எண்ணி ஏய்ந்தவன்,
எம்பியும், யானும் உற்று எதிர்ந்த போரினில்
அம்பு இடை தொடுக்குமோ? அருளின் ஆழியான்?'
(கம்பன், 3969)

என்று எதிர் வினவி, 'கலங்கலை, தாரை! கடிதில் மீள்வேன்', என்றும் அவள் தேற்றி,

"இருத்தி, நீ, இறை, இவண், இமைப்பு இல் காலையில்,
உருத்தவன் உயிர் குடித்து, உடன் வந்தாரையும்,
கருத்து அழித்து, எய்து வென்; கலங்கல்" என்றனன்;
விரைக்குழல், பின், உரை விளம்ப அஞ்சினாள்.
(கம்பன், 3970)

ஆர்க்கின்ற பின்னோன் தன்னை அடர்த்து எழு சினத்தினோடு நோக்கித் தானும் ஆர்க்கிறான்.

வியந்த வில்லி

புறத்தொளித்திருந்த இராமன், இலக்குவனை நோக்கி, அவ் விருவரையும் சுட்டிக் காட்டி,

"ஐய! செவ்வே நோக்குதி, தானவர், தேவர் கிடக்கட்டும். இவர்கள் மேனிக்கு உவமை கூற எக்கடல், எம் மேகம், எக் காற்று, எக் கால வெந்தீ உள்ளது?" என்று கூறி வியக்கின்ருன்.

### நோய் அனுன் திறம் நுவலவோ?

இலக்குவன் கூறுவான், "அண்ணன் ஆருயிர் அழிக்க கொடுங் கூற்றுவனைக் கொண்டு வந்துள்ள இவனும் ஒரு தம்பி! இங்கு நடக்கப்போவது சாதாரண குரங்குப் போர் அன்று. இகழ்ச்சிக்கு இடமில்லாப் போரும் அன்று. இதனை எண்ண, துன்பம் மனத்தில் ஆழ்ந்து பதிகிறது. கருத்து கூறவும் தெளிவில்லேன்" என.

ஆற்ரு மனத்தனுய் மேலும் கூறுவான், "ஐயா! அறவழி முற்றும் அழிந்து போக நம்புதற்குரியன அல்லாத செயல்களைச் செய்பவர்களை நம்புதல் அறனும் அன்று; ஆக்கமும் தேயும். தந்தை நிகர் தமையனைக் கொல்லக் கருதி நிற்கும் கொடியவர்கள், அயலார் விஷயத்தில் எப்படித் துணையாகக் கொள்ளத்தக்கவர்?" என.

### நவை அற்ருர் நானிலத்து ஆர்?

இதற்கு மறு மொழி பகரும் வகையில் இராமன்,

"அத்தா! இது கேள். இவை விவேகம் அற்ற விலங்குகள். இவற்றின் செய்கைகளில் இது நியாயம், அது அநியாயம் என்று பேசுதல் கூடாது. ஏன், மனித இனத்தவரிடையேயும் பின்பிறந்த இளவல்கள் எல்லோரும் தம் முன்னவரோடு இணங்கி நடத்தல் உண்டா? அவ்வாறு இணங்கி நடப்பரேல், பரதன் உத்தமன் எனப்படுதல் ஏலாதே! வில் தாங்கு தோளினுய்! உலகில் பல்கியுள்ள அறநூல்களைக் கற்று உணர்ந்தும் அதன்படி நடப்பவர்

மிகச் சிலரே. நல்லொழுக்க நெறி நில்லாரே பல்லோர். எனவே, நண்பராக ஏற்றுக் கொண்டவரிடத்துக் கொள் பயன் நன்று, என அமைந்தால் அதுபோதும். ஏனெனில் குற்றம் அற்றவர் என்று சொல்லுதற்கு உரியவர் உலகில் யாவர் உளர்?'' என்று வினவுகிருன்.

### உலேந்து அயர்ந்து ஓட்டந்தான்

வாலி, சுக்கிரீவர்கள் போர் புரிகின்றனர், வல் நெடுந்திரள் புயத்து அடு திறல் வாலியின் தாக்குதலுக்கு ஆற்ருது சுக்கிரீவன் ஓடி விடுகிருன்.

அப்படித் தோற்ற சுக்கிரீவன், இராமனே அணுகி, வணங்கி, வருந்திட, இராமன், ''உள்ளம் குலேந்திடேல். உம் இருவர்க் கிடையில் வேற்றுமை தெரிந்திலம். எனவே இது போது நீ காட்டுக் கொடியின் மலரை அணிந்து செல்வாயாக'' என்று சொல்லி விடுக்கின்ருன்.

மீட்டும் எதிர் சென்ற சுக்கிரீவன் வாலியை எதிர்க்கின்ருன்.

### வலத்திறல் கொடு நிலத்தறை போழ்தில்

இப் போரினும் சுக்கிரீவன் வாலியால் உயிர்த் தலம் தோறும் புடைக்கப்படுகிருன். செவிகளில், நாசிகளில் கண்களில் குருதி கால்கிருன். சோர்ந்து, மயங்கி, செயலழி நிலேயனுய், இராமன் மறைந்திருக்கும் திசை நோக்கு கிருன்.

அப்போது ''எடுத்து பாரிடை எற்றுவென்'' என்றவனுய், இளவலின் கழுத்திலும் கடிதடத்திலும் தன் இரு கரங்கள் மடுத்து, உயரத் தூக்கி, ஓங்கி அறையப் போகிருன் வாலி.

## வாழைப் பழத்து ஊசி

இராமனது வில் நாண் கொண்டது; கணை பூண்டது. நாணொடு தோள் செல வாங்கி இராகவன் கணை ஒன்று துரக்கிறான்.

கனியக் கனிந்த கதலியை, ஊடுருவும் ஊசிஎன வாலி மார்பிடை அக் கணை ஊடுருவுகிறது.

ஊழிக்காலக் காற்றால், உலையா மேருவும், வேர் பறிந்து வீழ்வதுபோல், வாலி மண்ணிடை வீழ்கிறான்.

## ஊடுருவ ஒட்டேன்; ஒடிப்பேன்

பகலவன் மகனைப் பற்றிய கைகளின் இறுக்கம் தளர் கிறது. மார்பில் ஊடுருவும் கணையைத் தன் இரு கரங்களால் மேற் செல ஒட்டாது இறுகப் பற்றுகிறான். உரம் கிழித்த ஒரம்பை இறுகப் பற்றி, வாலினால், காலினால் கழற்றி, 'எறிந்தான் பெயரை அறிகுவேன் பறித்து' என ஆர்க்கிறான்.

எழுகிறான்; எழ ஆற்றாது விழுகிறான்; கண்களில் கனற் பொறி கதுவ சுற்றும் பார்க்கிறான்; கையினை நிலத்து எற்றுகிறான்; மலை என உருள்கிறான்; 'எய்தவன் யாவன்?' என அயிர்க்கிறான்; நெடிது உயிர்க்கிறான்.

## யார் கொல் இச் செயல் செய்தாரே

''யாவர் இச் செயல் செய்தார்? தேவரோ? அல்லர். அவர்கட்கு அச்சம் உண்டே தவிர ஆற்றல் ஏது? அயலாராக இருக்குமோ? எவரையும் காண்கிலேன் எதிரே. ஒரு வேளை ஒருவனே, இறைவர் மூவரோடும் ஒப்பான், செயல் போலும் இது'' எனவும் மொழிகிறான்; நெஞ்சம் அழிகிறான்;

உரம் உருவு ஒண் கணை

"அஞ்சன வண்ணன் ஆழிப்படையோ இது? முக்கண்ணன் கை ஏந்து முத்தலைச் சூலமோ? குன்றம் கொன்ற குன்ருக் கொற்றத்து முருகன் கொண்ட கை வேலோ? வானவர் கோமான் வச்சிரப் படையோ? யாதென அறிகிலேன். இப் படைகள் தாமும் என் உரம் உருவி உட்புகும் ஆற்றல் உடையன அல்லவே.

வில்லிலிருந்து பாய்ந்த அம்பாகத் தோன்றவில்லையே?

நிறை மொழி முனிவர் ஆணையிற் கிளந்த சாபச் சொல்தான் சர உரு எடுத்ததோ? உரம் புக்கு, ஊன் புக்கு உயிர் புக்குப் போகும் இதனைப் பொறேன்" என்றவனுய்ப் பல்லினுல் கறிப்பான்.

கண்களில் தெரியக்காண்பான்

வன்பனைக் கரங்களாலும், தாளிரண்டாலும், நெடிய வாலாலும் பற்றிப் பிடுங்குகிருன். பறித்து கைக்கொண்ட பகழி நோக்குகிருன்.

அங்கு அது கண்ட அமரரும், அவுணரும், பிறரும் அவன் சலியாத தனியாண்மைத் தருக்கினைப் போற்று கின்றனர். இவ்விடை, 'வீரரை யார் வியவாதார்' என்பான் கம்பன். (கம்பன், 4009)

நேசத்தாரை நெடிது பெருக்கி

மலை வழங்கு அருவி என மார்பு வழங்கிய சோரிப் பெருக்கினை, ஓவா ஒலியொடு ஓடிப்பாயும் குருதி ஆற்றினைக் கண்ட சுக்கிரீவன்—உடன் பிறப்பு என்னும் பாசத்தால் பிணிப்புண்ட அத் தம்பி—பசுங்கண் நேசத்தாரை நிலத்துக நிற்கிருன்; சோர்கிருன்; மண்ணில் சாய்கிருன்.

வாலியோ, பறித்த வாளியை 'முறித்துப் போடுவேன்' என்ன முனைகிறான்; 'முயன்றாலும், முடியவில்லையே' என்றவவனுய்க் கணையில் பொறித்த பெயரைக் கவன மாகப் பார்க்கிறான்.

இராமன் என்னும் செம்மை சேர் நாமம் அச் செங் கோல் அம்பில் வரையப் பெற்றமையைக் கண்களில் தெரியக் காண்கிறான்.

அறன் அழியச் செய்தான்

'கான் புகுந்த அதனால் இல்லறம் (கடமை) துறந்தான்; நேர்பொருத எம்மிருவரிடை, நேர்மை தவறி மறைந்து நின்று என்மீது கணைதுரந்து வில்லறம் துறந்தான்; வேத நல் நூல் கூறும் சொல்லறம் துறவாது, ஆளுகை மேவும் அவ்வாதித்தன் மரபும், இத்தகைய இழிதகைமையால் தொல்லை நல்லறம் துறந்ததே' என்று எண்ணி அவன் கையறவுக்குத் தான் நாணுகிறான்.

சூரிய குலத்திற்குச் சேர்ந்த இழிவு குறித்து, உள் வெள்கிய உரவோன், முடித்தலை சாய்க்கிறான். வெடிபட சிரிக்கிறான். 'ஓங்கு அறம் இதுவே போலும்' என்று இராமன் செயலை உன்னி அழிகிறான். தொடு குழி வீழ்ந்த மூரிவெங்களிறு ஏறல் செல்லாது ஏங்கல்போல, குருதிச் சேற்றில் கிடந்து குமைகிறான்.

தோலான் முன்னர்த் தோன்றிய தோன்றல்

இந்நிலையில் இராமன் வாலிமுன் வந்து தோன்று கிறான்.

கமலம் பூத்த கார்முகில், வரிவில் ஏந்தி, மண் உற்றது போல், தன்கண் உற்ற இராமனைப் புண் உற்ற மேனி வாலி

காண்கிறான். "என்(ன) எண் உற்றாய்? என் செய்தாய்? இயம்பு" என்று ஏசலுறுகின்றான்.

ஏசுவான், பேசுவான்

"வாய்மை காத்தற் பொருட்டுத் தன் வளவிய உயிர் துறந்த தசரதன் மைந்தனே! செம்மைக்கு ஒரு கலன் என்னத்தக்க பரதன் முன்னவனே! தீயன பிறர் செய்யா வகைத் தடுத்து, அவரைக் காத்துக் காப்பானே, தானே அத்தகைய தீங்கு பிறர்க்குச் செய்வது தீங்கு அன்று என்று ஆகிவிடுமா? தாய்போன்ற தலை அளியும் நண்பெனும் பண்பும் அறவழிச் சார்வும் தழுவி வாழ்ந் தவன் ஆயிற்றே நீ!

அல்லன செய்தல் அறத்து ஒழுக்கதோ?

உயர் குலப்பிறப்பும், அறியாதோரையும் அறியத் தேற்றும் சிறந்த கல்வி நலமும், மூவுலகவற்றிலும் முற்றிய கொற்றமும், கொண்டு சால்பு ஊன்றிய தூண் என நின்ற ஒருவனே! உன்பால் யாங்கள் கொண்டுள்ள சிறந்த நம்பிக்கை சிதைந்துவேறாக, தக்கன அல்ல செய்தல் ஆகுமா?

அரசியல் நெறி வழாமை என்பது உங்கள் குலச் செல்வம் அன்றோ? நெறியின் நீங்கி நீரல செய்தனையே! இச் செயல் சீதையைப் பிரிந்ததால் ஏற்பட்ட திகைப்போ?

அரக்கன் ஒருவன் அல்லன செய்து அகன்று போயினான் என்பதற்காக, அவனைத் தெறல் விட்டு, நொது மலாளனைக் கொல்க என நினக்கு கூறினவர் யாவர்? மனு முறை கூறியதோ? எங்கு உகுத்தனை இரக்கமென் அமிழ்தினை? என்ன பிழை செய்தேன் யான்?

புகழ்பொறுத்த மேனியனே! பெரும்பழி இதனையே பேணும் அணி என நீயே பூணின் புகழைப் பூண்டு பொறுப்பார் யாவர்? பொலிவார்யாவர்?

உயிரினும் சிறந்ததாகப் பேணத்தகும் ஒழுக்கமும், அதனால் பெறும் விழுப்பமும், மெலியவரிடத்து மட்டுமே அமைய வேண்டும் என்பதுதான் நீதியா?

வலிமேம்பட்ட செருக்கால் வலியார் மெலியார்க்கு அல்லன இயற்றினால், அச் செயலால் அவர்க்குப் புகழே சேரும்; பழியே இல்லை, என்றாகிவிடுமா?

ஒரு பாவமும் அறியாத, மரம் பயில் வாழ்க்கை மர்க்கடம் மாடே, கொடுமையே மேம்படும் கலி காலம் இன்றே வந்து சூழ்ந்து கொண்டதா?

கொள்துணை வேண்டாது, ஒரு தனிநின்று, செரு வென்று மேம்படும் செம்மலே! உனக்கு உரியது என உந்தை கொடுத்த நாட்டை, உவந்து உம்பிக்குக் கொடுத்து நாட்டில் ஓர் செயல் செய்தாய். இக்காட்டில் எனக்குரிய நாட்டை, யான் அறியாவகை எம்பிக்குக் கொடுக்க ஓர் செயல் செய்ய முனைகிறாய். செய்தகு செயல் இதனினும் பிறிதொன்று உளதோ? நாணுத் தருவது இது காணுங் காலே.

தொன்றுபடு நன்னூல் துறைமுற்றக் கற்று, அந் நூல் விதிகட்கு எல்லாம் இலக்கியமாகத் திகழ் ஒருவ! வீரர் செய்வன,விளங்கு அறம் தழுவிய என்பரே. அவ்வாறாயவர் அல்லன செய்யினும் ஆண்மைத் துறை என ஆமோ? நெறியல எனக்குச் செய்த நீ, நெறியல செய்தான் என முந்நீர் இலங்கை வேந்தனை முனிவையோ?

உறவினராய நாங்கள் இருவரும், எம்க்குள் எதிர்த்துப் போர் புரியும்பொழுது, பொது நிலையாளர் ஒருவர்

ஒருவனிடத்து அருள்காட்டி, மற்றவன் மார்பின் மேல் மறைந்து நின்று சுற்றமைவில் முற்றும் வளைவுற வடிகணை துரத்தல் அறமாகுமா? அதனின் வேறே அன்றோ?

கோடிய வரிசிலைக் கொற்றவ! இச் செயல் நடுவு நிலைமையில் கோடிய செயலே.

ஐய! நின் செயல் அன்பொடும் பொருந்தியது அன்று; வீரம் தழுவிய விழுமிய செயலும் அன்று. அற நூல் விதிகட்கு அமைந்ததும் அன்று; வாய்மைத் திறத்தின் வகையதும் அன்று. நீ பொறுத்த பூமிக்கு என் உடல் பொறுக்க ஒண்ணுச் சுமையதும் அன்று. நான் உனக்குப் பகைவனும் அல்லன். இவ்வாறு ஆக பெருந்தன்மைப் பண்பில் பிறழ்ந்து இரக்கம் இன்றி ஏனிது செய்தனை? எப்பயன் கருதி?

நல்லறம் காக்கக் கடவிய காவல் வேந்தன், முறை வேண்டுநர்க்கு, நன்றும் தீதும் நலப்பட ஆய்ந்து, நடுநிலை வழாது, யாவர்க்கும் ஒப்ப, அரியன ஆற்றல் அன்றோ அறம் காப்பது ஆம். அறியாமல் பிறர் செய் பிழையைப் பேணல் விட்டு ஒருபால் கோடல், ஒருவற்கு உதவல் பெருமை தருவதோ? யாதாய் முடியும்? தீதே அன்றோ?

துணைவியைக் காக்கும் கடப்பாட்டாளன் ஆகிய உன்னை, இகழ்ந்து, அற்றம் நோக்கி, அல்லன புரிந்த அவ் வரக்கனை அழித்தற்கு ஆன துணை வேண்டி, அமைவாய் ஆயின், தெறு சினத்த அரியின் துணை கொளல் விட்டு அஞ்சி வெருவி காட்டுச்சார் ஓடும் குறுமுயலையா கொள்வாய்?

வான் ஊர் மதியத்திற்கு வயங்கு கறைபோல், நீ பிறந்த சூரியன் மரபுக்கும், நீ பிறந்து செய்த இச் செயலால் பற்றித் தொடரும் பெருங்களங்கம் உண்டாக்கி விட்டாய்.

உனக்கு, துணை எனக் கொள்ளத்தகாத அயலான் அவன். அவன் என்னை வலிய வந்து 'வா, போர்க்கு' என அழைக்க, ஏற்று எதிர் பொர வந்த என் உயிர், மறைந்து நின்று கொன்ற நீ, செய்த செயலுக்குத் தலை கவிழாது எதிர் நிற்றியோ இகல் ஏறு போல?

அற நூல்கள் கற்றாய் எனினும் விதித்தன செய்கலாய்; விலக்கிய ஒழிகலாய். நன் மரபில் தோன்றினாய்; ஆனால் முன்னோர் போற்றிய நெறி முறைகளை, உயிரினும் சிறந்த ஒழுக்கத்தினை, குறிக்கொண்டு போற்றலை. வாலியை வீழ்த்தி விட்டதாகக் கருதுகிறாய். அன்று; அன்று. அற வேலியை அழித்து விட்டனையே!

மனைவியை மாற்றான் கொள, அவனைத் தொடர்ந்து எதிர் சென்று தொலைத்தொழிக்கமாட்டாத உன் கையில் கிடந்து பழி சுமந்த வில்லிற்கு மேலும் பழி கூட்டினையே. கையிற் படை இல்லானை, கறுத்து எதிர்த்து பொராத வனைக் கணை துரந்து கொல்லவோ உன் வில் வல்லது?''

பற்கள் பொடிபடக் கடித்து, கண்கள், பொறிபடச் சினந்து, இராமனைப் பழி மொழிகளால் தூற்றிய வாலி முன் தூயவன் வந்து நிற்கிறான்.

இராமன் இயம்பிய

பின்னர் அவன் (இராமன்) வாலியை நோக்கிக் கூறத் தொடங்குகிறான்:

''பிலம் புக்க மாயாவியைக் கொன்று வருவதாகக் கூறி, அவனைத் தொடர்ந்து சென்றாய்; பிலவாய் காத்து நின்ற சுக்கிரீவன் நெடுநாள் நீ பெயராமையால் தானும் பிலம்புக்கு உன்னைத் தேட முயன்றான். குல முதல்வர், முதியவர் அம் முயற்சியைத் தடுத்து 'ஆட்சிப்

பொறுப்பினை ஏற்று அமைக. அரசனின்றி, நாடு அலமரல் கூடாது என்று கூறினர். கேளான் ஆகிச் சிந்தை அழிந்த சுக்கிரீவன் அவர்க்குக் கூறுவான்:

'முறை அல செய்யேன். முன்னவனைக் கொன்றானை முடித்தொழிப்பேன். அன்றேல் யானும் ஒழிவேன். இருந்து அரசு ஆள்வது இழிவே அன்றோ?', என்று கூறி மறுத்தான்.

படைத்தலைவரும், முதியவரும், அவனைத் தேற்றி 'குலத்திற்கு உரிய கொற்ற மாமுடி கொள்ளவில்லையேல் நாடு கெட்டொழியும். நல்லன தேர்க' என்று வற்புறுத்திய பின்னரே ஏற்றனன் அரசு.

பிலம் புக்கானைக் கொன்று மீண்ட நீ, அரசுப் பொறுப்பில் அவன் இருப்பது கண்டு சினந்தனை; கொல்லல் உற்றனை. வணங்கி நின்றான். நடந்தன நிகழ்த்தினன். ஒன்றும் கொள்ளலை. உயிர் கொள முனைந்தாய். 'அபயம் அபயம்' என்று கதறினன். கேளாய் ஆயினாய். திசை தொறும் துரத்தினாய்; வெருவி ஓடினன்.

'தோற்றேன்' என்று தொழுது உயர் கையனை விடாதவன் ஆகி விரட்டினாய். உடன் தோன்றல் என்னும் உணர்வு இல்லாதவனாய் நடந்து கொண்டாய். மதங்க முனிவர் இட்ட சாபக் கட்டுரை தேர்ந்து இந்த ரிஸ்ய மூக பர்வதத்தில் புகல் புக்கான். எனவே அவனைத் தொடரலை விட்டாய்.

இம்மட்டோ? அவன்மீது சினந்த நீ, அவன் மனையாளை உன்னகப் படுத்தினாய். இதுவா ஆண்மை? ஆண்மை எனப்படுவது எது? அன்பு வழிப்பட்டது; குடிப் பிறப்பிற் கேற்ப குறிக்கோளொடு வாழ்வது. வீரம் மாறாது விளங்குவது; கற்றவாறு ஒழுகும் பெற்றியது; யாவற்றுக்கும்

மேலாக பிறன்மனை நோக்காதது. செய்தனையா? அல்லையே.

தெளிந்த நல்லறிவு உடையார், வீரத்தின் வழுக்குவது யாம் வல்லம் என்னும் செருக்கினால், எளியவரை, வெகுண்டு துன்புறுத்தல் ஆகும். அற நெறி வழுக்குவது அரிய காவலுடைய பிறர் தம் கற்புடை மகளிர் திறத்து எளியராகி தம் வயப்படுத்தல் ஆகும். இவ்விரண்டாலும் இழிவு எய்தினாய்.

அறத்தின் பகுதிகளை ஆய்ந்து எண்ணவில்லை. எண்ணியிருந்தால் தம்பி தன் மனைவியை, பெருமை குலையப் பெண்டாய்க் கொள்வாயா?

இவை மட்டும் அன்று. நின் பின்னோன், என் ஆருயிர் நண்பன் ஆயினன். ஆகலின் கொலையிற் கொடிய நின்னைக் களைந்தேன்.

எவ்விதத்தாலும் தொடர்பில்லாதவர் என்றாலும் எளியவர் திறத்து, அவர் உறு துயர் தவிர்ப்பது என் சிந்தைக் கருத்தாகச் செவ்விதின் தேர்ந்தேன்'' என்று கூறி முடிக்கிறான்.

எதிர் மொழி இயம்பினான்

இப்படி எல்லாம் குற்றம் சாட்டிய இராமனுக்கு வாலி எதிர்மொழி கூறத் தொடங்குகிறான்.

''நெடு மொழி கூறினை. நீ நிகழ்த்திய இத்துணையும் எமக்கு இயல்பு அல. இது எம் தொழில்'' என்று சொல்லி மேலும் தொடர்கிறான்.

''ஐயா! படைப்புக் கடவுள் உம் மனித இனத்திற்கு என விதித்த மண முறை, கற்பு, பிறன் மனை நயவாமை

போன்றனவற்றை எங்கள் குலத்திற்கு எய்தியதாக அமைத்திலன்.

எனவே மறை நெறி சார்ந்த மண முறை இல்லே. அவ்வழி தொடரும் அன்பு, நாண், முதலிய நற்பண்பு களும் இல்லே.

உணர்வுக்கு நிலேக்களம் ஆகிய, மனம் போன போக்கில் செல்லுவதே எம் இயல்பு.

பிறப்பியல்பின் படி யான் யாதொரு குற்றமும் செய்திலேன். எனவே, நீர் கூறிய குற்றச்சாட்டுகள் ஏலா. இது அறிக, வெற்றி மேம்படு வில் வீர!'' என்று சொல்ல,

மேலும் இராமன் கூறுவான்

இராமன் அவனது குற்றம் பொதுளிய இயல்பை கூறத் தொடங்குகிருன்.

''மனிதரின் மேம்பட்ட தேவர் அருளால் தோன்றினவன் நீ. நல்லறத்தன்மை நவையறக் கற்றுணர்ந்தவன் நீ. எனவே விலங்கினம் என்று கூறி விலக்கு பெற முயல்வது தவறு.

அறவழிப் படர்தல் என்பது ஐம்பொறி வயப்பட்ட உடலின் எல்லே அளவில் நின்று நின்று விடுவதா? அல்லவே. புலன் உணர்வுகளே ஒருவழிப் படுத்தும் அறிவை அடித் தலம் ஆகக்கொண்டது அல்லவா?

அற நெறி வன்மை அறிந்தவன் நீ. உள்ளவாறு உணர்ந்த ஒருவன் நீ. குற்றச் செயல்களில் ஈடுபட்டு அறத்தாறு அழுங்கச் செய்தல் முறையா?

உருவத் தோற்றத்தால் நீ விலங்கு எனக் கூறுகிருய். விலங்குகட்கு ஏது வீட்டுப் பேறு?

கடுத்த கராம் கதுவ, நிமிர்கை எடுத்து, மெய் கலங்கி,
உடுத்த திசை அனைத்தினும் சென்று ஒலி கொள்ள, உறு துயரால்,

(கம்பன் 2564)

"தனி மூலத்து அரும் பரமே! பரமே! காவாய்" என்று கலங்கி அழைத்ததே களிறு ஒன்று. அதுவும் உருவத்தால் விலங்கு தானே. அக்காரணத்தால் மட்டுமே விலங்கினத்துள் வைத்து எண்ணத்தக்க அளவில் எளிமைப் பட்டதா?

அறவழியே சேரும் இயல்புடைய மனம் கொண்ட காரணத்தால், சீதையின் உறுதுயர் தீர்த்தற் பொருட்டு கொடும் போர்த்தொழில் தலைப்பட்டு, தன் உயிர் புகழ்க்கு விற்ற என் பெரிய தந்தையான சடாயுவும், உருவத்தால் கழுகே ஆயினும் போற்றத்தக்க சிறப்பினையும் பெறவில்லையா?

நல்லதன் நலனும், அல்லதன் தீமையும் இன்ன என்று இயல் தெரி நல் அறிவு, இன்றி வாழ்வது தானே விலங்கின் இயல்பு.

உலகில் நிலைபெற்ற, நல்ல அறநெறிகளில் நீ ஆராய்ந்து உணராதவையும் உளவோ?

உணர்ந்து தேர்ந்தவன் நீ என்பதனை உன் உரை மொழியே காட்டிவிட்டதே.

தக்க இன்ன, தகாதன இன்ன, என்று
ஒக்க உன்னலர் ஆயின், உயர்ந்துள
மக்களும் விலங்கே; மனுவின் நெறி
புக்கவேல், அவ்விலங்கும் புத்தேளிரே.

(கம்பன், 4054)

மாதொரு பாகன்மீது நீ வைத்த பக்தியாகிய பேரன்பு நற்பயன் விளைத்தலால் அன்றோ, வான் நீங்கிய நாற்பூதங்களின் பெருவலி ஒரு சேரப் பெற்றாய்.

பிறப்பால் தாழ்ந்தவரில், பெருமை வளர்தற்குக் காரணம் ஆகிய நல்லறம் தலைப்பட்டார் இல்லாமல் இல்லை. அவ்வாறே ஆற்றல் சான்ற அருந்தவ முனிவரிலும் அமரர் இனத்திலும் தீய செயல்கள் செய்யாதவர் இலர்.

எக்குடிப் பிறப்பினும், யாவரே ஆகினும், செய் நல் வினையால் எய்துவர் மேன்மை அல்ல தலைப்படின் அடைவர் கீழ்மை.

இவற்றை நன்கறிந்த நீ, பிறன் மனையாளின் கற்பு மாண்பினைச் சிதைத்தனை. தெரிந்து செய்த தவற்றினை உடையை. இவ்வாறு தவறுகள் செய்துவிட்டு அவற்றைத் தவறன்று என்று கூறி சாதிக்க முயலலாமா? முறையாகுமா?'' என்றெல்லாம் இராமன் எதிர் வினவுகிருன்.

வாலி, அண்ணல் உரைத்தன அமைவுறக் கேட்டான். பின் அவனை நோக்கி,

''அது அத்தன்மையது ஆகுக. போரிடைக் கண் முன் நின்று பொரல் விட்டு, அம்பு தொடாமல், மறைந்திருந்து வேடர்கள் கொடிய விலங்குகளை வீழ்த்துவதுபோல் வெங்கணை விடுத்தது ஏன்? விளங்கக் கூறுக'' என்கிருன்.

இவ்வினுவிற்கு இராமன் ஏதும் கூறலன். இளைய வில்லி எதிர் நின்று உரைப்பான்.

''உன் பின்னவன் உன்னல் துன்புறுத்தப் பெற்று முன்னமே வந்து தன்னைச் சரணம் அடைந்தமையால், 'நீதியில் நில்லா நின் முன்னேனைத் தென் புலத்து உய்ப்பேன்' என்று செப்பினன்.

நீ சொல்லியது போல், தான், நின்னெடு போர் செயக் கருதி எதிர் வருமேல், நீ ஆருயிர்மீது அன்பினன்

ஆகி சரண்புகின், முன் சொன்ன சொல் என் ஆம்? சூளுறவு என் ஆம்?" என்று விளக்கம் தருகிறுன்.

வாலி விளம்புத

ஆன்று அமை கேள்விச் செல்வன், இளைய வில்லி இயம்பின கேட்கிறுன்; அண்ணல் அறத்திறன் அழியச் செய்யான் என்று தெளிகிறுன்.

தாழ்த்த சென்னியன் மேலும், ஆகி. கூறுகிறுன்

"நடு நின்ற நன்னெஞ்சின் ஒரு தனிப் பெரு முதலே! தாயே! தகவே! சார்வே! நூல் நுவல் நெறியில் நில்லாமையை, நாய் எனத் தகைய எம்மிடை ஆய்தல் தகுமா? பிழை உளன பொறுத்து அருள்க. நீ மெய் கண்ட தீமை கண்டாய். ஒப்ப நாடி அத்தக ஒறுத்தாய். தீவிய பொருளே! தீயன பொறுத்தி.

இழி பிறவிக் குரக்கினத்தேன் நிற்குறித்துச் சொன்ன நேரிய அல்லாதனவற்றைப் பொறுத்தருள்க. பெரும! மாயாத வன்பிறவிப் பிணி அகற்றும் பெரு மருந்தே! நின்பால் இரப்பது ஒன்று உண்டால். கேட்டு அருளுதியால்.

ஆவி அகல் போழ்தத்து அறிவு தந்தனை.

மூவர் நீ! மூவர்க்கும் முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ! தீவினைப் பயன் ஆம் பாவமும் நீ! நல்லறப் பயனும் புண்ணியமும் நீ! உறவு நீ! பகையும் நீ! உற்ற மற்று யாவும் நீ!

புரம் கொண்டான் வரம் கொண்டேன்; மலி செருக்கால் நெஞ்சு உரம் கொண்டேன்; அவ்வரமும் இவ்வுரமும் உருவி, உயிரும் உருவிய உன் சரம் அல்லால், அறம் என்று ஒன்று தனித்து வேறு உளதோ?

உயர்திணைய உயிரும் நீ! அல்திணைய அனைத்தும் நீ! காலமும், காலக் கூறும், காலாதீதனும் நீ. முகை மொக்குள் நாற்றம் போல், எவற்றினும் பிரிவு.அரிதாகிய தண்டாப் புணர்ச்சியன் நீ.

நீ யாவன்? நின்னியல் யாவது? என்று, நீ தந்த அறிவு கொண்டு அளத்தலும் ஆமோ? நீ அறிவித்தாய்; அறிந்தேன். அவ்வாறு அறிந்த பின் மீட்டு வாரா நெறி எய்துதல் எளிதே. அரிதோ? அன்றே.

உருவு பெற்று இயங்கு இயல் ஒரு தருமப் பெருவடிவே! நிற்கண்டு கொண்டதன் பின் காண் தகுவ வேறு உளவோ?

பண்டொடு இன்று அளவும் உள, பழவினைகள் பாறு வண்ணம், நீ அளித்த இத் தண்டனையால் விளைந்த நலன் ஒன்றுண்டால்.

அம்பின் வாய் உயிர் வீட்டினை. அந்தமில், இன்பத்து அழிவில் வீட்டினை, அன்பினால் அளித்தனை, பெரும!

சாதிப் புன்மை தவிர்கிலா இளையான், என்னைக் கொல்லிய கருத்தனாய் நின் இவண் கொணர்ந்து, திரிவு செய் செய்கையால், பெறு பயன் ஒன்றிலாக் குரக்கு இன, நாட்டின் அரசுதான் நனி மேவினன். அதன் வழி எல்லையில் இன்ப வீட்டரசு ‘கொள்க, நீ, எனக் கொடுத்தனன்.

அவன் செய் கைம்மாறு இதனின் வேறு உளதோ?

வான் சிறிதாம்படி வளர்ந்த வெற்றியாய்! ஒன்று உன் பால் வேண்டுவது உளதால். எம்மவர்க்குரிய இயல்பின் வழியே, எம்பி தேம்பிழி நறவம் தெவிட்ட மாந்தி, தெருள் உறு அறிவு திகைத்து வேறாயின், அவ்வழி தீவினை இயற்றுவான் எனினும், சினவல் ஓம்பு மதி. சீறி

என் மேல் செலுத்திய பகழிக் கூற்றினை அவன் மேல் போக்கல் வேண்டா, பொறுத்து அருளுதி.

அன்பின் திரியா நின் தம்பிமார்கள் நகையாடல் பொருட்டேனும், 'முன்னோன் கொன்றான் இன்னான்' என்று இகழ்வரேல், அது தடுத்தி.

இவன் குறை முடிக்க ஏன்றுளாய் ஆகலின், இவன் செய் குறைகளைப் பொறுத்து அருள்க.

வாய் வாள் அரக்கனை வாலிடைத் தூங்கச் சுற்றி கொற்றவ! நின் திருமுன் கொணர்ந்து, விட்டு மதவியல் குரக்குச் செய்கை, மற்று இற்று என்று காட்டும் வாய்ப்பு அடைந்திலேன். கடந்தன குறித்து கழறி என் பயன்?

'பிழை மேவா வழி பிறிது இது செய்க' என்று நீ ஏவல் இடூஉம் முன்னரே, அன்னது முடிப்பான் முன்னிய அநுமன்.

நின் செங்கை நீங்காது, நிற்கு வலம்செய் வில்லே போல, அநுமன் தன்னைக் கொள்க, நீ பெரும!

நிழலின் நீங்கான்; நினைத்தன முடிப்பான்; நேரிய செய்வான்; சீரியன் ஆகலின்.

என் தம்பி நின் தம்பி என்று ஏற்று அருள்க.

இவர்களின் சிறந்த துணைவர் வேறு இலர்.

தேவியை திசை தொறும் நாடினர் தேடி, நலமே செய்வர். மீளுவர். பெரு நன்று ஆற்றுவர்." என்றெல்லாம் கூறி வணங்கி, பின் தன் துணைத் தம்பியை 'வா' என அழைத்து, வன்பனைக் கரங்கள் நீட்டி இறுகத் தழுவி "நம்பீ! நலம் தருவன நான் சில கூறுவன். கேட்டு அமைக" என்று துளி உலாம் கண்ணனாய்க் கூறத் தொடங்குவான்;

"மறைகளும், மற்றை நூல் துறைகளும், முனிவரும் சிறப்பித்துக் கூறும் செம்பொருள், காலணி கழலொடு கையணி வில்லொடு இராமன் என்னும் இன்பெயர் மேவி அறந்தலை நிறுத்த உருவு கொண்டமைந்தது. கட்புலனுக்கு உற்றது. ஐயம் இன்றி மனத்துக் கொள்ளுதி.

அழியாச் செம்பதம் அடைதகு உயிர்கள், நாவியல் மருங்கின் நவிலப்பாடுவது இவன் திருப்பெயரே.

கருது செம்பொருள் ஆபவன் கண்டாய். சான்று பிற வேண்டா. வலிய என்னைக் கொன்ற திறலே கூறும் இவன், அவன் எனவே.

வரம்பில் வஞ்சனை வைகலும் புரிவார்; நன்று ஒன்று தேறார்; நாள் தொறும் அவமே வேட்டு அலைவார் தாமும், வள்ளல் வாய் அம்பு உரம் உறப் பெறின் வான் உயர்நிலையைச் சேர்வர் என்னின், இணை அடி இறைஞ்சி ஏவல் மேவி, அருளுக்கு இலக்காய் ஆபவர் கொள்பயன் சொல் அளவைத்தோ?

முந்து நன்மைக்கு உந்தும் விதி எனின், இருமையும் எய்தல் எளிதே. நீ அது பெற்றனை.

நேமியொடு, வலம்புரி பொறித்த மா தாங்கு தடக்கை, மாஅல் ஏவல் மனத்தினும் ஏற்று, அதனை ஒருமையின் உரிமையின் உதவின், இருமை அடைவாய்; மும்மையின் உயர்வாய்.

குரங்கியல் மயர்வும், கொண்டன தவிர்த்து அயர்வும் அகற்றி, உதவியை உன்னி, உற்ற இடத்து உயிர் வழங்கும் தன்மையன் ஆதி. குறைவு நேரா வகை இட்ட கட்டளை எவையும் இயற்று. நொய்தாம் பிறவி நோய் தவிர் எளிதே.

அகலிடம் ஆளும் பொறுப்பில் அமர்ந்து, அவ்வழி அகந்தை மேவாது, அறிவில் திரிவு அடையாது, உதவி யோர் இகழாது, உறுவன செய்க. இகல் வேந்தன் சேர்ந்து ஒழுகும் நீ, அகலாய், அணுகாய் ஆகி ஆம் பயன் கொள்வாய். குறிப்பில் குறிப்பு உணர். சிறியோர் சிறு பிழை, பெரியோர் பொறுப்பர் என்ற எண்ணத்தில் நீ இருக்க வேண்டா.''

இவ்வாறு ஆய தெளி நல் உரைகள் இளவற்கியம்பி, இராமனை விளித்து, ''மன்னவர்க்கரசன் நன்பெரு மைந்த! உடைப் பெருஞ் செல்வ! அடைக் கலம் இவன், மற்றுள சுற்றம். கொள்க, பெரும!'' என்று கூறி அரிதின் முயன்று இருகை உயர்த்தி, தலை மேல் குவித்து வணங்கினன் வாழ்த்தி.

உச்சிக் கூப்பிய கையன், பின்னர் இளவலை விளித்து ''ஐய! நின் மகனை அழைத்தி வல்லை'' என ஏவுகிறான்.

அடைந்த அங்கதன்

வன் திறல் வாலி சேய் வல் விரைந்து ஓடி வருகிறான்.

தாதையைக் காண்கிறான். பூ வி ரி மென் சேக்கைப் பொருந்துறும் வாலிதன் மேனி, குருதிச் சேற்றில் புரள் யானை போல் கிடக்கக் காண்கிறான். துயர் என்பதனையே சிறிதும் உணராதபடி வளர் சிறப்பின் வன் காளை, நடந்தது இன்னது என்று ஓரான் ஆகி, இடர்க் கடல் தன்னில் ஆழ்கிறான்.

கனலும், நீரும், காலும் கண்ணனாய், வாலி உடல் மீது விழுந்து புரண்டு அரற்றுகிறான்:

'எந்தையே! எந்தையே! இவ் எழுதிரை வளாகத்து,
யார்க்கும்,
சிந்தையால், செய்கையால், ஓர் தீவினை செய் திலாதாய்!
நொந்தனை! அதுதான் நிற்க, நின்முகம் நோக்கிக் கூற்றம்
வந்ததே அன்ருே, அஞ்சாது? ஆர் அதன் வலியைத்
தீர்ப்பார்?
(கம்பன், 4083)

'குல வரை, நேமிக் குன்றம், என்ற வான் உயர்ந்த
கோட்டின்
தலைகளும், நின் பொன் தாளின் தழும்பு, இனி, தவிர்ந்த
அன்றே?
மலை கொளும் அரவும், மற்றும், மதியமும், பலவும் தாங்கி,
அலை கடல் கடைய வேண்டின், ஆர் இனிக் கடைவர்?—
ஐயா!
(கம்பன், 4085)

மங்கை பங்கன் மலரடி மறவாய்! அவன் தாட்கு அன்றி குவியாச்செங்கை, குணக் கோமானே! இருங்கடல் கடைந்து எடுத்த இனியநல் அமிழ்தை இனிது எனத் தமியன் உண்ணுது, சாதல் நீங்க அவர்க்களித்தனையே. அவர் வாழ்கின்றனர். அளித்த நீயோ?...''

அழுங்கினுன், புழுங்கினுன்; உருகினுன்; மறுகினுன்.

கண்ட வாலி, மகனைத் தேற்றி "அயர்வாய் அல்லை. நல்லன செய்தான்; என் நல்வினைப் பயன் இது. சாதலும் புதுவது அன்றே. பிறத்தல் இறத்தல், மூவுலகத்தோர்க்கும் பொதுமை அன்ருே? இவ்விதிப்படியே இறுதி வந்து எய்திற்று. பிறவா நெறியில் புகுத்தினன் என்னை. யார்க்கும் சான்று என நின்ற வீரன் வலிய வந்து வீடுதந்தான். விடு, விடு கவலை. மறந்தும் எண்ணல்.

பேதைமை எண்ணும் பிள்ளைமை தவிர்க. யான் சொல்வன இனிது ஏற்று உயர்க. உயர்வற உயர்ந்த

ஒருவன்; மெய்ப்பொருள் உருவு கொண்டமைந்த கருணையந்தோன்றல்; கை வில் ஏந்தி கால்நிலம் தோய, கட்கின் காட்சி அளித்தான் கண்டாய்.

மால் தரும் பிறவி நோய், மயக்கு அறுப்பானை மன மாரக் கும்பிட்டு வணங்கு, மகனே!

என்னுயிர் போக்கினுன் என்று சிறிதும் எண்ணுமல் உன்னுயிர்க்கு நலம் நாடி உவந்து இவனை இனிது ஏத்து. நலஞ்செய் இயல்பினன் நாள்மலர்த் தாளிணை நாளும் பணிந்து நல்லன மேவு.''

என்றெல்லாம் கூறி, உச்சி மோந்து, இறுகப் புல்லி, கொற்றம் முற்றிய குணக் குன்றனையான் தன்னை நோக்கி தகவுடை நன்மொழி விளம்புகின்முன்.

''கடுநிற அரக்கராம் பஞ்சுப் பொதி மாய் செந்தீ அனைய ஆற்றலன் என்மகன். உள்ளமும், தொழிலும் ஒருங்கு தூயவன்; சொல்வலன்; பொய் அடைந்த மனத்தார்க்குப் புலப்படாப் பெரும! ஆகும் இவன் நின் அடைக்கலப் பொருளே. ஏற்றருள்க ஏந்தலே!'' என்று வேண்டுகின்முன்.

தாதை ஏவ, தகவுசேர் அங்கதன், தாம்ரைத் தடங்கணுன் தாளினை சேர, வாழ்த்தி அமைந்து, எழுந்து நின்முன். அவன் தன்னிடம், தன்னுடைய பொன்னுடை வாளை பொருந்த நீட்டி, ''பொறுத்தி'' என்முன் புண்ணியன். போற்றின உலகம். வாழ்த்தினர் அமரர். வாலிவான் அடைகிமுன்.

கடுங்கணை எனும் காலன், வாலிதன் வெய்ய மார் பகத்துத் தங்காமல் ஊடுருவி, விசும்புயரச் சென்று தூநீர்க் கடலில் தோய்ந்து, அமரர் ஆர்த்தெழ, ஐயன் ஆவம் புக்கு அமைந்தது.

ஆல் இலைப்பள்ளி அமரர் கோவும், அங்கதன் தானும், சுக்கிரீவனும் பறந்தலை அகன்று போயினர்.

பின்னர், வாலி சாய்ந்தான் என்றசெய்தி வேல்விழித் தாரை கேட்டாள்; வெந்துயர்க் கடலில் சாய்ந்தாள்; போர்க்களம் புகுந்தாள்; பொன்றினான் உடலின் மீது விழுந்தனள் புரண்டாள்; செக்கர்வானிடைத் தோன்றிய மின் எனத் திகழ்ந்தாள். சுரி குழல் சரிய, நாலும் குழற் கற்றை முகம் மறைக்க, ஒதுக்கித் தள்ளி, ஓங்கிய குரலால் அழைத்தாள்; அயர்த்தாள்; அலமந்தாள்.

"குன்றாக் கொற்றத்துக் குவவுத் தோளாய்! கரை காண் இயலா இடர்க் கடல் வீழ்வேன். நிற் பிரிந்து வாழ்வனோ? அவலம் கொண்டு அழிவலோ? அஞ்சினேன்; அஞ்சினேன்; ஆர் இது ஆற்றுவார்.

உயிரார் நீங்கின் உடலார் அழிவரே! தனித்து நிலத்து வாழ வல்லனோ யான்? கொண்டனை ஏகாது தனித்து ஏன் ஏகினை?

நனி பேதை கொல் நயனில் கூற்றம்? நறிதாம் அமிழ்து நீ அளிக்க, நன்கு இனிது உண்டு, உலவா நாள் பெற்று, உயிர் நிலைஇய நமனார், செய்ந்நன்றி அறியாச் சிறுமையர் கொல்லோ?

ஐய! எழுக! நீலமேனி வாலிழை பாகத்து ஒருவனை வணங்காது உறங்கவும் வல்லையோ? கோலமா மலரொடு தூபமும் சாந்தமும் கொண்டு, போற்றி, அணங்கு ஆர் பாகனை வணங்கும் நேரம் வாய்த்ததே ஐயா! எழுக, ஏற்பன செய்க.

பொன்னுறு நறுமேனி பொடியாடிக்கிடப்பதோ, செஞ்சாந்து சிதைந்த மார்பில் செங்குருதிப் போர்

வையோ? ஏனய்யா இது உற்றனே? ஆறுதல் கூருய். யாது யான் செய் குற்றம்? பேசாது கிடப்பதோ, பெரும? நிறுத்தி வழி போயினே. விழிவழி நில்லா நெடு நீர் துடைத்து அமைதற்கு அமைந்தவ! ஐயா! நீ என் ஆவி என்று அன்று சொல்லிய சொல் ஒரு சொல் அன்ருே?

மண் எனே நீத்து, விண்தனிப்புக்க வேந்தே! இரு வரும் மாறிப்புக்கு இதயம் எய்திஞேம் என்பாயே! நின் நெஞ்சு நேர்பவள், நான் ஆயின், உன் வன்தட மார்பில் பாய்ந்த வாளி என்னேயும் கொன்றிருக்கவேண்டுமே! நீ என் நெஞ்சில் நிலேத்தவன் என்னின், என்போல் நீயும் உளே ஆகுவையே. இரண்டும் பொய்த்தவே.

நயன் அறி நெஞ்சின் நன்னராளர் தேவர் தாமும் தெரிந்து எதிர் கூடி, வருக வள்ளியோய்! வருக எனக்கூறி நந்தா நாள் மலர் கை உற ஏந்தி நண்பொடு வர வேற்றனரோ?

ஓயா வாளி ஒளித்து நின்று எய்வான்
ஏயா வந்த இராமன் என்று உளான்,
வாயால் ஏயினன் என்னின், வாழ்வு எலாம்
ஈயாயோ? அமிழ்தேயும் ஈகுவாய்!

(கம்பன், 4106)

ஐயா! அன்றே சொன்னேன். 'சுக்கிரீவற்கு இன்? உயிர் நட்பு அமைந்து இராமன் என்பவன் உன் உயிர் கோட உடன் வந்துளான்' என்றேன். நீ அது கேட்டிலே. 'அறத்தாறு இழைப்பவன் அவன். இயல்பு அல இயம்பினே ஏன்?' என்றனேயே. ஊழி காண்கிற்கும் வாழ்நாள் உன் உயிர் ஒருங்கு உண்டானே. நான் இனிக்காண்பதென்ருே நவை கெட நவிலாய் அன்பே!

நீ நெருக்கின் மேருவும் நொறுங்குமே. உன்மார்பில் பாய்ந்தும் உயிர் பறிக்குமோ ஒருவன் வாளி? ஆயமா

மாயமோ அறிகிலேன் ஐயா! வேறு ஒரு வாலி கொல் வீழ்ந்து கிடப்பது?

அருமருந்து அனையவன் இராமன் என்பரே. வீரர்கள் செய்யவும் கூசும் செயலை எண்ணித் துணிந்தான்.

தருமம் பற்றிய தக்கவர்க்கு எலாம், அவரவர் கருமமே கட்டளைக் கல் என்பது பொய்த்ததோ?"

இன்ன பன்னி இரங்கி அழுவாளை நோக்கியவாறு மனம் உளைந்து நின்ற மாருதி, தாரை சூழ்ந்து விளங்கிய மகளிரை நோக்கித் தாரையை அந்தப்புரம் மேவ ஏவுகிறான்.

ஈமக் கடன்களை, அங்கதன் கொண்டு, செவ்வன் செய்து செவ்வியோன் சேர்கிறான்.

அருட்கு நாயகன், மதிசால் தம்பியை வல்லை ஏவி "கதிரோன் மைந்தனை கைகளால், விதியால் மௌலி மிலைச்சுவாய்" என்கிறான்.

மறையோர் ஆசி வழங்க, வானுளோர் நாள் மலர் தூவ, துறையோர் நூல் முறை மௌலி சூட்டப் பெறுகிறான் சுக்கிரீவன்.

வடசொற்கு எல்லை தேர்ந்தான்; தென்சொல் கடந்தான்; முற்றிய சொல்லின் எல்லையான் சுக்கிரீவற்கு அறிவுரை கூறத் தொடங்குகிறான்.

பின்னர் சுக்கிரீவன் இராமனை நோக்கி,

"கருந்தடங் கண்ணினாளை நாடல் ஆம் காலம் காறும்
இருந்து அருள் தருதி எம்மோடு" என்று, அடி இணையின்
(கம்பன், 4133)

வீழ்கிறான்.

மீட்டும் மீளி மொய்ம்பின் இராமன் கூறுவான்:

"ஏழ்—இரண்டு ஆண்டு, யான் போந்து எரிவனத்து
இருக்க ஏன்றேன்;
வாழியாய்! அரசர் வைகும் வளநகர் வைகல் ஒல்லேன்;
பாழிஅம் தடந்தோள் வீர! பார்த்திலை போலும் அன்றே!
யாழ் இசை மொழியோடு அன்றி, யான் உறும் இன்பம்
என்னோ?"
(கம்பன், 4135)

"சீதையைத் தேடுவதற்குரிய சேனையோடும் திங்கள் நான்கில் விரைக என்பால்" என்கின்றான்.

சுக்கிரீவன் விடைபெற்றுச் செல்கிறான்.

வாலி காதலன் வந்தடி வணங்குகிறான். அவனை அன்புடன் அழைத்து, அருகு இருத்தி, அருளின் நோக்கி,

"சீலம் நீ உடையை ஆதல்,இவன் சிறு தாதை என்று(து)
மூலமே தந்த நுந்தை ஆம் என, முறையின் நிற்றி"
(கம்பன், 4140)

என்று கூறுகிறான்.

பின்னர் பெருவலி மாருதிநோக்கி,

'...............பேர் எழில் வீர! நீயும்,
அன்னவன் அரசுக்கு ஏற்றது ஆற்றுதி அறிவின்'
(கம்பன், 4141)

என்று கூற, அவன் அன்னது பொருளாய்,

'இத்தலை இருந்து, நாயேன், ஏயின எனக்குத் தக்க
கைத் தொழில் செய்வென்'

என்று கூற, அது மறுத்து,

'நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு இறுதி நின்ற
வரம்பு இலாததனை, மற்று ஓர் தலைமகன் வலிதின்
கொண்டால்,
அரும்புவ, நலனும் தீங்கும்; ஆக லின், ஐய! நின்போல்
பெரும் பொறை அறிவினோரால், நிலையினைப் பெறுவது
அம்மா!'
(கம்பன், *4143*)

'ஆன்றவற்கு உரியது ஆய அரசினை நிறுவி, அப்பால்,
ஏன்று எனக்கு உரியது ஆய கருமமும் இயற்றற்கு ஒத்த
சான்றவர், நின்னின் இல்லை; ஆதலால், தருமம் தானே
போன்ற நீ, யானே வேண்ட, அத்தலை போதி' என்றான்.
(கம்பன், *4144*)

''ஆணை ஈது ஆயின் அஃதே, வாழியாய்! புரிவென்'' என்று கூறி, வணங்கி, மாருதியும் போகிறான்.

பின்னர் அண்ணல் இராமன், தம்பி தொடரச் சென்று வேறு ஓர் உயர் தடம் குன்றத்து உறைகிறான்.

இது தான் கம்பன் காட்டும் வாலிவதை நிகழ்ச்சி.

## 7. வாலி வதை-வான்மீகியும், கம்பனும்

### முக்கிய வேற்றுமைகள்

இனி வான்மீகி முனிவரும், கம்பனும் வாலிவதை நிகழ்ச்சியைக் கூறி இருப்பதில் காணப்படும் சில முக்கிய வேற்றுமைகளைக் காணலாம்.

இருவர் படியும் சுக்கிரீவனைப் பற்றி முதன் முதலாக இராம, இலக்குவர் கபந்தனிடத்திலிருந்தே தெரிந்து கொள்கிறார்கள்.

### கபந்தன்

வான்மீகியின் படி: தன்தோள்கள் வெட்டப்பட்ட கபந்தன், தன் வரலாறு கூறும் பொழுது, தான் இந்திரனையும், சூர்ய சந்திரரையும் போல் சொல்ல முடியாத அழகு பெற்றிருந்ததாகவும், அவ்வழகினால் மூவுலகங்களிலும் கீர்த்தி உடையவனாய் இருந்ததாகவும், அவ்வழகு ரூபத்தை ஒளித்து, கோர ரூபம் கொண்டு, எத் திசையிலும், காட்டில் வசிக்கும் ரிஷிகளைப் பயமுறுத்தி வந்ததாகவும் கூறுகிறான். அவ்வாறு அச்சமூட்ட நினைத்த போது, ஸ்தூல சிரஸ் என்ற முனிவரால் சபிக்கப் பெற்ற தாகவும், தான் தனு என்ற தானவனின் குமாரன் என்றும், பிரம்மனைக் குறித்து தவம் புரிந்து, அதன் பயனாய் தீர்க்காயுள் பெற்றதாகவும் கூறுகிறான்.

கம்பன் காவியப்படி: கபந்தன் தனு என்னும் நாமத் தான்; கந்தர்ப்பன்; சாபத்தால் அக்கடைப்படு பிறவி கண்டவன்; இராம இலக்குவர் மலர்க்கை தீண்ட,

முன்னுடை வடிவம் பெற்றவன். (கம்பன், 3693)

மேலும் வான்மீகம் கூறும்: இப்படித் தன்னைப்பற்றி அறிமுகப்படுத்திக் கொண்ட கபந்தனிடம், இராமன் தாம் ஜனஸ்தானத்தில் வாழ்ந்து வரும்போது, தாம் இருவரும் இல்லாத காலத்து, தன் மனைவியை இராவணன் தூக்கிப் போய்விட்டான் என்றும், அவன் பெயர் மாத்திரம் தெரியுமே தவிர, தோற்றம், வாழிடம், ஆற்றல் பற்றிய எவையும் தெரியாது என்றும், சீதையைக் கவர்ந்து சென்ற அவன் எங்குபோயினுன் என்றும் தெரியாது என்றும், இவைபற்றி கபந்தன் அறிவனேல் தனக்குச் சொல்லவேண்டும் என்றும் கேட்கிருன்.

இராமன் கேட்ட பிறகுதான் கபந்தன் அவர்களுக்குப் பதில் இறுக்கிருன்.

"இப்போது எனக்குத் திவ்விய ஞானம் இல்லை. எனவே சீதை இருக்கும் இடம்பற்றிநான் அறிய இயலாது" என்று கூறி மேலும் தொடர்வான்; "உம்மால் தோள் வெட்டப்பட்ட இவ்வுடலைத் தகனம் செய்க. அதன்பின் ஸ்வயரூபம் பெறுவேன்" என்று கூறுகிருன்

ஸ்வய ரூபம் அடையப் பெற்றபின், சீதை பற்றிய செய்திகள் எல்லாம் சொல்ல வல்ல ஒருவனைப் பற்றி இராம இலக்குவரிடம் தான் சொல்வதாகவும், தன் தீவினைத் தேகம் தீயில் முற்றும் எரிந்து சாம்பலாகும் வரை, சீதையைத் தூக்கிச் சென்ற மகா வீர்யம் பொருந்திய அரக்கனை இன்னுன் என்று அறியும் ஞானம் தனக்கு இல்லை என்றும், தான் சாபத்தினுல் தனது ஞானத்தை இழந்து விட்டதாகவும், சூரியன் மேற்றிசையில் மறையுமுன் தன்னைக் குழியில் தள்ளி சாஸ்திரப்

பிரகாரம் தகனம் செய்ய வேண்டும் என்றும், அப்படித் தகனம் செய்யப்பட்ட பின்னர், அந்த ராக்ஷஸன் பற்றி அறிந்த ஒருவனைப் பற்றித் தான் அவர்களுக்குச் சொல்வதாகவும், நற்குணம் அடைந்த அவனோடு இராமன் நட்பு கொள்ள வேண்டும் என்றும், அவன் இராமனுக்கு தகுந்த உதவி செய்வான் என்றும், இந்த மூவுலகங்களிலும் அவனுக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை என்றும்கூறுகிறான். மேலும் அந்த அவன், முன்னொரு காலத்தில் ஒரு காரணம் பற்றி மூவுலகங்களையும் சுற்றி வந்தவன் என்றும் கூறுகிறான்.

அவன் வேண்டிக்கொண்டவாறே இராம, இலக்குவர் அவனது உடலைத் தகனம் செய்கின்றனர்.

அதன் பின் அவன் திவ்யஸ்வரூபம் அடைகிறான். சிதையை விட்டு, நிர்மலமான இரு வஸ்திரங்களையும் அழகிய மாலையையும் அணிந்தவனாய், புகை அற்ற அக்கினி போன்றவனாய்த் தோன்றுகிறான்.

அப்பொழுது தான், சீதையைத் தேடுவதற்காக, சுக்ரீவனை, இராம இலக்குவர் அடைய வேண்டும் என்று கூறுகிறான்.

**கபந்தன் (கம்பன் படி)**

கம்பனிலோ இந்த நிகழ்ச்சி இல்லை.

'விழுங்குவேன்' என வீங்கிய கபந்தன் விளங்கு தோள்களை வீரர் துணிந்தனர். கைகள் அற்றன. குருதி ஆறு கிழக்கு உறப் பெருநதி ஆக விரவிற்று. கபந்தன் ஐயம் நீங்கிய பேர் எழில் உவமையன் ஆனான். தீவினை முடித்தான்; விண் உற நிமிர்ந்தான்; இராமனைத் துதித்துப் போற்றுகிறான்.

இலக்குவன், அவனை, "ஆர் கொலோ நீ?" என வினவ, தன் பற்றிய செய்திகளைச் (முன்னர் காட்டியது போல்) சுருக்கமாகக் கூறி விட்டு, "எந்தைக்கும் எந்தை நீர்; யான் இசைப்பது கேண்மின்" என்கிறான். சுக்கிரீவனைப் பற்றிப் பேசத் தொடங்குகிறான்.

வான்மீகியின் கபந்தன் இராமனிடம், சுக்கிரீவனைப் பற்றிப் புகழ்ந்து பேசுவான். அவன் (சுக்கிரீவன்) வீரத்தில் சிறந்தவன் என்பது மாத்திரம் அன்று. நன்றி மறவாதவன்; ஒழுக்கத்திலும் சிறந்தவன் என்றும் கூறுவான்.

அவன் இராமனுடைய உதவியைப் பிரார்த்திக்கிறவனாக இருக்கிறான் என்றும், நினைத்த உரு எடுக்க வல்லவன் என்றும், அவனுடைய மனோரதத்தை (விருப்பம்) செய்து முடிக்க வல்லவர் இராம இலக்குவரே என்றும், இராம இலக்குவர் அவனுடைய மனோரதத்தை நிறை வேற்றினும், நிறைவேற்றாவிடினும், இராம இலக்குவர் மனோபீஷ்டத்தை அவன் நிச்சயம் செய்து முடிப்பான் என்றும், பகலவன் புதல்வனாகிய அவன், வாலியினால் துவேஷிக்கப்பட்டு, சதா ஆபத்துக்கு அஞ்சியவனாய், பம்பா நதிக் கரையில் சஞ்சரித்து வருகிறான் என்றும், அவனுடன் அக்கினி சாட்சியாக இராமன் நட்பு செய்து கொள்ள வேண்டும் என்றும், ஆயுதத்தின் மீதும் ஆணையிட்டு இராமன் அவனை நண்பனாகச் செய்து கொள்ள வேண்டும் என்றும், சூரியனுடைய ஒளி எது வரை வீசுகின்றதோ அது வரை அவனுக்குத் தெரியாதது யாது ஒன்றும் இல்லை என்றும், நதிகளிலும் மலைகளிலும், மலைக் குகைகளிலும் பிலங்களிலும், வானரர்களைக் கொண்டு தேடி, அவன் சீதையைக் கண்டு பிடிப்பான் என்றும், சீதையை மேருவின் உச்சியில் அரக்கன் சிறை வைத்திருந்தாலும்

சரி பாதாளலோகத்தில் அவள் இருப்பினும் சரி, அவன் அவளைத் தேடிப் பிடித்து அரக்கனைக் கொன்று, சீதையை இராமன் முன் கொண்டுவந்து சேர்ப்பான் எனவும் கூறுகிறான்.

சுக்கிரீவன் வாழும் ரிஸ்யமூக பர்வதம் போகும் வழியையும் அவனே இராமனுக்கு விளக்குகிறான்.

இதிலிருந்து சில செய்திகள் நிச்சயமாகத் தெரி கின்றன.

முதலாவது: கபந்தன் வாக்குப்படியே அவன்இழந்த திவ்விய ஞானத்தை திரும்பப் பெற்ற பின்னரே, இச்செய்திகளை இராமனுக்குச் சொல்கிறான்.

இரண்டாவது: சுக்கிரீவனும், இராமன் உதவியை நாடினவனாக இருக்கிறான். அத்தகையவனுடைய உதவியைத் தேடி, கபந்தன், இராமனைப் போகச் சொல் கிறான்.

மூன்றாவது: வாலி அவன் மீது சினம் கொண்டு துரத்தியதால் சுக்கிரீவன் புகல் தேடி, ரிஸ்யமூக பர்வதத் தில் வாசம் செய்து வருகிறான் என்று கூறுகிறான்.

நான்காவது: அந்தச் சுக்கிரீவன், சீதையை, அவள் எங்கிருந்தாலும் தேடிக் கண்டுபிடிப்பான் என்றும், கண்டு பிடித்து இராமன் முன் கொண்டு வந்து சேர்ப்பான் என்றும் கூறுகிறான்.

ஐந்தாவது: சுக்கிரீவனோடு இராமன் அக்கினி சாட்சியாகவும், ஆயுதத்தின் மீது ஆணை இட்டும், நட்பு செய்து கொள்ள வேண்டும் என்றும் கூறுகிறான்.

இவற்றிலிருந்து இராமன் மனத்தில் சுக்கிரீவனைப் பற்றிப் பெருமையான எண்ணமும், அதே சமயத்தில் அவனிடத்து அனுதாபமும் ஏற்படுகின்றன. அவனோடு

நட்பு செய்து கொள்ள வேண்டும் என்று உறுதிப்பாடு கொள்வதற்கும் இடம் உண்டாகி விடுகிறது.

கம்பனில் இப்பகுதி விரிவாக இடம் பெறவில்லை. சுருக்கமாகவே உள்ளது.

கபந்தன் உரை, நான்கு பாடல்கள் அளவில் முடிந்து விடுகிறது.

இரண்டு பாடல்களில். இராமன் பரம்பொருள் தன்மையைக் குறிப்பிட்டு, அப்படி அவன் பரம் பொருளாக இருந்த பொழுதிலும், ருத்திரன் தன்னுடைய அழித்தல் தொழிலை ஆற்ற பல் பூதகணங்களையும் எவ்வாறு துணையாகக் கொண்டிருக்கிறானோ அது போன்றே, சீதையைத் தேடுவதற்கு, இராமனும் தக்க துணையைப் பெற வேண்டும் என்றும் கூறுகிறான்.

மூன்றாவது பாடலிலும் சுக்கிரீவன் பற்றி எந்த விதமான குறிப்பும் இல்லை.

"தீயவர்ச் சேர்கிலை; செவ்வியோர்ச் சேர்க; தாயினும் உயிர்க்கு நல்கும் சவரி தலைப்படுக. அன்னாள் ஏயது ஓர் நெறியின் எய்தி இரலையின் குன்றம் இவர்க. இரலைக் குன்றம் எய்தும் வழியை அத்தவ மூதாட்டி கூறுவாள் என்று ஆகிறது, இதன்படி.

நான்காம் பாடல் மட்டுமே சுக்கிரீவன் பற்றிக் கூறுகிறது.

சுக்கிரீவனை நட்பு செய்து கொண்டு, அவனுடைய உதவி கொண்டு, சீதையைத் தேடுதல் விழுமிது என்று கபந்தன் கூறுகிறான். அவன் கருத்து ஏற்ற, அதிர் கழல் வீரர் தாமும், 'அன்னதே அமைக' என்பார்.

எனவே கம்பனின் படி, வாலியைப் பற்றிக் கபந்தன் எதுவுமே சொல்லவில்லை.

வாலியின் குண நலன் பற்றியோ, ஆற்றல் பற்றியோ, பண்புகள் பற்றியோ, எதுவுமே விரிவாகவோ, குறிப்பாகவோ கூறப்பெறவில்லை.

'தீயவர் சேர்க்கை வேண்டா; செவ்வியோர்ச் சேர்க' என்ற தொடரால், அவன் (சுக்கிரீவன்) செவ்வியோன் என்று கபந்தன் கூறுகின்ருன், என்று மட்டுமே கொள்ள முடியும்.

இன்ஞெரு சிறு வேற்றுமையையும் காணலாம். வான் மீகத்தின் படி, ரிஸ்யமூக பர்வதம் செல்வழியை இராம, இலக்குவர்க்குக் கபந்தனே கூறி விடுகிருன்; 'வழியில் சபரியைக் காண்பீர்கள்' என்று மட்டுமே சொல்கிருன்.

கம்பன் காவியப்படி இரலைக் குன்றம் எய்தும் நெறியைச் சவரி கூறுவாள் என்றும், அவள் ஏவும் நெறி எய்தி, இரலைக் குன்றம் ஏறி, எரிகதிரோன் மைந்தனை எதிர் எதிர் தழுவி, நட்பு கொள்ளவேண்டும் என்று குறிப்பு உளது.

பம்பைக்கரை

வான்மீகியின் படி: பம்பைக் கரையில் இராம இலக்குவர் வருதலை தூரத்திலிருந்து கண்ட சுக்கிரீவன் அவர்கள் வாலியால் அனுப்பப்பட்டவர்கள் என்று அஞ்சி, அவர்கள் யாவர் என்று அறிந்து வர வேற்றுரு கொண்டு, விரைந்து செல்லுமாறு அநுமானைப் பணிக்கிருன்.

அணுகிய அநுமான்

அவர்களை அணுகிய அநுமான் அவர்கள் முன்னர் அவர்களது தோற்றத்தையும், பொலிவையும் போற்றிப் புகழ்ந்து, தான் எவ்வளவு பேசியும் அவர்கள் ஏன் தன்னுடன் சொல்லாடாமல் இருக்கிருர்கள் என்று வினவுகிருன்.

பிறகு, வானராதிபனுகிய சுக்கிரீவன், அவனுடைய தமையனுல் துரத்தப்பட்டு, அதிக துக்கம் உடையவனுய் இவ்வுலகத்தில் அலேந்து திரிகிருன் என்றும், தான் அவனுல் அனுப்பப்பட்டு வந்தவன் என்றும், தன் பெயர் அநுமான் என்றும், சுக்கிரீவன் இராம, இலக்குவர் நட்பை விரும்புகிருன் என்றும், வாயு குமாரன் ஆகிய தான் ஜாதியில் வானரன் என்றும், சுக்கிரீவனுடைய மந்திரி என்றும் கூறி, தான் நினேத்த உருவம் எடுக்க வல்லவனுதல் பற்றி சுக்கிரீவனுக்கு இதத்தைச் செய்யும் பொருட்டு, ரிஸ்யமூக பர்வதத்தை விட்டு வந்ததாகவும் கூறுகிருன்.

**சர்வகார்ய சித்தி**

அநுமான் கூற்றைச் செவியுற்ற இராமன், அவனுடைய பேச்சிலிருந்தே, அநுமான் அனேத்தும் கற்றவன் என்று தெரிவதாகவும், அவனுடைய இனிய வசனத்தைக் கேட்கும் சத்துருக்கள்கூட இரங்குவார்கள் என்றும், அவனேப் போன்ற தூதரில்லா அரசனுக்கு என்ன காரியம் நிறைவேறும் என்றும், அதற்கு மாருக அத்தகைய குணங்களோடு விளங்கும் தூதர் இருந்தால் அரசர்களுக்கு சர்வகாரியங்களும் சித்தி அடையும் என்றும் லக்ஷ்மணனிடம் சொல்கிருன்.

லக்ஷ்மணன் அநுமானேப்பார்த்து, மகாத்துமா ஆகிய சுக்கிரீவன் குண நலன்களேத் தாங்கள் செவ்வனே அறிந்துள்ளதாகவும், அவனேச் சென்று காணலாம் என்றும், அவன் உத்திரவினே அனுசரித்து அநுமான் சொல்வது போல் செய்யலாம் என்றும் கூறுகிருன்.

இதனேக் கேட்ட அநுமான், ''இவர்களும் ஏதோ காரியத்தைஉத்தேசித்துத்தான் இங்கு வந்திருக்கிருர்கள்; ஆகையால் சுக்கிரீவனுக்கு இராஜ்யம் கிடைப்பதில்

யாதொரு சந்தேகமும் இல்லை" என்று எண்ணியவனாய் பெருங்களிப்பு அடைந்து, இராமனைப் பார்த்து, அவன் தன் தம்பியுடன் எக்காரியம் பற்றிக் கானகம் வந்திருக்கிறான் என்று வினவுகிறான்.

தம் வரலாறு கூறுவான்

அதற்குமேல் இராமன் உத்திரவின்படி, லக்ஷ்மணன் தங்கள் வரலாற்றைச் சொல்லி சீதையை அபகரித்துச் சென்ற அரக்கன் இன்னான் என்று தமக்குத் தெரியாது என்றும், தானும் இராமனும் சுக்கிரீவனைச் சரண் அடைந்தவர்களாய் இருப்பதாகவும், அவனுடைய பாது காவலைத் தேடி வந்திருப்பதாகவும், துக்கத்தால் வருந்துகின்ற, தன்னைவந்து சரண் அடைகின்ற, இராமனுக்குச் சுக்கிரீவன் உதவி புரிய வேண்டும் என்றும் சொல்கிறான்.

இதற்குப் பிறகுதான், அநுமான், அந்த சுக்கிரீவனே, மகா புருஷர்களாகிய அவர்களை வந்து காண வேண்டி இருக்க, அவனைப் பார்க்க அவர்கள் வந்தது, சுக்கிரீவனது பாக்கியம் என்றும், அவனும் நாடிழந்து, தமையனாகிய வாலியுடன் பகை கொண்டு இருக்கிறான் என்றும், அவனுடைய மனைவியை வாலி அபகரித்துக் கொண்டு அவனை அல்லல் செய்துவருகிறான் என்றும், அதனால் பயந்து அவன் வனத்தில் வசிக்க நேரிட்டது என்றும், சீதையைத் தேடுவதில் வேண்டிய உதவிகளைச் செய்வான் என்றும் கூறுகிறான்.

அநுமானின் இந்தக் கூற்றைக் கேட்ட லக்ஷ்மணன் "சுக்கிரீவன் நம்முடைய உதவியை நாடி இருப்பதாகத் தெரிகிறது. ஆகையால் நம்முடைய காரியமும் நிறைவேறிற்று" என்று இராமனைப் பார்த்துக் கூறுகிறான்.

அதற்குமேல் அநுமான் இராம லக்ஷ்மணரைத் தன் தோள்மேல் சுமந்துகொண்டு, வந்த காரியம் பலித்தது என்று உள்ளம் பூரித்து, சுக்கிரீவன் இருந்த மலைப்பகுதிக் குச் செல்கிருன்.

அவனைப் பார்த்து, உடன் வந்திருப்பவர் யாவர் என்று சொல்லி, வந்த இடத்தில் இராமன் மனைவி சீதையை, இராவணன் அபகரித்துச் சென்று விட்டான் என்றும், அதன் காரணம் ஆக அவர்கள் சுக்கிரீவனைச் சரணம் அடைந்திருக்கிருர்கள் என்றும் கூறுகிருன்.

நட்புறுதி

அதன் பிறகு, சுக்கிரீவன் பயம் நீங்கியவனுக, இராம லக்ஷ்மணரிடத்து நட்புச் செய்து கொள்ள முன் வருகிருன். இருவரும் அநுமான் உண்டாக்கிய அக்கினியை வலம் வந்து நட்புறுதிசெய்து கொள்கிருர் கள்.

அதன் பின்னர் சுக்கிரீவன் இராமனைப் பார்த்து, 'சுகமும் துக்கமும் நமக்குப் பொது ஆயின' என்று கூறுகிருன்.

காக்கக் கடவியை நீ.

சுக்கிரீவன் தன்னுடைய நிலையை இராமனுக்கு விளக்கி, தான் தன் தேசத்தையும் மனைவியையும் இழந்து வாலியினுல் பகைக்கப்பட்டு, அவன்மீது கொண்ட பயத்தால் மதி கலங்கி அங்கு வசித்துக் கொண்டிருப்ப தாகவும், இவ்வாறு அச்சமுற்று அலைந்து திரியும் தன்னை இராமன் காத்தருள வேண்டும் என்றும் வேண்டுகிருன்.

அதன் மேல்தான், இராமன் நட்பின் பலனை எடுத்துக் கூறி, சுக்கிரீவன் மனைவியை அபகரித்த வாலியைத் தான்

வதைப்பதாகவும், தன்னுடைய பாணங்களால் வாலி அன்றே பூமியில் மடிந்து விழுவதைச் சுக்கிரீவன் காணலாம் என்றும் உறுதி கூறுகிறான்.

இந்த உறுதி மொழியால் மகிழ்ச்சியும் திடமும் அடைந்த சுக்கிரீவன், இராமன் பேரருளால், தான் தன் பிராண நாயகியையும், இராஜ்ஜியத்தையும் அடைவது திண்ணம் என்றும், தன்னுடைய சத்துரு ஆகிய தன் தமையனை எப்படி வதைக்க வேண்டுமோ அப்படி வதைக்க வேண்டும் என்றும், இராமனைக் கேட்டுக் கொள்கிறான்.

**காண்பான் கலன்**

இதன் பின்னர்தான் சீதையினுடைய ஆபரணங் களைச் சுக்கிரீவன் இராமனுக்குக் காட்டுகிறான். இராமன் அவற்றைக் கண்டு துக்கத்தில் மூழ்குகிறான். அவனைச் சுக்கிரீவன் தேற்றுகிறான்.

ஓரளவு தெளிவுற்ற இராமன் சுக்கிரீவனிடம் தான் என்ன செய்ய வேண்டும் என்று தெளிவாகச் சொல்லு மாறு கேட்கிறான்.

**தன் வரலாறு கூறல்**

சுக்கிரீவன் தன்னுடைய வரலாற்றைச் சொல்லி தன்னுடைய நிலையை மீண்டும் வற்புறுத்தி தன்னைக் காப்பது இராமனுடைய கடமை என்கிறான். இராமனும் சுக்கிரீவன் மனைவியை அபகரித்த வாலியை அன்றே சங்கரிப்பதாகக் கூறி அபயம் அளிக்கிறான்.

வலிமையால் புகழ் பெற்ற வாலி, தனக்குச் சத்துரு என்பதையும், அவன் இறந்தால்தான் தன் துக்கம் நீங்கும் என்றும், தன் உயிரும், சுகமும் அவன் இறப்பினுல்

தான் நிலைக்கும் என்றும், அதுதான் தன்னுடைய துக்க நிவாரணத்திற்கு வழி என்றும், சொல்லி முடிக்கிருன்.

மீண்டும் தான் வாலியைக் கொல்வதாக இராமன் உறுதி கூறி, அவ்விருவர்க்கும் இடையில் பகை உண்டான காரணத்தை வினவ, அவன் மாயாவிக்கும், வாலிக்கும் நடந்த போரையும், அதற்குப்பின் நடந்தனவற்றையும், துந்துபியோடு முன்னர் போரிட்டு வாலி அவனைக் கொன்ற தையும், அப்போது மதங்க முனி அவனுக்கிட்ட சாபத் தையும், அதன் காரணமாகவே ரிஸ்யமூக பர்வதத்தில் தான் வாழ முடிகிறது என்றும் சொல்லி முடிக்கிருன்.

ஒற்றரோ

கம்பனுடைய காதைப்படி பம்பைக் கரையில் இராம இலக்குவரைக் கண்ட சுக்கிரீவன் அவர்கள் வாலியால் அனுப்பப்பட்ட ஒற்றர்கள் என்று அஞ்சி, மலைக் குகை களில் அங்கும் இங்கும் ஓடி ஒளியத்தொடங்குகிருன்.

அநுமன் அவனிடம் அஞ்சல் என்று சொல்லி, அவ் விருவரை அணுகி, அவர்களைப் பற்றித் தெரிந்து வருவ தாகச் சொல்கிருன்.

மாணி ஆம் படிவத்தன்

பிரம்மச்சாரி வடிவம் கொண்டுவருகிருன். அவர்களை அணுகு முன்னரே, மறைய நின்று சிந்தித்து, அவர்களே தருமம் ஆவார் என்ற முடிவுக்கு வந்து விடுகிருன். பின்னர் அவர்கள் முன் சென்று "கவ்வை இன்று ஆக நுங்கள் வரவு" என்று கூற, 'நீ யார்' என இராமன் வினவ, மிகச் சுருக்கமாக தான் காற்றின் புதல்வன் என்றும், அஞ்சனை வயிற்றில் பிறந்தவன் என்றும், அநுமன் என்பது தன் நாமம் என்றும், அம் மலையில் வாழும் பகலவன் புதல்

வணங்கிய சுக்கிரீவனுக்கு ஏவல் செய்பவன் என்றும், அவர்கள் வரவு நோக்கி வருந்திய சுக்கிரீவன் ஏவ, உண்மை தெரிந்து போக தான் வந்ததாகவும் கூறுகிறான்.

சொல்லின் செல்வன்

அநுமன் பேச்சைக் கேட்ட இராமன், இலக்குவனிடத்து, அவனுடைய பேச்சிலிருந்து தெரிந்த அநுமனுடைய பெருமைகளை எடுத்துக் காட்டுகிறான்.

பின்னர் அநுமனைப் பார்த்து "நீ சொன்ன கவிக் குலத்து அரசன் யாண்டுளன்? அவனைக் காணும் விருப்பத்தோடுதான் நாங்களும் வந்திருக்கிறோம்" என்று கூறுகிறான். அவனிருப்பிடத்தைக் காட்டுமாறு கோருகிறான்.

அப்போது அநுமன், சுக்கிரீவனை அவன் அண்ணன் ஆகிய வாலி கோபித்து விரட்டியதன் காரணம் ஆக அந்தக் குன்றில் சுக்கிரீவன் இருப்பதாகவும், அவனிடம் செல்லலாம் என்றும் கூறுகிறான்.

காத்திர் எம்மை

அதுவன்றியும் தனக்கும் சுக்கிரீவனுக்கும் சேர்த்தே "எம்மையே காத்திர்" என்று அபயம் கேட்டு விடுகிறான்.

இங்கிதமாக அநுமன் கேட்ட கேள்விக்குப் பதிலாக இலக்குவன் தாங்கள் யாவர் என்பதனை, சுருக்கமாக எடுத்துக் கூறுகிறான்.

அதன்மேல் அநுமன் அவர்கள் தாளில் வீழ்ந்து வணங்க, அவன் உருவம்பற்றி 'அது தகாது' என இராமன் எடுத்துக்காட்ட, அநுமன் தானும் வானரனே எனச் சொல்லி தன் பெரிய உருவத்துடன் நிற்கிறான்.

அநுமனைப் பற்றி இலக்குவனிடம் வியந்து பேசிய இராமன், சுக்கிரீவனுக்கு ஏவல் செய்பவருள் ஒருவனே

இப்படி இருப்பான் எனில், அவன் நிலே சொல்லல்பாற்றே என்று கூறுகிருன்.

அதன்மேல் சுக்கிரீவனே அழைத்து வர அநுமன் செல் கிருன்.

சுக்கிரீவனிடம் இராமன் சிறப்புகளே அநுமன் எடுத்துச் சொல்ல, அவனும் இராமனே வந்து காண்கிருன்.

நட்புறவு

அவனுடைய சிந்தனேயில் இராமன் பரம்பொருள் என்ற தெளிவு தோன்றி விடுகிறது. சுக்கிரீவனே இராமன் வரவேற்க, இருவரும் உரையாடுகிருர்கள்.

சுக்கிரீவனுல் தன்னுடைய துயரம் தீர்க்க வேண்டுவது கருதி, சபரி சொன்ன நெறிப்படி, அவனேத் தேடி வந்ததாக இராமன் சொல்ல, சுக்கிரீவனும் தன் தமையன் ஆகிய வாலி தன்னே உலகெங்கும் தொடர்ந்து அடித்துத் துரத்த அக் குன்றிடை வந்து ஒளித்து வாழ்வதாகவும் சொல்லி இராமனேத் தான் சரண் புகுவதாகவும், தன்னேத் தாங்குதல் இராமனது தருமம் என்றும் கூறுகிருன்.

இன்னுயிர்த் துணேவன்

அப்பொழுது இராமன் தம் இருவர்க்கும் இன்ப துன்பங்கள் பொது என்றும், சுக்கிரீவன் பகைவர்கள் தனக்கும் பகைவர்கள் என்றும், அவனேடு உற்றவர் தீயவரே எனினும், தனக்கு அவர் நல் உற்றுரே என்றும், அவன் தன் இன்னுயிர்த் துணேவன் என்றும் கூறுகிருன்.

கம்பனுடைய இக் கதைப்போக்கில் காண வேண்டிய அம்சங்கள் சில உள.

ஒன்று: இராம இலக்குவரை அநுமன் அணுகுவது, அவன் விருப்பப்படியே அன்றி சுக்கிரீவன் ஏவலினுல் அன்று.

இரண்டு: சுக்கிரீவன் அண்ணன் ஆகிய வாலி அவன் மேல் கோபம் கொண்டு விரட்ட, அது காரணம் ஆக அக் குன்றில் வந்து அவன் வாழ்கிருன் என்று கூறி, தனக்கும் சுக்கிரீவனுக்கும் சேர்த்தே அநுமன் அபயம் கேட்டு விழுகிருன்.

மூன்று: அநுமனுடைய பேச்சுத் திறனுல் ஈர்க்கப் பட்ட இராமன், அத்தகையவன் சுக்கிரீவனுக்கு ஏவல் செய்பவனுக இருப்பான் ஆகில் "அவன் நிலே சொல்லற் பாற்ருே?" என வியப்பான். இவ்வழி இராமனுக்குச் சுக்கிரீவன்மீது பெருமதிப்பு ஏற்பட்டு விடுகிறது.

நான்கு: சுக்கிரீவன் இராமனே நேரில் கண்ட பிறகு தான், தான் வாலியால் துரத்தப்பட்டதை எடுத்துக் கூறி "சரண் உனேப் புகுந்தேன். என்னேத் தாங்குதல் தருமம்" என்கிருன்.

ஐந்து: அவ்வாறு சரண் அடைந்த சுக்கிரீவனே இராமன், "நீ என் இன்னுயிர்த் துணேவன்" என்று உவந்து ஏற்றுக் கொள்கிருன்.

ஆறு: இதுவரையில் சுக்கிரீவன் மனேவியை வாலி பற்றிக்கொண்டான் என்ற செய்தி, இராமனுக்குத் தெரியாது. எனவே, வாலியைக் கொல்வதாக இராமன் சொல்லவில்லே.

இதற்குப் பிறகு சுக்கிரீவன், அநுமன், இராம இலக்குவர் அனேவரும் போக பூமியையும் ஏசும் புது மலர்ச்சோலே புகுகின்றனர்.

அவ்விடை இராமன் இனிது இருந்து, நல் விருந்தும் ஆகிருன். விருந்து உண் போழ்தத்து விருந்தோம்பு மகளிர்க் காணுது, "பொருந்து நன்மனைக்கு உரிய பூவை யை, நீயும் பிரிந்துளாய் கொல்?" என்று வினவுகிருன்.

**தலைமை, தாரம் தருவல்**

இந்த நிலையில் அநுமன் குறுக்கிட்டு, வாலியினுடைய சிறப்புகள் அனைத்தும் விரிவாக விளக்கி, சுக்கிரீவனோடு வாலி பகை கொள்ள நேரிட்ட காரணத்தையும் எடுத்துக் கூறி, வாலிக்குப் பயந்து சுக்கிரீவன் மலையில் வாழ்தலைக் குறிப்பிட்டு, இறுதியாக "உருமை என்று இவற்கு உரிய தாரமாம் அருமருந்தையும் அவன் விரும்பினுன்" என்றும் கூறி, "இதனுல் இருமையும் துறந்து இவன் இருந்தனன்" என்றும் சொல்லி முடிக்கிருன்.

அப்பொழுதுதான் இராமன் சினந்து வாலியைக் கொல்வதாகச் சூளுரைத்து, "தலைமையோடு நின் தாரமும் உனக்கு இன்று தருவென்" என்று கூறுகிருன்.

கம்பனுடைய இக் கதைப்போக்கில் ஒரு சிறப்பைக் காண்கிருேம். கபந்தன் சுக்கிரீவனைப் பற்றிக் குறிப்பிடு கின்ருனே அன்றி, வாலியைப் பற்றிக் குறிப்பிடவில்லை.

இராம இலக்குவரைச் சந்தித்த அநுமன், முதலில் வாலி சுக்கிரீவன்மீது சினம் கொண்டு துரத்தினுன் என்று மாத்திரம் கூறுகிருன்.

பின்னர் இராமனை நேரில் சந்தித்த சுக்கிரீவனும் இராமனிடம் இதையே கூறித்தான், அவனிடம் சரண் அடைகிருன்.

சுக்கிரீவன் மனைவி உருமையை வாலி விரும்பினுன் என்பது விருந்துண் போழ்தில், மகளிர் காணுத இராமன்

தன்போலவே சுக்கிரீவனும் மனைவியைப் பிரிந்திருக்கின்ருனே, என்று கேட்ட கேள்விக்கு அநுமனல் பதிலாகக் கூறப்பெறுகிறது.

அந்த வேளையில் இராமன் உரைத்த சூளுரையைப் புரிந்துகொள்வதற்கு, அவன் மனநிலையை நாம் நன்கு உணர்ந்துகொள்ள வேண்டும்.

சுக்கிரீவன் நாட்டைவிட்டுத் துரத்தப் பெற்றிருப்பது போலவே, முடிசூட இருந்த இராமனும் வாய்ப்பிழந்து நாட்டை விட்டு காட்டுக்கு வந்தவன்.

சுக்கிரீவன் மனைவியை வாலி கவர்ந்தது போலவே, இராமன் மனைவி ஆகிய சீதையை இராவணன் அபகரித்துச் சென்றுவிட்டான்.

இப்படிப்பார்க்கும்பொழுது சுக்கிரீவனும், இராமனும் ஒரே நிலையினராகவே இருக்கின்ருர்கள்,

அதுவன்றியும், இராமனிடம் சுக்கிரீவன் சரண் அடைந்துவிட்டான்.

இப்பின்னணியில் இராமன் உணர்ச்சி வயப்பட்டதில் வியப்புக்கு இடம் இல்லை.

இப்படி உணர்ச்சி வசப்பட்டதன் காரணமாகத்தான் "தலைமையோடு, நின்தாரமும் உனக்கு தருவென்" என்று இராமன் சூளுரைக்கிருன்.

அநுமனிடமிருந்தும், சுக்கிரீவனிடமிருந்தும் தான் கேட்டனவற்ருல், எந்த அளவிற்கு வாலி குற்றவாளி என்பதனைப் பற்றி நிதானிக்கவோ, அவர்கள் கூற்றில் குறை ஏதேனும் இருக்கக் கூடும் என்று ஐயப்படவோ, அவனது உணர்ச்சிக் குமுறல் இடம் கொடுக்கவில்லை,

ஆகவேதான் "வில்லிடை வாளியின் வீட்டி, தாரமும் தலைமையும் தருவென்" என்று சூளுரைக்கிறான்.

வாலியைக் கொல்லாமலேயே சுக்கிரீவனுக்கு தாரத்தையும், தலைமையையும் தன்னால் தர முடியுமா என்று அவன் சிந்தித்துப் பார்க்கவே இல்லை.

அநுமன் கூற்றும், சுக்கிரீவன் கூற்றும், இராமனை வாலியின் மேல் சினம் கொள்ள வைத்தனவே அன்றி வாலி கொல்லப்பட வேண்டியவன்தானா, என்பதைப் பற்றிச் சிந்திப்பதற்கு அவனுக்கு இறையும் இடம் தந்தில.

அதே சமயத்தில் வால்மீகி முனிவர் கதைப் போக்கில், இவ்விதமாக இராமன் உணர்ச்சி வயப்படு வதற்கு இடம் இல்லாமல் போகிறது.

தொடக்கத்திலிருந்தே அதாவது கபந்தன் கூற்றிலிருந்தே இராமன் உதவி சுக்கிரீவனுக்குத் தேவைப்படுகிறது.

ஆக ஒருவர்க்கொருவர் உதவியைப் பரிமாறிக் கொள்கின்ற வகையில் அவர்கள் நட்புறுதி செய்து கொள்ள வேண்டும் என்று கபந்தனே குறிப்பிட்டுச் சொல்கிறான்.

அந்நட்பும் உறுதியாக இருக்க வேண்டும் என்பதற்காக, அக்கினி சாட்சியாகவும், ஆயுதத்தின்மீது இடும் ஆணையாகவும், நட்புறுதி அவர்கள் செய்து கொள்ள வேண்டும் என்று கபந்தன் கூறுகிறான்.

அதற்கேற்பவே இராம, சுக்கிரீவர்கள் சந்திக்கும் பொழுது, சுக்கிரீவன் பலமுறை வாலியின் சாவில்தான் தன்னுடைய உயிரும் சுகமும் இருக்கிறது என்று (திரும்பத் திரும்ப) முறையிடுகிறான்.

இராமனும், சுக்கிரீவனிடத்து, தன் பாணங்களால், வாலியை அன்றே கொன்று விடுவதாகஉறுதி கூறுகிறான்.

அதற்கு ஒப்பவே, சுக்கிரீவனும் வாலியை எப்படிக் கொல்லவேண்டும் என்று இராமன் நினைக்கிருனே அப்படியே கொல்லுமாறு, இராமனை வேண்டிக் கொள்கிருன்.

மாருக, கம்பனின் கதைப்படி சுக்கிரீவன் இராமனிடத்து, 'சரண் உனைப் புகுந்தேன், என்னைத் தாங்குதல் தருமம்' என்று கூறுகின்ருனே தவிர வாலியை இராமன் கொல்ல வேண்டுமென்று கோரவில்லை.

## இராமன் சூளுரை

வாலியைக் கொல்வேன் என்று இராமன் சூளுரைப்பதும், சுக்கிரீவன் கேட்டுக் கொண்டதன் பேரில் அன்று. வாலியைப் பற்றியும், வாலி சுக்கிரீவர்க்கிடையே பகை நேர்ந்ததைப் பற்றியும் விரிவாகக் கூறி வந்த அநுமன், 'உருமை என்று இவற்கு உரிய தாரமாம் அருமருந்தையும் அவன் விரும்பிஞன்' என்று சொன்னதைக் கேட்ட பின்னரே, இராமன் இவ்வாறு சூளுரைக்கின்ருன்.

## விரும்பிஞன்—வவ்விஞன்

இதனை வலியுறுத்துமாப் போல,

........'பரிவு இலன், ஒருவன் தன் இளையோன்
தாரம் வௌவினன்' என்ற சொல் தரிக்குமாறு உளதோ?
(கம்பன், 3854)

என்ற கம்பன் கூற்றும் அமைந்துள்ளது.

இந்த உணர்ச்சிப் பெருக்கு தெள்ளத் தெளிவு ஆவதற்கு இவ்வொன்றே சான்ருகும்.

சொல்லின் செல்வஞகிய அநுமன், 'உருமை என்றிவற்கு உரிய தாரமாம் அருமருந்தையும் அவன் விரும்பிஞன்' என்றுதான் கூறுகிருன். உணர்ச்சி வசப்பட்ட இராமன் தான் அதனை 'பரிவிலன் ஒருவன் தன் இளையோன் தாரம்

வவ்வினன்' என்று எடுத்துக் கொள்கிருன்.

இராமன் உணர்ச்சி வயப்பட்டு, சிந்தனையை இழந்து விட்டான் என்பதற்கு, வேறு சில சான்றுகளையும் காணலாம்.

சினம் கொண்டு சூளுரைக்கும் பொழுது சுக்கிரீவனிடத்து, "நின்தாரம் உனக்கு இன்று தருவென்", என்று மாத்திரம் சொல்லவில்லை. "தலைமையோடு நின்தாரமும் உனக்கு இன்று தருவென்" என்று இராமன் சொல்கிருன்.

**கிஷ்கிந்தை எவற்கு உரியது**

எப்படிப் பார்த்தாலும், கிஷ்கிந்தை ஆட்சி சுக்கிரீவனைச் சேர்ந்தது அன்று; வாலி மாயாவியைக் கொல்லுவதற்காகப் பிலத்துள் புக்கு நீண்டநாள் வெளி வாராது போகவே, அவன் இறந்துவிட்டான் எனக் கருதிய வானர அமைச்சரும் பிறரும் சுக்கிரீவனை ஆட்சிப் பொறுப்பினை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டிக் கொண்டனர். பின்னர் வாலி, மாயாவியைக் கொன்று விட்டு திரும்பி வந்த போது, சுக்கிரீவன், ஆட்சியை வாலி இடத்து ஒப்படைக்கிருன்.

இந்நிலையில், வாலி உயிரோடு இருக்கும் வரையில் அரசு அவனையே சேரும். அவன் ஆயுளுக்குப் பிறகும், அது அவன் மகனுகிய அங்கதனுக்குச் சேருமே அன்றி, சுக்கிரீவனைச் சேராது.

இதற்குச் சான்ருக வான்மீகம் கூறுவ காணலாம்:

வாலிவதத்திற்குப் பிறகு, வாலி உடல்மீது வந்து விழுந்து புரண்டு புலம்பிய தாரை இடத்து, அறிவில் சிறந்தோனுகிய அநுமான், தேறுதல் மொழிகள் கூறி

அங்கதனுக்கு முடிசூட்டி மகிழ்ச்சியோடு இருக்குமாறு வேண்டுகிருனே தவிர, வாலி வதையுண்ட பிறகு, கிஷ்கிந்தை ஆட்சி, சுக்கிரீவனைச் சேர்ந்தது என்று, அவன் சொல்லவில்லை.

தாரை, இந்த விஷயத்தில் தான் எதையும் செய்ய அருகதை அற்றவள் என்றும், சிற்றப்பன் ஆகிய சுக்கிரீவனே உற்றவன் என்றும் சொல்கிருள்.

எனவே ஒரு நாட்டினுடைய ஆட்சி, அதனை ஆளும் மன்னன் மறைந்த பின்னர், அவனது மூத்த புதல்வனைச் சேருமே அன்றி, தம்பியைச் சேராது.

இதனைக் கம்பனும் வேருெரு இடத்தில் வற்புறுத்து வான்.

முறைப்படி அரசு மூத்தவற்கே உரித்து

இராமனுக்கு முடி சூட்ட வேண்டும் என்று தயரதன் முடிவு செய்தபோது. அதனைத் தடுக்க விரும்பிய மந்தரை கைகேயியினிடத்து வந்து, அவள் மனத்தைக் கலைக்கிருள்.

அப்படி அவளிடம் பேசும்போது...

'சரதம் இப் புவி எலாம், தம்பியோடும் இவ்
வரதனே காக்குமேல், வரம்பில் காலமும்,
பரதனும் இளவலும், பதியின் நீங்கிப்போய்,
விரத மா தவம் செய விடுதல் நன்று' என்ருள்.
(கம்பன், 1463)

இதிலிருந்து தெரிவது என்னவென்ருல் இராமன் முடிசூடுவானேயானுல், அந்த அரசு அவனுடைய வாரிசு உரிமையில் வருமே தவிர, எக்காலத்திலும் பரதனுக்குக் கிடைக்கப் போவதில்லை என்பதே,

மந்தரை மாற்றத்தைக் கேட்டுச் சினமுற்ற கைகேயி யும்,

'வெயில் முறைக் குலக் கதிரவன் முதலிய மேலோர்,
உயிர் முதல் பொருள் திறம்பினும், உரை திறம்பாதோர்;
மயில் முறைக் குலத்து உரிமையை, மனு முதல் மரபை;
செயிர் உற, புலேச் சிந்தையால், என் சொனுய்? —
தீயோய்'
(கம்பன், 1470)

என்று கூறி, இதனேயே வலியுறுத்துவாள்.

எனவே வால்மீகியின்படி, பார்ப்பினும் சரி, கம்பன்படி பார்ப்பினும் சரி, வாலிக்குப் பிறகு கிஷ்கிந்தை ஆட்சி, அவனுடைய மகனுன அங்கதனுக்கே சேரும்; சுக்கிரீவனுக்கு அன்று.

மிகை உணர்ச்சி

தான் இருந்த உணர்ச்சிக் குமுறலான சூழ்நிலேயில் இராமன் இதனேயும் சிந்திக்கத் தவறி, சுக்கிரீவனுக்கு, தாரமும் தலேமையும் தருவதாகக் கூறுகிருன்.

இதனே எடுத்துக்காட்டும் பொழுது ஒன்றை மறந்து விடக் கூடாது. பின்அணியையும், சூழலேயும் முழுமையாக மனத்தில் கொண்டால், இராமன் என்ன, எந்த மனிதனுமே இம் முடிவிற்கே வந்திருப்பான் என்றுதான் சொல்லமுடியும்.

நாட்டை விட்டு வெளியேறியதும், மனேவியைப் பிறன் ஒருவன் கவர்ந்து செல்ல சலிப்பதும், சுக்கிரீவன், இராமன் ஆகிய இருவர்க்கும் பொதுவான அநுபவங்கள்.

தன் இத்தகைய அநுபவத்தைப் போன்ற நிகழ்ச்சி யைக் கொண்ட பிறிதொருவனேக் காணும்பொழுது

எல்லையற்ற அநுதாபமும், பரிவும் ஏற்படுவது இயற்கையே ஆகும்.

அத்துடன், அந்தப் பின்னணியில், தன்னிடம் அவன் அடைக்கலம் கோருகிறான்; அபயம் வேண்டுகிறான், என்ற நிலையும் சேரும் பொழுது, இராமன் உணர்ச்சிப் பிழம்பாக மாறிவிடுவதில் வியப்பதற்கு எதுவும் இல்லை.

உண்மையில், வால்மீகத்தில், கிஷ்கிந்தா காண்டம் 10 ஆம் சர்க்கம் இராமன், சுக்கிரீவனுக்கு உறுதி கூறுவதை அடியிற் கண்டவாறு கூறும்.

"உமது மனைவியை அபகரித்தவனை, நான் பாராதிருக்கும்வரை தான், பாவியும், குலப் பெருமை கெடுத்தவனுமான அந்த வாலி உயிருடன் இருப்பான்.

நீர் துயர்க்கடலில் மூழ்கிக் கிடக்கின்றீர் என்பதை எனக்கு நேர்ந்தது போல் இருப்பதால், நான் என்னுடைய சொந்த அநுபவத்தால் உள்ளபடி உணர்கிறேன்.

நான் உம்மைக் கஷ்டத்திலிருந்து விடுவிக்கிறேன். குறையற்ற மனத் திருப்தி அடைவீர்" என்கிறான்!

இந்த இராமனது உறுதிமொழியில், சுக்கிரீவன் உற்சாகத்தையே காண்கிறான், என்று வான்மீகம் கூறும்.

**திகைத்த செய்கை**

பின்னர், வாலி இராமன் அம்பால் அடிக்கப்பட்ட பிறகு, இராமனை அவன் ஏசும் காலத்து "தேவியைப் பிரிந்த பின்னர் திகைத்தனை போலும் செய்கை?" என்று கேட்கிறானல்லவா? அந்தத் திகைப்பு இந்தச் சூளுரையிலேயே தொடங்கிவிடுகிறது.

வான்மீகத்தின்படி சீதையின் ஆபரணங்களை சுக்கிரீவன் இராமன் இடத்துக் காட்டுகின்ற நிகழ்ச்சி,

துந்துபி உடல் எற்றப்படுவது, மராமரங்கள் தொளை படுவது ஆகிய நிகழ்ச்சிகளுக்கு முந்தி இடம் பெற்றிருக் கிறது.

கம்பன் காவியப்படி, மராமரப் படலம், துந்துபிப் படலம் ஆகிய இரண்டனுக்கும் பின்னர், கலன் காண் படலம் இடம் பெற்றிருக்கிறது.

கம்பனுடைய கலன் காண் படலத்தில் கூறிஇருக்கும் ஒ ன்றை,உற்று நோக்குவது அவசியம் ஆகும்.

சீதையின் ஆபரணங்களைச் சுக்கிரீவன் காட்ட அதனைப் பார்த்ததன் காரணம் ஆக, இராமன் ஆழ்ந்த துயரத்தில் மூழ்கி, புலம்பத் தொடங்குகிறுன்.

சுக்கிரீவன், இராமனது துயரம் கண்டு, தானும் மிகவும் வருந்தி, இராமனுக்குத் தேறுதல் கூறுவதோடல் லாமல், மனோதத்துவ முறைப்படி பெரிதும் பயன் விளைக்கக் கூடிய ஒன்றைக் கூறத் தொடங்குகிறுன். அது தான்,

‘‘என்னுடைச் சிறு குறை முடித்தல் ஈண்டு ஓரீஇப்
பின்னுடைத்து ஆயினும் ஆக! பேதுறும்
மின் இடைச் சனகியை மீட்டு, மீள்துமால்—
பொன்னுடைச் சிலையினுய்!—விரைந்துபோய்’’

(கம்பன், 3918)

என்பதாம்.

இப்படிச் சுக்கிரீவன் சொன்னதைக் கேட்ட இராமனுக்கு—உண்மையில் யாருக்கும் தான்—சுக்கிரீவன் மாட்டுப் பரிவும், அக்கறையும் அதிகப்படவே செய்யும்.

அதனைத்தான் இங்கே கம்பன் செய்து விடுகிறுன்,

ஆற்றலில் ஐயம்

வாலியைக் 'கொல்வேன்' என்று முன்னர் சுக்கிரீவனிடம் இராமன் உறுதி அளித்திருந்தும், அது விஷயத்தில் அவனுக்கு முழுமையான நம்பிக்கை ஏற்பட வில்லை (வான்மீகப்படி).

வாலியின் வீரத்தையும், வன்மைத் திறனையும் நேரில் கண்டவர், அநுமனும் சுக்கிரீவனுமே. இராமன் நிலை அத்தகையது அன்று.

எனவேதான், அத்தகு ஆற்றல் சால் வாலியை இராமனால் கொல்ல முடியுமா என்ற ஐயம் சுக்கிரீவன் மனத்திடை இருந்து கொண்டே இருக்கிறது.

ஆகவே, வாலியின் ஆற்றல் பற்றி விரிவாகச் சொல்லி, துந்துபியோடு அவன் போர் செய்ததையும், அவனை எப்படிக் கொன்றான் என்றும், எவ்வளவு எளிதாக அவனை விண்ணில் வீசினான் என்பதையும் விரிவாகச் சொல்கிறான்.

இப்படி அவன் சொன்னதைக் கேட்ட இராமன் இளமுறுவல் தோன்ற, சுக்கிரீவனைப் பார்த்து, தன்னுடைய வீரத்தில் அவனுக்குச் சந்தேகம் இருக்குமாயின், அதனை அப்பொழுதே, தீர்த்து விடுவதாகச் சொல்லி, தசை அறக் கழிந்து குவை எனக் கிடந்த, அந்த திரளை பத்து யோசனை தூரத்திற்கு அப்பால் எற்றி விடுகிறான்.

அப்பொழுதும்கூட சுக்கிரீவனின் ஐயம் தீர்ந்த பாடில்லை. அதன் பின்னரே இராமன், தன்னுடைய ஒரே அம்பினால் ஏழு மரா மரங்களையும் தொளைக்கிறான்.

அதற்குப் பின்னர்தான் சுக்கிரீவனுக்கு நம்பிக்கை உண்டாகிறது.

கம்பனுடைய கதைப்போக்கின்படியும் சுக்கிரீவனுக்கு இவ்வாறு சந்தேகம் வரத்தான் செய்கிறது.

ஏழுமராமரங்களையும் ஒரே அம்பால் தொளைத்த செய்தி முதலில் கூறப் பெறுகிறது.

பின்னர் துந்துபி வாலியோடு போரிட்டதும், பொன்றினதும் துந்துபிப் படலத்துக் காட்டப் பெறுகின்றன.

இங்கேயும் வான்மீகத்தினின்றும் கம்பன் வேறுபடுவான். வான்மீகி துந்துபியின் என்புக் குவை இராமனால் எற்றப்பட்டு வானிடை எறியப் பெறுகிறது என்ன, கம்பனோ, அண்ணல் ஏவல் ஏற்று அமைந்த இலக்குவன் கழல் விரலால் உந்த, அது விரிஞ்சன் நாடு உற்று மீண்டது என்பான்.

இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் முடிந்த பிறகு, அவர்கள் கிஷ்கிந்தை நோக்கி செல்கிறார்கள்.

போர்ப்புறம் புகுதல்

வான்மீகத்தின்படி, சுக்கிரீவன் இராமன் யோசனையின் மேல் வாலியைப் போர்க்கு அழைக்கிறான்.

வாலி சுக்கிரீவர்க்கு இடையே நடந்த போரில் சுக்கிரீவன் தோற்று, இராமனைக் காணாது, ரிஸ்யமூக பர்வதம் நோக்கிச் செல்கிறான். வல் விரைந்து ஓடும் அவனைத் தொடர்ந்து இராமனும் பிறரும் செல்கின்றனர்.

அங்குதான், மிகப் பரிதாபமாகச் சுக்கிரீவன், பட்ட வேதனை பொறாதவனாய், வாலியைக் கொல்ல இயலாது என்று இராமன் முன்னரே சொல்லி இருந்தால், இவ்வாறு வலிய,போர்க்கு அவனை அழைத்து,துன்பப்பட நேரிட்டிருக்

காது என்றும், 'அங்கே போயிருக்கவே மாட்டேன்' என்றும் கூறுகிறுன்.

**மாலை இது அணிந்து மலைக**

இராமன் சுக்கிரீவனைச் சமாதானப்படுத்துகிறுன். இருவர்க்கிடையே உருவத்தில் வேறுபாடு காண முடியாமையால் தான், அம்பு எய்யவில்லை என்றும், வேறு பாடு தெரிவதற்காக சுக்கிரீவன் உடலில் ஓர் அடையாளம் தரித்துக்கொள்ள வேண்டும் என்றும் கூறி, இலக்ஷ்மணனை நோக்கி, நாக புஷ்பக் கொடியைப் பிடுங்கி சுக்கிரீவன் கழுத்தில் மாலையாகப் போடுமாறு கூறுகிறுன்.

இலக்ஷ்மணன் அப்படியே செய்ய பின் அவர்கள் கிஷ்கிந்தை நோக்கிச் செல்கிறுர்கள்.

சுக்கிரீவன் நீங்கிய பிறர் அடர்ந்த மரச் செறிவில் மறைந்து கொள்ள, சுக்கிரீவன் வாலியைப் போர்க்கு அழைக்கிறுன்.

அப்பொழுதுதான் தாரை, வாலி போர்க்குச் செல் வதைத் தடுக்க முயன்றும் தோல்வி அடைகிறுள்.

இறுதியாக வாலி சுக்கிரீவர்க்கு இடையே நடந்த போரில் சுக்கிரீவன் வாலியால் தாக்கப்பட்டு வலி பொருளுய் இளைத்து, அடிக்கடி இராமன் இருக்கும் இடத்தைப் பார்க்கிறுன்.

ஏற்ற தருணத்தை எதிர்பார்த்த இராமன் ஒரு பாணத்தினை வாலியின் மார்பை நோக்கி விடுகிறுன்.

* * *

இனி கம்பன் கதைத் தொடர்ச்சி காணலாம்.

"என் கிறு குறை முடித்தல் பின்னுடைத்து ஆகுக" என்று சுக்கிரீவன் கூறியதில் இருந்து ஓரளவு தெளிவு

பெற்ற இராமன், தனக்கு நேர்ந்த பழியின் காரணமாகத் தான் மாய்வது சாலப் பொருந்துவதே என்றும், அதன் முன்னர் சுக்கிரீவன் குறை முடிக்கப் பெறல் வேண்டும் என்றும் கூறுகிருன்.

அப்போது வன்திறல் மாருதி வணங்கிக் கூறுவான். வாலியைக் கொல்வதே முதலில் செய்யத்தக்கது என்றும், அவ்வாறு அவன் கொல்லப்பட்டால் அன்றி, கடுங்கதிரோன் மகன் அரசன் ஆதல் இயலாது என்றும், சுக்கிரீவன் அரசுப் பொறுப்பு அமைவுறப் பெற்றபின் வானரச்சேனை சுக்கிரீவன் ஆணைப்படி திரளும் என்றும், அதனுல் சீதையைத் தேடிவர அவற்றைப் போக்கல் ஆகும் என்றும் கூறுகிருன்.

இக்கருத்தை அனைவரும் ஏற்றபின், அவர்கள் வாலி வாழிடம் நோக்கிச் செல்லத் தலைப்படுகின்றனர்.

துன்னிய அவர்கள் 'செய்வது என்ன?' என்று நின்று யோசிக்கின்றனர்.

அப்போது இராமன் தன் கருத்தைத் தெரிவிக்கின்றுன்.

சுக்கிரீவன் வாலியைப் போர்க்குவலிய அழைக்கிருன். பொங்கு சினத்தனுய்ப் போர்க்கு எழுந்த வாலியைத் தாரை விலக்க முயல்கிருள்.

தாரை தன் முயற்சியில் தோல்வி அடைகிருள்.

வாலி போர்க்கு விரைந்து செல்கிருன்.

முதல் சுற்றில் வாலியினுல் தாக்கப் பெற்று தளர்ந்து, ஓடத் தொடங்கிய சுக்கிரீவன் இராமனை அணுகுகிருன்.

இராமன் தான் வாலிமீது அம்பு எய்யாமைக்குக் காரணம் விளக்குகிருன்.

''அடையாளம் தெரிந்து கொள்வதற்காகக் கொடிப் பூ மிலைந்து செல்க'' என இராமன் கூற, அவ்வாறே அவனும் மிலைந்தனன், சென்றான்; எதிர்த்தனன், மீட்டும்.

இம்முறை நடந்தபோரில் சுக்கிரீவன் வலிமுற்றும் ஒடுங்க, வாலி, 'எடுத்து எற்றுவன் பாரிடை' என்று சினந்து, சுக்கிரீவனை மேலே தூக்கக் கண்ட இராகவன் கடிது துரந்த கணை, வாலியின் மார்பில் தைக்கிறது.

இந்த போர் நிகழ்ச்சிகளில் வான்மீகத்திற்கும் கம்பனுக்கும் உள்ள மாறுபாடுகள் தவச் சிலவே.

ஒன்று: வால்மீகத்தில் முதல் சுற்றுப்போரில் தோல்வி அடைந்த சுக்கிரீவன் ரிஸ்யமூக பர்வதத்தில் புகல் தேடுகிறான். கம்பனில் அப்படியில்லை.

இரண்டு: இரண்டாம் முறை போர்க்குப் புறப் பட்டுப் போகும்போதுதான், தாரை வாலியைப் போர்க் குச் செல்ல வேண்டா என்று வேண்டிக் கொள்கிறாள். கம்பனில், முதலிலேயே தாரை தடுக்கிறாள்.

மூன்று: இடையிலே அடையாளம் தெரிவதற் காக நாகபுஷ்பக் கொடியை இராமன் ஆணைக்கு ஏற்ப இலக்குவன் சுக்கிரீவனுக்கு அணிவித்தான் என்று வான் மீகம் கூறும். கம்பனில், இராமன் 'கொடிப் பூ மிலைக' என ஏவ, சுக்கிரீவன் தானே அதனை அணிகிறான்.

நான்கு: இங்கு காணப்படும் வேறுபாடு சற்று முக்கியமானதும்கூட.

வாலி போர்க்குப் போவதைத் தடுத்த தாரை வாலிக்கு ஆலோசனை சொல்கிறாள்.

அதாவது சுக்கிரீவன்மீது கொண்ட பகையை விட்டு, அவனை அழைத்து, இளவரசனாக்கி, அவனுடைய அன்பை

மீட்டும் பெறுவது அவனுக்கு நன்மை தரும் என்றும், அவனைப் போன்ற உறவினர் எவரும் இலர் என்றும் அவனே வாலிக்கு உற்ற துணையாவான் என்றும், கூறு கிறாள்.

தாரைக்குப் பதிலிறுக்கும் வாலியோ, உறுமி கர்ஜித்து வரும் பகைவனை எவ்வாறு பொறுத்து இருக்க முடியும் என்று கேட்டுவிட்டு, நடக்கும் போரில் சுக்கிரீவனைத் தான் கொல்லப் போவதில்லை எனவும், அவனது செருக்கை அடக்க கையாலும், தடியாலும், அடித்து ஓட்டி விடுவதாகவும் சொல்லி போர்க்குப்போக முனைகிறான்.

கம்பன் காப்பியப் படி

வாலி தாரைக்குச் சமாதானம் சொன்னபோது, கொல்லாமல் செருக்கை மட்டும் அடக்குவதாகக் கூற வில்லை. மாறாக ''உருத்தவன் உயிர்குடித்து, உடன் வந்தாரையும் கருத்து அழித்து, எய்துவென், கலங்கல்'' என்று சொல்கிறான்.

இந்த ஒரு மாற்றம் வான்மீகி காட்டும் வாலியினி டத்து, அநுதாபம் ஏற்படும்படிச் செய்து விடுகிறது.

சுக்கிரீவனைக் கொல்ல விரும்பாத வாலியை, இராமன் மறைந்திருந்து அம்பெய்து கொன்று விட்டானே, என்பதி லிருந்து பிறப்பதுதான் அந்த அநுதாபம்.

இராமன் அம்பினால் அடிபட்டு வீழ்ந்து கிடந்த வாலி யின் அருகில், இராம இலக்ஷ்மணர் வர, அவர்களைப் பார்த்துப் பலவிதமாகப் பேசும்பொழுது, தான் எந்த விதத்திலும் இராமனுக்கோ, அவன் நாட்டுக்கோ, எவ் விதத் தீங்கும் செய்ததில்லை என்றும், மேலும் அரசர் குலத்து உதித்து வேத சாஸ்திரங்களை ஐயம் திரிபறக் கற்று தவவேடம் பூண்டவன் யாவன் இக் கொடிய காரியம்

செய்யத் தலைப்படுவான் என்றும் கேட்டதோடு, தன்னுடைய மாமிஸமோ, தோலோ, எலும்போ எவ் விதத்திலும் பயன்படப் போவதில்லை என்றும் கூறி இராமன் செய்த இக்காரியத்திற்குத் தகுந்த சமாதானம் சொல்ல வழிதேடுமாறும், இராமனைக் கேட்கிறான், என்பதனை முன்னர்க் கண்டோம்.

அதற்குப் பதிலாக இராமன் இரண்டைத்தான், வாலியைக் கொன்றதற்குக் காரணங்கள் எனக் காட்டுகிறான்.

ஒன்று: தம்பி ஆகிய சுக்கிரீவன் மனைவியை, வாலி அபகரித்தது தர்மத்துக்கு விரோதமானது. அதனால் அவன் தண்டிக்கப்பட வேண்டியவன்.

மலைகளும், காடுகளும் செறிந்த இப் பூ உலகம் முழுவதும் இக்ஷ்வாகு வம்சத்தவரைச் சேர்ந்தது. பரதன் அப்போதைய அரசன். இராமனும், மற்ற அரசர்களும் பரதன் ஆணையை ஏற்று, உலகம் எங்கும் சஞ்சரித்து வருகிறார்கள்.

எனவே, பரதன் கட்டளையைச் சிரமேற் கொண்டு, இராமன் அறநெறி தவறிநடப்பவர்களை விதிப்படி தண்டித்து வருகிறான்; அதன்படியே தர்மத்தைக் கெடுத்து, காமத்தின் வசப்பட்டு, அநியாயம் செய்து அரசர்க்குரிய நீதி மார்க்கத்தினின்றும் தவறி நடந்ததற்காகத் தான் அவனைக் கொன்றதாகக் கூறுகிறான்.

இரண்டு: ஒரு மாற்றுக் காரணத்தையே இராமன் கூறுகிறான். அப்படிக் கூறும் காரணத்தில், அவன் மறைந்து நின்று வாலிமீது அம்பு எய்ததற்குச் சமாதானமும் அடங்கி இருக்கிறது.

அந்த இரண்டாவது காரணம்: வாலி விலங்கு என்றும், எனவே, அவனைத் தான் வேட்டையாடிக் கொன்றதாகவும் கூறுவது.

தவவேடம் பூண்ட, யாவன் இக்கொடிய காரியம் செய்யத் தலைப்படுவான், என்று வாலி கேட்டானல்லவா? அதற்குப் பதில் இறுப்பது போல, தருமத்தை நன்ருய் உணர்ந்த இராஜரிஷிகளும், வேட்டையாடி இருக்கிருர்கள் என்று கூறுகின்ருன்.

மனிதர்கள், மிருகங்களை வேட்டையாடுதல் என்று வந்து விட்டாலே, அந்த மிருகங்கள் எதிரில் நின்று மனிதர்கள் போரிடுதல் என்ற பேச்சுக்கு இடமே இல்லை.

ஆகையால், மாமிசத்தை அபேக்ஷிக்கும் மனிதர்கள் அநேக மிருகங்களை வலைகளாலும், கயிறுகளாலும், பலவித கண்ணிகளாலும், எதிர்ப்பட்டும், மறைந்து நின்றும், அம்மிருகங்கள் பயந்து ஓடும் பொழுதும், நம்பி நிற்கும் பொழுதும், சண்டை இடும் பொழுதும், பராக் காக இருக்கும் பொழுதும், குத்தியும், அடித்தும், கொல் கிருர்கள் என்று கூறுகிருன்.

இதனைக் கேட்ட உடனேயே வாலி, இராமன்மீது எந்த விதமான குற்றமும் இல்லை என்ற முடிவுக்கு வந்து அவனைப் புகழ்ந்து, தான் தர்ம மார்க்கத்தினின்று நீங்கிய பாவி என்று சொல்லி, அதற்கு ஏற்ப, தண்டனை அடைந்ததாகவும், அன்பு பாராட்டவேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிருன்.

அதற்குப் பிறகு இராமன் மீண்டும் பேசுகிருன். சுக்கிரீவனையும் அங்கதனையும் அன்புடன் நடத்துவதாக உறுதி கூறி, வாலி குற்றம் செய்து இருந்த போதிலும், தகுந்தபடி இராமனுல் தண்டிக்கப்பட்டு விட்டபடியால், அவன் தர்ம மார்க்கத்தில் செல்லப் போகிருன் என்றும் கூறி, அவனுக்கு ஆறுதல் கூறுகிருன்.

இறுதியாக வாலியும், தான் முன்னர் இராமனை வைத வைவினை மன்னித்துத் தன்னை அநுக்கிரகிக்குமாறு கேட்டுக் கொள்கிறான்.

* * *

இதற்கு மாறாகக் கம்பன் இது பற்றி என்ன சொல்கிறான் என்பதைப் பார்க்கலாம்.

வாலி தன் மார்பில் புகுந்த அம்பினை, பிடுங்கி எடுத்து அதில் இராமன் என்ற பெயர் பொறிக்கப்பட்டிருப்பதைக் காண்கிறான் என்பதைப் பார்த்தோம்.

அப்பொழுது அவன் முன்னால் இராம, இலக்குவர் வருகிறார்கள்.

தன் முன் வந்த இராமனை வாலி இகழ்ந்து பேசுவதையும் முன்னர்க் கண்டோம்.

கம்பன் இதனைப் பதினாறு பாடல்களில் எடுத்துக் காட்டுவான். இவையும் முன்னர்க் கண்டோம்.

எனினும் இவற்றுள் கூர்ந்து கவனிக்கத் தக்கன சில உள.

தன் மார்பில் அம்பு பட்டதால், துயர் உழந்து அழிந்து, சோரும் வாலி வெட்கப்படுகிறான்; வெடிபடச் சிரிக்கிறான் என்று கம்பன் கூறுவான்.

இந்த நிலையில், வாலி சிரிக்கிறான், வெட்கப்படுகிறான் என்று கம்பன் கூறுவானேயானால், அதில் ஏதேனும் நுண் பொருள் இருந்துதான் தீரவேண்டும்.

தன் மார்பில் பாயுமாறு அம்பை எய்ய வல்லவர்களும் இருக்கிறார்களா? என்ற பொதுவான எண்ணம் வாலிக்கு இருந்த போதிலும், தன் எதிர் நில்லாமல், யாரோ வஞ்சனையாகத் தன் மார்பில் புகுமாறு, அம்பு எய்து விட்டார்களே, என்று உணர்ந்ததன் காரணம் ஆக

வில்லறம் துறந்து, அப்படிச் செய்தவர் மாட்டு அவனுக்குப் பரிதாபமே உண்டாகிறது. அந்த பரிதாபத்தின் வெளிப்பாடுதான் இந்த வெட்கமும், சிரிப்பும்

அதே பரிதாபம் இராமனை அவன் இகழ்ந்தது எடுத்துக் காட்டும். பதினாறு பாடல்களிலும், இது தெளிவாகத் தெரிகிறது. தான் அம்பால் அடிபட்டு சாவப்போவது குறித்து, வாலி வருந்தியதாக அப்பாடல்கள் காட்டவில்லை. அதற்கு மாறாக, இராமன் போரறத்தையும் வில்லறத்தையும், தோன்றிய குலப்பெருமையையும் மாசுபடுத்தி விட்டானே என்பது குறித்த வருத்தம் தான் தலை தூக்கி நிற்கிறது.

அடுத்து, இந்தப் பதினாறு பாடல்களில், மூன்று பாடல்களில் 'நீ என்மேல் ஒளித்து நின்று அம்பெய்தனையே' என்று நேரிடையாகக் கூறுகிறான்:

'ஒருவர் மேல், ஒளித்து நின்று...வாய் அம்பு எய்தல்' (4025)
'உற்ற என்னை, ஒளித்து, உயிர் உண்ட நீ' (4030)
'மறைந்து, நிராயுதன் மார்பின் எய்யவோ, (4032)

வாலியினுடைய குற்றச்சாட்டிற்கு இராமன் பதிலிறுக்கும் வகையில், பதினொரு பாடல்கள் அமைந்துள்ளன. இராமன் காட்டுவன மூன்றுகாரணங்கள்.

ஒன்று: மாயாவியைக் கொன்று விட்டுவந்த வாலியை, வணங்கி, மகிழ்ந்து, எப்படி தான் அரசு ஏற்க நேரிட்டது என்று சுக்கிரீவன் விளக்கிக் கூறியும், அரசைத் திருப்பிக் கொடுத்தும், அபயம் தேடியும், 'கூற்றுணக் கொடுப்பென்' என்று அவனை திசைதொறும், திசைதொறும் ஓட, ஓடத் துரத்தினான் வாலி. இது அவன் செய்த முதல் தவறு.

இரண்டு: தம்பியின் மனைவியைக் கவர்ந்து கொண்டது. இவ்விரண்டும் வாலி செய்த தவறுகள் எனக் காட்டிய இராமன், இன்னொன்றையும் சேர்த்துக் கொள்கிறான்.

மூன்று: தான் வாலி மீது அம்பெய்ததற்குக் காரணம் ஆகக் குறிப்பது அதுதான். ''அவன் (சுக்கிரீவன்) எனக்கு ஆருயிர்க் காதலன்'' என்பதாம்.

இராமனே அதனை ஒரு கூடுதல் காரணமாகத்தான் காட்டுகிறான். இது, 'ஆதலானும்' என்ற சொல் ஆட்சியாலும், குறிப்பாக அச் சொல்லில் இடம் பெற்றுள்ள எண்ணும்மையாலும் தெளிவு பெறும்.

உண்மையில் பார்க்கப் போனால், சுக்கிரீவன் தன் ஆருயிர்க் காதலன் என்பதற்காக, வாலி குற்றமற்றவன் ஆக இருந்தாலும், தான் அவனைக் கொன்றிருப்பேன், என்று இராமன் சொல்லவில்லை. வாலி இரு தவறுகள் இழைத்தான். அதற்காக அவன் தண்டிக்கப்பட வேண்டியவன். அந்த இரண்டு தவறுகளாலும் பாதிக்கப்பட்ட சுக்கிரீவனே இராமன் ஆருயிர்க் காதலன். இதுதான் இராமன் காட்டும் காரணங்கள்.

இப்படிக் கம்பன் கூறுவது வால்மீகத்திற்குப் பெரிதும் மாறு பட்டமை காணலாம்.

சுக்கிரீவன் மாட்டு, வாலி தீங்கு இழைத்தான், என்பது இருவரும் (கம்பன், வால்மீகி) சுட்டிக் காட்டியதே.

அப்படியே இருப்பினும், வாலியைக் கொல்ல, இராமனுக்கு எப்படி அதிகாரமும், உரிமையும் உண்டாயிற்று என்பதில், இருவரும் மாறுபடுகின்றனர்.

இராமன் இவ்வளவு சொல்லியும், வாலி சமாதானம் அடையவில்லை. மேலும் எதிர் மொழிகிறான். அதனைக் கம்பன் நான்கு பாடல்களில் எடுத்துக் கூறுவான் (4045—4048).

அவற்றின் பிழி கருத்து யாதுஎனில், தான் ஒரு விலங்கு; இராமன் அத்தகைய விலங்கினிடத்து தான் குறிப்பிட்ட பண்புகளை எதிர்பார்த்தல் கூடாது என்று கூறுகிறான். இந்தக் கூற்று இராமன் குறிப்பிட்ட இரு குற்றச்சாட்டுகளுக்கும் பொருந்தும். எனினும், தம்பியின் தாரத்தை வாலி அபகரித்துக் கொண்டான் என்ற குற்றச் சாட்டைக் குறிப்பாக எடுத்துக் காட்டி 'மணமும் இல்லை, மறை நெறி வந்தன; குணமும் இல்லை குல முதற்கு ஒத்தன' என்று கூறி, அவை தங்களுடைய விலங்கினத் திற்குஏற்பன இல்லை என்று சொல்லி,'உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கு அலால் வேறு இல்லை' என்றும் கூறுகிறான்.

இதனை மறுத்து, ஒன்பது பாடல்களில் இராமன் பேசு கிறான். அவற்றின் தெளி பொருளாவது:

வாலி பிறப்பினால் விலங்காயினும், வேத நெறியைத் தெரிந்தவன் ஆதலால், பிறந்த இனத்தின் தன்மைப் போர்வையில், தன் குற்றங்களை மறைத்துக்கொள்ள முயலல் கூடாது என்று கூறுகிறான்.

இப்பொழுதும் வாலி விடவில்லை. முதலில் இராமனை இகழும் பொழுதே, இராமன் ஒளிந்து நின்று தன் மேல் அம்பு எய்ததை வாலி குறிப்பிட்டமை கண்டோம்.

வாலியிடம் மறுப்புரையாக இருமுறை பேசிய இராமன், இந்தக் குற்றச்சாட்டிற்குப் பதில் சொல்லவே இல்லை. எனவே தான், இறுதியாக, வாலி இராமன் சொன்ன அனைத்தையும் சரி, என வைத்துக் கொண்

டாலும், போர்க்களத்து எதிர் நின்று தன் மேல் அம்பு எய்யாமல், கொடிய வேடனைப் போல் மறைந்து நின்று ஏன் அம்பு எய்தான் என்று கேட்கிருன்.

அதற்கு இராமன் எந்த வித பதிலும் கூருமலிருக்கவே இலக்குவன் இடைநின்று பதில் கூற, பின்னர்வாலி மனம் மாறினுன் என்பதைக் கண்டோம்.

மனம் மாறிய வாலிதான், சுக்கிரீவனுக்கு இராமன் அடைக்கலம் தந்து காத்து அருளவேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிருன். தவிர அநுமனது வன்திறல் பற்றி இராமனிடத்துக் கூறி, சுக்கிரீவனுக்கும் அறிவுரை கூறு கிருன். 'உன் அடைக்கலம்' என்றும்கூறி இராமனிடம் கையடைப் படுத்துகிருன்.

* * *

வால்மீகியின்படி இந்த வாலி - இராம, சம்வாதத் திற்குப் பிறகு, வாலி இராமன் அம்பால் அடிபட்டு வீழ்ந்த தைக் கேட்ட தாரை, அங்கதனுடன் ஓடி வருகிருள்.

அவளிடம், வானர வீரர்கள் கோட்டைக் கதவுகளை அடைத்து, அங்கதனுக்கு முடிசூட்டுமாறு ஆலோசனை கூறுகிருர்கள். தாரை அது ஏலாது செல்கிருள். அவளுடன் வாலியின் பிற, மனைவியரும் உடன் வருகிருர்கள். தாரை வாலியில் மேல் விழுந்து புலம்புகிருள். அநுமன் தாரையைத் தேற்றுகிருன்.

சுக்கிரீவனுக்கும், அங்கதனுக்கும் வாலி புத்திமதி கூறுகிருன். ஆனுல் தாரையினிடத்து எதுவும் பேசவில்லை. தாரை இராமனைக் கண்டு, தன்னையும் கொன்று விடுமாறு வேண்டிக் கொள்கிருள்.

சுக்கிரீவனே, சகோதர பாசத்தால் பெரிதும் துக்கத் திற்கு ஆளாகி, தனக்கு ஆட்சி வேண்டா என்று சொல்லி

வாலி இறந்தபிறகு, அங்கதனும், தாரையும் உயிர் வாழ மாட்டார்கள் என்றும், தானும் தீயில் விழுந்து இறக்கப் போவதாகவும் சொல்கிருன்.

இருவரையும் இராமன் தேற்றுகிருன்.

தாரை இடத்து, இராமன் மிகச்சுருக்கமாகவே பேசு கிருன். 'பிரபஞ்சம் முழுமையும் கடவுள் ஆணையினுல் நடக்கிறது' என்று கூறி, 'வாலி மரணமும் அப்படியே உண்டாயிற்று' என்றும், அங்கதன் இளவரசன் ஆக்கப்படு வான் என்றும், வீர பத்தினியாகிய தாரை, அவ்வாறு எல்லாம் புலம்பக் கூடாது என்றும், தேற்றுகிருன்.

அதற்குப் பிறகு வாலியின் உடல் தகனம் செய்யப் படுகிறது.

கம்பன் காவியப்படி சுக்கிரீவனை இராமனிடத்து அடைக் கலப்படுத்திய வாலி, சுக்கிரீவனைக் கூப்பிட்டு அங்கதனை அழைத்து வருமாறு சொல்கிருன். வந்த அங்கதன் வாலியின் உடல் மேல் விழுந்து புலம்புகிருன். வாலி அங்கதனுக்கு ஆறுதல் கூறி, அவனை இராமனிடம் கை யடைப் படுத்துகிருன்.

உடனேயே வாலியின் உயிர் நீங்குகிறது.

அதன் பின்னர் இராமன், இலக்குவன், சுக்கிரீவன், அங்கதன், போல்வார் அந்த இடத்தை விட்டு நகர்ந்து போய்விடுகிருர்கள்.

அன்னதன் பின்றை, தாரை ஓடி வந்து, வாலியின் உடல்மேல் விழுந்து புலம்புகிருள்.

அநுமன் பிறமாதர்களிடம், தாரையை அங்கிருந்து அழைத்துச் செல்லுமாறு ஏவலிடுகிருன். வாலியின் உடலைத் தகனம் செய்வதற்கு ஏற்பாடு செய்கிருன்.

இந்தக் கதைப்போக்கின்படி வால்மீகி, கம்பன் இடையே சிறுவேறுபாடுகள் உண்டு.

வான்மீகத்தின் படி, வாலியின் உயிர் பிரிவதற்கு முன்னமேயே, தாரை அங்கதனோடு வந்து, வாலியின் உடல் மீது விழுந்து புலம்புகிறாள். வாலி அங்கதனுடன் பேசுகிறான். தாரை இடத்து எதுவும் பேசவில்லை.

கம்பன் கதைப் போக்கின்படி வாலி சுக்கிரீவனிடத்துச் சொல்லி, அங்கதனை வரவழைக்கிறான். அவனிடத்துப் பேசுகிறான். தாரையை அழைக்கவுமில்லை. தாரை உயிரோடு வாலி இருக்கும் அக்காலத்து, அங்கு வரவும் இல்லை. வாலியின் உயிர் நீங்கிய பின்னரே அங்கு வருகிறாள்.

தாரை தடுத்தும் கோளாமல், தான் போர் ஏற்று மடியப்போவது குறித்து, தாரையைக் காணவும் நாணினன் என்பதுதான் அவன் தாரையை அழைத்து வரச்சொல்லாமைக்குக் காரணம் என்று கொள்வது பொருத்தம் உடையதாகும். மேலும் வான்மீகத்தின் படி, தாரை தவிர, வேறு சில மனைவியர் வாலிக்கு இருந்தனர் என அறிகிறோம. கம்பன் தாரையைத் தவிர, வேறு எந்த மனைவியரும் வாலிக்கு இருந்ததாகச் சொல்லவில்லை.

இன்னொன்று: வால்மீகியின்படி, தாரை இராமனைக் கண்டு அவனோடு பேசுகிறாள். இராமனும் அவளைத் தேற்ற முயல்கிறான்.

கம்பன் படி, தாரை இராமனைக் காணவே இல்லை. ஏனெனில் வாலி உயிர் போன உடன், இராமன் அவ்விடத்தை விட்டு நகர்ந்து விடுகிறான். அதற்குப் பிறகு தான் தாரை அங்கு வருகிறாள்.

வேறொன்று: வால்மீகியின்படி அநுமானும் தாரையைத் தேற்ற முயல்கிறான். அவன் கூறியதற்குப் பதிலாகத் தாரையே பேசுகிறாள்.

கம்பன் காப்பியப்படி வாலியின் உடல்மேல் விழுந்த தாரையை, அநுமன் பிற பெண்கள் மூலமாக அவ்விடத்தைவிட்டு நகர்த்த ஏற்பாடு செய்கிறானே தவிர, இருவர்க்குமிடையில் எந்த விதமான பேச்சு வார்த்தைகளும் நடைபெறவில்லை.

இறுதியாக, வாலி இராமனுடைய அம்பினால் அடிபட்டு இறக்கும் தறுவாயில் இருக்கும் பொழுது, (வான்மீகத்தின்படி) சுக்கிரீவன் சகோதர பாசத்தால் பாதிக்கப்பட்டான் என்பது சற்று விரிவாக எடுத்துக் காட்டப் பெறுகிறது.

கம்பன் அவ்வளவு விரிவாக அதனைச் சொல்லவில்லை. ஒரு பாடல் அளவில் அது அமைகிறது. (கம்பன், 4011)



# 8. வாலி, இராமனுல் கொல்லப்பட வேண்டியவன் தானு?

## (முதல் வினு)

கபந்தன்

கபந்தன் சாதாரண மனிதன் அல்லன்; வான்மீகியின் படி சாபத்தின் காரணமாக, திவ்விய ஞானம் இழந்து பின்னர் இராம, இலக்ஷ்மணரால் தோள்கள் வெட்டப் பட்டு, உடல் தகனம் செய்யப்பட்ட பிறகு சாபம் நீங்கி, பழைய உருவும், பொலிவும் பெற்று, திவ்விய ஞானமும் பெற்றவன்.

அவன் இராமனைப் பார்த்து, சீதையைத் தேடுவதற்குச் சுக்கிரீவனேடு நட்பு செய்து கொள்ளுமாறு கூறுகிருன். வாலியைப் பற்றிக் குறிப்பிடவே செய்கிருன்.

எனினும் அவன் கூற்றிலிருந்து சுக்கிரீவன் ஒருவனுலேயே தான் சீதையைத் தேடுவதற்கு இராமனுக்கு உதவ முடியும் என்பது திட்டவட்டமாகத் தெரிகிறது.

சாதாரண மனிதனுக இருக்கும் இராமன், கபந்தனுடைய யோசனையை ஏற்றுக் கொள்ளவே செய் கிருன். உண்மையில் இராமன் நிலையில் இருக்கும் எவனும் அதனையேதான் செய்திருப்பான்.

சுக்கிரீவனேடு நட்பு செய்து கொண்ட பிறகு, அவன் தன் தமையனுகிய வாலியைக் கொல்லுமாறு இராமனைக் கேட்டுக் கொள்கிருன்.

சீதையைத் தேடுவதற்கு சுக்கிரீவனது நட்பும், உதவியும், இன்றியமையாதவை என்று ஏற்பட்டு விட்ட பிறகு, சுக்கிரீவன் கேட்டுக் கொண்டபடி செய்வதைத் தவிர இராமனுக்கு வேறு வழியில்லை. எனவேதான் அவன் வாலியைக் கொல்கிருன். இராமன் வாலியால் கொல்லப்பட வேண்டியவன்தானு என்பது வேறு விஷயம்.

கம்பன் படியும், கபந்தன் தான் இராமனிடத்துச் சீதையைத் தேடுவதற்கு சுக்கிரீவன் உதவியை நாடுமாறு யோசனே கூறுகிருன். இங்கும் கபந்தன் (கந்தர்ப்பன்) சாபம் நீங்கி ஒளி மயமாக நின்று இராமனுடைய உண்மையை அறிந்து அவனேத் துதிக்கிருன். எனவே மனிதனுகச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் இராமன் அவனது ஆலோசனேயை ஏற்றுக் கொள்வதில் வியப்புக்கு எந்த இடமும் இல்லே. ஆனுல் வாலியைப் பற்றி எதுவும் கபந்தன் சொல்லவில்லே. ரிஸ்யமூக பர்வதத்திற்குச் செல்லும் வழியையும் சபரியிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொள்ளச் சொல்கிருன்.

பகைமை அறிந்தமை

வாலி பற்றியும், வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் உண்டான பகைமையின் காரணம் பற்றியும், சுக்கிரீவனே வாலி எப்படி நடத்தினுன் என்பது பற்றியும், வாலியின் பலம் பற்றியும், சுக்கிரீவனிடமிருந்தும், அநுமனிடமிருந்தும் தான் இராமன் தெரிந்து கொள்கிருன்.

உணாச்சி வேகத்தில் உரைத்த சூள்

வாலியைக் கொல்ல வேண்டும் என்று சுக்கிரீவன் கேட்டுக் கொள்ளாத போதும், தன் மனேவி இராவணனுல் அபகரிக்கப்பட்டு இருந்த நிலேயில், சுக்கிரீவனும் அவன் மனேவி உருமை வாலியால் அபகரிக்கப்

பட்டுக் கிடந்த நிலேயின் ஒற்றுமை காரணம் ஆக, வாலியின் மீது எழுந்த ஆத்திரத்தினுலும், உணர்ச்சி வேகத்தினுலும், 'வாலியைக் கொல்வேன்' என்று சூளுரைக்கின்றுன்.

### கொல்லல் வேண்டுமோ

அப்படிச் சூளுரைத்த இராமன் வாலியைக் கொல்ல வேண்டியது அவசியம் ஆகிறது. ஆனுலும், இங்கும் வாலி இராமனுல் கொல்லப்பட வேண்டியவன்தானு, என்ற கேள்வி தனித்து நிற்கவே செய்கிறது.

வால்மீகியின் படி, இராமனுல், அம்பு எய்து வீழ்த்தப் பட்ட வாலி இராமனிடத்துப் பல, கேள்விகள் கேட்கும் பொழுது, நாம் முன் எடுத்துக் காட்டியவற்றை அவன் காரணமாகச் சொல்லவில்லே.

### வால்மீகி வகுத்தவை

வால்மீகி முனிவர் அவன் கேட்டகேள்விகளேப் பொருளற்றது; தேவை அற்றது என்று கருதினுர் என்பதற்கும் இல்லே. கம்பனே ஏசுவான் இயம்பலுற்றுன் (4017) என்று கூறுவான். வான்மீகி முனிவரோ ''அப் பொழுது வாலி, இராகவனேயும், மகாபலவானுன இலக்ஷ்மணனேயும் பார்த்து, மதுரமாகவும் கடுமையாக வும், தர்மத்தை அநுசரித்திருக்கும் வார்த்தைகளேச் சொல்ல ஆரம்பித்தான்,'' என்பார். (கிஷ்கிந்தா காண்டம் 17ஆம் 115ஆம் ஸர்க்கம் 15ஆம் ஸ்லோகம்).

இதற்கு ஒப்பவே வாலி பேசி முடித்த பிறகு, வால்மீகி முனிவர், ''இப்படி மதுரமாகவும், புருஷார்த்தங்களுக்கு ஒத்தும், கடுமையாகவும், வாலி இராமனேத் தூஷித்தான்''

என்பார். (கி. காண்டம் 18ஆம் ஸர்க்கம் 1ஆம் ஸ்லோகம்)

வாலியினுடைய இந்தகேள்விகளுக்கு என்ன பதிலை இராமர் இறுத்தார் என்பதை முன்னர்க் கண்டோம்.

அறன் வழீஇ அல்லவை செய்தான்

இராமன் காட்டும் காரணம், தர்மத்திற்கு விரோதமாக வாலி சுக்கிரீவனுடைய மனைவியை அபகரித்துக் கொண்டான்; ஆகையால் தண்டிக்கப்பட்ட வேண்டியவன் ஆகிறான் என்பதாம்.

கொல்ல யாவன் இவன்

அப்படியே வாலி தண்டனைக்கு உரியவன் என்றாலும் அவனைத் தண்டனை என்னும் பெயரிட்டுக் கொல்வதற்கு இராமன் யாவன் என்ற கேள்வி ஏற்படும்.

ஆகையால் அதற்குப் பதிலிறுக்கும் வகையில், பூஉலகு முழுவதும் இக்ஷ்வாகு குலத்திற்கு உரியது என்றும், அம்மரபினர் ஆட்சிக்கு உட்பட்டது என்றும் அப்போது ஆளும் அரசர் பரதன் என்றும், அவனுடைய ஆணையின் படி, தானும், பிறமன்னர்களும், உலகெங்கும் சஞ்சரித்து வருவதாகவும் கூறுகிறான்.

விலங்கு வேட்டை

ஏன் மறைந்து நின்று வாலிமேல் அம்பெய்தான் என்பதற்குக் காரணம் ஆக வாலி விலங்கு என்றும், விலங்கைத்தான் வேட்டை ஆடியதாகவும், அப்படி வேட்டை ஆடும் பொழுது எப்படி வேண்டுமானாலும் வேட்டை ஆடுவதற்குரிய மிருகத்தைக் கொல்லலாம் என்றும் கூறுகிறான்.

இராமனுடைய இந்த பதில் முன்னுக்குப் பின் முரண் ஆனது; குழப்பம் மிக்கது, என்பது தெளிவு.

நரனா, விலங்கா

இராமனுடைய இக் கூற்றிலிருந்து "எந்த மானிடன் புதல்வியைத்தான் ஆகட்டும், சகோதரியைத்தான் ஆகட்டும், உடன் பிறந்தவனது மனைவியைத் தானாகட்டும் காமவெறி கொண்டு, கற்பழிக்கின்றானோ, அவனுக்கு வதைதான் தண்டனையாய் விதிக்கப்பட்டு இருக்கிறது. (கி. காண்டம் 18ஆம் சர்க்கம் 23ஆம்...ஸ்லோகம்).

இந்த ஸ்லோகத்தில் 'நர' என்று சொல்லே இடம் பெற்றிருக்கிறது.

ஆக, இந்த விதி மனிதர்களைக் கட்டுப்படுத்துமே தவிர மிருகங்களைக் கட்டுப்படுத்தாது.

வாலியை மனிதன் நிலையில் வைத்து, இராமன் இதனைக் கூறி இருப்பானேயானால், அவன் விலங்கு, அவனை எப்படி வேண்டுமானாலும் வேட்டையாடலாம் என்பது அடிபட்டுப் போகும். இது முதல் குறை

அதிகாரம் ஈந்தார் எவர்?

இரண்டாவது குறை, என்ன என்றால், வாலி, செய்த தவற்றினால் தண்டனைக்கு உரியவன் என்று வைத்துக் கொண்டாலும் அந்த தண்டனையை நிறைவேற்றும் அதிகாரமும்,உரிமையும், இராமனுக்கு எப்படிக் கிடைத்தது, என்பதாகும்.

இதற்குப் பதிலாகத்தான் பூவுலக ஆட்சி முழுவதும் பரதனுக்குச் சொந்தம்என்றும், பரதனுடைய ஆணைப்படி தான் அந்த தண்டனையை நிறைவேற்றியதாகவும் இராமன் கூறுகிறான்.

இது காப்பியத்தின் முந்தின பகுதிகளுக்கு முரண் ஆனது.

அயோத்தியா காண்டத்தில், பரதன் காட்டுக்குச் சென்று, இராமனிடம், அவன் அயோத்திக்கு மீளவும் வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறுன்.

இராமன், அவனிடம் தந்தையின் வாக்கைக் காப்பது தன் கடமை என்று சொல்லி கண்டிப்பாக மறுத்து விடுகிறுன்.

இவ்வுலக ஆட்சி இக்ஷ்வாகு மன்னர்க்கோ?

இறுதியாக, இராமனுடைய பாதுகைகளே வேண்டிப் பெற்றுக் கொண்ட பரதன், இராமனேப் பார்த்து "நான் பதினுன்கு வருஷகாலம், ஜடை தரித்து, மரஉரி உடுத்து, பழங்களேயும் கிழங்குகளேயும் உணவாய்க் கொண்டு, தேவரீருடைய வருகையை வேண்டுகிறவனுய் நகரத்திற்கு வெளியில் வசித்துக் கொண்டிருப்பேன். தங்களுடைய பாதுகையிடத்தில் இராஜ தந்திரத்தை ஒப்படைத்துப் பதினுன்கு வருஷம் முடிந்ததும், மறுதினத்தில் தங்களேக் காணுவிடில் அக்கினியில் புகுவேன்" என்று கூறுகிறுன்.

இராமனும், அப்படியே ஆகட்டும், என்று வாக்களிக்கிறுன். (அயோத்தியா காண்டம் 112 ஆம் சர்க்கம் 23-26 ஆம் ஸ்லோகங்கள்).

இந்தப் பின்னணியில் பார்க்கும் பொழுது, பரதன் பூ உலகத்தை ஆண்டு கொண்டிருப்பதற்கோ, இராமன் அவனுடைய கட்டளேயின் பேரில், வாலியின் குற்றத்திற்காக அவனேத் தண்டிப்பதற்கோ இடம் இல்லே.

இது அன்றியும், அயோத்தியாகாண்டம் 50 ஆம் சர்க்கத்தில், இராம இலக்ஷ்மணர், சீதை ஆகிய மூவரும் கோசல நாடுகளைக் கடந்த பிறகு, அயோத்தி நகரை நோக்கிப் பார்த்த வண்ணமாய் நின்று கொண்டு, "காகுத்தர்களினுல் பரிபாலனம் செய்யப்பட்ட உத்தம நகரே! உன்னையும் உன்பக்கம் இருந்து கொண்டு பாதுகாக்கும் தெய்வங்களையும் நான்விடை கேட்டுக் கொள்கிறேன்" என்று இராமன் கூறுவதாக வான்மீகம் சொல்லும். (அயோத்தியா காண்டம் 50 ஆம் ஸர்க்கம் ஸ்லோகம் 1,2)

அதே ஸர்க்கம் குகனை சிருங்கிபேரத்தை ஆளும் அரசன் என்றும், நால்வகைப் படைகள் உடையவன் என்றும், ஸ்ரீராமருக்கு உயிர் போன்ற தோழர் என்றும் எடுத்துக் கூறும்.

கிஷ்கிந்தா காண்டத்திற்கு வரும் பொழுது, கிஷ்கிந்தைக்கு வாலி அரசன் என்றுதான் வான்மீகம் கூறும்.

விதேக நாட்டுக்கு மன்னனுக ஜனகன் இருந்திருக்கிறுன்; கைகேயியின் தந்தை கேகய நாட்டு மன்னன்.

சிருங்கி பேரமோ, கிஷ்கிந்தையோ, விதேகமோ, கேகயமோ, இக்ஷ்வாகு குல மன்னவர்களது ஆட்சிக்கு உட்பட்டது என்ற குறிப்பு வான்மீகத்தில் எங்கும் காணப்படவில்லை.

எனவே இராமன் வாலியைத் தண்டிப்பதற்குத் தனக்கு இருப்பதாகக் கூறிக்கொள்ளும், அதிகாரத்துக்கும் உரிமைக்கும் வான்மீகத்திலேயே ஆதாரம் இல்லை.

வழீ இய அறத்தான்

இனி கம்பனுக்கு வருவோம். இந்தப் பகுதி சம்பந்தபட்ட வரையில் கம்பன் வால்மீகி நிலையிலேயே இருக்கிறுன்.

"ஏசுவான் இயம்பலுற்றுன்" என்று வாலிபற்றிக் கம்பன் கூறின போதிலும், வாலி இராமனைக் கேட்ட கேள்விகள் ஆணித்தரமானவை என்பதை முன்னரே கண்டோம்.

இராமனுடைய பதிலும், வால்மீகியை ஒத்து, வாலி, சுக்கிரீவனிடம் அறத்திற்கு மாருக நடந்து கொண்டான் என்பதாகத்தான் இருக்கிறது.

இந்த அறத்திற்கு மாருன செய்கையும் இருபாற் பட்டது என்பதையும் நாம் முன்னர்க் கண்டோம்.

ஒன்று : சுக்கிரீவன் அபயம் தேடிய இடத்தும், அதன்படி அவனை மன்னித்து ஏற்று அருளாமல் ஓட ஓட அடித்துத் துரத்தினுன் என்பது.

இரண்டு : சுக்கிரீவனுடைய மனைவியை அபகரித்துக் கொண்டான் என்பது.

இவ்விரண்டும் அறத்திற்கு விரோதமாக வாலி செய்த செயல்கள் என்று வைத்துக்கொண்டாலும், வாலியைத் தண்டிப்பதற்கு இராமன் யார்? என்ற கேள்வியும் எழுகின்றபடியால், இராமன் தன்னுடைய முதல் உரை யிலேயே பதில் கூறிவிடுகிறுன். அரசனுக இருந்து வாலி யைக் கொன்றதாக அவன் சொல்லவில்லை. வாலி யினுடைய அறந்தவறிய செயலால் பாதிக்கப்பட்டவன்— அதாவது சுக்கிரீவன்—இராமனுடைய ஆருயிர்க் காதலான் என்பதால்தான் வாலியைக் கொன்றதாக அவன் கூறுகிறுன்.

இராமனது கூற்றுக்கு மறுப்பாக, வாலி, தான் விலங்கு என்றும், மனிதர்களுக்கு என விதிக்கப்பட்ட ஒழுக்க நெறிமுறைகள் குரக்கினத்தார்க்குப் பொருந்தாது என்றும் பதில் இறுக்கிறுன்.

அதனை மறுத்துப் பேசிய இராமன், வாலி பிறப்பால் குரக்கினத்தான் ஆயினும், அவன் நன்று இது, தீது இது என அறிவுறுத்தும் அறம் வகுத்தநெறி அறிந்தவன் ஆகையால், தன்னைக் குரங்கு என்று சொல்லி, தான் செய்த தவற்றை நியாயப்படுத்த முடியாது என்று எடுத்துக் காட்டுகிருன்

இங்கும் இராமன் கூற்று முன்னுக்குப்பின் முரண்பட்டதாய், குழப்பம் உடையதாய்த்தான் இருக்கிறது.

நட்புக்கோள் படலத்தில் வாலியின் சிறப்பை பற்றிக் கூற வந்த அநுமனே,

''நாலு வேதம் ஆம் நவை இல் ஆர்கலி
வேலி அன்னவன்.........................."

(கம்பன், 3822)

என்கிருன்.

இப்படிப் புகழ் உரைத்தவன் எளியன் அல்லன்.

''பொய் இலாதவன் வரன்முறை இம்மொழி''

(கம்பன், 3853)

புகன்ருன் என்பான் கம்பன்.

எனவே நட்புக்கோள் படலத்திலேயே வாலி நான்கு வேதங்களையும் அறிந்தவன் என்பது இராமனுக்குத் தெரியும்.

எனினும் சுக்கிரீவன், வாலியை போர்க்கு அழைத்து, வாலி போர்க்கு என வந்தபொழுது, கண்ட இராமன் அவன் தோற்றத்தை வியக்கிருன், என்பதையும், அதைக் கேட்ட இலக்குவன் அண்ணனையே கொல்ல அடல் கூற்றுவனைக் கொண்டு வரும் சுக்கிரீவன், பிறரிடம் எத்தகையவனுய் நடந்து கொள்வான் என்பதில் தன்கருத்து சென்று உள்ளதால், தோற்றம் பற்றிய வியப்பு தன் மனத்தில் எத்

தகைய சலனத்தையும் உண்டாக்கவில்லை என்றும் இச் செய்கையால் தன் மனம் குழம்பி இருப்பதாகவும் கூறினுன் என்பதையும் முன்னர்க் கண்டோம்.

இலக்குவனுக்கு மறுமொழியாக இராமன்,

'பித்து ஆய விலங்கின் ஒழுக்கினைப் பேசல் ஆமோ?'

என்று வினவுகிருன்.

அதாவது, நாலு வேதம் ஆம் நவை இல் ஆர்கலி வேலி அன்னவன் என, தான் கேட்டறிந்த வாலியையும் சுக்கிரீவனேடு சேர்த்துத்தான் அப்பொழுது இராமன் பித்து ஆய விலங்கு என்று கொள்கிருன்; கூறுகிருன்.

இங்கு வாலி, இராமனிடத்து, தான் விலங்கு என்று, கூறும்பொழுது, மனிதர்க்கு என விதித்த வேத நூல் விதி முறைகள் தம்மவர்க்குப் பொருந்தா என்கிருன்.

இராமன் முன்னுக்குப் பின் முரணி, வாலியைப் பார்த்து, அவன் விலங்காகப் பிறந்திருப்பினும் வேத நூல் உணர்ந்தவன் ஆதலின், வேத நூல் கூறும் விதி முறைகள் அவனையும் கட்டுப்படுத்தும் என்றும் கூறுகிருன். இம் முரண்பாடு மிகத் தெளிவாகக் காணப்படுகிறது.

படு முரண்

இந்த முரண்பாடு பிறிதொரு இடத்திலும் தெளிவு பெறுவதைக் காண்கிருேம். இதுவும் வான்மீகத்திற்கும் கம்பனுக்கும் பொருந்தும்.

சுக்கிரீவன் மனைவியாகிய ருமையை, வாலி கவர்ந்து கொண்டான் என்பதே, வாலி வதத்திற்குக் காரணமாக இராமனுல் கூறப்பெற்றது.

வாலி வதத்திற்குப் பின் சுக்கிரீவன் பட்டாபிஷேகம் நடக்க, பின் சுக்கிரீவன் எப்படி வாழ்ந்தான் என்பதை

கிஷ்கிந்தா காண்டம் 26 ஆம் சர்க்கம் அடியிற் கண்ட வாறு கூறும்:

''வீர்யசாலியான அவன் (சுக்கிரீவன்) வானர சைந் நியங்களுக்கு மன்னன் ஆகி, அப்பொழுது மகாபிஷேகத் தை மகாத்மாவான ஸ்ரீராமருக்குத் தெரியப்படுத்தி விட்டு, தேவேந்திரனைப்போல், தான் இழந்த மனைவியான ருமையை அடைந்து, ராஜ்யத்தையும் அடைந்தான்.''

எனவே, வானரேந்திரனுகிய சுக்கிரீவன் பிறனுல் அபகரிக்கப்பட்டு அவனேடு வாழ்ந்த தன் மனைவியைத் திரும்பப் பெற்று அவளைப் பட்ட மகிஷியாக்கிக் கொண்டு ஆட்சி செலுத்துவதில் எந்த விதமான தவரே, தோஷமோ இல்லை.

ஆனுல் இராவணனுல், வஞ்சகமாக, வன்முறையாக அபகரித்துச் செல்லப்பட்டு, அவனுடைய அரண்மனையில் கற்புக்குக் களங்கம் இன்றி இருந்த சீதையை, இராவண வதத்திற்குப் பின் இராமன் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை.

அவளைக் கடுமையாக நிந்திக்கிருன்; பழிக்கிருன்; வைகிருன்; அவளது அக்கினிப் பிரவேசத்திற்குப் பின்னரே அவளை ஏற்றுக் கொள்கிருன்.

எனவே, இங்கும் மானிட தர்மத்திற்கும், விலங்கினத் தின் வாழ்விற்கும் இடையே வேறுபாடு காட்டத்தான் பெறுகிறது.

கம்பனிலும் இதே நிலைதான். சொல்லப் போனுல் ஒருபடி அதிகம் என்று கூடச் சொல்ல வேண்டும்.

சுக்கிரீவனுக்கு இராமன் எப்படி ஆட்சி செய்ய வேண்டும் என்று அறிவுரை கூறுகிருன்.

அப்பொழுது வாலியோடு வாழ்ந்த ருமையை அவன் தன்னுடைய பட்ட மகிஷி ஆக வைத்துக் கொண்டு ஆட்சி செலுத்துவானேயானால், பிரஜைகள் என்ன சொல்வார்கள் என்பது பற்றி எதுவும் சொல்லாததோடு மாத்திரம் அல்லாமல், அப்படிச் சொல்லின் அதற்கு ஆகும் பரிகாரம் யாது? என்றும் சொல்லவில்லை.

ஏனென்றால் சுக்கிரீவன் விலங்கு. தானோ, மனிதன் என்ற முறையிலும், அரசன் என்ற முறையிலும் வேறு வாழ்க்கை முறையைக் கைக்கொள்ள விழைகிறான்.

### வரம்பின்றி வைவான்

சீதையை இராவண வதத்திற்குப் பிறகு வைவது வான்மீகத்தை விட மோசமாகப் போவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

ஒன்று: வான்மீகத்தின் படி சீதையை இராமன் தொட்டுத்தூக்கினான். இராமன் தன்னைப் பழிக்கும் போது சீதை அதனை எடுத்துக் காட்டி இராவணனுடைய ஆற்றலுக்கு முன், அபலையான தன்னால் எதுவும் செய்ய இயலவில்லை என்கிறாள்.

கம்பனிலோ, "தீயவன், அயன் மேல் உரை சிந்தை செய்து, ஆயிழையைத் தீண்டானாய், உயர் தோள் வலியால், நிலம் யோசனை கீழொடு மேல் கீண்டு பன்னக சாலையோடு உயர்தேர் மிசை கொள்கிறான்." (3390,91.) தொட்டு எடுத்து வைத்திலன்.

இப்பன்னக சாலையை நேரில் கண்டு வந்த அநுமன் இராமனிடம் 'காலையும் மாலையும் இல்லதாகிய சோலை அங்கு அதனில் உம்பி புல்லினால் தொடுத்த தூய சாலையில் தவம் செய்த தவமாம் தையல் இருந்தாள்' (6037), என்றும் சொல்கிறான்.

பன்னக சாலே இருந்த இடத்தில் ஆழ்பள்ளம் கண்டும், அநுமன் சொல்லிய சொல் கேட்டும் தெளியான் போல், "முறை திறம்பு அரக்கன் மாநகர் ஆண்டு உறைந்து அடங்கினே; வான் தசை, நறவு அமைய உண்டனே" என்றல்லவோ ஏசுகிருன்.

இரண்டு: கம்பன் காப்பியப்படி 'சீதையை' இராவணன் எந்த வேளேயிலும் அந்தப்புரத்திலோ, அரண்மனேயின் ஒரு பகுதியிலோ வைக்கவில்லே.

தனியாக அசோக வனத்தில் காவலில் வைத்திருந் தான். அங்கும் தனக்கிருந்த சாபத்தின் காரணமாகச் சீதையை அவன் அணுகவே இல்லே.

அப்படி இருந்தும், தான் அது அறிந்தும், இராமன் அவளே ஏற்றுக் கொள்ள மறுக்கிருன்.

இப்படி விலங்கு ஆகிய சுக்கிரீவனுக்கும் மனிதன் ஆகிய இராமனுக்கும் இடையே இந்த வேறுபாடுகளேக் காப்பியமே எடுத்துக் காட்டுகிறது.

எனினும், அதே காப்பியம் வாலி வதைக்குக் காரண மாக, எந்த தர்மம் மனிதனேக் கட்டுப் படுத்துமோ அதே தர்மம், வாலியாகிய விலங்கையும் கட்டுப் படுத்தும் என்று கூறுகிறது.

தாரை பற்றிய

இங்கு தாரையின் விஷயம் வேறு. வான்மீகத்தின் படி தாரை சுக்கிரீவனேடு வாழ்கிருள். மாயாவியுடன் போர் செய்து அவனேக் கொல்வதற்காகப் பிலம் புக்க வாலி நெடிது நாள் வாராமை கண்டு இறந்தான் போலும் என்று கருதியமையால் சுக்கிரீவன் அரசன் ஆகிருன். ஆக அந் நிலேயில் விதவை எனக் கருதப்பட்ட தாரை அரசனுகிய, சுக்கிரீவனேடு வாழ்கிருள்.

பின்னர் மாயாவியைக் கொன்று விட்டு வாலி வெளி வந்து, தம்பியைத் துரத்தி விடுகிறான். இப்பொழுது தாரை வாலியோடு வாழ நேர்கிறது.

வாலி, சுக்கிரீவர் போரில், வாலி கொல்லப்பட, தாரை விதவை ஆகிறாள். சுக்கிரீவன் அரசுரிமை பெற, தாரை மீட்டும் அவனோடு சேர்கிறாள்.

இதில் கூர்ந்து நோக்கத் தக்கது என்ன என்றால், வாலி இறந்ததாகக் கருதப்பட்ட நிலையில் தான், தாரை சுக்கிரீவனோடு வாழ்கிறாள்.

ருமையின் நிலை அப்படி அன்று. சுக்கிரீவன் உயிருடன் இருக்கும் பொழுதே, வாலி அவளைக் கவர்ந்து சென்று அவளோடு வாழ்கிறான்.

இவை காரணமாக மகாபாரதத்தில் இடம் பெற்றிருக்கும் ''இராமோபாக்கியாநம்'' பகுதியில் ஒரு செய்தி காணப்படுகிறது.

சுக்கிரீவனோடு போர்க்குச் செல்ல வாலி முனை கிறான். அதுகண்ட தாரை 'போர் வேண்டா' என்று கூறித்தடுக்கிறாள். அது பொறாத வாலி, தாரையைக் கண்டபடி, கொடூரமாக நிந்திக்கிறான்.

இவ்வாறு அவன் நிந்திக்கக் காரணம், சுக்கிரீவனிடத்தில் தாரைக்கு அடிமனத்தில் காதல் இருந்தது என்பதுதான்.

மகாபாரதம் கூறுவதாவது: ''வானராதிபனாகிய வாலியானவன் ஹிதமாக உரைக்கப்பட்ட அந்த தாரையின் அந்த வசனத்தை மறுத்து, அசூயை உள்ளவனாகி, அந்தத் தாரையை, சுக்கிரீவனை நாடின மனம் உள்ளவள் என்று சந்தேகித்தான்,

அந்த வாலியானவன், தாரையைப் பார்த்து கடிந்து சொல்லிவிட்டுக் குகையின் வாயிலிலிருந்து வெளியில் புறப்பட்டான்*.

கம்பனிலோ இம்மாதிரியான கூற்றுகட்கு இடமே இல்லை. காரணம், தாரை வாலி உயிருடன் இருக்கும் போதும், இறந்த பிறகும் அவனுக்கே உரியவளாய், தர்ம பத்தினியாகவே வாழ்ந்தாள். அவளது வைதவ்யக் கோலத்தை ஒரு பாடலில் ஓவியச் சிறப்புற கம்பன் அமைத்து காட்டியுள்ளான்.

அடுத்து, தான் வாலியைத் தண்டிப்பதற்குக் காரணமாக, சுக்கிரீவனுக்கும், தனக்கும் உண்டான நட்பைக் கூறுகிறான்.

''சுக்ரீவனுக்கு அபயம் அளித்து, 'வாலியை வாளியின் வீட்டுவேன்' என்று முன்னர், வாக்குக் கொடுத்து விட்டேன். ஆகையால்தான் அம்பெய்து உன்னைக் கொன்றேன், என்று இராமன் சொல்லவில்லை. அது பின்னர், இறுதியாக இலக்குவன் சொல்வது.

சுக்கிரீவன் இராமனின் நண்பன் ஆயினான் என்ற ஒன்றே, வாலியைக் கொல்வதற்கு அதிகாரத்தையோ, உரிமையையோ கொடுக்கிறதா என்பதை நாம் காண வேண்டும்.

கைகேயி சூழ்வினைப் படலத்தில் இராமனைப் பார்த்து கைகேயி தன்னிடம் அரசன் கூறியதாக, இட்ட கட்டளை யாகக் கூறுவது:

---

*மகாபாரதம்— வனபர்வம்— 281ஆம் சர்க்கம்—மகாமகோ பாத்தியாய உ வே ஸ்ரீநிவாஸாச்சார்யார் மொழி பெயர்ப்பு.

"........................................நீ போய்,
தாழ் இருஞ் சடைகள் தாங்கி, தாங்க அருந் தவம் மேற்கொண்டு,
பூழி வெங்கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடி,
ஏழ் இரண்டு ஆண்டின் வா" என்று இயம்பினன், அரசன்!
(கம்பன், 1601)

அப்பணி தலைமேற் கொண்ட இராமன் பதினன்கு ஆண்டுகள், கான் வாழ் போழ்தத்து தற்காப்புக்காக வேண்டுமானல், வன விலங்குகளை (அபாயம் நேராமை பொருட்டு) அம்பெய்து கொல்லலாம்.

அதற்கு மாருக, தானே வலியப்போய் நட்பு கொண்ட ஒரு குரங்கினிடத்து அதன் அண்ணன் முறை தவறி நடந்து கொண்டான் என்பதற்காக, மூத்த குரங்கைக் கொல்ல முனைவது, கைகேயி கூற, தான் ஏற்ற 'பிதுர் வாக்கிய பரிபாலனம்' எப்படி இடம் கொடுக்கும்?

எனவே, இங்கும் குழப்பத்தையே காண்கிறோம். வாலி இராமனிடத்துக் கேட்கும் கேள்விகளுள் ஒன்று: "இராவணனைத் தெறல் கருதி, துணை தேடி அமைவாய் எனின், துணையாகக் கொள்ளத்தக்கது சிங்கமே அன்றி முயல் ஆகாது. எனவே, இது என்ன முயற்சி?" என்பதாம்.

சுக்கிரீவன் கொள்ளத்தக்க துணை அன்று என்றும் குறிப்பது அது.

"இது என்ன (பயனில்லாத) முயற்சி?" என்ற வாலியின் வினவிற்கும் இராமனிடத்திலிருந்து பதிலில்லை.

இக் கேள்வியின் முக்கியத்துவம் எங்கிருந்து வருகிறது என்றல், இராமன் வலிய, சுக்கிரீவனைத் தேடி வந்து, துணை வேண்டி நட்பு செய்து கொண்டதாம்.

அப்படி இராமனுக்குத் துணை வேண்டுமாயின் வாலியையே (தன்னையே) நட்பு செய்து கொண்டிருக் கலாமே என்று தான், அவன் கேட்கிறான்.

ஆரம்பத்தில் வாலி, சுக்கிரீவர் பற்றி இராமன் ஏதும் அறிந்திலன். சுக்கிரீவனிடம் நட்பு செயது கொள்ளுமாறு கூறியவன் கபந்தன் தான். அதன்படி இராமன் செய் தான்.

ஆனால் அதனை (கபந்தன் தனக்குச் சொன்னதை) இப்பொழுது வாலியினிடத்து இராமன் சொல்லவில்லை.

வாலி பிறிதொரு கேள்வியும் கேட்கிறான்:

"இருமை நோக்கி நின்று, யாவர்க்கும் ஒக்கின்ற
அருமை ஆற்றல் அன்றோ, அறம் காக்கின்ற
பெருமை என்பது? இது என்? பிழை பேணல் விட்டு,
ஒருமை நோக்கி ஒருவற்கு உதவலோ?"

(கம்பன், 4027)

இதற்கும் இராமன் பதில் சொல்லவில்லை.

சில அறிஞர்கள், "இராமன் இருவரையும் விசாரிக்க வேண்டிய தேவை இல்லை. ஏனெனில் வாலி மீது இராமன் கூறிய குற்றச் சாட்டுகளை அவன் மறுக்கவில்லை" என்பர்.

ஒருவன் தன் மீது பிறர் சுமத்தும் குற்றச்சாட்டை மறுக்கிறானா இல்லையா என்பது குற்றச்சாட்டு சுமத்தப் பட்ட பிறகு வெளிப்பட வேண்டிய செய்தி.

அது மாத்திரம் அன்று. வாலிமீது இராமன், தான் இப்போது சுமத்துகின்ற குற்றச்சாட்டை, முன்னரே சுமத்தி இருப்பானேயானால், அப்பொழுது வாலி அதற்குப் பதிலாக, இராமன் சுமத்திய குற்றச்சாட்டு, மனிதர்களைக் கட்டுப் படுத்தும், அறநெறியின் அடிப்படையில்

அமைந்தது என்றும் சமாதானம் சொல்லி இருப்பான். ஒருவேளை இராமன் அதனை ஏற்றுக் கொண்டிருக்கவும் கூடும்.

ஏனெனில், வாலி மீது அம்பு எய்த பிறகு அதனை நியாயப்படுத்தும் வகையில் இராமன் சொல்கின்றது, இது. ஆனால், அவன் அம்பு எய்வதற்கு முன் வாலியின்மீது இந்தக் குற்றச்சாட்டை சுமத்தி, சமாதானம் கேட்டு, அவனும் இச் சமாதானத்தை சொல்லி இருந்தால், நிச்சயமாக இராமன் அதனை ஏற்றுக் கொண்டிருக்க மாட்டான்; வாலியைக் கொன்றே இருப்பான் என்று யாரும் அறுதியிட்டுச் சொல்லிவிட முடியாது.

எனவே, இங்கும் நிறைவுக்கு மாறாக குறையே ஓங்கி நிற்கிறது.

இப்படிப் பார்க்கும் பொழுது, வால்மீகியின் படியும், கம்பனின் படியும், வாலியை இராமன் கொன்றதற்குத் தக்க காரணத்தை இராமன் கூறவில்லை என்ற முடிவுக்குத் தான் வரவேண்டும். என்றாலும், காப்பியத்தின் கட்டுக் கோப்பிற்குள் நின்று பார்த்தால், வாலி இராமனால் கொல்லப்பட வேண்டியவன்தான் என்ற முடிவிற்கு வருவோம்.

வெளிப்படையாக விள்ளல் இயலாது

ஏன் கொல்லப்பட வேண்டும் என்ற காரணத்தை, இராமன் வெளிப்படையாகச் சொல்ல முடியாத நிலையில் இருந்ததன் காரணம் ஆக, வாலி கேட்ட கேள்விகளுக்கு இராமன் அளித்த சமாதானம், திருப்தி அளிப்பதாக இல்லை.

இந்த அடிப்படையில், வாலி ஏன் இராமனால் கொல்லப்படவேண்டியவன் என்பதைக் காணலாம்.

காப்பியத்தின் அடிப்படையே இராவண வதம்.

இராவணன் பிரம்மனிடம், அவன் தேவர்களாலும், கந்தர்வர்களாலும், யக்ஷர்களாலும், அசுரர்களாலும், இராக்ஷஸர்களாலும், தனக்கு மரணம் சம்பவிக்கக் கூடா தென்று வரம் வேண்டிப்பெற்றுக் கொண்டான். இவ்வரம் பெறுகையில், மனிதர்களை அலட்சியமாக மதித்தமை யால், அவர்களால் தனக்கு மரணம் உண்டாகாமல் இருக்க வேண்டும் என்று கேளான் ஆயினான்.

அவ்வாறு அவன் கேளாமையே, அவனை அழிப் பதற்கு உபாயம் ஆக அமைந்திருந்தது. அதன் காரணம் ஆக, திருமால் தேவர் வேண்டத் தான் இராமனாக அவதரிப்பதாகக் கூறி 'அஞ்சல்' என்று கையமர்த்தி அவ் வாறே செயல் மேவினான்.

இவ்விராவண வதத்தில், இராமனுக்கு உதவுவதற் பொருட்டுத் தேவர்களைக் குரக்கு உருமேவ பிரமன் பணித்தான்.

இந்திரன் அம்சமாக, வாலியும், பகலவன் சேயாகச் சுக்கிரீவனும் 'ரிக்ஷரஜஸ்' மக்களாகப் பிறக்கின்றனர்.

ஆனால் எந்த இராவண வதத்திற்கு இராமனுக்கு உதவுதற்பொருட்டுத் தான் பிறப்பெடுத்தானோ, அந்த இராவணனுடனேயே, வாலி நட்பு கொள்கிறான். நட்பு உடன்படிக்கை நிகழ்கிறது. இது வால்மீகியும், கம்பனும் கூறுவதே.

உத்தர காண்டத்தில் வான்மீகி, இதனைச் சற்று விரி வாகவே சொல்கிறார். கம்பன் இதனைக் குறிப்பாகக் கோடிட்டுக் காட்டுகிறான்.

உத்தர காண்டம் 34 ஆம் சர்க்கம் வாலி இராவணனைக்கட்டியதைப் பற்றிப் பேசும்.

இராவணனை கட்டித் தூக்கிக்கொண்டு வந்த வாலி கிஷ்கிந்தையில் ஒரு தோட்டத்தில் குதித்து, அவனை அங்கு இறக்கி விடுகிறான். பின் இராவணனைப் பார்த்து, ஒன்றும் தெரியாதது போல் ''அடே! இராக்ஷஸ! நீ யார்? எங்கிருந்து வருகிறாய்? நான் போகும் வழியில் என் புஜங்களுக்கு அடியில் எங்காவது அகப்பட்டாயா?'' என்று சொல்லி, அடிக்கடி சிரிக்கிறான்.

இராவணனோ, அங்கம் தளர்ந்து, கண் பஞ்சடைந்து சிரமத்தால் ஆச்சரியமும், பயமும், மேற்கொண்டு, 'வான ரேந்திரா! தேஜஸிலும், காந்தியிலும், மகேந்திரனும் உனக்கு ஈடில்லை, என்று எண்ணுகிறேன். நான் இராக்ஷஸ அதிபதியான இராவணன். உன்னுடன் யுத்தம் செய்ய ஆசைகொண்டு வந்தேன். அப்படிச் செய்யாமலேயே அதனைத் தீர்த்தாய்.

என்ன பலம்! என்ன வீர்யம்! என்ன காம்பீர்யம்! சர்வலோக கண்டகனான என்னை, ஒரு பிராணியைப் போல், புஜங்களால் இடுக்கிக்கொண்டு, மனோவேகத் துடன் நான்கு சமுத்திரங்களிலும், ஸ்நானம், சந்த்யா, ஜபம் முதலியவைகளைத் குறைவின்றி செய்து முடித்து, சற்றும் களைக்காமல் வந்த உன்னைப் போன்ற வீரன் வேறு ஒருவனும் உண்டோ?

மனம், வாயு, கருடன், என்பனவற்றைத் தவிர இவ் விதமான வேகம் யாருக்கு உண்டு? உன் பலத்தைப் பார்த் தேன்; அநுபவித்தேன். யுத்தம் செய்து அறிய வேண்டிய தில்லை.

அக்கினி சாட்சியாக, என்றும் அழியாத ஸ்நேகத்தை உன்னுடன் செய்ய விரும்புகிறேன்.

பெண்டு, பிள்ளை, நண்பன், பந்து, பரிவாரங்கள், நகரம், ராஜ்ஜியம், போக போக்கியங்கள் எல்லாம்

இருவர்க்கும் பொதுவாக இருக்கட்டும், என்று அக்கினி மூட்டி பிரதிக்ஞை செய்து இராவணனும், வானரனும் பிரீதியுடன் தழுவிக் கொண்டு மித்திரர்கள் ஆனார்கள்.

பிறகு கைகோத்துக் கொண்டு இரு மகா சிங்கங்களைப் போல், கிஷ்கிந்தையுள் புகுந்தார்கள். அங்கே ஒருமாதம் வரையில், வாலியுடன் பிறந்த சுக்கிரீவனைப் போல், இராவணன் வெகு ப்ரீதியுடன் உபசரிக்கப்பட்டு வசித்தான்.

பிறகு, அவனுடைய மந்திரிகள் அவனைத் தேடிக் கண்டு பிடித்து, மூன்று லோகங்களையும் ஜயிப்பதற்காக அழைத்துக் கொண்டு போனார்கள்."*

இப்படி வாலிக்கும், இராவணனுக்கும், அக்கினி சாட்சியாகச் செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கை, இராமனுக்கும், சுக்கிரீவனுக்கும் இடையே செய்து கொள்ளப்பட்ட உடன் படிக்கை போலவே இருக்கிறது.

தன்னுடைய பிறப்பின் நோக்கத்தையே முற்றும் மறந்து, எந்த இராவண வதத்திற்கு, இராமனுக்குத் துணையாக நிற்க வேண்டியவனோ, அந்த வாலியே இப்படி இராவணனுடன் நட்பு செய்து கொண்டான் என்றால், அவனுடைய பிறப்பின் நோக்கம் நிறைவேறாமல் போக, அவன் இவ்வுலகில் வாழும் உரிமையை இழந்து விடுகிறான்.

எனவே, அவன் இராமனால் கொல்லப்பட வேண்டியவன் ஆகிறான்.

கம்பன் படியும், இதே முடிவே பெறப்படும். நட்புக் கோள் படலத்தில், வாலியின் சிறப்பை இராமனுக்கு எடுத்துக் கூறப்போந்த அநுமன்,

---

* ஸ்ரீமத் வால்மீகிஇராமாயணம். உத்தர காண்டம். ஸ்ரீஉ.வே C. R ஸ்ரீநிவாஸய்யங்கார் மொழி பெயர்ப்பு (ப. 105, 106)

"......................வென்றியான்
வால்செலாத வாய் அலது, இராவணன்
கோல் செலாது; அவன் குடை செலாது அரோ"

(கம்பன், 3826)

என்றும்,

"மெய்க் கொள் வாலினுல், மிடல் இராவணன்
தொக்க தோள் உறத் தொடர்ப்படுத்த நாள்,
புக்கிலாதவும், பொழி அரத்த நீர்
உக்கிலாத வேறு உலகம் யாவதோ?"

(கம்பன், 3833)

என்றும் கூறுகிருன்.

மேலும் சுந்தர காண்டம், பிணி வீட்டுப் படலத்தில் இராவணன் முன் இந்திரஜித்தால் நிறுத்தப் பெற்ற அநுமனை நோக்கி, இராவணன் "யாரையோ நீ?" என வினவ, அநுமன் அதற்குத் தான் வாலிதன் மகன் தூதன் என்று கூறுகிருன். அது கேட்டு இலங்கை வேந்தன் நகைத்து, "வாலி சேய் விடுத்த தூத! வன்திறல் ஆய வாலி வலியன் கொல்? அரசின் வாழ்க்கை நன்று கொல்?" என வினவுகிருன். அதற்கு விடை இறுக்கும் அநுமன், அஞ்சன வண்ணன் அடுகணையால், வன்திறல் வாலியும் போனுன் என்றும், அவன் வாலும் போய் விளிந்தது என்றும், கூறுகிருன்.

அங்கதனை, இராவணனிடத்தில் தூதனுப்ப இராமன் விழைகிருன். அவ்வாறே, விறல் அங்கதன் விண் மிசைப் படர் சீயம் என்ன, விசையின் போகிருன். இலங்கை எய்தி, அரக்கனது இருக்கை புகுகின்ருன்.

கண்ட கண்டகன், கண்ணில் கனல் கான்று, 'இவண் வந்த நீ யார்? எய்திய கருமம் என்னை?' என வினவுகிறான். அதற்கு அங்கதன்,

"இந்திரன் செம்மல், பண்டு, ஓர் இராவணன் என்பான் தன்னை
சுந்தரத் தோள்களோடும் வாலிடைத் தூங்கச் சுற்றி,
சிந்துரக் கிரிகள் தாவித் திரிந்தனன், தேவர் உண்ண
மந்தரப் பொருப்பால் வேலை கலக்கினான். மைந்தன்"
என்றான்.
(கம்பன், 6997)

இவ்வாறு அநுமன் கூற்றிலிருந்தும், அங்கதன் கூற்றிலிருந்தும், இராவணனை வாலி தன்னுடைய வாலினால் சுற்றிக் கட்டி, மலைகள் தோறும் தாவித் திரிந்தான் என்பது தெளிவாகிறது.

வான்மீகி முனிவர், தன் புயங்களுக்கிடையில் இராவணனை இடுக்கிக் கொண்டு வாலி தாவித் திரிந்தான் என்பார். இச்சிறு மாற்றம் தவிர, அவருக்கும் கம்பனுக்கும் இடையே இப்பகுதியில் வேறுபாடு இல்லை.

இதிலிருந்து, வாலி - இராவணன் தொடர்பு தெரிகிறது.

வான்மீகி முனிவர் குறிப்பதுபோல், அவ்விருவர் நட்பு, கம்பனில் விரிவாகக் காணப் பெறவில்லை எனினும், அது (நட்புரிமை), அங்கதனிடம் இராவணன் உரையாடிய போழ்து குறிப்பிட்ட "உந்தை என் துணைவன் அன்றே? ஓங்கு அறச் சான்றும், உண்டால்" என்ற தொடரால் தெளிவாகிறது.

எனவே, கம்பன், வால்மீகி இருவர் படியும் அவ்விருவரும் நட்பு உடன்படிக்கை செய்து கொண்டனர் என்பது உறுதிப்படுகிறது.

இப்படிப் பார்க்கும்பொழுது, கம்பன் படியும், வாலி தான் பிறந்த நோக்கத்திற்கு மாருக நடந்து கொண்டவன் ஆகையால், இராமனுல் கொல்லப்பட வேண்டியவனே ஆகிருன்.

ஆனுல், மேலும் கேள்விகள் எழாமல் இல்லை.

எப்பொழுது இராவணன் உடன், வாலி நட்பு உடன் படிக்கை செய்து கொண்டானே, அக் கணத்திலேயே (தோற்றத்தின் நோக்கிற்கு மாருக நடந்து கொண்டமை யால்) உயிர் வாழும் உரிமையை இழந்து விடுகிருன்.

எனவே, அவன் அப்பொழுதே இறந்திருக்கலாமே, அல்லது கொல்லப்பட்டு இருக்கலாமே, என்ற வினு எழத்தான் செய்யும்.

இறுதியான நோக்கம் ஒன்ருக இருந்தாலும், அந்த நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு ஒரு முகாந்தரம் தேவைப்படுகிறது.

இராவணவதத்துக்குத்தான், திருமால் இராமனுகப் பிறந்தார். அப்படியானுல், அவர் ஏன் உடனே இலங்கைக் குச் சென்று, இராவணனைக் கொன்றிருக்கக் கூடாது? அப்படிச் செய்வது செயற்கையாகப் படும். அவ்வாருன வதம், இயல்பாகத் தோன்றுவதற்காக, அவனைக் கொல் வதற்கு, அவன் சீதையை அபகரித்துச் சென்றதை காப்பியம் முகாந்தரம் ஆக்குகிறது.

அது போலவே,இராவணனுடன் நட்பு உடன் படிக்கை செய்து கொண்ட வாலி, தான் வாழும் உரிமையை இழந்துவிட்ட போதிலும், அவன் கொல்லப்படுவதற்கு சுக்கிரீவனை அவன் நடத்திய விதமும், ருமையை அபகரித்ததும் முகாந்தரங்கள் ஆக ஆக்கப்படுகின்றன.

இது இப்படி இருந்தபோதிலும், இன்னொரு கேள்வியும் எழத்தான் செய்கிறது.

வாலி தன்னுடைய தீ நடத்தையின் காரணமாகக் கொல்லப்படவேண்டியவன் ஆன போதிலும், இராமனால் கொல்லப்பட வேண்டியவன் தானா? என்ற கேள்விதான் அது.

இந்தக் கேள்விக்கு விடை காண்பதும் மிக எளிதே ஆகும்.

இராவணனை வதைப்பதற்கு, இராமனுக்குத் துணை நிற்கத் தோன்றியவன் வாலி. அதற்கு மாறாக, வாலி எப்பொழுது நடந்து கொண்டானோ, அப்பொழுதே, அவனைக் கொல்லும் உரிமை, யார்க்குத் துணை நிற்க வாலி தோன்றினானோ, அந்த இராமனுக்கே உண்டு; வேறு யார்க்கும் இல்லை. இது காப்பியத்தின் கட்டுக் கோப்பிலிருந்து, நாம் உணர்ந்து கொள்ளும் உண்மை.

இந்த உண்மைக்கு ஆதாரமாக, இன்னொன்றையும் காணலாம். வாலியின் மேல், இராமன் அம்பு எய்த பிறகு, வாலிக்கும், இராமனுக்கும், இடையே நடந்த சம்வாதத்தை முன்னரே கண்டோம்.

வாலியின் கேள்விகளுக்கு, இராமன் பதிலிறுத்த உடன், வாலி தன்னுடைய தவற்றை உணர்ந்து கொண்டு விட்டான். உணர்ந்து கொண்டதோடல்லாமல், இராம னிடத்துத் தன் தவற்றை உணர்வதற்கு முன்னால், கடுமை யாகப் பேசியதற்கு, மன்னிப்பும் கேட்டுக் கொள்கிறான், என்பதையும் கண்டோம்.

அப்படி என்னதான் இராமன் சொல்லி விட்டான்? அதிலிருந்து வாலி தர்மத்தை அறிந்து கொள்வதற்கு?

வான்மீகத்தின்படி இராமன், வாலிக்குத் தான் கொடுத்த பதிலில் இறுதியாகச் சொல்வது:

“இவர்கள்தாம் (தேவர்கள் தாம்) மானிட உருவம் கொண்டு பூமியில் சஞ்சரிக்கிருர்கள்; நீயோ தர்மம் இன்னது என்பதை அறியாமல், கோபத்துக்கு ஆட்பட்ட வன் ஆகி, முன்னேர்கள் அநுஷ்டித்த தர்மத்தில் பற்று உடைய என்னைத் தூஷிக்கிருய்.” (கிஷ்கிந்தா காண்டம் 18ஆம் சர்க்கம்)

இராமனுடைய இந்தக் கூற்றிலிருந்து, வாலி தன் எதிரில் இருக்கும் இராமன், மனிதனுகப் பிறந்த திருமால் என்றும், இராவண வதத்திற்குத் துணை நிற்பதற்காகப் பிறந்த தான், அதற்கு மாருக நடந்து கொண்டுவிட்டமை யை உணர்ந்து, அதன் காரணமாகத் தர்மத்தினின்று தவறி விட்டதாக ஏற்றுக் கொள்கிருன் என்றும் சொல்ல முடியும்.

இதே நிலேதான் கம்பனிலும் காணப்படுகிறது, என்பது சற்று நுட்பமாகப் பார்த்தால் விளங்கி விடும்.

முதலில் இராமனேப் பலவாறு ஏசிய வாலி, இராமன் பதில் சொல்லி முடிந்த பிறகு, இறுதியாக இலக்குவன் அவன் கேள்விக்குப் பதில் இறுத்த பிறகுதான் மன மாற்றம் பெறுகிருன்.

இராமனேப் பார்த்து, “ஆவிபோம் வேலே வாய், அறிவு தந்து அருளினுய்” என்று கூறுகிருன்.

இங்கே அறிவு எனப்படுவது எது? அதுதான் அவதார நோக்கத்தின் உண்மை.

அதாவது இராவண வதத்திற்கு இராமனுக்குத் துணை நிற்க வேண்டிய தான், அதற்கு மாருக நடந்து, உயிர் வாழும் உரிமையை இழந்து விட்டது.

வேறு எந்த தத்துவத்தையோ, மெய்ஞ்ஞானத்தையோ, இங்கு, அறிவு என்ற சொல் குறிப்பிடாது, என்பதனை வாலிக்கும் இராமனுக்கும் இடையே நடந்த உரையாடலிலிருந்தே தெரிந்து கொள்ள முடியும்.

இந்த முடிவுக்கு, வாலியின் வேறு பல கூற்றுகளையே ஆதாரமாகக் காட்ட முடியும். அதற்கு முன்னுல், இராமன் அம்பினுல் தான் இறப்பது குறித்து வாலி வருந்தினுனு? அல்லது மகிழ்ந்தானு? என்ற கேள்வியை நாமே கேட்டுக் கொள்வோம்.

இதற்குப் பதிலாக, அவன் வருந்தவும் செய்தான், மகிழ்ச்சியும் அடைந்தான் என்றுதான் கூற முடியும். அவன் ஏன் வருந்தினுன் என்ருல், இராவண வதத்திற்கு இராமனுக்குத் துணை நிற்பதற்காகப் பிறந்த தான், அதனைச்செய்யாமல், அதற்கு மாருக நடந்து கொண்டு விட்டமை குறித்தே வருந்துகிருன்.

'மற்று இலேன் எனினும், மாய அரக்கனை வாலின் பற்றி,
கொற்றவ! நின்கண் தந்து, குரக்கு இயல் தொழிலும் காட்டப்
பெற்றிலேன்;.........'

(கம்பன், 4070)

என்ற வாலியின் கூற்று இதற்கு ஒரு சான்று.

இன்னொரு சான்று என்ன என்ருல், சுக்கிரீவனைப் பற்றி இராமனிடம் வாலி பிரார்த்தித்துக் கொள்வது. அதுதான்,

'ஓவிய உருவ! நாயேன் உளது ஒன்று பெறுவது உன்பால்;
பூ இயல் நறவம் மாந்தி, புந்தி வேறு உற்ற போழ்தில்,
தீவினை இயற்றுமேனும், எம்பிமேல் சீறி, என்மேல்
ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல்' என்ருன்.

(கம்பன், 4068)

இந்தப் பாடலிலிருந்து இரண்டு செய்திகள் தெரிகின்றன. தன்மேல் இராமன் அம்பு எய்ததனை, மகிழ்ச்சிக்கு உரிய செயலாக அவன் கருதவில்லை. அப்படி அவன் கருதி இருப்பானேயானால், தனக்குக் கிடைத்த பேற்றினை தன் தம்பிக்குக் கிடைக்கக் கூடாது என்று சொல்லியிருக்க மாட்டான்.

உண்மையில் வாலியின் சொற்கள் இன்னும் அழுத்தமானவை: "என்மேல் ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல்" என்கிறான்.

இரண்டாவதாக, இப் பாடலில் காணப்படும் 'புந்தி வேறு உற்ற போழ்தில்' என்ற தொடர், ஆழ்ந்த பொருள் உடையது. இராவணவதத்திற்கு, இராமனுக்குத் துணைநிற்க, இந்திரன் அம்சமாக, எப்படி வாலி பிறந்திருக்கிறானோ, அப்படியே சூர்யன் அம்சமாகச் சுக்கிரீவன் பிறந்திருக்கிறான். அந்த சுக்கிரீவன், தான் செய்த பிழையைச் செய்து விட்டால்—அதாவது இராவண வதத்தில் இராமனுக்குத் துணை நிற்கத் தவறி விட்டால்— 'என்மேல் அம்பு எய்ததுபோல் அவன்மேலும் அப்படி அம்பு எய்யவேண்டா' என்றுதான் கேட்டுக் கொள்கிறான்.

இதனை வலியுறுத்துமாப்போல், வாலி சுக்கிரீவனுக்கு கூறும் அறிவுரையும் அமைந்திருக்கிறது.

அதுதான்,

'திருமறு மார்பன் ஏவல் சென்னியில் சேர்த்தி'

(கம்பன், 4076)

'............................மன்னர் என்பார்
எரி எனற்கு உரியார் என்றே எண்ணுதி; எண்ணம் யாவும்
புரிதி; "சிற்றடிமை குற்றம் பொறுப்பர்" என்று எண்ண வேண்டா.'

(கம்பன், 4078)

இவற்றிலிருந்து, இராமனுடைய அம்பினுல் அடிபட்ட வாலி, தன் பிறப்பின் நோக்கத்தை நிறைவேற்றத் தவறி, அதற்காகக் கொல்லப்படுவது குறித்து, வருந்தினுன் என்பது தெரிகிறது.

அதே சமயத்தில் அவன் ஏன் மகிழ்ச்சியுற்ருன் என்ருல், தான் யாரால் தண்டிக்கப்படவேண்டுமோ, அவனுல் தண்டிக்கப்பட்டமையால்தான். தான் குற்றம் செய்தது, இராமன் விஷயத்தில். அதாவது, இராவண வதத்திற்கு இராமனுக்குத் துணை நிற்பதற்குப் பதிலாக, மாருக நடந்து கொண்டது.

அப்படியானுல் தன்னைத் தண்டிக்கக் கூடியவன் தன்னுடைய தவருன செய்கையால் பாதிக்கப்பட்டவனே ஆவான்; அவனே இராமன்.

இதிலிருந்தும், வாலியின் மகிழ்ச்சியை இரு கோணங்களில் இருந்து காணலாம். குற்றம் செய்த ஒருவன், அந்தக் குற்றத்திற்கு உரிய தண்டனையை அடைந்து விடுவானேயானுல், அவன் குற்றம் செய்யாவிட்டால் எவ்வாறு இருப்பானே, அந்த நிலையை அடைந்து விடுகிருன். ஆகவே, தான் செய்த குற்றம், அழிக்கப்பட்டு விட்டதற்காக மகிழ்ச்சி உற்ருன், என்பது ஓர் அணுகுமுறை.

இதுவும் அல்லாமல், வாலி தவறு செய்யாமல், இராவணவதத்திற்குத் துணை நின்றிருந்தாலும், அவன் தோன்றிய நோக்கம் நிறைவேற, இவ்வுலகை விட்டுப் போகவேண்டியவனே ஆகிருன். அப்படிப் போவதற்குப் பதிலாக (புலையுறு மரணம் எய்துதற்குப் பதிலாக) பரம்பொருளே இராமன் உருவில், தானே முன்வந்து, தன்னுடைய அம்பினுலேயே தனக்கு (வாலிக்கு) முடிவு தருமேயானுல் அதுவே அவன் வீடு பேறு அருளியதாகும். ஆகையால்தான்,

'பண்டொடு இன்று அளவுமே என் பெரு பழவினைத்
தண்டமே; அடியனேற்கு உறுபதம் தருவதே!'
(கம்பன், 4066)

என்ற அவனுடைய கூற்று.

அதுபோன்றதே தான்,

"வெற்று அரசு எய்தி, எம்பி, வீட்டு அரசு எனக்கு
விட்டான்"
(கம்பன், 4067)

என்ற கூற்றும்.

எனவே, இவற்றின் ஆதாரத்தில், இராமனால் வாலி கொல்லப்பட்டதனால், வாலி வருந்தவும் செய்தான், மகிழவும் செய்தான், என்பது தவறாகாது.

ஆகவே, வாலி, இராமனால் கொல்லப்பட வேண்டியவன், என்பதற்கு வாலி இராவணனோடு நட்பு உறுதி செய்து கொண்டதே முக்கியமான காரணம் எனலாம்.

முன்னரே சுக்கிரீவனுக்கு, வாலியைக் கொல்வதாக இராமன் வாக்குக் கொடுத்து விட்டதனால், அந்த வாக்கை நிறைவேற்றுவதற்காக, இராமன் வாலியைக் கொல்லும் நிர்ப்பந்தத்திற்கு ஆளாகின்றான், என்பதனைத் தவிர, இராமன் வாலியைக் கொல்வதற்கு இன்னொரு காரணத்தையும் பொது அறிவின் அடிப்படையில் காணலாம்.

இப்படிக் காணும் காரணமோ, மிகப் பலவானான வாலிக்குப் பதிலாக, அவனைவிட பலத்தில் குறைந்தவனாகிய சுக்கிரீவனை, சீதையைத் தேடுவதற்குத் துணையாக இராமன் ஏன் கொண்டான் என்ற கேள்விக்கும் பதிலாகி விடும்.

மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்பொழுது, கபந்தன் மானுட நிலைக்கு அப்பாற்பட்டவன். அவன்

இராமனிடத்து 'சீதையைத் தேட, நீ சுக்கிரீவனது துணையைக் கொள்' என்று சொல்கிறான். சாதாரண மனிதனாகத் தோன்றி இருக்கும் இராமன், அதனை ஏற்றுக் கொண்டான், என்று சொல்லிவிடமுடியும்.

இதிலிருந்தும், இன்னொரு கேள்வியும் பிறக்கத்தான் செய்கிறது.

மானிட நிலைக்கு அப்பாற்பட்ட கபந்தன் இராமனிடத்து 'வாலியைத் துணைக்கொள்' என்று கூறாது 'சுக்கிரீவனைத் துணைக்கொள்' என்று ஏன் சொன்னான்? என்பதுதான் அது. அக் கேள்விக்குத் தக்க விடை, இராமனுக்குத் துணை நிற்கும் இயல்பையும், தகுதியையும், வாலி இழந்துவிட்டான் என்பதுதான்.

இராவண வதமே இராமாவதார நோக்கமாக இருந்த போதிலும், சீதையை இராவணன் அபகரித்துக் கொண்டு சென்றதே, அந்த வதத்திற்கு முகாந்தரமாயிற்று என்பதனை முன்னரே கண்டோம்.

அந்த முகாந்தரத்தின் அடிப்படையில், இராவணனை வதைப்பதற்காக, இராமன் போரில் இறங்கும் பொழுது, இராவணன் எத்தவறு செய்தான் என்பதற்காக அவனுடன் இராமன் போரில் இறங்குகிறானோ, அதே தவற்றைச் செய்த பிறிது ஒருவனை, இராமன் தன் துணைவன் எனக்கொள்வது, ஏளனத்திற்கு இடன் ஆம் என்பது தெளிவு.

அதாவது, இராவணன் இராமனைப் பார்த்து "உன் மனைவியை நான் அபகரித்துக் கொண்டு வந்தேன் என்பதற்காக, என்னுடன் போர் செய்ய நீ இப்பொழுது வந்திருக்கிறாய். இந்தப் போரில் உனக்குத்துணை நிற்பவன் யாரவன்? தெரியுமா?

அவன் தன் தம்பி மனேவியையே அபகரித்துக் கொண்ட வாலியே ஆவான். அத்தகையவனேத் துணே யாகக் கொண்டு, என்னுடன் எந்த முகத்தைக் கொண்டு போர்க்கு வந்தாய்?'' என்று கேட்பானே ஆனுல், இராமன் நாணி, கூனி, குறுகி, வாய் அடைத்துப் போவதைத் தவிர வேறு வழியில்லே.

இதனுல், இராவண வதத்திற்கு முன்னரே, இராமனுல் வாலி கொல்லப்பட வேண்டியவன் ஆகிருன்.

இவை எல்லாவற்றிற்கும் மேலாக ஒரு புதிர், யாவர் மனத்திலும் இருந்து கொண்டிருக்கத்தான் செய்யும்.

இராவண வதத்தில், இராமனுக்குத் துணே நிற்பதற் காகவே பிறந்த வாலி, இராம - இராவணர் போர்க்கு முன்னுலேயே, இராமனுல் கொல்லப்பட வேண்டுமா? என்பதுதான் அது.

ஏன் இராமன் அவனே அப்படிக் கொல்லும்படி ஆயிற்று? என்பதற்கான காரணத்தை நாம் கண்டு விட் டோம். இதிலிருந்தும் இன்னெரு கேள்வி எழத்தான் செய்கிறது. அதுதான் இராமனுக்கு உதவுவதற்காகத் தோன்றிய வாலி, ஏன் அப்படி இராமனுல் கொல்லப் படும்படியாக நடந்து கொள்ள வேண்டும்? என்பதுதான் அக் கேள்வி.

இதற்கு ஒரே பதில், வாலி இந்திரனுடைய அம்சம்; இந்திரனுடைய இயல்பே இப்படிப்பட்டது என்பதுதான்.

புராணங்களின்படி இந்திரன் ஒழுக்கத்திற்கோ, உன்னத நடைக்கோ, பெயர் போனவன் அல்லன். அவன் தவறி வீழ்ந்த இடங்களே மிகவும் அதிகம். அவற்றில் சில வற்றை நாம் இராமாயணக் காப்பியத்தில் பால காண்டத்தில் கண்டிருக்கிறேம்.

அவன் கௌதம முனிவருடைய மனைவியான அகலிகையை வஞ்சகமாகப் புணர்ந்ததும் அறிவோம்.

இதுபோன்ற ஒழுக்கக் கேடுகள் பல, அவன் மாட்டுள.

'பிரம்ம வைவ்ரதா' என்னும் மகாபுராணம் 'கிருஷ்ணன்' பற்றிய கதைகளுக்காக ஒதுக்கிய, நாலாவது பாகத்தில், ஒரு தனி உட்பிரிவையே கொண்டிருக்கிறது. அதில் இந்திரன் முறைதவறி நடந்து, அதற்காகத் தண்டிக்கப்பட்ட பல சந்தர்ப்பங்கள் கோவையாகத் தரப்பட்டுள்ளன.*

'அபிதான சிந்தாமணி'யில் இந்திரனைப் பற்றி அடியிற் கண்டசெய்திகளும் கொடுக்கப்பட்டுள்ளன:

பரதாரம் நச்சும் பண்பிலி:

1. தேவசன்மன் தேவியாகிய உரிசை மீது தகாத மோகம் கொண்டு, பின் விபுலனைப் பணிந்து, தன் குற்றத்தை மன்னிக்கக் கோருகிறான்.

2. சலந்திரன் தேடிய பெண்ணிடத்து, தானும் மயல் கொண்டு, அவனுடன் அவளைக் கடலில் தேடுகிறான்.

3. முகுந்தையிடம் உருக்குமாங்கதன் உருக்கொண்டு புணர்ந்து, கிரிச்சமத முனிவரைப் பெற்றவன்.

4. பாரிஷதன் என்னும் அரசன் மனைவியாகிய வபுஷ்டமைமீது ஆசையுற்று, பல வகையிலும் எண்ணம் முடியாமல், அவ்வரசன் அசுவமேத யாகம் செய்கையில், அப் புரவி கொல்லப்பட்டமை அறிந்து, அதன் உடலில் புகுந்து கொள்கிறான். யாக முறைப்படி யாக கர்த்தாவின்

---

*"The Greater Ramayana"—Dr. V. Raghavan—1973, Edn. Page 45

மனைவியுடன் இறந்த குதிரை உடலைப் பொருத்துகையில், அற்றம் பார்த்து கருதியது முடிக்கிறான்.

இதன் விளைவால் அந்தயாகம் பலனற்றதாயிற்று. (சிவமகா புராணம்)

தற்செருக்கு, ஆணவம், தவிராத தகவிலி

1. ஆணவ மிகையால் துர்வாசரை அலட்சியப் படுத்த, அவர் இட்ட சாபம் கட்டியதாகலின் செல்வம் அனைத்தும் இழக்கிறான். (பாலகாண்டம்)

2. பிருது சக்கரவர்த்தியின், அஸ்வமேத யாகத்தில் யாகக் குதிரையைத் திருடுகிறான்.

3. ஆபிசார யாகம் செய்து இரசியின் குமரரைக் கொல்கிறான்.

4. வச்சிர மந்திரத்தால் விரோசனன் குமரியைக் கொல்கிறான்.

5. சகரன் அஸ்வமேதத்தின் பொருட்டு விட்ட குதிரையை, கபில முனிவர் ஆஸ்ரமத்தில் அவர்க்குப் பின்புறம் ஒளிக்கிறான்.

6. திதி வயிற்றில் தன்னை வருத்த இருந்த கருவை, ஏழு கூறுகளாக்கி, மருத்துக்கள் ஆக வரம் தருகிறான்.

7. அம்பரீஷனது யாகப் பசுவை மறைக்கிறான்.

8. மாண்டுகன்னரை மயக்க அரம்பையரை ஏவுகிறான். (காஞ்சிப் புராணம்)

9. அகத்தியர் பசு நீக்கி, நெல் கொண்டு செய்த வேள்விக்கு இடையூறு விளைத்து, அவர் சினம் கொண்டு எழுந்தபொழுது, மன்னிப்புக் கோருகிறான்.

10. தன் பட்டத்திற்கு வர இருந்த மாந்தாதாவைத் தடை செய்ய எண்ணி, அவனுக்கு லவணுசுரனைக் காட்டிப் போரிட்டு இறக்கச் செய்கிருன்.

11. சிவதரிசனத்திற்குச் சென்று, கர்வம் அடைந்து, பூத உருக் கொண்ட, சிவமூர்த்தியால் வச்சிரம் இழந்து நோகிருன்.

12. பிரகலாதனை வெல்ல எண்ணி, அவனிடத்து குற்றேவல் செய்து, அவனிடத்துள்ள ஒழுக்கம் முதலிய விழுமிய பண்புகளின் பயனையே தானமாகப் பெற்று அவனை வெல்கிருன்.

13. சுக்கிரசன் என்பவனிடம், பறவை வடிவில் சென்று, நரமாமிசம் வேண்டும் எனக் கேட்கிருன்.

14. வச்சிராங்கியின் தவத்தைக் குரங்காகச் சென்று கெடுக்கிருன்.

15. வாலகில்லியரைப் பரிகசித்துக் கருடனுல் அவமதிப்படையச் சாபம் அடைகிருன்.

இத்தகைய இயல்புகளை உடைய இந்திரன் அம்சமாக வாலி பிறந்ததால், அவன் இவ்வாருன செயல்களில் ஈடுபட்டு, இராம இராவணர் யுத்தத்திற்கு முன்னரே இராமனுல் கொல்லப்பட வேண்டியவன் ஆகிருன் என்று கொள்ள முடியும்.

* * *

# 9. வாலியை இராமன் கொன்ற முறை சரியானதா?

## (இரண்டாம் வினு)

வான்மீகி கதைப்படியும், கம்பன் காவியப்படியும், வாலியை இராமன் கொன்ற முறை சரியானதன்று என்பதற்கு எந்தவிதமான ஐயப்பாடும் இல்லை.

எனினும், இராமனைத் தெய்வம் ஆகக்கருதுகிறவர்கள், "தெய்வம் செய்தது சரியானது; சரியானது அன்று, என்று தீரப்பளிக்க நாம் யார்?" என்ற ஆக்ஷேபத்தைத் தான் கிளப்புகிறார்கள்.

நாம், இராமன், திருமாலின் அவதாரம் என இருந்த போதிலும், காப்பியம் முழுவதிலும், அவன் ஒரு சாதாரண மனிதன் ஆகவே செயல்படுகிறான் என்பதை முன்னரே கண்டோம்.

அது மாத்திரம் அன்று. அவன் 'தெய்வம்' என்று, அவன் கண்முன் நின்று, கனிந்து உருகி, வாழ்த்துக் கூறி, அமைந்தார் பலர். அவர்கள் தாமும், அவன் மனிதனாகச் செயல்படச் சொல்கின்றனர், என்பதனையும் கண்டோம்.

எனவே, வாலியை இராமன் கொன்ற முறை சரியா? அன்றா? என்ற கேள்வி, அவனை மனிதன் என்ற நிலையில் வைத்துத்தான் கேட்கப்படுகிறது. அதே நிலையில் வைத்துத்தான், விடையும் காணல் வேண்டும்.

இதனை ஆழமாக ஆய்வதற்கு முன், இராமன் வாலியைக் கொன்ற முறை எது? என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

வாலியும், சுக்கிரீவனும் உக்கிரமாகப் போரில் ஈடு பட்டிருந்த போழ்து, இராமன் மறைவில் நின்று, வாலி மார்பில் அம்பு எய்தான், என்பதுதான் அம்முறை.

வால்மீகியின்படி, இராமன் அப்படி மறைந்து நின்று வாலி மார்பில் அம்பு எய்யவில்லை என்று, வால்மீகியை நன்கு கற்று அறிந்த அறிஞர்கள் சிலர் சொல்கிறுர்கள்.

அது போலவே, வால்மீகியை நன்கு கற்று அறிந்த அறிஞர்களில் சிலர், வாலியின்மீது இராமன் மறைந்து நின்றுதான் அம்பு எய்தான் என்று சொல் கிறுர்கள்.

இவர்கள் இருவருமே, வால்மீகியின் தொடர்கள் சிலவற்றைத் தமக்கு ஆதாரமாகக் காட்டுகின்றனர்.

வால்மீகியில் சுக்கிரீவன் முதலில் ரிஸ்யமூக பர்வதத்தை விட்டுச்சென்று, வாலியைப் போருக்கு அழைத்து, அவனுல் அடிபட்டுத் திரும்பி, ரிஸ்யமூக பர்வதத்திற்கு மீளவந்து, இராமனுல் தேறுதல் பெற்று, மீண்டும் கிஷ்கிந்தை சென்று, வாலியைப் போருக்கு அழைத்தான் என்று காணப்படுகிறது.

அதாவது இரு முறை, இராம, இலக்ஷ்மண, சுக்கிரீவ அநுமார் முதலியோர் ரிஸ்யமூக பர்வதத்தில் இருந்து கிஷ்கிந்தைக்குச் செல்கிறுர்கள்.

முதன் முறையாகச் சென்றது, கிஷ்கிந்தாகாண்டம் 12 ஆம் சர்க்கத்தில் கூறப்பெறுகிறது. இதில் நமக்குத் தேவையானது அந்த சர்க்கத்தின் 14 ஆம் ஸ்லோகமே.

இரண்டாம் முறை, ரிஸ்யமூக பர்வதத்தை விட்டுச் சென்றது, கிஷ்கிந்தா காண்டம் 14 ஆம் சர்க்கத்தில் கூறப்பெறுகிறது. அதில் நாம் காண வேண்டியது முதல் ஸ்லோகமே.

முதன் முறை சென்றதைப் பற்றி,

"அவர்கள் எல்லோரும் வேகமாய் வாலியினது நகர் ஆகிய கிஷ்கிந்தைக்குச் சென்று, அடர்ந்த காட்டின் மரங்களால், தங்களை மறைத்துக் கொண்டு நின்றனர்"* என்றும்,

"All of them went swiftly to Kishkindha, vali's city, and took their stand in the dense forest, screening themselves behind the trees" என்றும் கூறுவர்.*

இவ்வாறே 14ஆம் சர்க்க முதல் ஸ்லோகத்தை,

"அவர்கள் எல்லோரும் வாலியினது நகர் ஆகிய கிஷ்கிந்தையை வேகமாய் அடைந்து, அடர்ந்த காட்டில், மரங்களால் தங்களை மறைத்துக் கொண்டு, காத்து நின்றார்கள்"* என்றும்.

"Quickly reaching Kishkindha, ruled by vali, they all hid themselves behind the trees in the thick wood"* என்றும் அறிஞர் பெருமக்கள் கூறுவர்.

திவான் பகதூர் K. S. இராமசாமி சாஸ்திரிகள், பரோடாவில் 'சயோஜி ராவ் நினைவுச் சொற்பொழிவு' வரிசையில் 'STUDIES IN RAMAYANA' என்ற தலைப்பில் சொற்பொழிவு ஆற்றியிருக்கிறார்கள். அச் சொற்பொழிவு, நூல்வடிவில் 1944ல் பதிப்பிக்கப் பெற்று வெளிவந் துள்ளது.

---

* வால்மீகி இராமாயணம், இராவ் சாகேப் P.S. கிருஷ்ணசாமி அய்யர் மொழி பெயர்ப்பு.

* Srimad Valmiki Ramayana, Translated from The Sanskrit by. N. Raghunathan. Vol. ii Pages 196, 200

அவர் கூறுவதாவது:

"எனவே, இராமர் மறைந்து கொண்டு நிற்கவில்லை. எல்லோருக்கும் தெரியும்படியாகவே, நின்று கொண்டிருந்தார். ஆனால், சுக்கிரீவனிடத்துக் கொண்டிருந்த, வெறி நிறைந்த பகைமை உணர்ச்சியாலும், அவனோடு மும்மரமான யுத்தத்தில் முழுமையாக ஈடுபட்டிருந்ததனாலும், வாலி, தான் எறிந்த மரங்களும், பாறைகளும் பயன் படாமல் நொறுங்கிக் கொண்டிருந்தபோதும், அவன் இராமரைப் பார்க்கவில்லை என்ற முடிவுக்கு நான் வருகிறேன்." *

இதற்கு ஆதாரமாக, வேறு பலவற்றைக் காட்டுவார்.

அவற்றுள் 19ஆம் சர்க்கம் 12ஆம் ஸ்லோகத்தில்,

'வாலி இராமன் அம்பினால் அடிபட்டு வீழ்ந்து விட்டதைக் கேட்ட தாரை, அங்கதனோடு வாலி வீழ்ந்து கிடக்கும் இடத்திற்கு வருகிறாள்; அவளை வானர வீரர்கள் தடுத்து, "வாலி எறிந்த மரங்களையும், கற்களையும் இராமன் தன்னுடைய அம்புகளினால் உடைத்து எறிந்து விட்டான்" என்றும் சொல்கின்றனர்.'

இப் பகுதியை எடுத்துக்காட்டி, ஆதாரம் இது என்று கூறுவார்.

மேலும்,

"காப்பியத்தில் காணப்படும் எல்லாக் கூற்றுகளையும், ஒன்றுக்கொன்று முரண்பாடின்றி ஒன்றோடு ஒன்று பொருந்துமாறும், இராமனுடைய நடத்தைக்குப் பொருத்தமாக இருக்கும் வகையிலும், நாம் காண வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஒரு குறிப்பிட்ட கருத்து, பழைமையானது என்பதற்காக, அதனையே நாம் பற்றிக் கொண்டிருக்க வேண்டும் என்ப

* Studies in Ramayana- P. 113.

தில்லே. காளிதாசர் கூறுவதுபோல, 'ஒரு கருத்து பழையது என்பதற்காகவோ, புதியது என்பதற்காகவோ, நாம் அப்படியே ஏற்றுக் கொள்ளக் கூடாது. நாம் அதனே ஆராய்ந்து, ஒரு சரியான முடிவுக்கு வரவேண்டும்' (மாளவிகாக்கினி மித்திரா). இராமன், தன்னுடைய எதிரிகள் அனைவரையும் யுத்தத்தில் நேரிடையாகவே சந்தித்தார். பாதிபலம் என்பது பற்றிய கதைக்கே, எந்த ஆதாரமும் இல்லே, என்பதை நான் உங்களுக்கு இப் பொழுது எடுத்துக் காட்டுவேன். 'ஆஹவ' என்ற சொல் நமக்குக் குறிப்பைக் கொடுக்கிறது. இராமர் எல்லோருக் கும் தெரியும்படியாகவே நின்ருர். ஆனுல் வாலியோ, சுக்கிரீவனேடு செய்யும் போரில் முழுமையாகத் தன் கவனத்தைச் செலுத்தி இருந்தபடியால் இராமர் நின்றதைக் கவனிக்கவில்லே''.

மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரி அவர்களோ, இதற்கு நேர்மாருகக் கூறுகிருர்கள்:

''காப்பிய கர்த்தாவே, வெளிப்படையாகக் கூறி இருப்பதற்கு மாருக 'வாலி மீது இராமர் மறைந்து நின்று அம்பு எய்யவில்லே' என்று கூறுபவர்களும் இருக்கிருர் கள். தன்மேல் குறிவைத்துக் கொண்டு, வேறு யாரோ இருக்கிருர்கள் என்பது வாலிக்குத் தெரியாது என்றும், வாலிக்கு அந்த உணர்வே இல்லே என்றும் கூறுகிருர்கள். அவனுக்கு, அப்படி யாரேனும் இருப்பது தெரியாமல் இருந்தபோதிலும், வாலியைக் கொன்ற இராமர் செயல் பற்றிக் குறைவாக நினேக்க, அவர்கள் விரும்பவில்லே. இராமர், யாவர்க்கும் தெரியும்படியாகவே நின்ருர் என்றும், மறைந்து கொண்டு நிற்கவில்லே என்றும், அவர்கள் வாதிக்கிருர்கள். ஆனுல் இதுவோ, வால்மீகியின் கூற்றுக்கு நேர் மாருனது''

இப்படிக் கூறிவிட்டு, 12ஆம் சர்க்கம் 14ஸ்லோகத்தை எடுத்துக் காட்டி, சாஸ்திரியார் அவர்கள் மேலும் சொல்வார்:

''மரங்களுக்குப் பின்னுல் தங்களே மறைத்துக் கொண்டு'; 'இருண்ட வனத்தில் இருந்து கொண்டு;'

'விருக்ஷை; கஹநே வநே' என்ற சொற்களுக்கு வேறு பொருள் இருக்க முடியாது.

வாலி இராமரைப் பார்த்து, மறைந்து கொண்டு தன் மேல் அம்பு எய்தான் என்று குற்றம் சாட்டும் பொழுது இராமர் அதற்குப் பதிலிறுக்கவில்லே, என்பது தெளிவாக இருக்கிறது. இராமர் அதனே மறுக்கவில்லே. மாருக அதனே ஏற்றுக்கொண்டு, தாம் செய்ததனே நியாயப் படுத்துகிருர். 'ஆம். நான் அப்படித்தான் செய்தேன். ஆனல் நீ யார்? நீ ஒரு வானரம். வேட்டை ஆடுதற்கு உரிய பிராணி. என்போன்ற மன்னர்களுக்கும், மன்னர்ச் சார்ந்தவர் களுக்கும், வேட்டை ஆடுவதற்கு உரிமை உண்டு. அப் படி ஆடும் வேட்டையில் மறைந்து கொண்டிருக்கலாம்; கண்ணி வைத்துப் பிடிக்கலாம். அல்லது 'கூட*' என்று சொல்லக் கூடிய எது வேண்டுமானுலும் செய்யலாம். நீ எனக்குத் தகுந்த எதிரிபோல உன்னுடன் நான் போர் செய்ய வேண்டிய கட்டாயம் இல்லே. உனக்கு முன் எச்சரிக்கை கொடுக்க வேண்டும் என்ருே, உன்னுடைய பலத்தை என் பலத்தோடு பரீக்ஷித்துப் பார்க்க அழைக் கவோ, நான் கடமைப்பட்டவன் அல்லன்' என்று இராமர் சொல்கிருர். இதுதான் இராமருடைய எதிர்வாதம். எனவே இராமர் வாலியை நேரிடையான போரில், எதிர் நின்று செய்போரில், கொல்லவில்லே என்பதும் சாதாரண

---

* 'கூட'—a trap for Catching a deer.; பொறி

யுத்த வீரர்களுக்கிடையே தவருனதாகவும், இகழ்ச்சிக்கு உரியதும் என்று கருதப்படும் முறையிலேயே கொன்ருர் என்பதும் தெளிவாகிறது. இதனே மேலும் தெளிவுபடுத்து வதற்காகப் பிரபல வியாக்கியான கர்த்தாக்களுடைய இரண்டு குறிப்புகளே மாத்திரம் உங்களுக்குப் படித்துக் காட்டுகிறேன். கோவிந்த ராஜரே - அவரைவிடச் சிறந்த இராமபக்தர் என்று எந்த மனிதரும் தன்னேக் கூறிக் கொள்ள முடியாது- இதைப்பற்றி எதுவும் மழுப்பவில்லே."

கோவிந்தராஜருடைய வியாக்கியானத்திலிருந்து சில வரிகளே எடுத்துக் கூறிவிட்டு, சாஸ்திரியார் அவர்கள் மேலும் சொல்கிருர்கள்:

"சுக்கிரீவனுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப் பதற்காகவே இராமர் வாலியை வஞ்சனேயாகக் கொன்ருர்."*

சாஸ்திரி அவர்கள், கோவிந்தராஜர் பயின்றிருக்கும் "ச்சத்மனு" (Chhadmana) என்ற வடமொழிச் சொல்லேக் குறிப்பிட்டு, அதற்கு ஆங்கிலத்தில் FRAUD என்ற பொருளேயே கொடுத்திருக்கிருர்கள்.

இதிலிருந்து வால்மீகியின்படி, வாலிமீது, இராமர் மறைந்து நின்று அம்பு எய்தார் என்பது தெளிவாகிறது.

மகாகனம் சாஸ்திரியார் அவர்கள் இராமர் வாலிமீது, மறைந்து நின்று அம்பு எய்யாமல்,வெளிப்படையாக நின்று வாலியினுடைய கவனம் சுக்கிரீவனுடன் இடும் போரில் செலுத்தப் பெற்றிருக்கும்பொழுது, வாலியின்மீது அம்பு எய்தாலும் அதுவும் தவறே என்றும் கூறி, அதற்கும் வான்மீகத்திலிருந்தே மேற்கோள் காட்டுகிருர்.

---

* Lectures on The Ramayana By The Rt. Honble V S. Srinivasa Sastry Revised Edn. 1961 Reprinted 1968, 1977. Pages 139, 140.

"இத்தகையவர்கள், இதனை விளக்குவதற்குப் படும் கஷ்டத்திலிருந்தே, அந்தக் காலத்திலேயே அத்தகைய போர்முறை (Fight என்ற சொல்லை சாஸ்திரியார் ஆள்கிறார்) சரியானது ஆகக் கருதப்படவில்லை. எந்த சுத்த வீரனும், தான் அங்கு இருப்பதை உணராமல் இருக்கின்ற பிறிது ஒருவனைத் தாக்கமாட்டான். இராமாயணத்திலிருந்தே ஒரு அருமையான உதாரணத்தை உங்களுக்கு நான் கொடுக்கிறேன். அந்த மாபெரும் போரில் நடந்த, ஒரு அற்புதமான நிகழ்ச்சியில், உங்கள் கவனத்தை வைக்குமாறு வேண்டுகிறேன். 'போரின் நிகழ்ச்சி ஒன்றில் இரு தரப்பிலும் உள்ள மிகச் சிறந்த வீரர்கள் ஈடுபட்டிருந்தார்கள்; இராமர் அங்கே இருந்தார்; இலக்ஷ்மணர் அங்கே இருந்தார்; அநுமார், சுக்கிரீவன், நீலன் பிறரும் அங்கே ஒரு பக்கமாக இருந்தார்கள். மறுபுறத்திலோ, பிற வீரர்களோடு இராவணன் இருந்தான். யுத்தம் ஆரம்பமாகப் போகிறது. யுத்த வீரர்கள் ஒருவரை ஒருவர் எதிர் நோக்கி இருக்கிறார்கள்; தன்னுடைய முந்தைய எதிரியான, அநுமாநுடைய முகத்திலிருந்து அடையாளம் கண்டு கொண்ட இராவணன், அவருடைய (அநுமார்) மார்பில் தன்னுடைய கையால் ஓங்கி அறைகிறான். அநுமார் நிலை கலங்குகிறார். எனினும், உடனே சமாளித்துக்கொண்டு, தம்முடைய கையால் இராவணன் மார்பில் பலமாக அறைகிறார். இராவணனும், அது பொறுது தடுமாறுகிறான். அப்பொழுது அநுமாரைப்பார்த்து, "சபாஷ் குரங்கே! நீ மிகுந்த பலசாலி நீ கொடுத்த அறை, என்னைத் தடுமாறச் செய்து விட்டது" என்கிறான். எதிரியினுடைய பலத்தையும், திறனையும், பாராட்டுவது சுத்த வீரனுக்குரிய லக்ஷணம். (இராவணன் அதையே செய்தான்.) ஆனால் அநுமான் கூறிய பதில் என்ன என்கிறீர்கள்? "சரி. என்னை நீ புகழ்வது கிடக்கட்டும். நானோ

நாணுகிறேன். நான் கொடுத்த அறைக்குப் பிறகும் நீ உயிரோடு இருந்து, என்னைப் புகழ்கிறாய், என்பதற்காக நாணுகிறேன்.'' அநுமானுடைய இந்த பதில், இராவணனைக் கோபத்துக்கு உள்ளாக்குகிறது. அவன் உடனே கையால் அறைவதற்குப் பதிலாக, தன்னுடைய வலக்கை முஷ்டியால் அநுமாருடைய மார்பில் எவ்வளவு பலமாகக் குத்தமுடியுமோ, அவ்வளவு பலமாகக் குத்து கிறான். அநுமாரால் அதைத் தாங்கிக் கொள்ள முடிய வில்லை. கண்கள் இருள் அடைய, என்ன நடக்கிறது என்பதனை உணர முடியாது நிலை கலங்கி விடுகிறார். அந்தக் கணத்தில் அவர் செயல் அற்றவர் ஆகிவிடுகிறார். ''தற்சமயம் அநுமார் செயல் இழந்து இருக்கிறார்'' என்று எண்ணி ராவணன், சேனைத் தலைவனாகிய நீலன் பக்கம் திரும்பி, அவனோடு யுத்தம் செய்ய ஆரம்பித்தான். இதற் கிடையில் அநுமார் தெளிவு அடைந்து, முடிந்தால் வட்டி யும் முதலுமாக இராவணனுக்கே திரும்பக் கொடுக்க, அவன் நின்ற இடத்திற்கு வருகிறார். நீலனோடு போரில் இராவணன் ஈடுபட்டிருந்ததைக் கண்ட அநுமார், அதைப் பயன்படுத்திக் கொண்டு, இராவணனைக் குத்த விரும் பாமல் ''ஒருவன் இன்னொருவனோடு போரில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்பொழுது அவனைத் தாக்குவது முறை யன்று'' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு ஒதுங்கி விட்டார்.

(இங்கே சாஸ்திரி அவர்கள் யுத்த கண்டம் 59ஆம் சர்க்கம், 73—74ஸ்லோகங்களை எடுத்துக் காட்டுகிறார்.

இந்த ஸ்லோகங்களை,

''But when he found that Ravana was engaged in combat with Neela, the high-minded one, told himself

that it would not be proper to attack one who was engaged in fighting another"* என்று ஸ்ரீ N. ரகுநாதையர் மொழி பெயர்த்திருக்கிறார்).

அநுமார் இராவணனுக்குத் தான் திருப்பி அறை கொடுக்கும் எண்ணத்தை, மனத்திலேயே கொண்டு, இராவணன் நின்று தன்னுடைய முழுக் கவனத்தையும் அநுமார் மேல் செலுத்தக் கூடிய நிலையில் இருந்தபோது, அவனைப் போருக்கு இழுக்கச் சென்றார்.

"ஒருவன் மற்றொருவனோடு போரில் ஈடுபட்டு, உன்னோடு போர் செய்ய முடியாமல் இருக்கின்ற நிலையை, நீ பயன்படுத்திக் கொள்ளக் கூடாது" என்று இவ்வாறு அநுமார் வகுத்த போர் நெறி இராமருடைய செயலை விமர்சிக்கும் பொழுது மிகப் பொருத்தமாகப்படுகிறது. இராமரோடு நேரிடையாகப் போர் செய்ய முடியாத நிலையில், வாலி இருந்தான் என்பது ஒரு புறம் இருக்கட்டும். இராமர் அங்கு இருந்தார் என்ற உணர்வே, வாலிக்கு இல்லை. எனவே இது மிகக் கொடூரமான அதர்மப் போர் ஆகிறது. *

வாலியை இராமன் கொன்ற முறை சரியன்று என்பது, இக்காலத்து அறிஞர்களால் கூறப்படுகிறது என்பது மட்டும் அன்று.

"இதைப் பற்றிப் பலர்பலவிதமாக விசாரித்து முடிவு செய் திருக்கிறார்கள். பவபூதி என்ற மகாகவி தமது 'உத்தர ராமசரிதத்தில்' (நாடகம்) இராமருடைய கல்யாண குணங்களில் மூன்று குறைகளைச் சொல்கிறார்.

---

* N. Raghunathan's Translation. vol III. P. 149.

* Lectures on the Ramayana-Rt. Hon'ble V. S. Srinivasa Sastry. P. 140, 141.

தாடகை என்ற ஸ்திரீயைக் கொன்றது, முதலாவது. கர, தூஷணர் யுத்தத்தில் மூன்று அடிகள் பின் வாங்கினது, இரண்டாவது. மூன்ருவதாக வாலியைக் கொன்றது.

பாத்ம புராணம், பாகவத புராணம் முதலியவற்றில், வாலியைக் கொன்றது குற்றம் என்றே ஒப்புக் கொண்டு, அதற்குப் பதிலாக, கிருஷ்ணுவதாரத்தில், ஒரு வேடனுடைய பாணத்தால் காலில் அடிபட்டு கிருஷ்ணன் மரணமடைந்தார் என்பது சொல்லப் படுகிறது.

ஆகையால் நமது முன்னேர்களால், வாலிவதம் அதர்மம் என்றே எண்ணப்பட்டது என்று சிலர் சொல் கிருர்கள்.'' *

அடுத்து இராமன் வாலிமீது மறைந்து நின்று அம்பு எய்ய வேண்டிய காரணம் என்ன? என்ற கேள்வி பிறக்கிறது.

வான்மீகர் கதைப் போக்கின்படி, இதற்கான காரணம் ஒன்றுதான்; அதுவும் இராமன் வாயிலிருந்தே வருகிறது. அதுதான் வாலி ஒரு விலங்கு; அதனை, எப்படி வேண்டுமானுலும் ஒரு மன்னன் வேட்டையாடலாம் என்பது.

இப்படி இராமனுலேயே கூறப்பட்ட காரணம், பின்னர் வந்த பலர்க்கு மனநிறைவு தரவில்லை. ஆகையால், இராமாயணக் கதையை ஆரியத்தில் எழுதிய வேறு சிலரும், வால்மீகி இராமயணத்திற்கு வியாக்கியா

---

* ஸ்ரீமத் வால்மீகி ராமாயண தத்வார்த்த தீபிகை (ராமாயண நோட்டுகள்) By. உ.வே C.R. ஸ்ரீநிவாசய்யங்கார் (கிஷ்கிந்தா காண்டம், அநுபந்தம் பக்கம் 363)

இந்த அநுபந்ததத்தில் மிக அழகாகவும் நடு நிலைமையில் நின்றும், எல்லா விவாதங்களும் ஆராயப் பெற்றிருக்கின்றன.

னம் எழுதிய அறிஞர்களும், வேறு காரணம் காட்ட முயன்று இருக்கிறுர்கள்.

வால்மீகி இராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில், மூன்று இடங்களில், வாலி அவன் தந்தையாகிய இந்திரன் கொடுத்த காஞ்சன மாலேயை அணிந்திருந்தான் என்ற செய்தி, கூறப் பெறுகிறது. பதினேராம் சர்க்கத்தில், துந்துபியை வாலி கொன்ற கதையை இராமனிடத்தில் சொல்கின்ற சுக்கிரீவன், துந்துபியோடு போருக்குச் செல்லும் பொழுது, வாலி தன் தந்தை ஆகிய மகேந்திரன் கொடுத்த காஞ்சன மாலேயை அணிந்து கொண்டு சென்றுன், என்று கூறுகிறுன்.

இரண்டாவதாக, பதினேழாம் சர்க்கத்தில், வாலி இராமனுடைய அம்பால் குற்றப்பட்டு, கீழே வீழ்ந்து கிடந்த நிலேயைக் குறிக்கும் பொழுது,

"அவன் அப்படி வீழ்ந்து கிடந்த போதிலும், பலவாஞன வாலியின் உடலில் இருந்து, அவன் தேஜஸ் மறையவில்லே; அவனுடைய உயிரோ, பலமோ, திறனே அழியவுமில்லே. இந்திரனுல் கொடுக்கப் பெற்ற, மணிகள் பதிக்கப் பெற்ற, விலே உயர்ந்த, அவன் அணிந்திருந்த மாலேயானது, வானரேந்திரனுடைய வலியையும், ஒளியையும் ஒருங்கே நிலேபெறுத்திக் கொண்டிருந்தது. அந்த மாலேயை அணிந்திருந்த வானரத் தலேவன் மழை முகில்களின் விளிம்புகள் மாலேக் கதிரவனின் ஒளி பெற்று பிரகாசிப்பது போல் இருந்தான்" என்ற வர்ணனே காணப்படுகிறது.

பின்னர் இருபத்திரண்டாம் சர்க்கத்தில், சுக்கிரீவனுக்கு அறிவுரை கூறும் பொழுது, வாலி அவனேப் பார்த்து "நான் அணிந்திருக்கிற, இந்த தெய்வீகத் தன்மை வாய்ந்த காஞ்சன மாலேயை எடுத்து நீ

அணிந்து கொள். ஏனெனில் நான் இறந்து விட்டால் அதன் சக்தி போய் விடும்'' என்கிருன். சுக்கிரீவனும் அப்படியே அதனை எடுத்து அணிந்து கொள்கிருன்.

இந்த காஞ்சன மாலையை அடிப்படையாகக் கொண்டு பல கருத்துகள் வெளியிடப் பெற்றன.

'நீ இந்த மாலையைப் போட்டுக் கொண்டிருக்கையில், உன்னுடன் யுத்தம் செய்கின்றவன் பலம் முழுவதும் உன்னைச்சேர வேண்டும் என்று தேவேந்திரனுடைய வரப் பிரஸாதம்''*

இந்தச் செய்தி பற்றி, ஆனந்த ராமாயணம் அடியிற் கண்டவாறு கூறுகிறது என்று, திரு C. R. ஸ்ரீநிவாசய்யங் கார் எடுத்துக் காட்டுவார்:

''ஒரு சமயத்தில் வாலி அபூர்வம் ஆன ஏழுபழங்களைக் கொண்டு வந்து, அந்தக் குகையில் வைத்திருந்தான். பிறகு ஒரு ஸர்ப்பம் அவற்றைத் தின்பதைக் கண்டு, கோபம் கொண்டு 'உன்மேல் ஏழு விருக்ஷங்கள் வளரக் கடவது' என்று அதைச் சபித்தான். அதற்கு அந்த ஸர்ப்ப மும் 'அவைகளைப் பிளக்கிறவன் உன் இருதயத்தையும் பிளப்பான்' என்று வாலியைச் சபித்தது.

பிறகு சுக்கிரீவன் இராமனைப் பார்த்து, 'சுவாமீ! தேவேந்திரன் வாலிக்கு ஒரு தங்க ஹாரத்தைக் கொடுத் திருக்கிருன். வாலி அதனைத் தரித்துக் கொண்டு, எவனுடன் யுத்தம் செய்கிருனே, அவனுடைய பலம் வாலியைச் சேரும். முன்பு காச்யபப்பிரஜாபதி, கடுந்தவத் தால் சிவனை ஆராதித்து, அந்த மாலையைப் பெற்ருர். அதை அவர் இந்திரனுக்குக் கொடுத்தார். இந்திரன் வாலிக்குக் கொடுத்தான். இவனுடன் நீர் யுத்தம் செய்

* அதே நூல் பக்கம் 342

தால் வீரியத்தை இழப்பீர். இதற்கு என்னயுத்தி?' என்று கேட்டான். உடனே ராமன் அந்த ஸர்ப்பத்தைப் பார்த்து 'நான் உன்சாபத்தை நீக்கின படியால், எனக்கு ஓர் உபகாரம்செய். கிஷ்கிந்தைக்குச் சென்று, வாலி நித்திரை செய்யும் சமயத்தில், அவனுக்குத் தெரியாமல், அந்த மாலையைக் கொண்டுவா என்றூர்'', அந்த ஸர்ப்பமும் அப் படியே செய்தது. [1]

ஆனல் திரு C. R. ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்களே, கிஷ்கிந்தா காண்டம் 17 ஆம் ஸர்க்கத்தைக் குறிப்பிட்டு ''இதனை ஸர்ப்பம் அபகரித்ததால் வாலி யுத்தத்தில் தோற்றூர் என்று சொல்வதற்கு ஆதாரம் இல்லை'' என்று சொல்கிறூர்.[2]

மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் அவர்கள் தம் இராமாயணப் பேருரையில், வேறுபல இடங்களில்காணப் படுவது போலவே, கோவிந்தராஜரும் 'உன் முன், உன்னேடு போரிடவரும் உன்னுடைய எதிரியினுடைய பலம் முழுவதும் உனக்கு கிடைத்து விடும்' என்ற வரம் வாலிக்கு இருந்ததாகக் கூறுகிறூர், என்று கூறிவிட்டு, அதில் எந்த அளவு உண்மை இருந்தது என்றும், இராமருக்கே அது தெரியுமா என்றும், தமக்குத்தெரியாது என்றும் சொல்லி, இராமர் வாலியைக் கொல்வதற்குத் தந்திரத்தையோ, வஞ்சனையையோ, கைக்கொண்ட தற்குக் காரணம் ஆக இது ஒருகால் குறிப்பிடப் பெற்றிருக்கலாம் என்றும் கூறுகிறூர்கள்.[3]

காஞ்சன மாலையின் சக்தி பற்றி கூறப்பட்ட இந்தப் பின்னணியில் தான், திவான் பகதூர் K.S. இராமஸ்வாமி

---

1. அதே நூல் 342, 343
2. அதே நூல் ப. 344
3. Lectures on the Ramayana. P. 152.

சாஸ்திரி அவர்கள் அந்த வரபலக் கருத்துக்கு எந்த வித மான ஆதாரமும் இல்லை என்று கூறுகிறுர்கள்.

தம்முடைய கூற்றை வலியுறுத்தும் வகையில், வாலி அணிந்திருந்த காஞ்சனமாலைக்கு அத்தகைய சக்தி இருந் திருக்குமேயானுல், வாலியைப் போர்க்கு அழைக்கும் தைர்யம் சுக்கிரீவனுக்கு இருந்திருக்குமா? சுக்கிரீவன் அதனை அணிந்து கொண்டு, கும்பகருணனேடு போரிட்ட போது, கும்பகருணன் உடனே மாண்டிருக்கமாட்டானு? இந்திரனே, அதனை அணிந்து கொண்டு இராவணனைத் தோல்வியுறச் செய்திருக்க முடியாதா? என்றெல்லாம் கேட்கிறுர்கள்.

இவை எல்லாம் ஒரு புறம் இருக்க, இராமர் வாலியை மறைந்து நின்று, அவன் மேல் ஒரே பாணத்தை எய்வ தற்கு எது காரணமாக இருக்கக் கூடும் என்று மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார், வால்மீகியினுடைய கதைப்போக் கிலிருந்தே சில நிகழ்ச்சிகளையும் தொடர்களையும் எடுத்துக் காட்டுகிறுர்கள்.

கிஷ்கிந்தா காண்டம் ஐந்தாம் ஸர்க்கம் 24, 25, ஸ்லோகங்களை எடுத்துக் காட்டி, சுக்கிரீவன் இராமரிடத்து தன்னைத் துரத்தியும், விரட்டியும், அவமானப்படுத்திய தன் அண்ணனுகிய வாலியிடத்து, தனக்குள்ள பயம் நீங்கும்படிச் செய்ய வேண்டும் என்று தான் கேட்கிறுனே அன்றி, வாலியை இராமர் கொல்லவேண்டும் எனக்கேட்சு வில்லை என்றும், அதே ஐந்தாம் ஸர்க்கம் 27 ஆம் ஸ்லோகத்தை எடுத்துக்காட்டி 'உன் மனைவியைக் கவர்ந்து கொண்ட உன் சகோதரனை நான் கொல்வேன்' என்று இராமர் கூறினுர் என்றும், அப்படிச் சொல்லும் பொழுது

* Studies in Ramayana by Dewan Bhadur K. S. Ramaswamy Sastri. P. 115.

'அதி கூர்மையான, வீண் போகாத அம்புகள் தம்மிடம் இருப்பதாகக் கூறுகிறுர்' என்றும், இங்கு வால்மீகி பாணங்கள் என்று பன்மையில் குறிப்பிடுகிறுர் என்றும், மீண்டும் 29, 30-ஆம் ஸ்லோகங்களிலும் அப்படியே வால்மீகி 'பாணங்கள்' என்று பன்மைச் சொல்லேயே பயன் படுத்துகிறுர் என்றும் சொல்லிவிட்டு, இதிலிருந்து ஆரம் பத்தில் வாலியுடன் இராமர் நேர் நின்று போர் புரியவே எண்ணினுர் என்றும், இல்லாவிட்டால் பாணங்கள் என்று பன்மையில் கூறுவதற்கு அவசியம் இல்லே என்றும் எடுத்துக் காட்டுகிறுர்கள்.

பாணங்கள் என்று பன்மையில் குறிப்பிடப்படும் வேறு பல இடங்களேயும் அவர்கள் எடுத்துக் காட்டி, வாலி யோடு நேரில் போர் புரிவதற்கே இராமர் எண்ணினுர் என்றும் கூறுகிறுர்கள்.

எட்டாவது ஸர்க்கம் 21 ஆம் ஸ்லோகத்தையும் எடுத்துக் காட்டி, 'இன்றே நான்வாலியை வதம் செய் கிறேன்' என்று இராமர் கூறுவதையும், 32, 33 ஆவது ஸ்லோகங்களே எடுத்துக் காட்டி 'உமக்குப் பெருந்தீங்கு இழைத்த வாலியாகிய உம்முடைய விரோதியின் மேல் என் கண்கள் படும் வரையில்தான் அவன் உயிரோடு இருப்பான்' என்றும் 'அவன் மேல் என் கண்கள் பட்ட அளவில் அவன் இறப்பான்' என்றும், இராமர் கூறியதாக வும் எடுத்துக் காட்டுகிறுர்கள்.

இராமரால் வாலியைக் கொல்ல முடியுமா என்ற சுக்கிரீவனுடைய ஐயத்தைத் தீர்ப்பதற்காக, ஒரே பாணத்தினுல் இராமர் ஏழுமராமரங்களேயும், ஏழு உலகங்களேயும் துளேக்க, கண்ட சுக்கிரீவன் என்ன சொன்னுன் என்பதை 12 ஆம் சர்க்கம் 9 ஆம் ஸ்லோகம் சொல்வதை எடுத்துக் காட்டி, 'உம் முன்னுல் வந்து உம்

மோடு போரிடுவதற்கு எந்த மனிதனால் தான் முடியும்? நீர் இவ்வளவையும் ஒரே பாணத்தினால் துளைத்திருக்கும் பொழுது எவனும் உம் முன் நிற்கமாட்டான்' என்ற சுக்கிரீவன் கூற்றையும் காட்டி, ஒரே பாணம் என்ற எண்ணம் இங்கே வெளிப்படையாகக் கூறப் பெறுகிறது, என்று சாஸ்திரி அவர்கள் சொல்வார்கள்.

பின்னர் வாலி சுக்கிரீவர்க்கு இடையே நடந்த முதற் போரில், வாலியிடம் அடிபட்டுத் திரும்ப ஓடி வந்த சுக்கிரீவனைத் தேற்றி, 'நீர் சென்று மீட்டும் வாலியைப் போர்க்கு அழையும். ஒரே பாணத்தினால், நான் இன்று அவனைக் கொன்று விடுகிறேன்' என்று கூறுவதாக, வால்மீகி முனிவர் குறிப்பிடும் இடங்களை எடுத்துக்காட்டி, அந்தக் கட்டத்தில் வாலியோடு நேர்நின்று பல பாணங்களைத் தொடுத்து, அவனைக் கொல்லுகின்ற முயற்சி இராமருடைய மனத்திலிருந்து போய்விட்டது என்றும், அப்போது ஒரே பாணத்தினால் அவனைக் கொல்வது என்ற எண்ணம் இராமருக்கு வந்து விட்டது என்றும் கூறுகிறார்.

சாஸ்திரியார் அவர்கள் இன்னொரு காரணத்தையும் கூறுவார்:

"இந்த வாலி யார்? அதைப்பற்றிச் சிறிது சிந்தித்துப் பார்ப்போம். வாலியோடு நேர் நின்று போர் புரிவதில் தமக்கு (இராமருக்கு) அச்சம் இருந்தது என்று நான் சொல்ல மாட்டேன். இராமருடைய வலிமை, வாலியினுடைய வலிமையோடு ஒப்பிட்டுப் பார்க்கையில், வாலியோடு நேர் நின்று போரிடுவதற்கு இராமர் பயந்தார் என்று நான் சொல்லவில்லை. அம்மாதிரி எண்ணம் எனக்குக் கொஞ்சமும் இல்லை.

ஆனால் நாம் கவனிக்கத் தக்கது என்னவென்றால், பின்னர் நடந்த இராம இராவண யுத்தத்தில் இராவணனை இராமரால் எளிதில் கொல்ல முடியவில்லை.

இறுதிக் கட்டங்களில், இரு புறத்து திறமையும், யுத்தத்தில் எவர் வெல்வார், தோற்பார் என்று நிச்சய மாகச் சொல்ல முடியாத சூழ் நிலையில் இருந்தது.

யுத்தத்தைக் காண்பதற்கு வந்திருந்த தேவர்களும், மகரிஷிகளும், என்ன நடக்கப் போகிறதோ என்று பெருங் கவலையில் இருந்தார்கள். அவர்கள் இந்திரனைப் பார்த்து, 'போரை இருவரும் சமமான நிலையில் இருந்து நடத்து வதாகத் தெரியவில்லை. இராவணன் தன் இரதத் திலிருந்து போர் செய்கிறான். இராமரோ தரையில் நின்று கொண்டிருக்கிறார். எனவே உன் இரதத்தை இராமருக்கு அனுப்பிவை', என்று கூறுகிறார்கள்.

இந்திரனும் அப்படியே செய்கிறான். தேர்ப்பாகன் ஆகிய மாதலி, தேரை ஓட்டிக் கொண்டு இராமனிடம் வருகிறான்.

இராமருக்குத் தேர் கொடுக்கப் பெற்றது மட்டுமன்று. புதியதாகக் கேடகம், வில், அம்புகள் கொடுக்கப் பெறு கின்றன. அப்பொழுதும்கூட போரில் இருவரும் சமமாக இருக்க, இராமர்தாம் ஜெயிப்பார் என்று கூற நிச்சயம் இல்லை.

எனவே, மீண்டும் மகரிஷிகளும் மற்றவர்களும், இராமருடைய உதவிக்குச் செல்லுமாறு அகஸ்தியரைக் கேட்டுக் கொள்கிறார்கள்.

அகஸ்தியர் வந்து இராமருடைய காதுகளில் 'ஆதித்ய ஹ்ருதயம்' என்ற மந்திரத்தைச் சொல்கிறார்.

அந்த மந்திரம், அப்பொழுது இராமனுக்குக் கற்றுக் கொடுக்கப்பட வேண்டியதாக இருந்தது. அப்படி இருந்தும், இறுதிக் கட்டத்திலும்கூட போரின் முடிவு சந்தேகத்தில் இருக்க, மாதலி இடைமறித்து, 'நான்

தங்களுக்குச்சொல்லவேண்டிய அவசியம் இல்லே. எனினும் இதுதான் கடைசி ஆயுதமாகிய பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்க வேண்டிய கட்டம். தயங்க வேண்டா. அதைப் பிரயோகியுங்கள்' என்று சொல்கிருன்.

எனவே, இராவணனேடு போரிடும்போது, இராமர் தன்னுடைய முழு சக்தியையும் பிரயோகிக்க வேண்டிய, கட்டாயம் வந்தது என்பதையும், அவர் புதிய உதவிகளேப் பெற வேண்டிய நிலே ஏற்பட்டது என்பதையும் காண் கிருேம்.

வாலியோ, இராவணனேவிட எத்தனேயோ பங்கு பலம் கொண்டவன்.'

உத்தர காண்டத்தில் இராவணன் வாலியைப் போருக்கு அழைக்கச் சென்றபோது, வாலி தெற்குச் சமுத்திரக் கரையில் சந்தியா வந்தனம் செய்து கொண்டிருந்தான் என்று கூறி, இராவணனே இடுக்கிக் கொண்டு, வாலி திசைதொறும் திசைதொறும் திரிந்ததைக் குறிப்பிட்டு விட்டு, சாஸ்திரியார் மேலும் சொல்கிருர்கள்:

"இந்த நிலேயில், அப்படிப்பட்ட வாலியுடன் நேருக்கு நேர் நின்று இராமர் போர் செய்தால், என்ன கதியாகும், என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். இராமர் தோற்றிருப்பார் என்று நான் சொல்லவில்லே; இல்லவே இல்லே; அது நான் இங்கு எடுத்துக் காட்ட விரும்பும் கருத்தும் அன்று.

ஆனுல் இராம இராவண யுத்தம் முழுசாக ஏழு நாட்கள் நடந்தது என்றும், இந்த ஏழு நாட்களிடையேயும், இருவர்க்கு இடையேயும் எந்தவிதமான ஓய்வும் இல்லே என்றும், இந்த ஏழு நாட்கள் முழுவதிலும், பகலாயினும் இரவாயினும் இருவரும் அதே உக்கிரத்துடன் போரிட்டனர் என்றும், தங்களுடைய கவனத்

திலோ, முழுமையான சக்தியிலோ ஒரு கணமும் அவர்கள் குறையவில்லை என்றும் காப்பிய கர்த்தா கூறுகிறுர்.' (யுத்த காண்டம் 110 ஆம் சர்க்கம் 37—38 ஸ்லோகங் களைச் சாஸ்திரியார் அவர்கள் எடுத்துக் காட்டுகிறுர்கள்)

பின்னர், இராவணனேடு போரிட்ட நிலையே அப்படி இருக்குமானுல், வாலியோடு இராமர் இடும் போர் குறைந்தது ஏழு அல்லது எட்டு நாட்கள் நீடித்திருக்கும். சுக்கிரீவன் பொறுமை முழுமையாகப் போயிருக்கும். அவனைப் பயம் கவ்விக் கொண்டிருக்கும். இராமர் அவனுக்கு அன்றே வாலியைக் கொல்வதாகக் கொடுத்த வாக்குறுதியை அவரால் நிறைவேற்ற முடியாமல் போயி ருக்கும்.

மேலும் அந்தக் காலத்து நடந்த சண்டைகளில் நேர்க்கு நேர் போரிடும்பொழுது ஒருவன் தன் எதிரியை எடுத்த எடுப்பிலேயே கொன்றுவிட முடியாது.

முதல் அம்பு வெற்றி பெறுவதில்லை. அவனுடைய அம்பு எதிரியின் அம்பால் தடுக்கப்படுகிறது.

இரண்டாம் முறை, மூன்ரும் முறை, நான்காம்முறை என்று அவன் அம்புகளை எய்துகொண்டே இருக்க வேண்டி இருக்கிறது.

ஒரு கட்டத்தில் இருவரும் களைத்துப் போகும் நிலை வருகிறது. அந்நிலையில் ஒருவன் கை மேம்பட அப் பொழுதுதான் வெற்றி தோல்வி நிச்சயமாகிறது.

இராமர் வாலியின் நேர் எதிர் நின்று போர் செய் திருப்பாரேயானுல், அப்படித் தான் நடந்திருக்கும். இறுதியாக இராமர் வெற்றி பெறுவார் என்பது பற்றி ஒரு கணம்கூட ஐயப்படத் தேவையில்லை,

எனினும் பல நாட்கள் அவர் இத்தகைய உக்கிர மான போரில் ஈடுபட்டிருக்க வேண்டும். அதற்கிடையில் சுக்கிரீவன் தன்னுடைய பொறுமையை முழுமையாக இழந்திருப்பான் என்பதைப் பற்றியும் சிறிதும் சந்தேக மே இல்லை.''*

சாஸ்திரியார் அவர்கள், மேலும் ஒரு காரணத்தை எடுத்துக் காட்டுகிறார்கள்.

அவர்கள் கூறுவதாவது:

''இராமருடைய மனத்தில் என்ன இருந்தது என்பதை அறிந்து கொள்வதற்கு வால்மீகி முனிவர் இராமாயணத்திலேயே 'ஒரு புகழ் மிக்க பகுதி' இருக் கிறது.''

யுத்த காண்டம் 112 ஆம் சர்க்கம், 18 ஆம் ஸ்லோகத்தை எடுத்துக் காட்டி, ''விபீஷணரிடத்தில் இராமர் கடைசி கட்டத்தில் தன்னுடைய அனுபவத்தின் அடிப்படையில் இதனைச் சொல்கிறார்:

'ஒருவன் இன்னொருவனோடு யுத்தத்துக்குச் செல்லும் பொழுது, இரு தரத்தாருமே தன் பக்கம்தான் ஜயம் இருக் கிறது என்று எண்ணிவிட முடியாது. சண்டை என்பதே எப்பொழுதுமே சந்தேகத்திற்கு இடம் கொண்டது. யார்க்கு வெற்றி கிடைக்கும் என்று உறுதியாகக் கூற முடியாது.

இதுவரையிலும் ஒரு பக்கமே, என்றும் வெற்றி பெற்றது இல்லை. ஒருவனுடைய வீரர்கள் எதிரிகளால் தாக்கப்படலாம். அவன் வெற்றி வீரன் ஆகத் திகழ்வான் என்பதனை எதிர்பார்க்கத்தான் முடியும். ஒரு போரில் எந்தப் பக்கத்தில் வெற்றி இருக்கும் என்று யாரும் முன் கூட்டியே கூறிவிட முடியாது.'

---

* Lectures on the Ramayana. P. 149-151.

இராமரே இப்படிக் கூறியிருக்கிறார். அப்படி இருக்கும்பொழுது அவர்க்கும் இம்மாதிரியான ஐயம் இருந்திருக்கும் என்று ஏன் சொல்லக்கூடாது.

அப்படிச் சொல்வதில் தவறு ஒன்றும் இல்லை.

எனவே சுக்கிரீவனுக்கும், வாலிக்கும் நடந்த முதற் போரில், இராமர் வாலிமேல் அம்பை எய்யாமல் இருந்தது, அவர் வாலியை நேரில் பொருவதா? இல்லையா? என்பதுபற்றித் தயங்கியதே காரணம், என்று நான் கூறு வேன். அது தக்க சமயம் அல்ல என்றும் அவர் எண்ணி யிருக்கலாம்.

ஆகையால் ஒரு கணம் அவரிடத்தில் ஒரு முடிவுக்கு வரமுடியாத தயக்கம் இருந்தது என்று சொல்லலாம்.

இது நடக்கக் கூடியது அல்ல என்று சொல்வதற் கில்லை.'

இப்படிக் கூறும்பொழுது சாஸ்திரியார் அவர்கள் வாலிக்கும், சுக்கிரீவனுக்கும் நடந்த முதற்போரில், வாலி மேல் இராமர் அம்பு எய்யாமல் இருந்தற்கு, இருவர்க்கும் இடையில் வேறுபாடு காணமுடியாமைதான் காரணம் என்று சொல்வதை, எந்த வியாக்யான கர்த்தாவும் நம்புவது இல்லை என்று எடுத்துக்காட்டுகிறார்கள்.

இரண்டு வியாக்யான கர்த்தாக்களும் (கோவிந்த ராஜர், திலகர்) இராமனால் நிச்சயம் வேறுபாடு கண்டுபிடித்திருக்க முடியும் என்று கூறுகிறார்கள். அதற்குக் காரணம் ஆக, அடிபட்டு ரிஸ்யமூக பர்வதம் நோக்கி ஓடினவனே சுக்கிரீவன் என்று தெரிந்து கொண் டிருக்கலாம்; அன்றேல் பக்கத்தில் இருக்கும் அநுமாரைக் கேட்டிருக்கலாம்; எனவே இராமர் சொல்லும் காரணம்

---

* அதே நூல் ப. 154.

ஒப்புக்கொள்ளத் தக்கதாக இல்லை என்று ஆகிறது என அவர்கள் கூறுகிறுர்கள்.

அப்படி இராமன் ஏன் சொன்னுன் என்பதற்குக் காரணம் காட்டும் வகையில், ஒருவனுடைய ஆயுள் முடிவதற்கு ஒரு குறிப்பிட்ட கால கட்டம் நிர்ணயிக்கப் பட்டுவிட்டது; வாலிக்கும், சுக்கிரீவனுக்கும் நடந்த முதற் போரில் அந்த கட்டம் வந்து அடையவில்லை; எனவே தான் அந்த முதற்போரில் வாலியின்மேல் இராமர் அம்பு எய்யவில்லை, என்று தங்களுடைய சாமர்த்தியத்தை எல்லாம் காட்டிச் கிலர் கூறுவர் என்று சாஸ்திரியார் அவர்கள் குறிப்பிடுகிறுர்கள்.

ஆனுல் சாஸ்திரியார் கருத்துப்படி, அந்தப் போரின் முதல் கட்டத்தில் வாலியின் எதிர் நின்று போர் செய்வதா? அல்லது மறைந்து நின்று போர் செய்வதா? ஒரே பாணத்தால் கொன்றுவிடுவதா? என்று இராமன் முடிவுக்கு வரவில்லை; வாலியினுல் அடிபட்டு ரிஸ்யமூக பர்வதத்திற்கு ஓடிய சுக்கிரீவன், இராமனிடத்துப் பரிதாப மாகப் பேசிய பிறகுதான், அவனுக்கு நம்பிக்கையும் உறுதியும் உண்டாகும் வகையில், வாலியைச் சுக்கிரீவன் மீண்டும் போர்க்கு அழைத்தால். வாலியைத் தான் ஒரே அம்பினுல் அக்கணத்திலேயே கொல்வதாக உறுதி அளிக் கிறுர்; அதன் பிறகுதான் மறைந்து நின்று வாலியை ஒரே அம்பினுல் அடிக்கும் எண்ணம் இராமர் மனத்தில் திடமாக இடம் பெற்றது.

இனி கம்பனுக்கு வருவோம். கம்பன் கதைப் போக்கின்படி வாலியின்மீது இராமன் மறைந்து நின்று அம்பு எய்தான் என்பதை யாரும் மறுப்பதற்கில்லை. பன்முறை வாலி இதனை இராமனிடமே கேட்டு விடுகிறுன்.

இராமன் பதில் கூருத இடத்து மீட்டும் 'நீ சொல்லும் பிற காரணங்கள் அனைத்தும் அவ்வாறே இருக்கட்டும். என்னுடன் நீ ஏன் நேர் நின்று போர் செய்யவில்லை? கொடிய வேடன் ஒருவன், விலங்கினை வீழ்த்துவதுபோல் மறைந்து நின்று என்மேல் ஏன் அம்பு தொடுத்தாய்?'' என்று குறிப்பாகவே கேட்டுவிடுகிருன். இதற்கு இராமன் பதில் சொல்லவில்லை என்பதையும், இலக்குவன் இடைமறித்து, பதில் சொன்ஞன் என்பதையும் முன்னரே கண்டோம்.

இலக்குவன் சொன்னதே உண்மைக் காரணமாக இருக்குமாயின், அதே காரணத்தை இராமனே ஏன் சொல்லி இருக்கக் கூடாது?

இராமன் மனத்தில் இருப்பதனை இலக்குவன் எப்படி அறிவான்? இராமனே அதைச் சொல்லி இருந்தால் அதில் ஆட்சேபனைக்கு உரியது என்ன இருக்க முடியும்? எழுகின்றன. அதுவே உண்மையான காரணம் ஆக என்று பல கேள்விகள் இருந்தால், இராமனே அதனைச் சொல்லி இருக்கமுடியும். அது இராமனது தற்பெருமையைக் குறிக்கும் என்று சொல்வதற்கு இல்லை. வாலியினுடைய முதற்கட்ட கேள்விக்குப் பதில் சொல்லும் பொழுதோ இராமன்,

'ஆதலானும், அவன் எனக்கு ஆர் உயிர்க்
காதலான் எனலானும், நிற்கட்டனென்;
ஏதிலாரும். எளியர் என்ருல், அவர்
தீது தீர்ப்பது என் சிந்தைக் கருத்து அரோ'

(கம்பன், 4044)

என்று கூறிஞன் என்பதைக் கண்டோம். அதனேடு இன்னும் ஓரிருவாசகங்கள் சேர்க்க வேண்டியதுதான். ''அவன் அப்படி என்னிடம் அபயம் கேட்டபொழுது அவனுக்கு நான் அபயம் அளித்து, உன்னை (வாலியை)க்

கொல்வேன் என்று முன்னரே சொல்லி விட்டேன்; உனக்கும் எனக்கும் இடையே போர் நடக்கும்பொழுது நீயும் ஆற்ருது அபயம் தேடினுல், அவனுக்குக் கொடுத்த வாக்குறுதி தவறி விடுமே என்பதற்காகத்தான் மறைந்து நின்று உன்மேல் அம்பு எய்தேன்'' என்று இராமன் வாலியிடம் சொல்லி இருந்தால், அதில் தவறு ஒன்றும் இருந்திருக்க முடியாது.

வால்மீகி இராமாயணத்திற்கு முழுமையான உரை எழுதிய கோவிந்த ராஜர், இராமர் மறைந்து நின்று வாலி மேல் அம்பு எய்ததற்கு இதையே காரணமாகத் தம் வியாக்கியானத்தில் காட்டுகிருர். சொல்லப்போனுல் ஒரு படி மேலேயும் செல்கிருர்.

வாலிக்கும், இராமருக்கும் இடையே நடக்கும் நேரிடைப்போரில் இராமருடைய போர்த்திறமையை அறிய நேரிடும். வாலி, இராமரிடத்துச் சரணுகதி அடையலாம்; அப்படியானுல் இராமர் போரைத் தொடர்ந்து நடத்த முடியாது. உடனேயே வாலிக்கு அபயம் கொடுத்தாகவேண்டும். அந்த நிலேயில் சுக்கி ரீவனுக்கு இராமர் கொடுத்திருந்த வாக்குறுதி நிறை வேற்றப் படாமல் போகும். வாலியுடன் நட்புறுதி உடன் படிக்கை செய்து கொண்ட இராவணனும், இராமர் முன் வந்து 'என்னே மன்னித்து விடு. உன்னே நான் சரணம் அடைகிறேன்' என்றும் சொல்லலாம். அப்பொழுது "இராமருடைய அவதார நோக்கம் நிறைவேருது'' என்றே சொல்கிருர்.*

கோவிந்தராஜர் 16ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவர் என்று கூறுகிருர்கள். அதனேடன்றி, தென்னிந்தியாவில் குறிப்பாகத் திருப்பதியில் வாழ்ந்தவர் அவர் என்றும்

---

* அதே நூல், பக். 140

கூறுகிருர்கள். அப்படியாஞல் அவர்க்குக் கம்பராமா யணம் தெரிந்திருக்க வேண்டும்; இந்த வியாக்கியானப் பகுதியை, கம்பன் இலக்குவன் வாயிலாகக் கூறுவதி ருந்து எடுத்துக் கொண்டிருக்க முடியும்.

இனி கம்பனைத் தொடர்வோம். இலக்குவன் கூறியதையே இராமன் கூறி இருந்தால் அதனுல் இராமனுக்கு எந்தவிதமான மாசும் ஏற்பட்டு விடாது என்பது ஒரு புறம் இருக்க, இங்கே இலக்குவன் இடைமறித்துக் கூறுவது இயற்கையாக அல்லாமல் செயற்கையாகத் தோன்றுகிறது.

காப்பியத்தின் பெரும்பாலான இடங்களில் மூன்ரும் பேர்வழியோடு பேசும் பொழுது, இராமனுடைய உத்திரவின்றி இலக்குவன் எதையும் பேசுவது இல்லை. இந்த இடத்தில் வாலி கேள்வி கேட்பது இராமனை. அப்படி இருக்கும்பொழுது பதில் சொல்லக் கடமைப் பட்டவன் இராமன்தான். இராமன் பதில் சொல்லாமல் நிற்க இலக்குவன் ஏன் இடைமறிக்கிருன் என்பதனைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இன்ஞென்றையும் மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். வாலியின் தோற்றப் பொலிவைக் கண்டு இராமன் அவனைப் பாராட்டி இலக்குவனிடம் பேசும் பொழுது, இலக்குவன் சுக்கிரீவனைப் பற்றித் தரக்குறை வாகவே பேசுகிருன். தன் அண்ணனைக் கொல்லக் கூற்று வனைக்கொண்டு வந்த சுக்கிரீவனைப் பிறர் எப்படி நம்ப முடியும் என்று சற்றுமுன் கேட்ட இலக்குவன்—அதற்காகப் பரதன் பெயரை ஒப்புமை கூறி, இராமனுல் மட்டந் தட்டப்பட்ட இலக்குவன்—இப்பொழுது வாலியைக் குறைத்தும், சுக்கிரீவனிடம் பரிவு காட்டியும் பேசுகிருன். இதுவும் இலக்குவன் செயலைச் செயற்கை ஆக்குகிறது.

அப்படியானல், உண்மையான காரணம் வேறு ஏதோ இருக்கிறது; அது இராமனல் வெளியிடப்பட முடியாதது; அதே சமயத்தில் இராமன் பொய் உரைக்கவும் கூடாது; எனவேதான் இலக்குவன், சரணுகதித் தத்துவத்தைக் கொண்டு வந்து வாலியும் சரணடைந்து விட்டால் "என்ன செய்வது என்பதற்காக இராமன் அப்படிச் செய்தான் என்று கூறுகிருன்.

இனி காப்பியப்படி வாலியை இராமன் மறைந்து நின்று கொன்றதற்கு உண்மையான காரணம்தான் என்ன? என்பதைக் காண முயலவேண்டும்.

இந்தக் காரணத்தைக் காப்பியப் போக்கிலிருந்து உய்த்து உணர முடியுமே அன்றி, காப்பிய நாயகன் சொற்களிலிருந்தோ, காப்பிய கர்த்தாவின் சொற்களி லிருந்தோ காணுவதற்கில்லே. அதுதான் வாலிக்கு இருந்த வரபலம்.

இத்தகைய வரபலம் வால்மீகியினுல் கூறப்பட வில்லே.

கம்பனே தன்னுடைய பாயிரத்தில் "தேவ பாடையின் இக் கதை செய்தவர் மூவர் ஆனவர் தம்முளும், முந்திய நாவினுன் உரையின்படி, நான் தமிழ்ப்பாவினுல் இது உணர்த்திய பண்பு அரோ" என்று கூறுகிருன்.

ஆக, இதில் அவன் குறிப்பிடும் தேவ பாடையில் இக் கதை செய்த மூவர் வால்மீகி, வசிட்டர், போதாயனர் ஆயவர் என்பர்.

இவர்களுள் வால்மீகியினுடைய கதையை (ஆதி காவ்யத்தை)த்தான் கம்பன் பின்பற்றினுன் என்பதற்குச் சான்று உண்டு.

நாட்டுப்படல முதற்பாடல்,

வாங்க அரும் பாதம் நான்கும், வகுத்த வான்மீகி என்பான்
தீம் கவி செவிகள் ஆரத் தேவரும பருகச் செய்தான்;
ஆங்கு, அவன் புகழ்ந்த நாட்டை, அன்பு எனும் நறவம் மாந்தி,
மூங்கையான் பேசலுற்ருன் என்ன, யான்மொழிய லுற்றேன்,
(கம்பன், 32)

என்று அமைந்துள்ளமை காணலாம்.

வியாசர் எழுதிய இராமாயணம் அத்யாத்ம இராமாயணம் என்று கூறுவர். அந்த இராமாயணத்தில் இந்த வரம்பற்றி எதுவும் சொல்லப்படவில்லை. அந்த இராமயணம் முழுக்க, முழுக்க, இராமனைக் கடவுளாகவே காட்டுகிறது.

போதாயனருடைய இராமாயணத்திலும் இத்தகைய (வாலி வரம்பற்றி) குறிப்பு எதுவும் காணப்படவில்லை என்று கூறுகிருர்கள்.

ஆனல் இத்தகைய வரம் ஒன்று ஆனந்த ராமாயணத்தில் காணப்பெறுவதாகவும், அது தாய்லாந்தில் வழங்கும் இராமாயணக் கதையில் இடம்பெற்றிருப்பதாகவும் டாக்டர் V. இராகவன் அவர்கள் கூறுகிருர்கள்.[1]

ஆனந்த ராமாயணமோ தென்னிந்தியாவில் மராத்தியர் ஆட்சியின் பொழுது (அதாவது 17ஆம் நூற்ருண்டில்) தோன்றியது என்பர்.[2]

எனவே ஆனந்த இராமாயணம் 9 ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த கம்பனுக்கு ஆதாரமாக இருப்பதற்கு வழி இல்லை.

---

1. The Ramayana in Greater India, By V. Raghavan, Page. 75.

2. Ramayana Tradition in Asia, Sahitya Academy P. 18.

தாய்லாந்தில் வழங்கும் இராமாயணமோ வாய் மொழியாக இந்திய நாட்டிலிருந்து பல கிழக்காசிய நாடு களுக்குச் செல்லும்பொழுது அங்கும் சென்றது என்பர்.

தாய்லாந்தில் இராமாயணம் மிக்க ஆழமாகப் பதிந்திருந்தது என்பதைப்பற்றிச் சந்தேகம் இல்லே. அந் நாட்டின் இன்றைய தலேநகர் பாங்காக் என்பது. அந் நாட்டின் முன்னேய தலேநகரம் அயுத்தியா என்று அழைக்கப்பெறும்.

அதனே ஆண்ட மன்னர்களும் முதலாம் இராமர், இரண்டாம் இராமர் என்று பெயர் வைத்துக்கொண்டு இருந்தார்கள்.

முதலாவது இராமர் என்று பெயர் கொண்ட மன்னர் 1785 ஆம் ஆண்டில் 'தாய்' மொழியில் செய்யு ளாக 'இராமகியான்' என்று நூலே இயற்றினர்.

அந்நூல் Ray A. Olsson, M.D. என்பவரால் உரை நடையில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

அந்நூலில் இந்த வரம் அடியிற் கண்டவாறு கூறப் பெறுகிறது!

"தானும் வாலியும் போரிட்டுக் கொண்டிருக்கும் பொழுது இராமன் பின்னுலிருந்து வாலியின்மேல் அம்பு எய்து அவனேக் கொல்ல வேண்டும் என்று சுக்கிரீவன் கூறினுன்.

யார் வாலியோடு போரிடுகிருர்களோ, அவர் களுடைய பலம் பாதியாகக் குறைந்துவிடும் என்று வாலிக்கு ஒருவரம் இருப்பதாகவும் சுக்கிரீவன் சொன்னுன். இராமனே தன்னுடைய பாணங்களே நீரில் கழுவிஅப்படிக்

கழுவிய நீரைச் சுக்கிரீவன் மேல் தெளித்து அவனைப் பாது காப்பதாக ஏற்பாடாயிற்று.''*

இப்படிக் காணப்படுவது கம்பனில் காணப்படுகின்ற வாலியினுடைய வரத்தின் தன்மைக்கு மாறுபட்டதாகவே இருக்கிறது.

இது அன்றியும் இராமாயண காவியம் நம் பாரத நாட்டிலும், கீழை நாடுகளிலும் எந்த அளவிற்கு, எவ்வெவ்வகையில் பரவி இருந்தது என்பது 'மர்ரே' அண்டு கம்பெனி, திரு S. ராஜம் அவர்கள் வெளியிட்ட கம்பராமாயணப் பதிப்பில், பதிப்புரையில் விளங்கக் காணப்பெறுகிறது.

எனவே கம்பன் தன் பாயிரத்தில் கூறும், ஆரிய மொழியில் அமைந்த மூன்று இராமாயணம் தவிர, அவன் காலத்திலும், அதன் முன்னரும் தமிழ் மொழியில் இராமாயணக் கதைகள் பல வழங்கி இருக்கக் கூடும். (மேற்குறிப்பிட்ட பதிப்புரை பக்கம் 4)

அவை அனைத்தும் கம்பன் அறிந்தவையே. எனவே வான்மீகி இராமாயணத்தில் இடம் பெறுததும், இத் தகைய பழந்தமிழ்நூல்களில் இடம்ம் பெற்றிருந்ததுமபய பலநிகழ்ச்சிகளைக் கம்பன் தன்னுடைய காப்பியத்தினூடே இணைத்துக் கொண்டிருக்கிருன் எனலாம்.

உதாரணமாக இராமன் சிறுவனுக இருக்கும்பொழுது கூனியின் முதுகில் மண் உண்டை அடித்தான் என்பது

---

* Prose translation of the Thai Ramakien. P. 121, 122.

வான்மீகத்தில் இல்லாதது. ஆழ்வார்கள் பாசுரத்தில் உள்ளது.*

அதைக் கம்பன் எடுத்து ஆண்டிருக்கிறான். எனவே, இப்பொழுது நாம் காணவேண்டியது என்ன என்றால் வாலிக்கு இருந்தவரம் எத்தகையது என்பது?

இரண்டாவதாக, வான்மீகி முதலிய காப்பியக் கர்த்தாக்களின் நூல்களில் இல்லாத, வாலியின் இவ் வரம் பற்றிக் கூற கம்பனுக்கு ஆதாரமாக இருந்தது எது? என்பது.

முதலாவதை இப்பொழுது கவனிப்போம். நட்புக் கோள் படலத்தில் வாலியின் சிறப்பைப் பற்றி அநுமன் விரிவாக எடுத்துக் கூறுகிறான் என்பதை முன்னரே கண்டோம்.

நிலனும் நீரும், மாய். நெருப்பும் காற்றும் என்று
உலைவில் பூதம் நான்கு உடைய ஆற்றலான்;

(கம்பன், 3824)

வாலி என்று கூறி, பலபடியாக வாலியின் வீரத்தை விரிவு படப் புகழ்ந்து, விளக்கிக் கொண்டு வந்த அநுமன்,

'கிட்டுவார் பொரக் கிடைக்கின், அன்னவர்
பட்ட நல்வலம் பாகம் எய்துவான்;
எட்டு மாதிரத்து இறுதி, நாளும் உற்று
அட்டமூர்த்தி தாள் பணியும் ஆற்றலான்;

(கம்பன், 3825)

என்று கூறுகிறான்.

---

* கூனகம். புகக்தெறித்த கொற்றவில்லி

(திவ்வியப் பிரபந்தம் 781)

கொண்டை கொண்ட கோதை மீது

தேன்ற உலாவு கூனி கூன் (800)

இந்தப் பாடலின் முன்னிரு அடிகளில்தாம் காப்பியத்திலேயே, முதன் முறையாக, வாலிபெற்ற வரம் குறிப்பிடப் பெறுகிறது. அப்படிக் குறிப்பிடுபவன் அநுமன். இன்னென்றையும் இதில் காணவேண்டும்.

வாலிக்கு இயற்கையாக அமைந்திருந்த வலிமைக்கும் வீரத்திற்கும், ஆற்றலுக்கும் அநுமன் முதலிடம் கொடுக்கிருனே தவிர, இந்த வரத்திற்கு முதலிடம் கொடுக்கவில்லை. பேசிக் கொண்டே போகிற போக்கில் இந்த வரத்தைப்பற்றி அநுமன்குறிப்பிடுகிருன், என்று கொள்ள வேண்டி இருக்கிறது.

அடுத்து இதைப்பற்றிப் பேசுகிறவன் வாலியே. சுக்கிரீவன் அறை கூவி போர்க்கு அழைக்க, போருக்குப் புறப்பட்டபோது, 'சுக்கிரீவனுக்குப் பெருந்துணை ஒன்று உண்டாகி இருக்கிறது' என்று கூறி, தாரை தடுத்து நிறுத்த முயன்ற போது அதனை மறுத்துப் பேசிய வாலி,

கூற்றும், என் பெயர் சொலக் குலையும்; ஆர், இனி
மாற்றலர்க்கு ஆகி வந்து, எதிரும் மாண்பினர்?
(கம்பன், 3962)

என்று வினவி, சுக்கிரீவனுக்குத் துணையாக வந்து அப்படி யார் இருக்க முடியும்? என்றும்,

'பேதையர் எதிர்குவர் எனினும், பெற்றுடை
ஊதிய வரங்களும், உரமும், உள்ளதில்
பாதியும், என்னதால்; பகைப்பது எங்ஙனம்?
நீ, துயர் ஒழிக! என, நின்று கூறினன்.
(கம்பன் 3963)

இங்கு அநுமன் கூறியதற்கும், வாலி கூறுவதற்கும் இடையே உள்ள ஒரு சிறிய வேறுபாட்டைக் காண வேண்டும். 'அன்னவர் பட்ட நல்வலம்' என்றுதான்

அநுமன் கூறுகிருன். வாலியோ 'பெற்றுடை ஊதிய வரங்களும், உரமும் உள்ளதில் பாதியும் என்னதால்' என்றே குறிப்பிடுகிருன்.

எனவே வாலியின் கூற்றுப்படி, தன்னே, 'எதிர்ப்பவர் பலத்தில் பாதி மாத்திரம் அன்று. அவர்கள் பெற்றுள வரங்களில் பாதியும் தன்னேச் சேரும்' என்று குறிப்பிடு கிருன்.

இப்படி வாலி கூறியதற்குப் பின்னர்தான், தான் குறிப்பிட்ட நெடுந்துணே யார் என்பதனேத் தாரை குறிப்பிடுகிருள். அந்த நெடுந்துணே, 'இராமன்' என்றே தாரை சொல்கிருள்.

இ ர ா ம ன் அப்படி சுக்கிரீவனுக்குத் துணே வரமாட்டான் என்று, உறுதியாகக் கூறிய வாலி இறுதியாக தாரை இடத்து,

"இருத்தி, நீ, இறை, இவண், இமைப்பு இல் காலேயில்,
உருத்தவன் உயிர் குடித்து, உடன் வந்தாரையும்
கருத்து அழித்து, எய்துவென்; கலங்கல் என்றனன்;
(கம்பன், 3970)

அதாவது உடன் வந்திருப்பவன், இராமன் என்று தாரை கூறிய பிறகும்கூட, அப்படி 'உடன் வந்தார் கருத்து அழித்து எய்துவென்' என்று வாலி கூறுகிருன். 'உடன்வந்தார்' என்பது இராமனேயும் உட் கொள்ளும்.

மூன்ருவதாக, இந்த வரம் பற்றிக் கூறுபவன் இராவணன்.

இராவணன் மந்திரப் படலத்தில் வீடணன் இராமனேப் பற்றியும், சீதையை விட்டு விட வேண்டிய தன் அவசியம் பற்றியும், நந்திதேவனுடைய சாபத்திஞல்

தான்* அநுமன் ஆகிய குரங்கு வந்து, இலங்கையை அழித்தது, என்பன போல்வன பற்றியும் எடுத்துக் காட்டியும் பேச, அதற்கு மறுப்பாக இராவணன்,

அரங்கில் ஆடுவார்க்கு அன்பு பூண்டுடை வரம்
அறியேன்;
இரங்கி யான் நிற்ப, என் வலி அவன் வயின் எய்த
வரங்கொள் வாலிபால் தோற்றனென்; மற்றும் வேறு
உள்ள
குரங்கு எலாம் எனை வெல்லும் என்று எங்ஙனம் கோடி?
(கம்பன், 6177)

என்றும்,

'நீலகண்டனும், நேமியும் நேர் நின்று நேரின்,
ஏலும் அன்னவருடை வலி அவன் வயின் எய்தும்;
சாலும் நல்வரம் நினைந்து, அவன் எதிர் செலல் தவிர்ந்து,
வாலி தன்னை, அம்மனிதனும், மறைந்து நின்று எய்தான்.
(கம்பன், 6178)

என்றும் கூறுவான்.

இவ்விரு பாடல்களிலும் இராவணன் குறிப்பதாவது: வாலியை எதிர்ப்பவருடைய பலம் வாலிக்குச் சேர்ந்து விடும் என்பதாகும்.

இவ்வாறு பார்க்கும்பொழுது அநுமன், வாலி, இராவணன் ஆகிய மூவர் கூற்றிலும் வேறுபாடு இருக்கிறது.

அநுமன் "நல்வலத்தில் பாகம் எய்துவான்" என்கிறான்; வாலி, "எதிர்குவார் ஊதிய வரங்களும், உரமும் உள்ளதில் பாதியும் என்னதால்" என்கிறான்;

* நாலு தோள் நந்தி தான் நவின்ற சாபத்தால்
கூலவான் தாங்கி றல் குறுகும் கோள் (6150)

இராவணன் "எதிர்வார் வலி அவன் வயின் எய்தும்" என்கிறான். இராவணன் குறிப்பதில் பாகம் என்றோ, பாதியும் என்றோ இன்மையால், எதிர்வார் முழுவலி என்று பொருள் கொள்ளற்கே இடம் உண்டு.

இந்த வேறு பாட்டிற்குக் காரணம் நம்மால் கண்டறிய முடியவில்லை.

வாலி தனக்கு இருக்கும் வரத்தின் பலத்தை, தாரையைத் தேற்றும் பொருட்டு மிகைப்படுத்திக் கூறினான் என்று கொள்ளலும் ஆகும். அது போலவே, வாலியால் வலி தொலைந்த இராவணன் தன் தோல்வியை, அதன் கடுமையைக் குறைத்துக் காட்ட வாலியின் தன்மையை இவ்வாறு கூறியிருத்தலும் கூடும்.

அநுமனுக்கோ, இந்த விதமாக கூட்டியோ, குறைத்தோ கூறவேண்டிய அவசியம் இல்லை.

இதுவன்றியும், இதனை வேறொரு கோணத்திலிருந்தும் அணுகலாம். மூவகையாகக் கூறப்பெற்றன வற்றுள் மிகக் குறைவாக உள்ளதே (அதாவது அநுமன் கூறுவது) வாலியின் வரத்தின் உண்மை என்றும் கொள்ளலாம். இந்த அணுகு முறையில் பார்த்தால் அநுமன் கூற்றைத் தான் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

எனவே வாலிக்கு இருந்த வரம், அவனுடைய எதிரியினுடைய பலத்தில் பாதி, தனக்கு வந்துவிட வேண்டும் என்பதே, என்று கொண்டு மேலே செல்லலாம்.

இங்கே—ஏன் காப்பியம் முழுவதிலுமே—இராவணனின் கூற்றில்தான் வாலியினுடைய இந்த வரத்தின் காரணமாக, இராமன் அவனை (வாலியை) மறைந்து நின்று அம்பெய்தான் என்பது வெளிப்படையாகக் காணப்படுகிறது.

இவ்வரத்தின் தன்மை பற்றி பலர், பலவிதமாக எழுதியிருக்கிறார்கள். இதில் ஒருவர் திரு. முரு. பழ. இரத்தினஞ் செட்டியார் அவர்கள்.

அவர்கள் 'கிட்டுவார்' என்று தொடங்கும், அநுமன் வாயிலாகக் கம்பன் பாடிய பாடலைக் குறிப்பிட்டுவிட்டு,

"இப் பாடலில்தான் வாலிவதை மர்மமே அடங்கியிருக்கிறது. வாலிக்கு நேரே நின்று அம்பெய்தால் பாதி பலம் போய்விடும் என்று அஞ்சியே, இராமன் ஒளிந்து நின்று கொன்றான், எனக் கருதிக் கொண்டு, அப்படி ஒளிந்து நின்று கொல்வது சரியா எனத் தமிழ் நாட்டில் பன்னெடுங்காலம் ஆக வாதம் நடைபெற்று வருகிறது. வாலிக்கு நேரே வந்து நின்றால் பாதிப்பலம் போய்விடும் என்று இப்பாடல் சொல்லவில்லை, பாதிப்பலம் போகும் என்னும் தவறான கருத்தை மனத்தில் வைத்துக் கொண்டே இராமன் ஒளிந்து நின்று கொன்ற நிகழ்ச்சிக்கு அமைதி காண முயன்ற ஆராய்ச்சியாளர்கள் இதுவரை மூன்றே மூன்று சமாதானங்கள்தாம் சொல்லி இருக்கின்றனர்".*

பின் அம் மூன்று சமாதானங்களை எடுத்துக்காட்டி,

"இம் மூன்று சமாதானங்களும் நம் மனத்திற்கு நிறைவளிப்பதாக இல்லை" என்று கூறுகிறார்.

மேற்கொண்டு, இதனைப்பற்றி அவர் கூறுவதாவது:

"அநுமன் கூறுகின்ற, 'கிட்டுவார் பொரக் கிடைக்கின்' என்னும் பாடல்தான் வாலியின் வரவலத்தைப் பற்றி முதன் முதல் சொல்லும் பாடல் ஆகும். அப் பாடலைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

---

* வாலி வாதம் சரியா?
—முரு பழ இரத்தினம் செட்டியார்—பக்கம் 9,10

கிட்டுவார் பொர—போர் செய்வதற்காகத் தன்னை நெருங்கிவருவார்,

கிடைக்கின்— தம் பிடிக்குள் கிடைத்து விட்டால், அதாவது அகப்பட்டுக் கொண்டால்,

அன்னவர் பட்ட நல்வலம்—அவர்கள் பொருந்திய நல்ல பலத்தில்,

பாகம் எய்துவான்—பாதிப் பலம் பெறுவான்.

என்பது அப்பாடலடிகளின் பதவுரையாகும்.

'போர் செய்ய யாரும் தன் எதிரில் வந்தால்' எனச் சொல்ல வேண்டுமானால் 'கிட்டுவார் பொர' என்றாலே போதும்; அது எதிரிகள் கிடைத்து விடுகிறார்கள் என்பதையும், போர் செய்ய நெருங்குகிறார்கள் என்பதையும் தானே புலப்படுத்தும்? அப்புறம் 'கிடைக்கின்' என்று சொல்லத் தேவை இல்லை. இதனால் 'கிடைக்கின்' என்பதற்கு ஒரு தனிப்பொருள் இருக்கவேண்டும். வாலியோடு நெருங்கிப் போரிட்டு அவன் பிடிக்குள் அகப்பட்டால்தான் பாதி பலம் போகும் என்பதைத் தெளிவுறுத்தவே அநுமன் 'கிடைக்கின்' என்னும் சொல்லைப் பயன்படுத்தி இருக்கிறான். 'கிட்டுவார்' என்பது வாலியோடு மற்போர் செய்பவரைக் குறிக்குமே அன்றி, எட்டி இருந்து விற்போர் செய்பவரைக் குறிக்காது. விற்போர் செய்பவர் இடத்தும், வாலி பாதி பலம் பெற வேண்டுமானால் அவர் மீது பாய்ந்து பிடித்துத் தன் பிடிக்குள் அகப்படுத்த வேண்டும் என்பது இதனால் பெறப்படும்" என்று கூறி விட்டு, அதுவரை வாலியோடு போர் செய்தவர்களான மாயாவி, துந்துபி ஆகியவர்கள் மற்போர் வீரர்களே ஆவர் என்றும், இராவணனும் விற்போர் செய்யாமல் பின்புறம் வந்து பிடித்தான் என்றே சொல்லப்படுகிறது என்றும், இராவணனோடு, சிறிது நேரம் கூடப்போராடா

மல் வாலி உடனே தன் வாலினுல் இறுகப் பிடித்து விட்டான் என்றும் சொல்லப்படுகிறது என்று குறிப்பிட்டு விட்டு, குறிப்பாக இராவணன் பிடிபட்டதைச் சொல்லி "இதிலிருந்து எதிரே வந்தால்தான் பாதிப் பலம் போகும் என்னும் வாதமும் அடிபட்டுப் போவதால், 'முன்னே வருதல், பின்னே வருதல்' என்பது வாலியிடத்தே முக்கியமில்லே என்று ஆகிறது.

இராவணன் பலம் பின்புறம் வந்தபோது எப்படிப் பாதி போயிருக்கும்? அநுமன் வாக்கைக் கொண்டுதான், நாம் இதனைத் தெரிய வேண்டி இருக்கிறது. 'கிட்டுவார் பொரக் கிடைக்கின் அன்னவர் பட்ட நல்வலம் பாகம் எய்துவான்' என்பதால் வாலியின் வாலுக்குள் இராவணன் அகப் பட்டுக் கொண்டு பாதிப்பலம் இழந்திருக்கிருன் என்பது புலனுகிறது. 'கிடைக்கின்' என்ற சொல்லால், வாலியின் கைக்கோ, வாலுக்கோ, காலுக்கோ, எதிரி கிடைத்துப் பிடியுண்டால்தான் அவன் பாதி பலம் பெறுவான் என்பது பெறப்படும். அநுமன் சொல்லேக் கொண்டு பார்த்தால்தான், பின்புறம் வந்த இராவணன் பாதிப் பலம் இழந்த காரணம் புலப்படும். இல்லேயேல் அது புதிராகவே இருக்கும்.

வாலியின் கண்ணுக்குத் தெரிய வருதல் பற்றி அநுமன் சொன்ன பாடலில் எதுவும் பேசப்படவில்லே. முன்னே வந்தாலும், பின்னே வந்தாலும், வாலி பார்த்து விட்டால் பாதிபலம் போகும் என்ருல், 'கிட்டுவார் பொரக் கிடைக்கின்' என்று கூருமல் 'கிட்டுவார் பொரப் பார்ப்பின்' என்று கூறியிருக்க வேண்டும். 'கிடைக்கின்' என்று சொல்லுவதால் அது, 'பிடிக்குள் அகப்படு வதை'யே குறிக்கும்" *

---

*அதே நூல் பக்கங்கள் 13, 14, 16.

'கிட்டுவார் பொரக் கிடைக்கின்' என்ற தொடரில் இடம் பெற்றிருக்கும் கிட்டுவார், பொர என்ற சொற்களுக்கு ஆசிரியர் கொடுத்திருக்கும் பொருளில் கருத்து மாறுபாட்டுக்கு இடம் இல்லை. ஆனால், 'கிடைக்கின்' என்ற சொல்லுக்கு ஆசிரியர் 'பிடியில் அகப்படுவது', அதாவது ''கைக்கோ, வாலுக்கோ, காலுக்கோ எதிரி கிடைத்து விட்டால்'' என்று பொருள் கொடுக்கிறார். அந்தச் சொல்லுக்கு இத்தகைய குறுகிய பொருளைக் கொடுக்க வேண்டிய தேவை இருப்பதாகத் தெரியவில்லை. கிடைத்தல் என்ற சொல்லுக்கு அடைதல், இயைதல், சமீபித்தல், என்ற பொருள்களோடு 'போரில் சந்தித்தல்' என்ற பொருளும் உண்டு.

கம்பனே 'சமீபித்தல்' என்ற பொருளில் இச்சொல்லை ஆண்டிருக்கிறான்

கிடந்தனன்—கிடந்தானைக் கிடைத்து இரு
தடம் கை கூப்பினன், தாரை முன் நாள்தந்த
மடங்கல் வீரன்............

(கம்பன், 4291)

இப் பாடலில் முதலடியில் காணப்படும் 'கிடைத்து' என்ற சொல் 'நெருங்கி' என்று பொருள் தரும்.

இதே சொல்லுக்கு ''எதிர்தல் என்ற பொருள் இருப்பதனை ''எறிகடலொடு கடல் கிடைத்த போல்'' (கலி. பரணி 393) என்ற தொடரால் அறியலாம்.

கலிங்கத்துப்பரணி, கம்பனுக்குப் பிற்பட்டதாக இருந்த போதிலும். அந்த காரணம் இச்சொல் ஆட்சியினுடைய பொருத்தத்தைத் தள்ளிவிடாது.

எனவே நாம் ஆய்ந்து கொண்டிருக்கிற 'கிட்டுவார் பொரக் கிடைக்கின்' என்ற தொடரின் ஈற்றில் உள்ள

'கிடைக்கின்' என்ற சொல்லுக்கு 'எதிர்ப்பின்' என்று பொருள் கொள்வதே பொருந்துவதாகும்.

'சமீபித்தல்' என்ற பொருளும் இருந்தபோதிலும் முதற்சொல்லாகிய கிட்டுவார் என்பதே அப் பொருளைத் தருதலால் அடுத்துள்ள இச் சொல்லுக்கும் அப்பொருள் (சமீபித்தல்) தருவது பொருத்தம் உடையது ஆகாது.

ஆகவே 'கிட்டுவார் பொரக் கிடைக்கின்' என்ற தொடர்க்கு, 'பொருவதற்காக எதிர்த்து வருபவர்கள் நெருங்கினுல்' என்றுதான் பொருள் கொள்ளவேண்டும்.

திரு முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்கள் 'கிடைக்கின்' என்ற சொல்லுக்கு, 'பிடியில் அகப்படின்' என்று பொருளைக் கொடுத்து அச் சொல்லின் பொருட் செறிவைக் குறைத்து விடுகிறுர்கள். இவ்வாறு அவர்கள் பொருள் கொள்வதன் நோக்கம் என்னவென்றுல், வாலியினுடைய வரம், மற்போர்க்காக வந்து அவனிடத்து அகப்படுவாரிடை மட்டும் பலிக்குமே அன்றி, விற்போர் வீரரிடம் பலிக்காது என்பதாகும். இவ்வாறு பொருள் கொண்டது, இராமன் மறைந்து நின்று வாலியின் மார்பில் அம்பு எய்தது வாலியினுடைய வரத்திற்குப் பயந்து அன்று, என்ற முடிவிற்கு வருவதற்காக.

இந்த முடிவிற்கு வந்த புலவர் அவர்கள் 'இராமன் வாலிமீது மறைந்து நின்று அம்பு எய்தது, இலக்குவன் எடுத்துக் காட்டிய காரணத்துக்காகவே அன்றி, வேறு எதற்காகவும் அன்று' என்று கூறிவிட்டு,

'பிறனில் விழைதல்' என்பது பெரும்பாவம்; அதனை வாலி செய்தான்; அதற்கு, அவனுக்குரிய தண்டனை வதமே ஆகும். எனவே அந்தப் பேரறத்தை நிறைவேற்றுவதற்

காக சிறியதாகிய போர் அறத்தில் சற்று தவறினும் பெரிதுபடுத்த வேண்டியதில்லை என்பதற்காகத்தான் இராமன் மறைந்து நின்று வாலிமீது அம்பு எய்தான், என்று அவர்கள் கூறுகிறார்கள்.

மேலும் புலவர் அவர்கள் கூறுவதாவது.

'பிறனில் விழைந்தானைத் தண்டிக்கிறேன் எனக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுவது முக்கியமா? ஒளிந்து நின்று கொல்லக் கூடாது என்ற போர் அற விதியைக் காப்பாற்றுவது முக்கியமா? இவ்விரண்டிலும், பிறன் இல் விழைந்தானைத் தண்டிப்பதாக தான் கொடுத்த வாக்குறுதியைச் காப்பாற்றுவதே முக்கியம் என்றும், அதனால் உலகிற்கு விளையும் நன்மையை நோக்க, போர் அறவிதியை மீறுவது குற்றம் அன்று என்றும், இராமன் தீர்மானித்தே, ஒளிந்து நின்று அம்பு தொடுக்கின்றான். அறம் பிறழ்வதற்கு மிகமிக அஞ்சும் அறத்தின் நாயகன் பிறனில் விழைவது ஆம் குற்றத்தின் கடுமையைக் காட்டுவதற்காகப் போர் அறவிதியினின்றும் பிறழ்கின்றான், என்றால், அக்குற்றம் எவ்வளவு கொடியது என்பதனை உணர வேண்டும், என்பதே கம்பன் உட் கிடக்கை. இராமன் எவ்வளவு வேதனையோடு போர் அற விதியை மீறி இருக்கின்றான் என்பதைக் காட்டுவதே "இல்லறம் துறந்திலாதோர் இயற்கையை எதிர்ந்து போரில், வில்அறம் துறந்து வாழ்வேற்கு" என அரசியல் படலத்தில் வரும் பாடலாகும்.'*

இதனை வற்புறுத்தும் வகையில் புலவரவர்கள்,

"பிறனில் விழைந்தானைக் கொல்வேன் எனச் சுக்கிரீவனுக்கு அளித்த வாக்குறுதியைக் காப்பாற்றவும், பிறனில்

* அதே நூல் ப. 74

விழைந்தானுக்கு உய்தி இல்லை என்னும் உண்மையை அறிவுறுத்தவும், இராமன் ஒளிந்தமையால், அவன் உள் நோக்கம் புனிதமுடையதாகின்றது.''* என்பார்கள்.

எனவே புலவர் அவர்களது முடிவுகளாவன :

1. வாலியினுடைய வரம் மற்போர் புரிய வருகிறவனைத்தான் பாதிக்குமே தவிர, விற்போர் வீரர்களைப் பாதிக்காது. இது 'கிடைக்கின்' என்ற சொல்லால் பெறப் படுகிறது. ஆகையால் இராமன் வாலியின் வரத்திற்குப் பயந்து ஒளிந்து நின்று அவன் (வாலி) மார்பில் அம்பு எய்தான் என்று சொல்வது தவறு.

2. மறைந்து நின்று வாலிமேல் அம்பு எய்தியதில் இராமன் போர் அறத்தை மீறித்தான் இருக்கிறான் எனினும், சுக்கிரீவனுக்குத் தான் அளித்த வாக்குறுதியைக் காப்பாற்றவும், பிறனில் விழைந்தானுக்கு உய்தி இல்லை என்னும் உண்மையை அறிவுறுத்தவும், இராமன் அப்படிச் செய்ததால், அவன் உள்நோக்கம் புனிதம் உடையதாகிறது.

வாலியின் வரத்தன்மையைப் பற்றிப் புலவரவர்கள் கூறுவது சரியாக இருக்குமானால்—வாலியின் மேல் இராமன் மறைந்து நின்று அம்பு எய்ததற்கும், வாலியின் வரத்திற்கும் சம்பந்தமில்லை என்றால்—வால்மீகத்திலும், பிற முன்நூல்களிலும் இல்லாத இந்த வாலி வரத்தைப் பற்றிக் கம்பன் பேசவேண்டிய அவசியம் என்ன? என்ற கேள்வி பிறக்கிறது.

புலவரவர்கள் கருத்தை ஒப்புக் கொள்வோமேயானால் தேவை இல்லாத வாலிவரம் என்ற ஒன்றைக் கவிச்சக்கர

---

*அதே நூல் ப. 71

வர்த்தி தன் காப்பியத்தினுட் புகுத்தி விட்டான் என்று ஆகும். இது கம்பனுக்குப் பெருமை சேர்ப்பதாகாது.

ஆனால் புலவர் அவர்கள் வாலி வரம் பற்றிக் கூறுகின்ற இன்னொரு கருத்து எனக்கும்—சொல்லப் போனால் யார்க்குமே— உடன்பாடு உடையதே. அதாவது வாலிக்கு உள்ள வரத்தை அவன் வேண்டும்பொழுது பயன்படுத்திக் கொள்ளலாம்; வேண்டாதபோது பயன்படுத்திக் கொள்ளாமலும் இருக்கலாம்.

இது ஒரு பொது நியதியின் பகுதியே ஆகும். யாராவது ஒருவனுக்கு ஒரு சலுகையோ, உதவியோ வாக்களிக்கப்பட்டிருக்குமானால், தேவை இருக்கும்பொழுது அதனைப் பெற்றுக் கொள்வதற்கு அவனுக்கு உரிமை இருப்பது போல, அவன் விரும்பாத கட்டத்தில் அதனைப் பெற்றுக் கொள்ளாமல் இருப்பதற்கும் உரிமை உண்டு.

குறிப்பாக வாலியினுடைய வரத்தில் இது வெகுவாகப் பொருந்தும். வாலியோ இயற்கையிலேயே மாபெரும் வீரன். 'வரம்பில் ஆற்றலான்' என்று அநுமன் அவனைக் குறிப்பிடுவான்.

அமிழ்து பெறல் நசையினராய் தேவரும், அசுரரும் பாற்கடல் கடைய முற்பட்டு, முயற்சியில் தளர, அவர்கள் அனைவரையும் அப்புறம் செலவிட்டு, தான் ஒருவனாகவே கடல் கடைந்து அமிழ்து எடுத்து அவர்க்கு அளித்தவன்.

விண் நீங்கிய, பிற நான்கு பூதங்களின் வலி அனைத்தும் தொக்கு உரு எடுத்தாலன்ன திறலன். பெரும் புறக்கடலுக்கும் அப்பாலதாய சக்கரவாளக் கிரியினின்றும் கிஷ்கிந்தை மலைக்குத் தாவும் மலைவில் ஆற்றலன், என்று பலபடியாக அவன் வன்மையை அநுமன் புகழ்வான்,

இவ்வாறு வாலி பெற்ற திறல், வரபலத்தால் சேர்ந்தது அன்று. வரத்திற்கும் அப்பாற்பட்ட இயற்கை வன்மை.

இது அன்றியும் இராமன் அம்பு அவன் மார்பில் பாய்த பொழுது, அவனுக்கு முதலில் தோன்றுவது என்ன என்ருல், நம்முடைய மார்பினைத் துளைக்கக் கூடிய சக்தி வாய்ந்த அம்பு ஒன்றைப் பிரயோகிக்கும் வீரன் யாராவது இருக்கக் கூடுமா என்பதுதான். தேவர், முனிவர், முத்தேவர் ஆகிய எவராலும் தன்னுடைய மார்பைத் துளைக்கும்படி அம்பு எய்ய முடியாது எனவே எண்ணு கிருன். இவ்வெண்ணங்கள் அனைத்தும் வாலியின் வரத்தினுடைய அடிப்படையில் தோன்றியவை அல்ல.

எனவே வாலியினுடைய இயற்கைப் பலமே, மிகப் பெரியது. அத்தகைய ஒருவன் தன்னை எதிர்த்து வருபவர்களிடத்தில், தன் இயற்கைப் பலத்தைக் காட்டு வதில் பெருமிதப்படுவானே அன்றி வர பலத்தினுல் தன் எதிரியை வெல்வதில் அவன் பெருமையோ, புகழோ அடைய மாட்டான்.

வாலியோ ஆற்றல் மிக்கவன் என்பதோடன்றி அவனைப்பற்றி அநுமன் கூறியவற்றிலிருந்து, அவன் கௌரவம் மிக்கவன் என்பதும் தெரிகிறது. அத்தகையவன் தன் எதிரிகளைத் தன் இயற்கைபலத்தைக் கொண்டே வெல்ல !முற்படுவான்; விரும்புவான்.

இயற்கைப் பலத்தில் தன்னைவிட மிக்கவன் எவனேனும் வந்து, அவனுல் தன் உயிருக்கே அபாயம் ஏற்படும் என்ற நிலையில்தான், வரபலத்தை இறுதி ஆயுதமாகப் பயன்படுத்திக் கொள்ள விழைவான்.

துந்துபி, மாயாவி முதலியவர்களை எல்லாம் தன் சுய பலத்தினுல் வென்ருனே அன்றி, வரபலத்தினுல் வெல்ல

வில்லை. வரபலத்தை அவன் பயன்படுத்தி இருப்பானே யாஞல், துந்துபியோடு அவ்வளவு நேரமும், மாயாவி யோடு இருபத்தெட்டு மாதங்களும் போரிட்டிருக்க வேண்டியதே இல்லை.

சுக்கிரீவனேடு செய்த போர்களும் அத்தகையவே. எடுத்த எடுப்பிலேயே தன் வரபலத்தை வாலி உபயோகித் திருப்பானேயாஞல், சுக்கிரீவஞல் ஒரு கணம்கூட நின்று வாலியோடு போர் செய்திருக்க முடியாது.

காப்பியக் கதைப் போக்கின்படி, அவ்விருவர்களுக்கும் இடையில் மும்மரமான போர் கொஞ்ச நேரம் நடந்தது என்றுதான் கூறப்படுகிறது. அதுவே சுக்கிரீவன்பால் வாலி தன்னுடைய வரபலத்தை உபயோகிக்கவில்லை என்பதற்குச் சான்று ஆகும்.

இராமன் விஷயமோ வேறு. தாரை, போருக்குப் புறப்பட்ட வாலியைத் தடுத்த போது இராமன் சுக்கிரீ வனுக்கு உதவியாக வந்திருக்கிருன் என, தான் கேட்டதை அவனிடம் கூறுகிருள். அப்பொழுது இராமனுடைய வீரத்தைப்பற்றி வாலி,

'நின்ற பேர் உலகு எலாம் நெருக்கி நேரினும்,
வென்றி வெஞ்சிலை அலால், பிறிது வேண்டுமோ?
(கம்பன், 3968)

என்று கூறுகிருன்.

எனவே இராமனுடைய வீரத்தைப்பற்றி வாலி நன்கு அறிந்திருக்கிருன். தானும் சுக்கிரீவனும் போர் செய்து கொண்டிருக்கும் பொழுது இராமன் குறுக்கிடமாட்டான் என்ற நம்பிக்கை வாலிக்கு இருந்தபோதிலும், இராமன் வீரத்துக்கு முன்ஞல், தன்பலம் நில்லாது என்பதனை அவன் உணர்ந்திருந்தான் என்பதனை இப்பாடலே காட்டும்.

ஆக இராமன் வாலியை எதிர்த்து நேர்க்கு நேர் போரிட வரின், தன் சுய பலத்தினுல் இராமனை வெல்ல முடியாமல்போக, வாலி தன் வரபலத்தைப் பயன் படுத்தியே ஆக வேண்டும்.

'பேதையர் எதிர்குவர்' என்று தொடங்கும் பாடலில் உள்ள கருத்து, இராமனைப் பற்றி தாரை வாலிக்குச் சொல் வதற்குமுன் வாலியால் கூறப்பெற்றது. எனினும் இராமனைப்பற்றி தாரை கூறிய பின்னரும் 'உடன் வந்தாரையும் கருத்து அழித்து. எய்துவென்; கலங்கல்' என்றே சொல்கிருன்.

இந்தக் கூற்று, இராமன் தன்னை எதிர்த்து வந்தாலும் அவனையும் வெல்லத் தனக்கு வரபலம் இருக்கிறது என்ற வாலியின் தன்னம்பிக்கை எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டு பிறந்தது ஆகும்.

இனி இராமன் நிலைக்கு வருவோம்.

வாலியை நிச்சயமாக இராமனுல் கொல்லமுடியும் என்று நம்பியவர்கள் இருவர். ஒருவன் அநுமன், மற்றவன் சுக்கிரீவன். இருவரும் இராமனைப் பரம் பொருள் என்று உணர்ந்து கொண்டவர்கள்.

சுக்கிரீவனுக்கு இவ்வுணர்வு இருந்தபோதிலும், வாலி யினுடைய ஆற்றலை நேரிடையாக உணர்ந்து அநுபவித்த தவன். ஆகையால் அவனுடைய பயம் அவனை விட்டு இன்னும் போகாமல் இருந்தது. வாலியை இராமனுல் கொல்ல முடியுமா? என்ற எண்ணம் அவன் மனத்தின் ஒரு மூலையில் இருக்கவே செய்கிறது.

ஆனுல் ஏழு மராமரங்களையும் இராமன் ஒரே அம்பினுல் தொளைத்த பிறகு, சுக்கிரீவனுக்கு இருந்த அச் சிறு ஐயமும் தீர்ந்துவிட்டது.

இங்கு பார்க்க வேண்டிய முக்கியமான செய்தி ஒன்று இருக்கிறது. வாலிக்கு இவ்வாறுன வரம் இருக்கிறது என்பதனை அறிந்தவர்கள் அநுமனும், சுக்கிரிவனுமே.

அநுமனே அதனை வெளிப்படையாகச் சொன்னுலும் சுக்கிரீவனுக்கும் அது தெரிந்ததே. வாலியினுடைய இயற்கைபலம் எவ்வளவு குறைந்ததாக இருந்தாலும், இராமனுடைய பலம் எவ்வளவு மிகுதியானதாக இருந் தாலும், இவ்வரம் செயல்படும் ஆயின், இராமன் பலத்தில் பாதி வாலிக்குப்போக, அது வாலியின் இயற்கைப் பலத் தோடு சேர்ந்து, இராமனுடைய பலத்தைவிட அதிகமாக, இராமன் தோற்றே போவான். அப்படி இருந்தும் ஏன் அநுமன், சுக்கிரீவன் இருவரும் வாலியை இராமனுல் கொல்ல முடியும் என்று நம்பினுர்கள்?

இராம, இலக்குவரைச் சந்தித்துவிட்டு அவர்களைப் பற்றிச் சுக்கிரீவனிடம் அநுமன் சொல்லப்போகிருன். அப்படிச் சொல்லும் பொழுது,

......... விரை செய் தார்
வாலி என்ற அளவு இலா வலியினுன் உயிர் தெறக்
காலன் வந்தனன்; இடர்க்கடல் கடந்தனம்'
(கம்பன், 3787)

என்று சொல்கிருன்.

மேலும் பல கூறி,

'தந்திருந்தனர் அருள்; தகை நெடும் பகைஞன் ஆம்
இந்திரன் சிறுவனுக்கு இறுதி, இன்று இசைதரும்;
(கம்பன், 3800)

என்றும் சொல்கிருன்.

வாலியின் வரபலத்தைத் தெரிந்தவன் அநுமன்.

"இல்லாத உலகத்து எங்கும், இங்கு இவன் இசைகள் கூறக்
கல்லாத கலேயும், வே க் கடலுமே" .....

(கம்பன், 3768)

என்னத் தக்கசிறப்பினன் சொல்வலான் ஆய அவன், இவ்வாறுகூறுவானேயானுல் எந்த அடிப்படையில் அவன் கூறியிருக்க முடியும்? அதற்கான ஒரே அடிப்படை இராமன் பரம்பொருள்; அவனே வாலியினுடைய வரம் கட்டுப்படுத்தாது, என்பதுதான். அப்படி இல்லாவிட்டால் வாலியின் வரபலத்தைச் சொல்லிய அநுமனே அதனேயே காரணமாகக் காட்டி, 'நீ மறைந்து நின்று வாலிமேல் அம்பு எய்யவேண்டும்' என்று சொல்லி இருப்பான்.

அதுபோலவே இராமன் சினந்து வாலியைக் கொல்வதாகச் சூளுரைத்ததும் சுக்கிரீவன்,

'எழுந்து, பேர் உவகைக் கடல் பெருந்திரை இரைப்ப,
அழுந்து துன்பினுக்கு அக்கரை கண்டனன் அனேயான்,
'விழுந்ததே இனி வாலி தன் வலி' என......

(கம்பன், 3856)

மகிழ்கிருன்.

இங்கும் வாலியின் வரத்தைத் தெரிந்திருந்தும், 'வாலி தன் வலி வீழ்ந்தது' என்று சுக்கிரீவன் சொல்கிருன்.

அவனுடைய சந்தேகம் மராமரங்களே ஒரே அம்பினுல் இராமன் தொளேத்ததனுல் நீங்குகிறது. அப்பொழுது,

'வையம் நீ! வானும் நீ! மற்றும் நீ! மலரின் மேல்
ஐயன் நீ! ஆழிமேல் ஆழி வாழ் கையன் நீ!
செய்ய தீ அனேய அத்தேவும் நீ! நாயினேன்,
உய்ய வந்து உதவினுய், உலகம் முந்து உதவினுய்!'

(கம்பன், 3883)

'என் எனக்கு அரியது,எப்பொருளும் எற்கு எளிது அலால்?
உன்னை இத்தலை விடுத்து உதவினர், விதியினர்;
அன்னை ஒப்புடைய உன் அடியருக்கு அடியென் யான்;
மன்னவர்க்கு அரச!' என்று...

(கம்பன், 3884)

வசை இலான் வாழ்த்துகிறான்.

கேட்ட வானர வீரர் கிளர்ந்து,

ஆடினார்; பாடினார்; அங்கும் இங்கும் களித்து
ஓடினார்; உவகை இன் நறவை உண்டு உணர்கிலார்; —
'நேடினும் வாலி காலனை 'என, நெடிது நாள்
வாடினார் தோள் எலாம்...

(கம்பன், 3885)

வளரப் பெறுகின்றனர்.

இங்கேயும் வாலியின் வரத்தைக் காரணம் காட்டி, அவன்மீது இராமன் ஒளிந்து நின்று அம்பு எய்ய வேண்டும் என்று சுக்கிரீவன் சொல்லவில்லை.

அப்படிச் சொல்லாமைக்கும் அவன் பரம்பொருள், வாலியின் வரம் அவனைக் கட்டுப்படுத்தாது என்பதே காரணம்.

இனி இராமனுடைய நிலை எப்படி என்பதைப் பார்க்கலாம்.

இராமன், திருமாலின் அவதாரம்; இராவண வதத்திற்காகவே பிறந்தவன். ஆனால் காப்பியம் முழுமையிலும் அவன் மனிதனாகவே செயல்படுகிறான். எனினும், எந்தக்கணத்திலும் தான் யார் என்பதையும், எதற்காக அவதரித்தோம் என்பதையும், அவன் மறந்திருக்க முடியாது.

திரு. முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்கள், "இராமனுக்குத்தான் தெய்வம் என்பது தெரியாது. இராவண யுத்தம் முடிந்த பின்னர், தேவர்கள் பிரமன் வாயிலாக இராமனுக்கு அவன் தெய்வம் என்பதை உணர்த்துகின்றனர். இதனைக் கம்பன் யுத்தகாண்டத்தில் தெளிவாகக் கூறுகிறான். எனவே இராவண யுத்தம் முடியும்வரை இராமன் தன்னை மானுடனாகவே கருதிக் கொண்டிருக்கிறான் என்பது புலனாகும். அவனைப் பார்க்கின்ற மற்றவர் அவனைத் தெய்வம் என்று உணர்கின்றனர். ஆனால் இராமனே தன்னைத் தெய்வம் என்று உணராமல் இருக்கிறான். ஆகவே அவன் வாலிக்கு வீடு பேறு அளிக்க எண்ணுகிறான் என்பது பொருத்தமாகாது. வாலிக்குத் தண்டனை அளிப்பது அவனுக்குப் பெரும்பதம் பயக்கும் என்ற அளவில்தான் இராமன் கருதுகின்றான். வாலி தன் பக்குவத்தால் இராமனைத் தெய்வமாகக் காண்கிறான்."* என்பார்.

புலவர் அவர்கள் கூற்றை முழுமையாக ஏற்பதற்கில்லை.

இராமன் தன்னைத் தெய்வம் என்று சொல்லிக் கொள்ளவில்லை; தெய்வம் ஆக நடந்துகொள்ளவில்லை; தான் மனிதனாகவே நடந்துகொண்டான்; என்று சொல்வது வேறு; தெய்வம் என்பதை உணரவே இல்லை என்று சொல்வது வேறு.

ஒரு நாடகத்தில் நடிப்பவன், தான் ஏற்றுக்கொண்டிருக்கும் பாத்திரமாகவே முழுமையாகத் தன்னை மாற்றிக் கொண்டபோதிலும், உள் மனத்தில் தான் யார் என்பது அவனை விட்டு விலகிப்போவதில்லை. அவன் ஆயிரக்கணக்கான நாடகங்களில் நடிக்கலாம். அதுபோல

---

* அதே நூல் ப. 91, 92.

ஆயிரக்கணக்கான பாத்திரங்களில் பங்கு கொண்டிருக்க லாம். எனினும் அவன் பிறப்பிலும், இயற்கையிலும் தான் யார் என்பதை உள் மனத்தினின்றும் சற்றும் நீக்கிவிடுவதில்லை.

அதுபோலவே, இங்கும் இராவண வதத்திற்காகத் திருமால் இராமனாக அவதாரம் எடுத்திருந்தபோதிலும், அதற்கு ஏற்ப மனிதனாகவே நடந்து கொண்டபோதிலும், மனிதனாகச் செயற்பட்டபோதிலும், தன்னுடைய பூர்வ இயல்பை (தானான தன்மை) மறத்தல் இயலாது. அப்படி மறத்தல் அவதார நோக்கத்தையே மறக்கச் செய்யும்.

எனவே, சுக்கிரீவனுக்குத் தான் கொடுத்த வாக்குப் படியும், வாலி இராமனால் கொல்லப்பட வேண்டியவன் என்பதற்கு முன்னர்க் காட்டிய காரணங்களுக்காகவும், வாலி இராமனால் கொல்லப்பட வேண்டியவன்தான்.

எனினும் ஒரு கேள்வி எஞ்சி நிற்கிறது. அதுதான் வாலியின் முன் நின்று இராமன் எதிர்த்தால் அந்த வரம் என்ன ஆகும் என்ற கேள்வி. இராமன் வாலியின் எதிரில், அவனைக் கொல்வதற்காகப் போய் நிற்பானே யானால் நிச்சயமாக வாலியின் வரபலம் இராமனைக் கட்டுப் படுத்தாது. இராமன் மனித உருவில் வாலி முன் நின்றாலும் உண்மையில் அவன் பரம்பொருளே; திருமாலே.

அத்தகையவனிடத்து,வாலி பெற்றிருந்த தெய்வவரம் செயற்பட முடியாது. இராமன் தன்னைத் தெய்வம் என்று சொல்லாவிட்டாலும், நடந்துகொள்ளாவிட்டாலும், அவனைத்தெய்வம் என்றே பிறர் அனைவரும் உணர்ந்து இருந்தார்கள் என்பது காப்பியம் முழுமையிலும் எடுத்துக் காட்டப் பெறுகிறது.

கம்பன் காப்பியத்திலிருந்தே, இதனை உணர்த்தும் சில இடங்களை நாம் எடுத்துக்காட்டாகக் காட்டலாம்.

சடாயு முன்னிலையில், துணையின்றித் தனியாய் இருந்த சீதையை, இராவணன் தூக்கிச் செல்கிறான். அப்போது தேவரோ, வேறு எவருமோ அவளைக் காப்பாற்ற முன்வாராமையை, பின்னர் அறிந்த இராமன் சீற்றம் கொண்டு நிற்கிறான். அதன் விளைவைக் கம்பன் இரு பாடல்களில் கூறுவான்.

கூறின மாற்றம் சென்று செவித்தலம் குறுகா முன்னம்,
ஊறின உதிரம், செங்கண்; உயிர்த்தன, உயிர்ப்புச் செந்தீ;
ஏறின புருவம் மேல் மேல்; இரிந்தன சுடர்கள் எங்கும்;
கீறினது அண்ட கோளம்; கிழிந்தன கிரிகள் எல்லாம்.
(கம்பன், 3516)

மண்ணகம் திரிய, நின்ற மால் வரை திரிய, மற்றைக்
கண் அகன் புனலும் காலும் கதிரொடும் திரிய, காவல்
விண்ணகம் திரிய, மேலை விரிஞ்சனும் திரிய, 'வீரன்,
எண் அரும் பொருள்கள் எல்லாம்' என்பது தெரிந்தது அன்றே?
(கம்பன், 3517)

என்பனவே அவை.

யுத்த காண்டத்தில் நிகும்பலையாகப் படலத்தில் இலக்குவனுக்கும், இந்திரஜித்துக்கும் நடந்த போரில் இலக்குவன்மீது இந்திரஜித்து பிரம்மாத்திரத்தைவிட, அது கண்டு இலக்குவன் 'நன்று ஆகுக உலகுக்கு!' 'பின்றாதவன் உயிர்மேல் செலவு ஒழிக', 'ஒன்றாக இம் முதலோன் படைதனை மாய்க்க" என்று உரைத்தவனாய் அவனும் அப்படை துரந்தான். இலக்குவன் விடுத்த பிரம்மாத்திரம், உலகு ஏழையும் தீய்க்க, விசும்பு எங்கணும் ஆகி, அரு மா கனல் என நின்றது. (9070)

இதற்குப் பிறகு, இந்திரஜித்து மாயோன் படையை இலக்குவன் மீது விடுகிறுன். அப்படி விடும் பொழுது 'நீ இது தடுத்தாய் எனின் நினக்கு எதிர் நிற்பர் ஆர்? ஆனுல் நீ இது செய்கலாய். போய் விசும்பு அடைவாய். ஏனெனில் அம்பு இது பிழையாது', எனப்புகன்று உலகு யாவையும் தடுமாறிட அம்பு துரக்கிறுன். (9078)

கண்ட வானவர், கலக்கம் எய்தினர்; உச்சிக் கூப்பிய கையர் ஆயினர். அங்கு இருந்த பிறர் யாவரும் அவ்வாறே சிரத்து ஏந்திய கரத்தராய் நின்றனர்.

ஆனுல், இலக்குவன் படை தொடாஞய், 'நேமித் தனி அரிதானே' என நினைத்தவஞய் இவ்வுலகு ஏழையும் தீய்க்க வரும் படைமுன்னர் எதிர் நடக்கிறுன். கனல் கான்று எதிர் வரும் அப்படை முன் 'நீக்கும் தரம் அல்லா முழு முதலோன் தானே', என நினைத்தான்.

வந்த படை மீச்சென்றிலது; அயல் சென்று, அது விலங்கா,வலம் கொடு மேல் போய்த்து; கனல் மாண்டது. புகை வீய்ந்தது.

இது இலக்குவனைப் பற்றியதாயினும், இலக்குவன் இராமனுடைய (திருமால்) பாயலான ஆதிசேஷன் அம்சம் என்பதனை நினைவில் கொண்டால், இலக்குவன் நிலையில் இராமன் நின்றிருந்தால் என்ன ஆகி இருக்கும் என்பதனைச் சொல்லத் தேவைஇல்லை.

உண்மையில் இந்த நிகழ்ச்சிதான் இந்திரஜித்தைப் பெரிதும் பாதிக்கிறது.

நிகும்பலை யாகம் நிறைவேருமை அறிந்த இராவணன் 'உற்றது பகர்தி' என ஒரு தனி மகனைக் கேட்கிறுன்.

அப்பொழுது இந்திரஜித்து, சூழ்வினை மாயம் எல்லாம் வீடணன் துடைத்ததையும், யார்க்கும் தாழ்விலாப்படைகள் (அயன், அரி, அரன் படைகள்) மூன்றும் தான் தொடுத்ததையும், அவன் தடுத்ததையும் கூறி,

நிலம் செய்து, விசும்பும் செய்து, நெடியமால் படை, நின்றுனை
வலம் செய்து போயிற்று என்றால், மற்று இனி வலியது உண்டோ?
குலம் செய்த பாவத்தாலே கொடும் பகை தேடிக் கொண்டாய்;
சலம் செயின், உலகம் மூன்றும், இலக்குவன் முடிப்பன், தானே.
(கம்பன், 9119)

என்கிறான்.

(சலம் செயின் என்றமையால் அவன் சலம் செய்யான் என்பது பெறப்பட்டது. நன்று ஆகுக உலகுக்கு என்று நவின்றவன் அல்லனோ, இலக்குவன்?)

அடுத்து,

இராம இராவணர் யுத்தத்தில், இராவணன் தன் சங்கை ஊதுகிறான். அப்பொழுது, கண்ட சங்கரன், நான்முகன் கைத்தலம் விண்டு அசங்குகின்றன. தொல் அண்டம் வெடிக்கிறது. அமரர் தம் ஆர்ப்பு எலாம் அடங்குகின்றன (9731) சங்கோசை யாரையும் துளக்குற; அமரர், 'எவர் சங்கு ஓசை இது?' என்று ஏங்குகின்றனர். அவ்வேளை, அவர் தம் ஐயப்பாட்டைப் பொறுமையினால் திருமாலின் பாஞ்சசன்னியம் என்னும் சங்கம் தானே முழங்குகின்றது.

இதனைக்கம்பன்,

சொன்ன சங்கினது ஓசை துளக்குற
'என்ன, சங்கு?' என்று இமையவர் ஏங்குற,
அன்ன சங்கைப் பொருமையினுல், அரி-
தன்ன வெண் சங்கு தானும் முழங்கிற்ருல்.

(கம்பன், 9732)

என்பான்.

அது போன்றே, இராவணன் உடன் போரிட இராமன் களம் நண்ணியதும், அவனுடைய (திருமால்) ஐம்படைகளும் அவனுக்கு உதவுதற் பொருட்டு வந்து அயல் நிற்கின்றன. இராமன் அவற்றைக்கண்டும் காணுதவன்போல் நிற்கிருன்.

"ஐயன் ஐம்படை தாமும் அடித்தொழில்
செய்ய வந்து அயல் நின்றன: தேவரில்
மெய்யன் அன்னவை கண்டிலன், வேதங்கள்
பொய்இல் தன்னைப் புலன் தெரியாமை போல்.

(கம்பன், 9733)

என்று இதனை அற்புதமாகக் கம்பன் பாடுகிருன்.

இவ்விரண்டு நிகழ்ச்சிகளிலிருந்தும், நாம் காண்பது என்னவென்ருல், இராமன் திருமாலாகத் தன்னை எண்ணி, தன்னுடைய சங்கை ஒலித்தல் செய்யாமை மட்டும் அன்றி, தன் (திருமால்) ஐம்படைகளான சுதர் சனம் என்னும் சக்கரம், பாஞ்சசன்னியம் என்னும் சங்கு, கௌமேதகி என்னும் கதை, நாந்தகம் என்னும் வாள், சார்ங்கம் என்னும் வில், ஆகிய அனைத்தும் தாமே வந்து தன் அருகில் நின்ற போதிலும் அவற்றைக்கண்டு கொள்ளவே இல்லை. இவ்விடத்துக் கம்பன் ஆண்டிருக்கும், 'கண்டிலன்' என்ற சொல் அற்புதமாகப் பொருந்துவதையும் பார்க்கிருேம்.

இன்னொன்றையும் பார்க்கலாம். இமையவர் வேண்ட இந்திரன் ஏவ, மாதலி கொணர்ந்த பொலந்தேரின் மிசைப் புனிதன் இனிது ஏறி போர்க்களம் புகுகிறான்.

எரியும் சிந்தையன் ஆய இராவணன், சந்திரன் அனையதோர் வன் சரத்தினை, இராமன் ஏறிப் பொலிந்த, ஏந்து எழில் தேரிற் பொருந்திய, உருமின் ஏற்றுக் கொடியினை அறுத்தெறிய ஏவுகிறான் (9777). கொடியும் தரைத்தலத்திடை வீழ்கிறது.

அவ்வேளை கொடிஞ்சி நெடுந்தேர் கொடியின்மை கண்ட கருடன். பண்ணவன் உயர் கொடி என இராமன் தேர் மிசை நண்ணுகிறான்.* இதனைக் கம்பன்,

'இறைவன் அடையுறு கொடி மிசை அணுகினன்'

(கம்பன்,9790)

என்பான்.

இறுதியாக ஒன்றைக் காண்பது பொருத்தம் உடையதாகும். பற்பல படைகளையும் அஸ்திரங்களையும், இராமன் மேல் இராவணன் ஏவிட, அவை செயலிழந்தமை கண்டு, இராவணன் இறுதியாக, 'உனக்கு இறுதி ஆகுக' என்றவனாய் சூலம் ஒன்று கைக்கொள்கிறான்.

---

* திருமாலின் ஊர்தி, கொடி உவணச் சேவல் என்பர்.
''பாம்பு படப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப்
புள் அணி நீள்கொடிச்செல்வன்'' (திருமுருகு 150. 151)
கருடத்வஜா—(வேங்கடேச சுப்ரபாதம்)

கொடியின் மேல் உறை வீணையும், கொற்றமா
இடியின் ஏறும், முறையின் இடித்தன (9737)
வீணைக்கொடி—இராவணற்குரியது—3482, 9789,
இடிஏற்றுக் கொடி—இந்திரற்குரியது—9777

'வல்வாய்ச் சூலம் இதனைத் தீர்த்தற்கு வல்லையாயின் வல் விரைந்து கா' என்றவனாய் எறிகின்றான். அச்சூலம் நோக்கி சுடரோன் விடுத்த சுடுசரம் அனைத்தும் நினையாதார் வினையம் போல் செயல் அற்றன. தேவர்களோ 'ஐய இது தீர்த்தற்கு ஒல்வாய் நீயே! ஒருவ! வெல்வாய்' என்கின்றனர். (9831)

ஐயனோ, செய்வகை ஒன்றும் அறிகிலான் போல் நிற்கிறான் (மக்கள் வடிவம் எடுத்தற்கேற்பத் தெரியாதவன் போன்று நடிக்கிறான்).

இதனைக் கம்பன் அற்புதமாகப் பாடுவான்:

'மறந்தான் செய்கை; மற்று எதிர் செய்யும் வகை எல்லாம்
துறந்தான், என்னா, உம்பர் துணுக்கம் தொடர்வுற்றார்;
அறம் தான், அஞ்சிக் கால் குலையா, தான் அறியாதே,
பிறந்தான் நின்றான்; வந்தது சூலம், பிறர் அஞ்ச.
(கம்பன். 9833)

சங்காரத்தான் கண்டை ஒலிப்ப, தழல் சிந்த,
பொங்கு ஆரத்தான் மார்பு எதிர் ஓடிப் புகலோடும்,
வெங்காரத்தான் முற்றும் முனிந்தான்; வெகுளிப்பேர்
உங்காரத்தால் உக்கது, பல்நூறு உதிர் ஆகி.
(கம்பன், 9834)

இவை அனைத்தினின்றும் நாம் அறிவது என்ன என்றால், இராமன் முழுக்க முழுக்க மனிதனாகவே பேசினாலும், செயல்பட்டாலும் உண்மையில் தான் யார் என்ற உள்ளுணர்வு அவனிடம் இருக்கவே செய்தது. அந்த உள்ளுணர்வுக்கு ஏற்பவே, இயற்கையும், பிறவும் அவனிடம் செயற்பட்டன.

அவன் அளவிலோ என்றால் 'தான் மனிதன்' என்ற நிலையில் இருந்து சற்றேனும் மாறவில்லை,

இந்தப் பின்னணியில் தான் வாலியினுடைய வரம் இராமனைக்கட்டுப்படுத்தாது, என்ற உண்மையையும் நாம் உணர்ந்துகொள்ள முயலவேண்டும்.

ஆகையால், இராமனே வாலி முன், எதிர் நின்றுனே ஆனுல் வாலியினுடைய வரம் இராமனைக் கட்டுப் படுத்தாமற் போக, இராமனுக்கு உள்ள, வாலியினுலேயே ஒப்புக் கொள்ளப்பட்ட, பெரு வீரத்தினுல், வாலி கொல்லப் படுவான்.

வாலிமீது இராமன் அம்புதான் எய்கிறுன். வில்லை வளைத்து நாண் ஏற்றி அம்பு எய்வதற்கும் வில்லாளிக்குப் பலம் வேண்டும். வாலி வரத்தின்படி இராமனுடைய பலத்தில் பாதி வாலிக்குச்சென்றுவிடுமானுல், இயற்கையிலேயே பலவானுன வாலியின் மார்பைத் தொளைக்கக் கூடிய வகையில் இராமனுல் அம்பு எய்ய முடியாது. இந்த நிலைக்கு இங்கு அவசியம் இல்லாமல் போய் விடுகிறது. ஏனெனில், வாலி பெற்றுள்ள வரம் இராமனைக் கட்டுப் படுத்தாது.

அப்படியானுல், ஏன் இராமன் ஒளிந்து நின்று வாலி மீது அம்பு எய்ய வேண்டும்? நேரிடையாக நின்று அவன் மீது அம்பு எய்திருக்கலாமே? வாலியின் வரம் தான் இராமனைக் கட்டுப்படுத்தாதே? என்றெல்லாம் கேட்கத் தோன்றும்.

இங்கேதான் வாலி வதையின் மர்மமே அமைந்திருக் கிறது. வாலிக்கு வரம் கொடுத்தவன் சிவபெருமான். இது இராவணன் கூற்றிலிருந்து நாம் கொண்டது.

"அரங்கில் ஆடுவார்க்கு அன்பு பூண்டுடை வரம்
அறியேன்
(கம்பன், 6177)

என்பான் இராவணன்.

இராமன் திருமாலின் அவதாரம். மனித உருவில் அவன் இருந்த போதிலும், அவன் திருமாலின் அவதார மாக இருப்பதால்,வாலிக்கு இன்னொரு தெய்வம் கொடுத்த வரத்தை அவன் மதித்தே ஆக வேண்டும் இல்லாவிட்டால் தெய்வ வரம் என்பதற்கே பொருள் இல்லாமல் போய் விடும்.

உண்மையில் பார்க்கப் போனுல் இராவணனுக்கு பிரம்மா அளித்த வரத்தை* மதித்து திருமால் அந்த வரத்திற்கு ஏற்பச் செயல்படவே இராமன் என்னும் மானுடனுக அவதரித்திருக்கிருன்.

இராவணனுக்குப் பிரமன் கொடுத்த வரத்தை மதித்தே அவதரித்த திருமால், அம்மனித்தப் பிறவியில் இன்னொரு தெய்வம் வாலிக்குக் கொடுத்த வரத்தை மதிக்காமல் பயனற்றதாக ஆக்கி விடக் கூடாது என, என்று புகழ்க்கோசலை தன் மணி வயிறு வாய்த்துப் பிறந் தானே அவ்வாய்மையாளன், அன்றிலிருந்து இராவண வதம் முடியும் வரை மனிதன் ஆகவே செயல்பட வேண்டும்.

இவ்விடை நிகழும் வாலி வதத்தில் மனிதனுகச் செயல் படாமல் இருப்பான் ஆயின், அது, அவன் ஒரே பிறவியில் இரட்டை வேடம் கொண்டவன் ஆகி, வரத்தின் பெருமையையும் அவதாரத்தின் புனிதத்தையும் கெடுத்து விடும்.

ஆகையால் வாலியின்மீது இராமன் மறைந்து நின்று அம்பு எய்தது, வாலிபெற்றுள்ள வரத்தின் காரணமாகத் தான்.

---

* "ஏறிய நெடுந்தவம் இழைத்த எல்லைநாள்
ஆறிய பெருங்குணத்து அறிவன் ஆணையால்
கூறிய மனிதர்பால் கொற்றம் கொள்ளலை" (6148)

'ஈங்கு மானுடப் பசுக்களுக்கு, இலை வரம்' (6172)

ஆனால் அந்த வரத்திற்குப் பயந்து அன்று, அந்த வரத்தை மதிப்பதற்காக.

இப்படி வரத்தை மதிக்கும் பொழுது, மனிதன் என்ற நிலையிலே தனக்கு அவப்பெயர் ஏற்பட்டாலும் அதனைப் பொருட்படுத்தாமல், தெய்வ வரத்தினுடைய உண்மையையும், பலத்தையும் நிலைப்படுத்துவதற்காகவே இராமன் அப்படிச் செய்கிறான்.

இந்தக் கூற்றுக்குக் கம்பன் காப்பியத்திலேயே ஒரு தடயம் இருக்கிறது.

அநுமன், சுக்கிரீவன் ஆகிய இருவரும் இராமன் பரம்பொருள் என்று அறிந்து கொண்டதன் காரணம் ஆக, அவனை வாலியின் வரம் கட்டுப் படுத்தாது என்ற எண்ணத்தில், வாலியைக் கொல்ல முடியும் என்று நம்புகிறார்கள்.

இராமனும், வாலியை அன்றே வதைப்பதாகச் சூளுரைக்கிறான்.

ஆனால் அந்தக் கட்டத்தில் இராமன் இந்தச் செயலை எப்படி நிறைவேற்றப் போகிறான் என்பது பற்றி யாரும் சிந்திக்கவில்லை.

இராமன், இலக்குவன், சுக்கிரீவன், அநுமன், சுக்கிரீவன் அமைச்சர்கள் ஆகிய அனைவரும் வாலி இருக்குமிடம் சென்ற பிறகுதான் சுக்கிரீவனும், பிறரும் 'செய்வது என்னை?' என்று சிந்திக்கத் தொடங்குகிறார்கள். (3943)

அப்பொழுதுதான் இராமன் சுக்கிரீவனை விளித்து 'நீ சென்று வாலி ஆம் வெவ்விடத்தினொடு போர் விளை. அது போழ்து யான்வேறு நின்று அவன் உரம் உருவ, உருவ வாளி ஒன்று துரப்பன். என் கருத்து இது''* என்கிறான்.

---

* பாடலில் ஏவிட என்பது எவ்விட என்று குறுகுகிறது.

சுக்கிரீவனும், 'நன்றிது' என்று சிந்திக்கிருன். (3944)

இப்பாடலில் உள்ள, என் கருத்து இது' என்பதே நான் முன்னர்க் குறிப்பிட்ட தடயம் (Clue).

சாதாரணமாக 'கருத்து' என்ற சொல்லுக்குப் பல் வேறு பொருள்கள் உளவேனும், 'ஒரு குறிப்பிட்ட பிரச்சனேயைத் தீர்த்தற்பொருட்டு, செயல் மேவுங்கால், அச்செயலால் உண்டாகும் சாதக, பாதகங்களேச்(Pros and cons) சீர் தூக்கி, முழுமையாக ஆய்ந்து, ஒரு முடிவுக்கு வருவதுதான் கருத்து என்பது.''

கம்பனே, இப்பொருளில் 'கருத்து'* என்ற சொல்லே ஆண்டிருப்பதைக் காணலாம்.

கும்பகர்ணன் வதைப்படலத்தில் இராமனுடன் வந்து சேர்ந்து கொள்ளுமாறு போர்க்களத்தில் தன் அண்ணன் கும்பகர்ணனே வீடணன் வேண்டுகிருன். 'ஒல்லாது' எனக் கும்பகர்ணன் மறுத்து உரைக்கும் வகையில்,

'கருத்து இலா இறைவன் தீமை கருதிஞல், அதனேக் காத்துத்
திருத்தலாம் ஆகின் அன்ரே திருத்தலாம்? தீராது ஆயின்,
பொருத்துறு பொருள் உண்டாமோ? பொருதொழிற்கு உரியர் ஆகி,
ஒருத்தரின் முன்னம் சாதல், உண்டவர்க்கு உரியது அம்மா!'

(கம்பன், 7428)

என்று கூறுகிருன்.

இங்கே கருத்து என்பதற்கு இப்பொழுது நாம் காண்கிற பொருள்தான் பொருந்தும். இப் பாடலில்

* ஆலோசனேத் திறம்

கும்பகர்ணன் 'கருத்திலா இறைவன்' என்று குறிப்பது விளைவு ஓரா விறல் வேந்தன் இராவணனையே.

அடுத்து மூலபலவதைப்படலத்தில் இச்சொல் இப் பொருளில் பயின்று உள்ளமை காணலாம்.

மூலபலப் படையைக் கண்டு வானரப் பெருங் கடல் பயம் கொண்டு மறுகி குலைந்து இரிந்தது. கண்ட இராமன் அங்கதனை 'ஓட்டின் மேற்கொண்ட தானையைப் பயம் துடைத்து, மீட்டு வருக' என ஏவுகிறான்.

அங்கதன் அவ்வழி அடைந்து, அவற்றை நோக்கி வருமாறு அழைக்கிறான்.

'அநுமன் ஆற்றல், அரசன் ஆற்றல், இருவர் ஆற்றல் அவரவர் தம் உயிர் தாங்கவும் போதா. நாங்கள் வாரோம். மனிதர் ஆளின் என்? இராக்கதர் ஆளின் என் வையம்? காக்கக் கடவிய அரசிளங்குமர! சாமின், என்னவோ சார்ந் தனை'' என்றன.

சாம்பன் அக் குரக்குக் கூட்டத்திற்குக் கூறத் தொடங்குகிறான்.

எடுத்தலும், சாய்தல் தானும், எதிர்த்தலும் எதிர்ந்தோர் தம்மைப்
படுத்தலும், வீர வாழ்க்கை பற்றினர்க்கு உற்ற, மேல்நாள்,
அடுத்தே அஃது; நிற்க, அன்றியும் ஒன்று கூறக்,
கடுத்தது; கேட்டீர்[1] நீரும் கருத்துளீர்,[2] கருதி[3] நோக்கின்
(கம்பன், 9353)

இங்கும் 'கருத்துளீர்! கருதிநோக்கின், என்ற தொடர் அதே பொருளில் அமைந்திருப்பதைக் காணலாம்,

1. கேட்டீர்—கேட்பீராக (கால வழுவமைதி)
2. கருத்து—ஆய்ந்து பார்கும திறன்
3 கருதி—ஆய்ந்து பார்த்து.

எனவே இராமன் வாலி வதைப் படலத்தில் 'என் கருத்து இது' என்று சொல்லும் பொழுது ''வாலியின் எதிர் நின்று அம்பு எய்வதா? அப்படி எய்தால் வாலியின் வரம் வீணுகிப் போய் விடுமே; மறைந்து நின்று அம்பு எய்வதா? அப்படி எய்தால் மனித உருத்தாங்கிய என் புகழ்க்கு மாசு ஏற்படுமே'' என்றெல்லாம் நீடு நினைந்து, தன்னுடைய புகழ்க்கு மாசு சேரினும், யாதுநேரினும் சரி, தெய்வம் தந்த வரம் மாத்திரம் பயனற்றுப் போகக் கூடாது என்ற முடிவிற்கு வந்து, பின்னரே 'என் கருத்து இது' என்று கூறுகிருன்.

இந்த முடிவிற்கு இராமன் வந்துவிட்ட போதிலும் அவன் மனம் சலனமற்று இருந்தது என்று சொல்ல முடியாது. இம்மாதிரியான தர்ம சங்கடம் எந்த மனிதனுக்கு வந்தாலும், அவன் மனம் நிம்மதி இல்லாது இருக்கும். அதன் காரணம் ஆக, தான் செய்ய முடிவு செய்த காரியத்தைத் தவிர்க்க முடியுமா என்று பார்ப்பதற்காக, எவ்வளவு தூரம் தள்ளிப்போட முடியுமோ, அவ்வளவு தூரம் தள்ளிப்போடவே செய்வான். இதனைத்தான் இராமனும் செய்கிருன்.

சுக்கிரீவனுக்கும், வாலிக்கும் இடையே நடந்த முதற் போரில், வாலியின்மீது இராமன் அம்பு எய்யாமல் இருந்த தற்கு இந்த தயக்கமே காரணம் ஆகும்.

இருவர்க்கும் இடையே வேறுபாடு காணமுடியாமை தான் காரணம் எனக் கூறுவது, உண்மையான காரணம் என்று ஒப்பமுடியாது. ஏனெனில் சுக்கிரீவனேடு முன்னரே நெருங்கி இருந்து, அவனுடன் அமர்ந்து, உணவு உண்டு, மிக்க அருகில் பார்த்தவன்.

வாலி, சுக்கிரீவனுடைய போர்க்குரலைக் கேட்டு, அவனுடன் போர் செய்ய வரும்பொழுது, வாலியின்

தோற்றத்தைக் கண்டு வியந்தவன். அத்தகைய இராமனுல் இருவர்க்குமிடையே வேறுபாடு காண முடிய வில்லை என்பது ஒப்புக்கொள்ளத் தகுந்தது அன்று.

வால்மீகி இராமாயணம்பற்றி, மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் அவர்கள் கூறிய, இரண்டு காரணங்களும் கம்பனுடைய காப்பியத்திற்கும் பொருந்தும்.

முதலில் இருவர்க்குமிடையில் வேறுபாடு காண முடியாவிட்டால், அருகிலிருக்கும் அநுமனிடத்து அடை யாளம் காட்டுமாறு கேட்டிருக்கலாம். அதுவன்றியும் வாலியினுடைய அடியைத் தாங்கிக்கொள்ள முடியாமல் தன்பக்கம் வருபவன்தான் சுக்கிரீவன் என்பதை நிச்சயப் படுத்திக்கொண்டு, மற்றவன்மேல் அம்பு எய்திருக்க லாம். இராமன் அப்படிச் செய்யவில்லை.

வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் இடையே நடந்த இரண்டாம் போரிலும், சுக்கிரீவன் இராமன் சொன்னபடி கொடிப்பூ மிலைந்து சென்றபோதிலும், வாலியின்மீது உடனே அம்பு எய்யவில்லை. இப்பொழுதும் வாலி சுக்கிரீவனைப் பலமாக அடிக்கவே செய்கிறுன். அவற்றை எல்லாம் இராமன் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறுன். சுக்கிரீவனை அப்படியே தூக்கி, அவனைத் தரையில் ஓங்கி அறைந்து கொன்று விடவேண்டும் என்ற எண்ணத்தில் வாலி அவனைத் தோளுக்குமேல் உயரத் தூக்குகிறுன். அவன் பரந்த மார்பு வெளிப்படையாகத் தெரிகிறது. அதற்குமேலும் தயங்கினுல், சுக்கிரீவன் சுக்கு நூறுகச் சிதறி மாண்டுபோவான்; அவனுக்குத் தான் கொடுத்த அபயப் பிரதானம் வீண் ஆகிவிடும்; என்று தீராப்பொறி யாக இராமன் வாலியின் வயங்கு மார்பில் வடிக்கணை துரக்கிறுன். வாழைக்கனியில் வல் விரைந்து செருகிய ஊசிபோல், கணை கல்தட மார்பினைக்குயின்று செல்கிறது,

இவ்வாறு போரறம் தவறி வாலியின்மீது இராமன் அம்பு எய்துவது அவனுக்கே பெரும் வருத்தத்தைத் தந்தது என்பதை இன்னொரு நிகழ்ச்சியாலும் தெரிந்து கொள்ளலாம்.

சுக்கிரீவன் அறை கூவலைக் கேட்டு வாலி போர்க்கு வந்ததைக் கண்ட இராமன், இலக்குவனிடம் அதுபற்றி என்ன கூறினான் என்றும், இலக்குவன் அதற்கு என்ன விடையளித்தான் என்றும், இலக்குவனை மறுத்து இராமன் என்ன கூறினான் என்பனவற்றையும், முன்னரே கண்டோம்.

இந்நிகழ்ச்சியும், இராமனது மனவேதனையையே குறிக்கிறது.

போரறம் துறந்து, வாலியைக் கொல்ல வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாகிவிட்டோமே, என்று மனம் நொந்திருந்த இராமனுக்கு இலக்குவன் கூற்று வெந்த புண்ணில் வேல் நுழைத்தது போலாயிற்று. ஆகையால் தான் இலக்குவனிடத்து அவன் பேசுவது இராமன் வேறு எப்பொழுதுமே அவனுடன் பேசி வந்ததற்கு முற்றும் மாறாக அமைந்துவிட்டது,

[illegible]பரதன் பெயரைக் குறிப்பிட்டு, தன்னுடைய நொந்த மனத்தை மேலும் நோகச் செய்த இலக்குவனை மட்டம் தட்டுகிறான். அதுவன்றியும் நண்பராகப் பெற்றவரிடத்தில் நமக்குக் கிடைக்க வேண்டிய பயனை நாம் பெற்றுக்கொள்ள வேண்டுமே தவிர, அவர்களைப் பற்றிக் குறை கூறக்கூடாதென்ற, நம் போன்றவர்களுடைய சந்தர்ப்பவாதத்தையும் கையாளுகிறான்,

இவை அனைத்தும் ஒரு தவற்றைத்தான் இழைக்க வேண்டி வந்துவிட்டதே என்று, இராமன் மனம் நொந்து இருந்ததன் விளைவே ஆகும்.

வாலி இராமனோடு பேசும் பொழுது பன்முறை 'ஒளித்து நின்று அம்பு எய்தது ஏன்?' என்று கேட்டும், இராமன் குறிப்பாகவேனும் பதில் கூறிலன். இறுதியாக இதே கேள்வியை வாலி இராமனிடம் நேரிடையாகவே கேட்டு விடுகிறான்.

இதற்கு இராமன், தன்னுடைய கருத்தைக்கூறி இருப்பானேயானால், அவன் திருமாலின் அவதாரம் என்ற உண்மை அவன் வாயிலிருந்தே வரவேண்டி இருக்கும்.

அப்படிக்கூறுவது, இராவணனுக்கு, பிரமன் கொடுத் திருந்த வரத்திற்கு மாறாக, முத்தேவரில் ஒருவராகிய திருமால், அவனைக் கொல்ல வந்தான் என்ற உண்மை யைப் புலப்படுத்திவிடும்.

அதே சமயத்தில் இராமன் பொய்யுரைக்கவும் கூடாது.

எனவேதான் வாய்மூடி மௌனியாக நிற்கிறான். அந்த நிலை அவன் அவதாரப் பெருமைக்கு மாசு உண்டாக்குவதாகும் என்பதை உணர்ந்த இலக்குவன் இடைமறித்து (நாம் முன்னர்க் கண்ட) பதிலை வாலிக்குக் கூறுகிறான்.

அந்தப் பதிலும் முழுமையாக, இராமனை அபகீர்த்தி யினின்றும் காப்பாற்ற முடியாது. இலக்குவனுடைய பதில் உண்மையானதாக இருப்பது என்று ஒப்புக் கொண்டால்கூட, அதுவும் இராமனை இப்பழியினின்றும் காக்க முடியாது.

"கம்பராமாயணத்தில், வாலியை இராமன் மறைந் தெய்ததற்குக் கூறும் நியாயம், அவன் தம்பிக்கு

அளித்த, வாக்கை நிறைவேற்றுவதற்கு அவனே மறைந்து நின்று கொல்லுதல் இன்றியமையாததாய் இருந்தது என்பது. இந்த நியாயமும், வாக்குத்தத்த நிறைவேற்றம் ஆகிய ஒரு தருமத்துக்கு,எதிரியை மறைந்து கொல்லாமை ஆகிய வேறொரு தருமம் பலியிடப்பட்டதாம் எனக் குற்றம் கூறுதற்கு இடமாயிருத்தலால், ஒப்புக்கொள்ளத் தகாததாகவே தோன்றுகிறது.''

நாம் (முன்னரே கண்டபடி) வான்மீகியில் இந்த நிகழ்ச்சி இப்படி அமையவில்லை. வேறு காரணத்திற்காக இராமனுடைய செயல் மாசுண்டது என்றும், இங்கும் இலக்குவன் கூறும் நியாயத்தை வியாக்கியானமாகக் கோவிந்தராஜர் கூறுகிறார் என்பதையும் கண்டோம்.

இனி நாம் பார்க்க வேண்டியது ஒன்றே ஒன்று தான் இருக்கிறது. வான்மீகம் முதலிய முந்தைய நூல்களில் இல்லாத வாலியின் வரம் பற்றிக் கம்பன் கூறுவதற்கு ஆதாரமாக இருந்தது எது என்பதுதான் அது.

தமிழ் நாட்டில் மிகப் பழங்காலத்திலிருந்தே இராமாயணக் கதைப் பகுதிகள் மக்களிடையே பரவி இருந்தன: அவை சங்க இலக்கியங்களிலும் இடம் பெற்றிருந்தன என்று மர்ரே. S. இராஜம் அவர்கள் தாம் பதிப்பித்த கம்ப இராமாயணப் பதிப்புரையில் கூறுவது எடுத்துக் காட்டப் பெற்றது.

வான்மீகத்தில் இல்லாத சில செய்திகளை ஆழ்வார்களிடமிருந்தும் கம்பன் எடுத்துக் கொண்டான் என்பதும் எடுத்துக் காட்டப் பெற்றது.

---

* கம்பராமாயண சாரம்—கிட்கிந்தா காண்டம்—இராவ்சாகிப் வெ. ப. சுப்பிரமணிய முதலியார், ப. 78.

எனவே, இந்த வாலி வரத்தை எதிலிருந்து எடுத்துக் கொண்டான் என்பதைக் காண, அவனுக்கு முந்தைய சங்க இலக்கியங்களை ஆய்ந்து பார்ப்பதில் தவறில்லை.

சங்க நூலான திருமுருகாற்றுப் படையில்,

'அவுணர், நல்வலம் அடங்கக் கவிழிணர்,
மாமுதல் தடிந்த மறு இல் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேள் சேஎய்!

(59—61)

என்ற தொடர்கள் காணலாம்.

அவ்வடிகட்கு, உரையாசிரியர் நச்சினார்க்கினியர், '... என்றது அவுணர் எல்லாரும் தம்முடனே எதிர்ந்தார் வலியிலே பாதி தங்கள் வலியிலே கூடும்படி மந்திரம் கொண்டிருந்து சாதித்ததொரு மாவை வெட்டினான் என்றவாறு என்று குறிப்பார்.[1]

அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பான கம்ப இராமாயணம்—கிஷ்கிந்தா கண்டம்—முதற்பகுதியில் நட்புக்கோள் படலத்தில் 'கிட்டுவார் பொரக் கிடைக்கின் என்ற பாடல் விளக்கத்தில், திரு. க. வெள்ளைவாரணர் அவர்கள், திருமுருகாற்றுப்படை அடிகளை எடுத்து மேற்கோளாகக் காட்டி, நச்சினார்க்கினியர் உரைப்பகுதி யையும் காட்டுகிறார்.

புலவர் மணி திரு. முரு. பழ. இரத்தினம் செட்டியார் அவர்களும், தம்முடைய நூலில் இத்திருமுருகாற்றுப் படை அடிகளையும் உரைப்பகுதியையும் வேறொரு காரணத்திற்காக எடுத்துக் காட்டுகிறார்.[2]

---

1. பத்துப் பாட்டு மூலமும் உரையும்
டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் பதிப்பு.

2, வாலிவதம் சரியா?—பக்கம் 42

எனினும் கம்பன் திருமுருகாற்றுப்படையில் (கருத்து அடிப்படை) இருந்துதான், இந்த வாலியின் வரம் பற்றிய கருத்தை (நல்வலம் பாகம்) எடுத்து ஆண்டிருக்கிருன் என்று அறுதியிட்டே கூறலாம்.

கம்பன் காப்பியத்தில் இந்த வரத்தைப் பற்றி முதன் முதலில் பேசுபவன் அநுமன்.

அவன் குறிப்பிடுவது, "கிட்டுவார் பொரக்கிடைக் கின் அன்னவர் பட்ட நல்வலம் பாகம் எய்துவான்" என்பது.

திருமுருகாற்றுப்படை குறிப்பது 'அவுணர் நல்வலம் அடங்க' என்பது.

முன்ஞேர் மொழி பொருளே அன்றி, அவர் மொழி யும் பொன்னேபோல் கொள்பவன் அன்றே கம்பன்? எனவே, கம்பன் திருமுருகாற்றுப் படையிலிருந்தே வாலிவரம் பற்றிய கருத்தைக் கொண்டான் என்னும் முடிவைத் தவிர வேறு எம்முடிவிற்கும் வருவதற்கு வழியில்லே.

"நச்சினர்க்கினியர் கி.பி. 14ஆம் நூற்ருண்டுக்கு முற்பட்டவர் அல்லர் என்று பிரம்ம ஸ்ரீ குப்புசாமி சாஸ்திரிகள் எழுதியிருக்கிருர்கள்"*

நச்சினர்க்கினியர், காலத்தால் கம்பனுக்குப் பிற்பட்டவரே எனினும், அவர் திருமுருகாற்றுப்படை நூலுக்கு உரையாசிரியரே அன்றி, நூலாசியர் அல்லர்.

---

* சீவக சிந்தாமணி மூலமும் நச்சினர்க்கினியர் உரையும், டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் பதிப்பு-பக்கம் ௩௩

திருமுருகாற்றுப்படை சங்கத் தொகை நூல்களுள் ஒன்று. பக்தர்களால் பெரிதும் பாராட்டப் பெற்று, பாராயணமும் செய்யப் பெறுவது.

'நல்வலம்' என்ற தொடர் நூலில் அமைந்துள்ளது. மக்களிடையே வழங்கி வந்த 'நல்வலம்' பற்றிய (வரம்) கருத்தையே உரையாசிரியர் மேற்கோள் காட்டியிருக்கிருர் (படைத்து மொழி கிளவி அன்று). எனவே, கம்பன் திருமுருகாற்றுப்படை நூலிலிருந்தே, அதனை ஆதாரமாகக் கொண்டே, வாலி வரம் பற்றிய தன் கருத்தை வெளியிட்டுள்ளான் என்று கொள்வதில் தவறில்லை.



## 10. வாலியைக் கொல்ல இராமன் கையாண்ட முறையினுல் இராமனது பெயரும் புகழும் பங்கப் பட்டனவா? (மூன்ரும் வினு)

வாலிமீது இராமன் மறைந்து நின்று அம்பு எய்தது வான்மீகத்திற்கும், கம்பன் படைப்பிற்கும் பொதுவானது. இப்படி, தான் செய்ததற்கு என்ன காரணம் என இராமன் கூறுகிருன் என்று வான்மீகர் எடுத்துக் காட்டியதையும், அதுபற்றிய பலர் கருத்துகளையும் நாம் முன்னரே பார்த்தோம்,

பாத்ம புராணம், பாகவத புராணம், பவபூதியின் உத்தர ராம சரிதம் தொடங்கி, இன்றைய அறிஞர்கள், வரையில், இராமனுடைய செயல், இதில் மாசு பட்டது என்றே கூறுவதும் கண்டோம்.

எனினும், இராமன் திருமாலின் அவதாரம் என்ற எண்ணத்தை ஒதுக்கி வைத்துவிட்டு, காப்பியம் முழுமையிலும் இராமன் மனிதனுகவே செயல்படுகிருன் என்பதைக் கருத்தில் நிலையாக இருத்திக் கொள்ளாததன் காரணமாக. இந்த முடிவிற்கு வர பலர் மறுக்கிருர்கள். அப்படி எவரேனும் இராமன் பேருக்கு இது மாசு இழைத்து விட்டது என்று கூறுவார்களேயானுல் அதனை மறுக்கவும் செய்கிருர்கள். அப்படி மறுப்பதற்கு உரிய ஒரே ஆதாரம் இராமன் தெய்வம்; ஆகையால் தெய்வத்தின் செயலில் குறை காண்பதற்கு நமக்கு அதிகாரமோ, தகுதியோ இல்லை என்பதுதான்.

காப்பியத்தில் இராமன் மனிதனுகவே காட்டப் பெறுகிருன் என்பதைச் சற்றும் மறுக்காமல், உள்ளத்தில் நிலைநிறுத்திக் கொள்வோமேயானுல் இராமனுடைய இச் செயல், அவனுடைய பெயருக்கும் புக்ழ்க்கும் மாசு உண்டாக்கிவிட்டது, என்ற முடிவுக்கு வருவதைத் தவிர வேறு வழியில்லை.

இவ்வாறு முடிவுக்கு வருவதிலும், நாம் எந்தப்பெருந் தவறும் செய்து விடுவதில்லை. காரணம் என்னவென்ருல் மனிதன் என ஒருவன் இப் பூவுலகில் தோன்றிவிடுவானே யானுல் அவனுக்கு ஏதேனும் ஒரு குறை இருந்துதான் ஆக வேண்டும். அப்படி இருக்கும் குறைதான் அவன் மனிதன் என்பதனை உறுதிப்படுத்துகிறது. குறையே இல்லாமை, முழு நிறைவு உடைமை, பரிபூரணனுடைய தனிப்பண்பு. அந்தப் பண்பில் எவர்க்கும் பங்கு இல்லை. எனவே இராவண வதைக்கு என திருமால், இராமன் என்ற மனிதன் ஆக அவதரித்த போது, இராவணனுக்குப் பிரமன் கொடுத்த வரத்திற்கு ஏற்பத் தானும் மற்றவர்களைப் போலக் குறையுள்ளவன் போன்றே நடந்து கொள்ள வேண்டும்.

இந்த உண்மையை உணர்ந்து கொள்வதற்கு நாம் வெகுதூரம் செல்ல வேண்டியது இல்லை.

வான்மீகத்தின்படி இராவணவதத்திற்குப் பிறகு சீதை யிடம் சென்ற அநுமான், அவளைத் துன்புறுத்திய அரக்கியர் அனைவரையும் அழித்துவிடத் தனக்கு அனுமதி வேண்டும் என்று கேட்கிருன். அதற்குப் பதிலாக சீதை அநுமா னுடைய இந்த யோசனை சிலாக்கியமானதன்று என்று கூறி, அவனுக்கு அறிவுரை புகல்கிருள். "இவ்வுலகில்

சிறிதேனும் தவறு செய்யாதவர் யாரும் இலர்'' என்கிருள்.*

கம்பனுடைய காப்பியத்திற்கு வரும் பொழுதும் வாலி வதைப்படலத்தில் நாம் முன் கண்டதைப் போல இராமன், இலக்குவனிடத்து,

அற்ருர் நவை என்றலுக்கு ஆகுநர், ஆர்கோல்?.
(கம்பன், 3978)

என்கிருன்.

எனவே, உலகில் குறையே இல்லாத மனிதன் யாரும் இல்லே', என்று பார்க்கும்பொழுது, திருமாலே இராமன் உருவில் மனிதஞகப் பிறந்திருக்கும்பொழுது, அவனிடமும் ஒரு குறை இருந்தது என்பதனே ஒப்புக் கொள்வதற்கு யாரும் அஞ்சவோ, தயங்கவோ வேண்டிய தில்லே.

இந்த இடத்தில் மகா பாரதத்தில் இடம் பெற்றிருக் கும் ஒன்றை நாம் காணவேண்டும். அதுதான் துரோண பர்வம் 196, 197 ஆவது சர்க்கங்களில் காணப்பெறுவது. துரோணர் வஞ்சனேயால் கொல்லப்பட்டதை அறிந்த அசுவத்தாமர் எல்லேயில்லாத துக்கமும், சினமும் கொண்டு பாண்டவர் சேனேயை ஒழித்து விட முனேந்து அறை கூவுகிருர்.

தன்னுடைய சூளுரைக்கு ஏற்ப மந்திரம் செபித்து திவ்வியமான நாராயண அஸ்திரத்தைப்பிரயோகிக்கிருர். முன்னர் தோற்ருேடிய கௌரவர்கள் பெருங் கூச்சலோடு திரும்பி வருவதைக்கண்டு யுதிஷ்டிரர் அர்ச்சுனனேப் பார்த்து இந்த திருப்பத்தை எடுத்துக் காட்டி "அடிக்கடி சப்தங்கள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன; நம்மைச்

* வால்மீகி இராமாயணம்—யுத்தகாண்டம் 116ஆம் சர்க்கம், ஸ்ரீ ஸ்ரீநிவாசய்யங்கார்; கிருஷ்ணசாமி ஐயர்.

சேர்ந்தவர்களை நடுங்கும்படிச்செய்கின்றன. மயிர்க்கூச்சல் உண்டு பண்ணுகிறதும், நெருங்கினதாகக்கேட்கப்படுகிறது மானஇந்த சப்தமானதுஇந்திரனோடு கூடின மூவுலகங்களை யும் விழுங்கிவிடும் என்பது என் எண்ணம்; துரோணர் கொல்லப்பட்டவுடன் இந்திரனே கௌரவர்களுக்கு உதவி செய்யும் பொருட்டு வெளிப்படையாக வருகிறான்" என்று, தான் எண்ணுவதாகவும் கூறுகிறார்.

அதைக் கேட்ட அர்ச்சுனன் யுதிஷ்டிரரைப் பார்த்து "பாண்டவரே! அப்படிப்பட்ட சூரர் இப்பொழுது கர்ஜிக் கிறார். எவர் அனுதன் போல் பார்ஷதனால் ஆக்ரமிக் கப்பட்டு, அவ்வாறு கொல்லப்பட்டாரோ அவருக்கு அப்படிப்பட்ட கொடிய செய்கையினாலேயே (பழிக்குப் பழி வாங்க) நாதன் ஏற்பட்டு விட்டான். யுத்தகளத்தில், என் ஆரிசாயரை பாஞ்சால ராஜகுமாரன் தலை மயிரில் கை போட்டதாகிய அப்படிப்பட்ட கெட்ட செய்கையைத் தமது பௌருஷத்தை அறிந்தவரான துரோண புத்திரர் ஒருக்காலும் பொறுக்கமாட்டார். அந்த அசுவத்தாமா அந்த அக்கிரமமான செய்கையினால் நம் அனைவரை யும் நாசம் செய்வார் என்பதே என்னுடைய எண்ணம். தர்மங்களை அறிந்தவரும், சாது என்று பிரசித்தி பெற்ற வரும் ஆன உம்மால் ராஜ்ய நிமித்தமாக ஆசார்யர் வீணாக வஞ்சிக்கப்பட்டார். உம்மால் செய்யப்பட்ட அந்தக் காரியம் மிகப் பெரிய அதர்மமாகும். வாலியைக் கொன்றதால் எவ்வாறு அபகீர்த்தி இராமனிடத்தில் நிலை பெற்றிருக்கிறதோ அவ்வாறே துரோணருடைய வதத்தினால் நேர்ந்திருக்கிற இந்த அபகீர்த்தியானது சராசரங்களுடன் கூடின மூவுலகங்களிலும் ஸ்திரமாக இருக்கப்போகிறது"* என்கிறான்.

---

*மகாபாரதம்—துரோண பர்வம் 197 ஆம்சர்க்கம்
உ.வே. T.V ஸ்ரீநிவாஸாச்சார்யார் மொழிபெயர்ப்பு

வியாசரே அர்ச்சுனன் வாயிலாக, இராமன் வாலியைக் கொன்ற முறைபற்றி இவ்வாறு கூறிவிட்ட பிறகு அக் கூற்றை யாரால்தான், எப்படி மறுக்க முடியும் என்பது தெரியவில்லை.

எனவே, வான்மீகி ஆயினும், கம்பன் ஆயினும் அவர்கள் தரும் கதைப் போக்கின் அடிப்படையில் திருமால், இராமன் என்கிற மனிதனாக அவதரித்ததற்கு ஏற்ப, வாலியைக் கொன்ற முறையில் போரறம் பிறழ்ந்து தன் பெயர்க்கும், புகழ்க்கும் மாசு தேடிக்கொண்டு விட்டான்.

ஆனால், கம்பன் மாத்திரம் இந்த நிலைக்குப் பரிகாரம் கண்டு ஒரு சாதாரண மனிதனைப்போல் தவறு செய்த இராமனை மனித இனத்தில் ஓர் உத்தமன் ஆகவே ஆக்கிவிடுகிறான்.

இங்கே கம்பன் செய்திருக்கும் இரு மாற்றங்களைக் காணலாம்.

வாலியை இராமன் மறைந்து நின்று கொன்றதற்காக அவன் கூறும் காரணம் யாருக்கும் மன அமைதி கொடுத்ததாகத் தெரியவில்லை. வான்மீகி இங்கு காட்டும் காரணமோ முன்னுக்குப்பின் முரணான காரணமாகவும் இருக்கிறது. இந்த நிலையில் வான்மீகக் கதை நிகழ்ச்சியை, அதாவது வாலியை இராமன் மறைந்து நின்று கொன்றதை விட்டு விடாத கம்பன், அதற்கான காரணங்களைச் சற்று உயர்ந்ததாகக் காட்ட முனைகிறான். போரறம் துறந்ததோ மறுக்க முடியாதது. ஆனால் எந்த நிலையில் இராமன் அப்படிச் செய்ய நேர்ந்தது என்பதைக் கண்டால் அப்படிப் போரறம் துறந்தது மாபெரும் குற்றமா? அல்லது தர்மசங்கடத்தினால் தவிர்க்க முடியாமல் நேர்ந்ததா? என்பதை ஆய்ந்து பார்க்குங்கால்

அந்தத் தவறு தர்ம சங்கடத்தினுல் தவிர்க்க முடியாத தாக ஆகிவிட்டது என்ற முடிவுக்கு வருவோமேயானுல், இராமன் செய்த தவற்றின் கொடூரம் சற்று குறைந்து போகும். நாம் முன்னர்க் கண்டபடி இங்கு இராமன் மறைந்து நின்று வாலிமேல் அம்பு எய்தது வாலிக்கு, சிவ பெருமான் கொடுத்த வரத்தை மதிப்பதற்காகவே, என்பதை மனத்திற் கொண்டால் இராமன் போரறம் துறந்தாலும், அதன் நோக்கம் உயர்ந்த நோக்கமாக ஆவதன் காரணம் ஆக, அந்தத் தவற்றின் கொடூரம் சற்று குறைந்து காண்கிறது. இதற்காகவே, வேண்டும் என்றே, தனக்கு முன்னிருந்த இராமகாதைகளில் இல்லாத இந்த வரத்தை (நல்வலம்—பாகம்) கம்பன் தன் காப்பியத்தில் புகுத்துகிருன்.

அப்படி அவன் புகுத்தத் துணை நின்றது திருமுரு காற்றுப்படைத் தொடரே என்பதும் கண்டோம்.

எந்த மனிதனுமே தவறு செய்யாமல் இருக்க மாட்டான் என்ற முடிவுக்கு வந்தால் அப்படித் தவறு செய்யும் மனிதர்களில் உயர்ந்தவன், தாழ்ந்தவன், உத்தமன், அதமன் என்று எப்படிப் பாகுபடுத்துவது? என்ற கேள்வி எழவே செய்யும். ஒருவன் வேண்டும் என்றே, தான் செய்வது தவறு என்று தெரிந்திருந்தும், தன்னலத்துக்காக ஒரு தவறு செய்வானேயானுல், தவறு செய்வது மனிதஇயற்கை என்று கூறி அவன் செய்த தவறு குற்றமே ஆயின், அதற்குரிய தண்டனேயிருந்து அவன் தப்பித்துக் கொள்ள முடியாது. ஒருகால், தான் செய்த தவற்றை உணர்ந்து, இனி அவ்வாறு தவறு செய்யக்கூடாது என்ற உறுதியான முடிவுக்கு வந்து, தான் செய்த தவற்றிற்குப் பரிகாரம் தேடுவானேயானுல், அவன் குற்றம் மன்னிக்கப்படலாம், அல்லது அவன் தண்டனை குறைக்கப்

படலாம். அதற்கு மாருக, தவறு செய்யவேண்டும் என்ற எண்ணம் சிறிதும் இல்லாமல், சந்தர்ப்ப சூழ்நிலேகள் காரணமாக அவன் தவறு செய்யும் கட்டாயத்திற்கு உட்படுவானேயானுல், அப்படித் தவறு செய்ததன் நோக்கம் தூய்மையானதாக இருந்து.அவன் தன் தவற்றுக்காக வருந்தி, தன் தவற்றினுல் பாதிக்கப்பட்டவருக்கு பரிகாரம் செய்வானே ஆனுல், அவன் தவறு செய்த மனிதனே ஆயினும் மனிதருள் உயர்ந்தவன் ஆகிவிடுகிருன்.

புலவர் மணி திரு. முரு. பழ இரத்தினம் செட்டியார் அவர்கள் தமது 'வாலி வதை சரியா?' என்ற நூலில் பிறன்மனே விழைந்தானுக்கு உய்வில்லே என்ற பேரறத்தை நிலேநாட்டுவதற்காக, அதனேடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது சிறியதாகத் தோன்றும் போரறத்தில் இராமன் தவறினுன் என்று கூறி அதற்கு நம் அன்ருட வாழ்க்கையில் நடக்கும் சில நிகழ்ச்சிகளே மேற்கோள்களாகக் காட்டி இருக்கிருர்கள். ஆனுல் அதற்குமேல் அவர் சென்றிலர்.

இங்கும் நாம் முன்னர்க் காட்டியது போல இராமனுக்குத் தர்ம சங்கடம் உண்டாகிறது. கொல்லப்படவேண்டிய வாலியை, எதிர் நின்று அவன் மேல் அம்பு எய்து, தான் திருமால் என்பதன் காரணம் ஆக அவன் (வாலி) பெற்ற வரத்தைப் பயனற்றுப் போகச் செய்வதா? அல்லது, மறைந்து நின்று அவன்மேல் அம்பு எய்து போரறம் தவிர்வதா என்ற தர்ம சங்கடமான நிலேயில் தெய்வ வரத்தை மதித்தே ஆக வேண்டும் என்ற உயர் நோக்கத்திற்காக,போரறம் தவிர்வதால் தன் பெயர்க்கும் புகழ்க்கும் மாசு உண்டான போதிலும், அதனேத் தாங்கிக் கொள்ளலாம் என்ற முடிவில் இராமன் செயல்படுகிருன்.

இந்தச் சூழ் நிலேயில் தவறு இழைத்து விட்ட போதிலும், தான் மனிதன் என்ற முறையிலும் உயர்ந்தவன்

என்று நிரூபிப்பதை இராமனுடைய செயலிலிருந்தும் சொற்களிலிருந்தும் காணலாம்.

இராமன் அம்பினுல் அடிபட்ட வாலி, அங்கதனை வரவழைத்து, அவன் துயர் அகற்றி, அவன் இராமனுடைய கையடை ஆகும் என்று கூறினுன் என்பதையும், அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட இராமன் என்ன செய்தான் என்பதையும் முன்னரே கண்டோம்.

இராமன் செயலைக் கூறும்,

தன் அடி தாழ்தலோடும், தாமரைத் தடங்கணுனும்,
பொன் உடைவாளை நீட்டி, 'நீ இது பொறுத்தி'
என்ருன்;
என்னலும், உலகம் ஏழும் ஏத்தின இறந்து, வாலி,
அந்நிலை துறந்து, வானுக்கு அப்புறத்து உலகன் ஆனுன்.
(கம்பன், 4093)

என்ற பாடலைச் சற்று கூர்ந்து நோக்க வேண்டிய கட்டம் இப்பொழுது வந்திருக்கிறது. இராமனுடைய கையடையாக ஒப்புவிக்கப்பட்ட அங்கதன் இராமன் அடிகளில் வீழ்ந்து வணங்குகிருன். வணங்கியானை நோக்கி இராமனும்,

பொன் உடை வாளைநீட்டி, 'நீ இது பொறுத்தி'
என்கிருன்.

என்னலும் உலகம் ஏழும் ஏத்தின.

இந்த இரண்டு அடிகளிலும் பொதிந்து கிடக்கும் நுட்பத்தையும், பெருமையையும் ஆய்ந்து காண்பது நம் கடமை ஆகும்.

இராமன் தன்னுடைய உடைவாளை நீட்டி 'நீ இது பொறுத்தி' என்று அங்கதனிடம் சொல்கிருன். 'நீ இது

பொறுத்தி' என்ற தொடர்க்கு 'நீ இதனை கையிற் கொள்வாயாக' என்று பொருள் கொண்டாலும், இராமன் செயல் மகத்தான செயலே ஆகும். தன்னால் அம்பு எய்யப்பட்ட வாலி கீழே கிடக்கிறான்; அவன் தன் ஒரே மகனை இராமனிடத்தில் அடைக்கலப் படுத்துகிறான்; அந்த அடைக்கலத்தை ஏற்றுக் கொண்டமைக்கு அறிகுறியாக இராமன் தன் உடைவாளை நீட்டி 'நீ இது பொறுத்தி' என்கிறான்.

அதாவது இராமன் அம்பினால் வாலி அடிபட்டு இறக்கப்போவதன் காரணமாக, அவனுடைய ஒரே மகனாகிய, அங்கதனுக்கு—அதுவும் மிகமிகச் செல்லமாக எத்தகைய துன்பமும் அறியாதவனாக வளர்க்கப்பட்டவனுக்கு—வரம்பில் ஆற்றலன் ஆகிய தன் தந்தையைக் கொன்ற இராமனிடத்து இயற்கையாக வன்மம் (கறுவு கொள் நெஞ்சம்) தான் இருக்கும். வாலியின் எந்த அறிவுரையும், அங்கதனிடத்து இயற்கையாக இருக்கக்கூடிய இந்த வெறுப்பையும், வன்மத்தையும் மாற்றிவிட முடியாது. இதனை இராமன் உணராமல் இரான். அத்தகையவனிடத்து தன்னுடைய உடைவாளை இராமன் நீட்டுவானே ஆனால், அவன் ஒரு மாபெரும் செயலைச் செய்பவன் ஆவான். ஒருவன் தன் உடைவாளைப் பிறிது ஒருவனிடம் கொடுத்தல் என்பது, தன்னுடைய உயிரையே, பாதுகாப்பையே, அவனிடம் ஒப்படைப்பதாகும். தன்னால் கொல்லப்பட்ட வாலியினுடைய மகனாகிய அங்கதனிடத்து இப்படித் தன் உடைவாளை இராமன் கொடுப்பது என்பது அங்கதனைத் தன்னுடைய அடைக்கலமாக ஏற்றுக் கொண்டான் என்பதற்கு அடையாளம் ஆகும் என்று கூறுவது இராமனுக்குப் பெரிய பெருமையைச் சேர்த்து விடாது.

காப்பியம் முழுமையிலும் அபயம் தேடியவர்க்கு அவன் அடைக்கலம் கொடுத்து வந்திருக்கிறுன். அங்கதனிடம் உடைவாளைக் கொடுத்தது, அடைக்கலம் கொடுத்ததற்கும் மேம்பட்டதொரு செயல் என்று கொள்ளும்பொழுது தான், அச்செயலின் மகத்துவம் தெளிவு படும். இத்தகைய மகத்தான காரியத்தைச் செய்ததற்காகத்தான் உலகம் ஏழும் அவனை ஏத்துகின்றன.

அடைக்கலம் அளிப்பதற்கு அடையாளமாக ஒருவன் தன் உடைவாளை அடைக்கலம் புகுந்தவனிடத்து அளிப்பது வழக்கம் என்ற குறிப்பு நேரிடையாக வேறு எந்த இலக்கியத்திலும் இருப்பதாகத் தெரியவில்லை.

அண்ணமலைப் பல்கலைக்கழகம் பதிப்பித்த கம்ப ராமாயணத் தொகுதிகளுள், கிஷ்கிந்தா கண்டம் முதற் பாகத்தில் இப்பாடலுக்கு அடியில், கீழ்க்கண்டவாறு கொடுக்கப் பெற்றுள்ளது:

"அடைந்தாரைப் புரக்கும் ஆற்றல் மிக்க பெரு வீரர்கள் தம்மைப் பணிந்து வந்தாரை அடைக்கலமாக ஏற்றுக் கொண்டமைக்கு அறிகுறியாகத் தற்காப்புக்கு உரியதாகத் தம்பால் உள்ள உடைவாளை அவரது கையில் கொடுத்தல் பண்டை நாளில் நிலவிய மரபென்பது, இராமன் வாலியின் வேண்டுகோள்படி அவன் மகன் அங்கதனை அடைக்கலமாக ஏற்றுக்கொள்ளும்பொழுது தன்பால் உள்ள உடைவாளை அங்கதன் கையிற் கொடுத்த இச் செயலால் உய்த்து உணரப்படும்" (பக்கம் 444).

இது அன்றியும் 'நீ இது பொறுத்தி' என்ற தொடர்க்கு வேறு விதமாகப் பொருள் காண்போமேயாஞல் இராமனுடைய பெருமை இன்னமும் உயரும்.

'கம்பன் கண்ட இராமன்' என்ற நூலில்,

'''நீ இது பொறுத்தி'' என்ற வாக்கியத்தில் அமைந்திருக்கும் 'இது' என்ற சொல், இராமன் நீட்டிய உடைவாளைச் சுட்டுவதாகக் கொண்டு 'நீ, இந்த உடைவாளைத் தாங்கிக் கொண்டிரு' என்று இராமன் அங்கதனிடம் கூறியதாகப் பெரும்பாலோர் இவ்வாக்கியத்திற்குப் பொருள் கூறுகிறார்கள்.

முக்கியமாக இரண்டு காரணங்களுக்காக அந்தப் பொருள் பொருந்தாது என்று கொள்ளலாம். 'இது' என்ற சொல் எதைக் குறிக்கிறது என்பதை உணர்வதற்கு அவ்விடத்துக் காட்சியை மனக்கண்ணால்தான் காண வேண்டும். இராமனுடைய அம்பால் அடிபட்டு வாலி தரையில் வீழ்ந்து கிடக்கிறான்; அவனுடைய கேள்விக்குப் பதில் சொல்லிக் கொண்டு அவன் எதிரே இராமன் நிற்கிறான். வாலி தன் நிலைகண்டு வருந்திப் புலம்பிய அங்கதனைத்தழுவித் தேறுதல் கூறி, இராமனிடம் ஒப்படைக்கிறான். தந்தையை விட்டுப்பிரிந்து தனயன், இராமனிடம் வந்து, அவன் அடிகளை வணங்குகிறான். அப்போதுதான் இராமன் தன் உடைவாளை அங்கதனிடம் கொடுத்து மேற்கண்டவாறு சொல்கிறான். இந்தக் காட்சியை மனக் கண்ணில் வைத்துக் கொண்டால் இராமனுடைய வாக்கியத்திலுள்ள 'இது' என்ற சொல் தன்னுடைய அம்பினால் மார்பில் அடிக்கப்பட்டு உயிர் போகும் தறுவாயில் கிடக்கும், வாலியைச் சுட்டுவதாகவே அமையும்.

பொறுத்தி என்ற சொல்லின் பொருள்

மேலும், 'பொறுத்தி' என்ற சொல் 'தாங்கிக்கொள்,' என்ற பொருளில் அமைந்திருப்பதாகச் சொல்வது பொருத்தமாகாது. 'பொறுத்தி' என்ற சொல்லுக்கு 'பொறுத்துக் கொள்' அல்லது 'மன்னித்துக் கொள்' என்ற பொருளே, பொருத்த முடையதாகும். கம்பன் தன்

னுடைய காப்பியம் முழுவதிலும் 'பொறுத்தி' என்ற சொல்லை இந்தப் பொருளிலேயே ஆண்டிருக்கிறன். அத்தகைய சில ஆட்சியை இங்கே காண்பது பொருத்தமே யாகும்''. *

இப்படிக் கூறிவிட்டு 'பொறுத்தி' என்ற சொல் கம்பனுடைய காப்பியத்தில் 'மன்னித்துக் கொள்' என்ற பொருளில் ஆளப்பெற்றிருப்பதற்கான மேற்கோள்களைக் காட்டியுள்ளேன்.

கறுத்த மா முனி கருத்தை உன்னி, 'நீ
பொறுத்தி,' என்று அவன் புகன்று......
(பாலகாண்டம், கையடைப்படலம் 15)

'திறத்தின் வந்த தீது எலாம்
அறுத்த உன்னை ஆதனேன்,
ஒறுத்த தன்மை, ஊழியாய்!
பொறுத்தி,' என்று போயினன்.
(ஆரண்ய காண்டம், விராதன் வதைப்படலம் 68)

'தீயன பொறுத்தி'
(கிஷ்கிந்தா காண்டம், வாலி வதைப்படலம் 127)

அன்னது கண்டு, அவன் தம்பியானவன்
பொன் அடி வணங்கி, 'நீ பொறுத்தியால்' என,
(யுத்த காண்டம், கும்பகருணன் வதைப்படலம் 94)

'இற்றை நாள் வரை, முதல், யான் முன்செய்தன
குற்றமும் உள எனில் பொறுத்தி, கொற்றவ!'
(யுத்தகாண்டம், கும்பகருணன் வதைப்படலம் 98)

என்பன அவை.

---

* கம்பன் கண்ட இராமன்-மு.மு. இஸ்மாயீல்
வானதி பதிப்பக வெளியீடு (1982) ப 127, 128

பொறுத்தி - முன்னிலை ஒருமை வினைமுற்று. (எதிர்காலம்)
பொறு - பகுதி; த் - சந்தி; த் - எழுத்துப்பேறு.
இ - முன்னிலை ஒருமை வினைமுற்று விகுதி (காலம் காட்டியது.)

இவ்வாறு இராமன், வாலியினுடைய மரணத்தினால் பெரிதும் பாதிக்கப்பட்டவனாகிய அங்கதனிடத்து—தன் செயலை 'மன்னித்துக்கொள்' என்று கேட்டதன் காரண மாகத்தான் உலகம் ஏழும் ஏத்தின என்றும் எடுத்துக் காட்டி இருக்கிறேன்.[1]

குமுதம் வார ஏட்டில், "மு. மு. இஸ்மாயீல் எழுதிய 'கம்பன் கண்டன் இராமன்' என்ற புத்தகத்திலிருந்து சில பக்கங்கள்"[2] என்ற தலைப்பில் 'இராமனே வெட்கப் பட்டான் — வாலியைக் கொன்றதற்காக' என்று குறிப் பிட்டு நான்கு பக்கங்கள் வெளிவந்துள்ளன.

இதனை மறுத்து 'திரு ஸுதர்சனர் எஸ். கிருஷ்ண ஸ்வாமி அய்யங்கார்' அவர்கள் எழுதியுள்ளார்கள்.[3]

'பொறுத்தி' என்ற சொல்லுக்கு நான் கொடுத்த பொருளை (மன்னித்துக்கொள் என்பதனை), மறுத்து கம்பனது யுத்த காண்டத்திலிருந்து மட்டும் சில இடங் களைக் காட்டுவார்.

அவர் கூறுவன காண்போம்.

"கம்பன் தன் காப்பியம் முழுவதிலும் 'பொறுத்தல் என்னும் சொல்லை, 'தாங்கிக்கொள்ளல்' என்னும் பொருளிலும் பற்பல இடங்களில் வழங்கி இருக்கிறான். யுத்த காண்டத்தில் மட்டும் சில இடங்களைக் காட்டு வோம்.

*1.* இரணியன் வதைப்படலத்தில் முதற்பாடலில் "இரணியன் பஞ்ச பூதங்களிலுமுள்ள வலிமைகளை யெல்லாம் தான் ஒருவனே தாங்கி நின்றான்" என்று கூறும்போது,—'பூதம் கண்ணிய வலியெல்லாம் ஒரு

---

1. அதே நூல் பக்கம் 131
2. குமுதம் வார இதழ் 30-8-84
3. ,, ,, 4-10-84

தனி பொறுத்தான்' என்னும் பகுதியில் 'பொறுத்கான்' என்னும் சொல்லே, 'தாங்கினுன்' என்னும் பொருளி லேயே வழங்கியிருக்கிருன் கம்பன்.

2. நாகபாசப்படலத்தில் 146ம் பாடலில், "பொகட உற்ற பொறுத்தன", என்னும் இடத்தில் 'பொறுத்தன' என்ற சொல்லே, 'தாங்கின' என்னும் பொருளிலேயே வழங்கியிருக்கிருன் கம்பன்.

3. நிகும்பலேயாகப் படலத்திலும் இந்திரசித்துக்கும் இலக்குவனுக்கும் போரைக் கூறும்போது, "புனலின் படை தொடுத்தான், அவனதுவே கொடு பொறுத்தான்' (இந்திரசித்து வாருணஸ்திரத்தைத் தொடுத்தான். இலக்குவனும் அதனேயே தொடுத்துத் தாங்கினுன்.) என்னுமிடத்திலும் 'பொறுத்தான்' என்னும் சொல்லே, 'தாங்கினுன்' என்ற பொருளிலேயே கூறியிருக்கிருன் கம்பன்.

4. இராவணன் சோகப்படலத்திலும், இந்திர சித்தின் கிரீடமணிந்த தலே நீங்கிய உடலேச் சுமந்தவனுய் இராவணன் வருவதைக் கூறும்போது, "மைந்தன் தன் மகுடச் சென்னி போதலேப் புரிந்த யாக்கை பொறுத்தனன்" என்று, 'பொறுத்தனன்' என்ற சொல்லே, 'தாங்கினுன்' என்னும் பொருளிலேயே வழங்கினுன் கம்பன்" என்று கூறுவார்.*

'பொறுத்தல்' என்ற சொல்லுக்கு, 'மன்னித்துக் கொள்ளுதல்', 'தாங்குதல்' என்பதனேடு அன்றி வேறு பல பொருள்களும் உண்டு.

---

* ஒரு மறுப்பு - வாலிவதமும் இராமனும்— குமுதம் வார இதழ் 4.10-84. ப, 91, 92.

சென்னைப் பல்கலைக் கழகம் பதிப்பித்துள்ள TAMIL LEXICON VOL. V. 'பொறுத்தல்' என்ற சொல்லுக்குக் கொடுத்து இருக்கும் பொருள்கள் எவை எனப் பார்ப்போம்.

v. tr.

1. To bear, sustain; சுமத்தல்.
இசையிலா யாக்கை பொறுத்த நிலம்
(திருக்குறள் 239)

2. To bear with; தாங்குதல்.
ஆலத்து...நெடுஞ்சினை வீழ் பொறுத்தாங்கு
(புறநானூறு, 58)

3. To put on, wear; அணிதல்.
அம்மணி பொறுத்திர் என்று அறைந்தான்.
(உபதேச காண்டம்; உருத்திராக்கம் 44)

4. To Indulge, allow; இளக்காரம் கொடுத்தல் (W)

5. To Excuse, overlook, forgive, pardon; மன்னித்தல்.
தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்பதன்றி
(நாலடியார் 58)

6. To endure, tolerate, suffer; சகித்தல்.
பொறுக்கிலேன் உடல் போக்கிடம் காணேன்.
(திருவாசகம் 23, 6)

7. To take responsibility, To be accountable for; உத்தரவாதம் ஏற்றல்

8. To delay, postpone; தாமதித்தல்.

9. To be similar; உவமையாகப் பெறுதல்.
உலம் பொறுக்கலாத தோளாய்.
(சீவக சிந்தாமணி 402)

இவை அன்றியும் கீழ்க்காண்பனவும் பொருள் என இந்த LEXICON கூறும்.

v. intr.

1. சாந்தமாய் இருத்தல்.
2. பேச்சு முதலியவற்றில் இடையே நின்று கொள்ளுதல்.
3. விலை கொள்ளுதல்.
4. தோணி தட்டிப்போதல்.
5. மாட்டிக்கொள்ளுதல்.
6. உத்தரவாதம் ஆதல்.

மேற்கண்டவற்றில் எந்தப் பொருளை எடுத்துக் கொண்டாலும், 'பொறு' பகுதியாகும், 'பொறுத்தல்' தொழிற் பெயராகும்.

இதிலிருந்து, 'பொறுத்தல்' என்ற சொல்லுக்கு, 'மன்னித்தல்', 'தாங்குதல்' என்ற பொருள்களோடு வேறு பல பொருள்களும் உள்ளன என்பது தெரிகிறது.

இங்கு நாம் காண வேண்டியதோ 'இது நீ பொறுத்தி' என்று கம்பன் கூறும்பொழுது எப் பொருளில் அச் சொல்லை ஆள்கிறான் என்பதுதான்.

ஸுதர்சனர் எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் காட்டி இருக்கின்ற மேற்கோள்களில்;

முதலாவது;

..................கடைமுறை காணுப்
பூதம் கண்ணிய வலி எலாம் ஒரு தனி பொறுத்தான்.
(கம்பன், 6189)

இத் தொடரில் 'பொறுத்தான்' என்ற சொல்லுக்கு, 'பெற்றவன்' என்பது பொருள்; சுமந்தவன் என்ற பொருளும் உண்டு.

வன்மை என்பது ஓர் இயல்பே அன்றி பருப்பொருள் (concrete object) அன்று. செயற்பாட்டின் வழி பிறர் காண்பது; உணர்வது.

இரண்டாவது:

விகடம் உற்ற மரனொடு வெற்பு இனம்
புகட, உற்ற பொறுத்தன போவன,
துகள் தவத் தொழில் செய்துறைக் கம்மியர்
சகடம் ஒத்தன, தார் அணிதேர் எலாம்

(கம்பன், 8147)

புகட—போகவிட: பொகட—போகட (பா-ம்)

குரக்கினத்தார் கை ஏந்திய கற்களால், மரக்கிளை களால் எறிய, அவற்றால் தாக்கப்பட்ட தேர்கள், ஆரை முறிந்து, பார்முறிந்து, வட்டை முறிந்து, வீழ்ந்தன. தச்சுப்பட்டறையில் தேர் உறுப்புகள் தனித்தனி செய்து குவியலாக வைத்திருப்பன போல் அவை காணப்பட்டன. (பாடல் பொழிப்புரை).

மூன்றாவது :

அனலின் படை தொடுத்தான்; அவன் அதுவே கொடு
தடுத்தான்;
புனலின் படை தொடுத்தான்; அவன் அதுவே கொடு
பொறுத்தான்;
கன வெங் கதிரவன் வெம்படை துரந்தான், மனம் கரியான்;
சின வெந்திறல்இளங்கோளரி அதுவே கொடு தீர்த்தான்.

(கம்பன், 9063)

இப்பாடலில், இந்திரசித்து விடுத்த அனல் படை, புனல் படை, கதிரவன் படை, தன்னைத் தாக்காவகை

அவ்வப்படைகளையே தானும் எய்த இலக்குவன், இந்திர சித்து விட்ட கணைகளை, இடைமுரிவு படச்செய்தான் என்பது, கண்ட கருத்து.

தடுத்தல், பொறுத்தல், தீர்த்தல் என்பன அக்கணை களின் செயல்திறனை எதிர்த்து, இல்லாதவாறு ஆக்கல் என்ற பொருளன.

நான்காவது:

மாதிரம் கடந்த திண்தோள் மைந்தன் தன் மகுடச் சென்னி
போதலைப் புரிந்த யாக்கை பொறுத்தனன் புகுதக் கண்டார்,
ஓத நீர் வேலை அன்ன கண்களால் உகுத்த வெள்ளக்
காதல் நீர் ஓடி, ஆடல் கருங்கடல் மடுத்தது அன்றே .
(கம்பன், 9227)

விழி சுமந்த நீரொடு, நெஞ்சு சுமந்த துயரொடு, தோள் சுமந்த மகன் குறையுடலொடு, கொற்றம் முன் கொண்ட இராவணன், நகர்புகுதலைக் கண்ட நகர மக்கள் விழிசிந்திய நீர் விரிகடல் புக்கது என்பார்.

இப்பாடலில் மட்டுமே 'பொறுத்தனன்' என்பது (சுமை) தாங்கினன் என்ற பொருளில் பயில்கிறது.

'பொறுத்தி' என்ற முன்னிலை எதிர்கால வினைமுற்றுச் சொல்லுக்கு நான் கொடுத்திருக்கும் பொருளுக்கு மாறாக, வேறு பொருள் தருவனவுமாக கம்பன் ஆண்டிருக்கிறான், என்பதற்குரிய மேற்கோள்களை அவர்கள் காட்டவில்லை.

எனவே 'நீ இது பொறுத்தி' என்ற தொடர்க்கு 'நேர்ந்த தவற்றுக்காக நீ என்னை மன்னிப்பாய்' என்று பொருள் கொள்வது எவ்வாற்றானும் தவறு ஆகாது.

அது அன்றியும், ஸுதர்சனர் அவர்கள் 'இது' என்னும் சொல் அருகில் உள்ள உடைவாளையே குறிக்கும்; ஆகையால் 'நீ இது பொறுத்தி' என்னும் தொடர்க்கு 'நீ இவ்வுடைவாளைத் தாங்குவாய்' என்னும் பொருளே பொருத்தமாகும் என்றும் கூறுகிறார்.

"இது என்னும் சொல் அருகில் உள்ளதைக் குறிக்குமே ஒழிய பல பாடல்களுக்கு முன் வந்ததொருசெயலைக் குறிக்காது", என்றும் கூறுகிறார்.

செயல் பல பாடல்களுக்கு முன் நிகழ்ந்தது எனினும், செயலால் வீழ்ந்து கிடக்கும் உடல் அணித்தே உள்ளமையால், உடலைச் சுட்டுவதன் வாயிலாக, செயலைச் சுட்டுவதாக ஆகாதோ?

அம்பு துரந்த இராமனும், அங்கதனும், அம்பினால் அடிபட்டு வாலி வீழ்ந்து கிடக்கும் இடத்திலேயே நின்று கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் செயல் பல பாடல்கட்கு முன் நிகழ்ந்தது எனினும் காலத்தாலோ, இடத்தாலோ சேய்மை நிகழ்ச்சி அல்லவே.

ஸுதர்சனர் கூறுவது போல செயல் (அம்பு பாய்ந்தது) பலபாடல்கட்கு முன்னது எனினும், செயலால், செயல் இழந்த வாலியின் உடல் அப்புறப்படுத்தப்படவில்லையே? அங்குதானே இருக்கிறது.

நீட்டிய உடைவாள் நெடுந்தரை நோக்கியதாகத் தானே இருக்கும். 'நீ இது பொறுத்தி' என்னும்போது அது உடலைக் குறிக்காது, என்று ஏன் கொள்ள வேண்டும்? 'கம்பன் கண்ட இராமன்' என்ற நூலிலும் 'இது' என்ற சொல் இராமன் அம்பினால் தன் மார்பில் அடிக்கப்பட்டு, உயிர்போகும் தறுவாயில் கிடக்கும் வாலியைச் சுட்டுவதாகவே அமையும் என்று கூறி இருக்கிறேனே தவிர,

முன்னர் நடந்த இராமன் செயலைச் சுட்டுவதாகவும் கூறவில்லையே.

மேலும் ஸுதர்சனர் அவர்கள்,

"இங்கு உலகம் ஏழும் ஏத்தியது - இராமன் பகைவன் மகன் இடத்துப்பகைமை பாராட்டாது,அன்பு வைத்தருளி யதையும், பகைவனுக்கே பரமபதம் அருளவிருப்பதையும் கருதியேயாம். தந்தை போலன்றி மைந்தன் எம்பெரு மானுடைய கருணைக்கு இலக்கானமை குறித்து, அதிசயித்து உலகமேழும் அவ்வங்கதனைப் புகழ்ந்தன, என்றும் கொள்ளலாம்" என்பார்.

இந்தக் கூற்று சரியானது என்று ஒப்புக் கொள்ள இயலாது. இதனில் இடம்பெற்றிருக்கும் முதல் தொடரில் வாலி இராமனது பகைவன் என்று கூறுகிறார். வாலி, இராமன் பகைவன் என்று கூறுவதற்கு வான்மீகத்திலும் சரி, கம்பன் காப்பியத்திலும் சரி எந்த வித ஆதாரமும் இல்லை.

இரண்டாவது தொடர் இப்பாடலுக்கு உரை எழுதிய வை.மு. கோபால கிருஷ்ணமாச்சாரியாருடைய குறிப்பை அடிப்படையாகக் கொண்டது.

திரு வை. மு. கோ. அவர்கள்,

"தனது உயிர் நண்பனான சுக்கிரீவன் விரும்பியபடி அவனுக்குப் பழம் பகையாகிய வாலிக்குப்பரமபதமளித்து அவன் மகனான அங்கதனை வாலியின் விருப்பத்தின்படி தனக்குத் துணைவனாக ஏற்றுக் கொள்ளுகையிற் பெருமான் திருவுள்ளமுவந்து கண்மலர்ந்திருந்தமை தோன்ற 'தாமரைத் தடங்கணான்' என்றார்."* என்பார்.

---

* கம்பராமாயணம், கிட்கிந்தா காண்டம், வாலிவதைப்படலம், ப-321,

''மலர்ந்த தாமரை போல் விரிந்த கண்ணை உடையவன் என்று இதற்குப் பொருள். மன்னிப்புக் கேட்கும் பாடலாயிருந்தால், இத்தொடர் பொருந்தாது'' என்பர் ஸுதர்சனர்.

உண்மையில் 'தாமரைத் தடங்கணான்' என்ற சொல்லே, இராமனது பெருந்தன்மையைக் குறிப்பிடவே கம்பனால் ஆளப்பெற்றதாகும். உடைவாளை அங்கதனிடம் கொடுத்தது ஒரு பெருமைக்குரிய செயல்.

அங்கதனிடம், தான் அவனுக்கு இழைத்த—வாலியைக் கொன்றதன் வாயிலாய்—துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளுமாறு கேட்டது இன்னொரு பெருமைக்குரிய செயல்.

இப்படிப் பொருள் கொள்வதனால் இராமன் பெயரும் புகழும் ஓங்குமே தவிரக் குறைபடாது.

ஸுதர்சனர் ''இங்கு உலகம் ஏழும் ஏத்தியது- இராமன் பகைவன் மகனிடத்துப் பகைமை பாராட்டாது அன்பு வைத்தருளியதையும் பகைவனுக்கே பரமபதம் அருள இருப்பதையும் கருதியேயாம்'' என்பார்.

மேற்குறிப்பிட்ட பத்தியில் உள்ள 'பரமபதம் அருள இருப்பது' என்பதும், இரண்டாவது வாக்கியத்தில் ''எம் பெருமான்'' என்பதும், இராமனை மனிதனாக மாத்திரம் கொள்ளாமல் தெய்வமாகக் கருதி இருப்பதன் விளைவே. அதுதான் இக் குழப்பத்திற்குக் காரணம்.

பெரியவர்கள் தன்னைவிட வயதிலோ, அந்தஸ்திலோ குறைந்தவர்களிடத்துத் தம் தவற்றுக்காக மன்னிப்புக் கேட்பது தமிழ் இலக்கியத்திற்குப் புதுவதன்று.

சான்றோர் மறந்தேயும் தவறு செய்யார். ஒரோவழி தவறு செய்ய நேரிடின், அதற்காகக் கழிவிரக்கம்கொண்டு

தாம் செய் தவற்றினல் பாதிக்கப்பட்டாரிடத்து மன்னிப்புக் கேட்பர். 'துலையல்லார் கண்ணும் தோல்வி கொளல் சால்பு' அன்றோ?

உயர்ந்தோரிடை தவறு செய்து, ஒறுப்பிற்கு அஞ்சி மன்னிப்புக் கேட்கும் இயல்பினர் வெகு பலர். அவ்வாறே தம்மினும் மெலியார் மாட்டு தவறிழைத்து, தன்செயற்கு வருந்தி மன்னிப்புக் கேட்பார் தவச்சிலர். அத்தகையரே சான்றோர் எனத் தக்கார்.

சான்ருக ஒன்று காணலாம் :

பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடல் புராணத்தில், தன்னல் தவருகத் தண்டிக்கப்பட்டு, சிறையிடப் பெற்ற வேட்டுவ மகன் ஒருவனை, அவன் குற்றவாளி அல்லன் எனத் தெரிந்த பாண்டிய மன்னன், விடுதலை செய்ததோடு நில்லாமல் அவனிடம்,

"தெளியாதே யாம் இழைத்த தீத்தண்டம் பொறுத்தி" என வேண்டுகிறன்.*

நாடு புரக்கும் காவல் வேந்தன், தன் கடமை தவறியதற்காக, எவனைத் தான் தண்டித்தானே, அவனிடமே மன்னிப்புக் கேட்கும் பெருந்தன்மை கொண்டிருந்தான், என்று இந்நூல் வழி அறிகிறேம்.

எனவே 'பொறுத்தி' என்ற சொல் 'மன்னித்துக் கொள்' என்ற பொருளில் வழங்கப் பெற்றது என்று கொள்வது சிறப்புக்குரியதே.

இனி, இராமன் தான் செய்தது தவறு என்பதனைத் தன் கூற்றினலேயே ஒப்புக் கொண்ட ஓரிரு இடங்களைக் காணலாம்.

---

* திருவிளையாடல் புராணம்—பழி அஞ்சின படலம், பாடல் 43.

வாலி வதத்திற்குப் பிறகு, சுக்கிரீவன் முடி சூட்டப் பெறுகிருன். பொன் மாமௌலி புனைந்த பொய் இலான் காகுத்தன் கழல் பணிகிருன். அவ்வழி இராமன் ஆட்சி நடத்துமுறை பற்றி அவனுக்கு அறிவுரை கூறுகிருன். கேட்டு உவந்த அக்கிளர்மணிப் பூணினுன், இராமனிடம் வேண்டுகிருன்.

தம் வாழ்விடம் 'குரங்குகள் வாழும் இருக்கை' என்னும் குற்றமே குற்றம் அல்லால், போக பூமியினும் பொருந்து நல்வளங்கள் உடையது என்றும், ஏவல் கூவல் பணி செய்ய தன் போல்வார் எண்ணிலர் உளர் என்றும், கார்காலம் கழிந்த பின்னரே கருந்தடங் கண்ணினுளைத் தேடல் ஆகும் என்றும், அதுவரை தம்மோடு சில் பகல் இராமன் இருத்தல் தமக்கு மகிழ்ச்சிதரும் என்றும், இன்னவாறு எல்லாம் சுக்கிரீவன் கூறுகிருன்.

அவன் வேண்டுகோளை, இராமன் ஏற்க மறுத்தவனுய், அவன் மனம் கொளச் சில கூறுகிருன்.

விரதம் தலைப்பட்டார், வேந்தர் உடன் கூடி இன்ப வாழ்க்கை மேவுதல் சிறப்பன்று என்றும், தான் அங்கு வருவதால், தன்னைப் போற்றவும், உபசரிக்கவுமே சுக்கிரீவனுக்கு நெடும் பொழுது வீணுகும் என்றும், புதுவதாக ஏற்ற அரசியல் பொறுப்புக்கான ஆரம்பச் செயல்கள் தடைபட்டுப்போகும் என்றும் கூறுகிருன். மேலும் கூறுகிருன்:

தாதை ஏவ, 'பூழி வெங்கானம் நண்ணி வாழ்க பதினுன்கு ஆண்டுகள்' என்ற தாயுரைக்கு உடன்பட்டு வந்த தான், வனத்திடை வாழ்வதன்றி வளநகர் வாழ்தல் அறப்புறம் ஆகும் என்றும், தேவியைப் பிரிந்து தெருமரல் உறும் தான், அவ்வாறு இன்ப வாழ்வு மேவல் இகழ்ச்சிக்கு இடம் தரும் என்றும், 'மனைவியை மாற்ருன்கொள,

அவளை மீட்டல் அறியானாய், இராமன், துணைவரோடும் கூடித் துய்ப்பன் போலும் இன்பம்' என்று வையம் வசை மொழி புகலும் என்றும், அவ்வசை மூவகை உலகும் முற்றினும், அழியாது நிலை பெற்று விடும் என்றும், "ஆதலால் அஞ்சுவன் அகநகர் வரற்கே" என்றும் கூறுகிறான்.

இவ்வுரைகட்குப் பின்னர் அமைந்துள்ள பாடலே, நாம் இங்கு ஆய்ந்து கொண்டிருக்கும் பொருளுக்குப் பொருத்தமாக அமைவது. இதில் இராமன் கூற்றையே காண்கிறோம். அப் பாடலாவது :

இல்லறம் துறந்திலாதோர் இயற்கையை இழந்தும், போரின்
வில் அறம் துறந்தும், வாழ்வேற்கு, இன்னன மேன்மை இல்லாச்
சில்அறம்; புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு,
நல்அறம் தொடர்ந்த நோன்பின், நவை அற நோற்பல் நாளும்.
(கம்பன், 4137)

என்பதாம்.

இந்தப்பாடலில் நோக்கத்தக்க நுட்பங்கள் பல உள.

முதலில் காண வேண்டியது இராமன் மனம் நொந்து இவ்வாறு கூறுகிறான் என்பது. நிழலின் நீங்காது, நெடுந்துணை எனக் கருதி நிறைநெஞ்சத்தளாய்த் தன் உடன்போந்த மனைவியைக் காக்கக் கடவிய தான், தன் கடமையில் தவறி விட்டதை நினைந்து, வருந்துகிறான். சீதையை இராவணன் கவர்ந்து சென்று விட்டான் என்று அறிந்து, இதுகாறும் அவளைத் தேடிக்கொண்டிருக்கிறானே அன்றி, அவளைக் கண்டு மீட்டுக்கொண்டு வரவில்லை. இதனைத்தான் 'இல்லறம் துறந்திலாதோர் இயற்கையை இழந்தும்' என்று குறிப்பிடுகிறான்.

இத்தகைய மன ஊசலாட்டம் எந்த சூத்த வீரனுக்கும் ஏற்படக்கூடியதே. இராமன் சாதாரண மகனோ? அல்லனே. பெருவீரன். கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவில்லி. அவன் மனம் இவ்வாறு ஊசலாடுவதற்குக் காரணம், அவன் குறிப்பிடும் இல்லறத்துறப்பு மட்டும்தானா? அன்று. 'போரறம் துறந்ததும்' இவ்வூசலாட்டத்துக்குக் காரணம்.

அறந்துறந்த தான் (இல்லறம், வில்லறம்), சிறப்பு இல்லாத அற்ப ஒழுக்கங்கள் மேவிய தான், வளநகர் வைகல் நகைப்புக்கு இடமாகும் என்று கூறி, தான் புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு, அவற்றிற்குப் பிராயச்சித்தமாக நல்லறம் தொடர்ந்த நோன்பினை நவை அற வேய் உயர் கானத்து வைகி நோற்கப் போவதாகவும் கூறுகிறான்.

இப் பாடலில் காணப்படும் 'வில்லறம்' என்ற தொடர் எதனைக் குறிப்பிடுகிறது என்பதுபற்றிக் காண்பதில்தான் பெருநுட்பம் அமைந்திருக்கிறது. உரையாசிரியர்கள் (திரு வை. மு. கோபால கிருஷ்ணமாச்சார்யார், அண்ணாமலைப்பல்கலைக் கழகப்பதிப்பு டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலையப்பதிப்பு) கூறுவன காண்போம்.

★ வை. மு. கோபால கிருஷ்ணமாச்சார்யார் உரை

"கிருகஸ்தாச்சிரம தருமத்தைக் கை விடாதவர்களுடைய இயல்புக்கு மாறுபட்டு, யுத்தத்தில் வில்லைக் கொண்டு செய்யும் தருமத்தைச் செய்யாது விட்டு, வாழ்பவனாகிய எனக்கு, இவை போன்றவை (நகரத்தினுள் வந்து உறைந்து நண்பர்களோடு இனிது வாழ்தல் முதலியன), சிறப்பில்லாத, அற்ப ஒழுக்

கங்களாம். (மனைவியைப் பிரிதற்குக் காரணமாக யான்) செய்துள்ள தீவினைகள் நீங்கும்படி, நல்ல தருமமாகிய இல்லறத்தைத் துறந்து அனுட்டிக்கும் வானப்பிரஸ்தாச்சிரம தருமங்களால், குற்றமில் லாமல் தவம் செய்வேன் என்று கூறினன்". (இராமன்.)

உரைவிளக்கத்தில் குறிப்பிடுவன:

எவ்வகைத் தீக்கருமம் செய்தாயினும் தன் தரும பத்தினியைக் காக்க வேண்டும்; அவ்வாறு காவாமையால் இல்லறம் துறந்தான் என்றுகிறது. மனையாளைக் கவர்ந்த மாற்றானைப் பொருது தொலைக்கவேண்டும். அது செய்யாமையால் வில்லறம் துறந்தான், என்றுகிறது. நல்லறம் துறந்த நோன்பு என்பது நல்லறமாகிய இல்லறம் துறந்தபின் அனுட்டிக்கத்தக்க வானப்பிரஸ்தாச் சிரமநிலை. அந்நிலையில் பலவகை உள. அவற்றுள் மனைவியோடன்றித்தனித்துச் செய்தவம் நோன்பு எனப்பட்டது.

★★ அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு

மனையறத்திற்கு உரிய நெறியைக் கை விடாதவர்களுடைய இயல்பைக் கைவிட்டு நீங்கியும், போரில் வில்வீரருக்கு உரிய அறமாகிய நெறியைக் கைவிட்டும், வாழ்கிறவனாகிய எனக்கு இவை போன்றவை (நகரத்தில் நண்பர்களோடு செல்வத்தில் வைகுதல், அளவளாவுதல் போன்றவை) சிறப்பில்லாத அற்ப ஒழுக்கங்களாம்; (யான்) செய்துள்ள தீவினைகள் நீங்கும்படி, நல்ல அறநெறியாக (யான்) மேற்கொள்ள ஏன்று வந்த தவ விரதத்தை ஒவ்வொரு நாளும் குற்றமில்லாதபடி செய்து வருவேன்.

உரை விளக்கத்தில் குறிப்பிடுவன:

மனையாளை விட்டுப் பிரிந்தமை இல்லறம் துறந்தமை என்றும், மனையாளை எடுத்துச் சென்றவனைப் பொருது தொலையாதிருத்தல்,வில்லறம் துறந்தமை என்றும் ஆகும்; விற்பிடியாதிருந்த வாலியை மறைந்து வில்லாற் கொன்றதும், போரின் வில்லறம் துறந்ததன் பாற்படும்.

வாலியைக் கொன்றமை குறித்து இராமன் வருந்தினன் என்பது இதனால் தெரியவரும்.

★★★ டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் நூல் நிலைய வெளியீடு (இரண்டாம் அடி பாட பேதங்களுடன் காணப் பெறுகிறது. "வில்லறம்துறந்தும், வாழ்வேற்கு இன்னன" என்ற கம்பன் கழகப் பதிப்பிற்கு மாறாக "வில்லறம் துறந்து வாழ வெள்கினென்" என்று காணப்படுகிறது.)

"மனை வாழ்க்கையைக் கைவிடாதவர்களுடைய இயல்பினைக் கைவிட்டு, போரில் வில் பிடித்து இயற்றும் முறைமையும் தவிர்ந்து, வாழ்வதற்கு நாணுகிறேன்; மேம்பட்டன அல்லாத சிறுமைப் பட்ட ஒழுக்கங்களைச் செய்து நின்ற கேடுகள் அகலும் படி, நல்லொழுக்கத்துடன் தொடர்பு கொண்டு விளங்குவதாகிய விரதத்தில் நின்று, தினந்தோறும் குற்றம் நீங்கத் தவம் புரிவேன்."

உரைக் குறிப்பில் குறிப்பிடுவன:

இல்லக் கிழத்தியைக் காவாது கைவிட்டமை இல்லறம் வழுவியது என்றும்; மனைவியைக் கவர்ந்தவனை ஒழித்து, அவளை மீட்காமல் உயிர் வாழ்தல் வில்லறம் துறந்தது என்றும் குறிப்பர். அரசர் வழிப் போந்தார்க்கு வீரத்தைக் காப்பது கடமை; காவாதொழிதல் இழிவு என்றும் குறிப்பர்.

இப்பாடலில் 'இயற்கையை இழந்தும்,' 'வில்லறம் துறந்தும்,' என்று எண் உம்மை இடைப்பெய்து அமைந்துள்ளமையால், இரண்டும் தொடர்பில்லாத வேறு வேறு நிகழ்ச்சிய என்பது பெறப்பட்டது. இல்லறம் துறந்தது முன்னர்த்து; வில்லறம் துறந்தது பின்னர் நிகழ்ந்தது. ஒன்றற்கொன்று, கால இடையீடு உள்ளவை. அண்ணுமலைப்பல்கலைக் கழகப் பதிப்பு தவிர்த்த மற்ற இரண்டும் இல்லறத் துறப்பு, வில்லறத் துறப்பு, ஆகியன தொடர்பு கொண்டவை என்னும்.

மூன்ரும் அடியில் 'புரிந்து நின்றதீமை' என்ற தொடர் காண்கிரேம். புரிந்த தீமைகளின் விளைவு அப்பொழுதும் நிலைபெற்றிருப்பதாகவே இருந்தது என்பதனை 'நின்ற' என்ற சொல் குறிப்பிடுகிறது. தீமைகள் என்று பன்மையில் குறிப்பிட்டுள்ளமையால் முற்குறித்த இல்லறத் துறப்பு, வில்லறத் துறப்பு, வெவ்வேருன வையே; தொடர்பில்லாதன என்பதும் பெறப்படும்.

இல்லறம் துறந்தது—மனைவியைத் தீங்கு நேராவகை காத்தலைத் துறந்தது என்பது சரி.

வில்லறம் துறந்தது—இதற்கு அவர்கள் கூறும் உரை பொருந்தாது.

மனைவியைக் கவர்ந்தானைப் பற்றித் தெரிந்து கொண்ட பின்னர், கண்களில் தெரியக் கண்ட பின்னர் அன்ரே அவனை வேறலோ, கோறலோ, துணைவியை மீட்டலோ கைகூடும். அவ்வாறு காண்கிலனே. அப்படி இருக்க வில்லறம் துறந்து, என்று இறந்த கால வினை எச்சம் இட்டது ஏன்? சீதையைத் தேடும் முயற்சி தலைப் படாது, சோம்பல் மேவி, எவையும் செய்கிலன் என்னில்

ஒரு வேளை வில்லறம் துறத்தல் ஏற்புடையதாகலாம். முயற்சி மேவியும், விளைவு முழுமை அடையாவழி ''வில்லறம் துறந்தும்'' என்று எவ்வாறு கூற இயலும்?

எனவே, இத் தொடர்க்கு அண்ணுமலைப்பல்கலைக் கழகப்பதிப்பு குறிக்கும் 'வாலி மீது மறைந்து நின்று அம்பு எய்த போரறம் துறந்த (வில்லறம் துறந்த) செயல்' என்பதே ஏற்புடையது. இதற்கு ஐயம் சிறிதும் இல்லை.

காப்பியம் யாத்த கவிஞன் கருத்தும் அன்னதே என்பதனைக் குறிப்பால் அறியலாம்.

கடுங்கணை கல்தட மார்பில் பொதுத்து உட்புக, வாலால், காலால், கைகளால் பற்றி எடுத்த வாலி, அக் கணையில் 'இராம' என்னும் பெயர் பொறிக்கப்பட்டிருத்தல் காண்கிருன். அப்பொது அவன் மனத்திடை எண்ணிய யாவை? கம்பன் கூறுவான்,

இல்லறம் துறந்த நம்பி, எம்மனோர்க்காகத் தங்கள்
வில் அறம் துறந்த வீரன் தோன்றலால், வேத நல்நூல்
சொல் அறம் துறந்திலாத சூரியன் மரபும், தொல்லை
நல் அறம் துறந்தது' என்ன, நகைவர நாண்
உட்கொண்டான்.

(கம்பன், 4014)

என.

இது வாலியின் கருத்து (4014); அது இராமன் கூற்று (4137). இவ்விரு பாடல்களையும் நோக்குவார்க்குப் புலன் ஆவது ஒன்று உண்டு.

மூன்றும் அடி அன்றி, பிற அடிகளில் ஒரே எதுகை பயின்று வரல் காணலாம்.

வாலி கருதியது: "இராமன் இல்லறம் துறந்தான்; (மனைவியைக் காத்தலைக் கைவிட்டான்); வில்லறம் துறந்தான்; (படை எடா என்மீது மறைந்து நின்று அம்பு எய்தான்); சொல் அறம் துறந்தான் (குலப்பெருமை குலைத்தான்); நல்லறமும் துறந்தான்" என்பதாம்.

இங்கு இராமன் கூறுவது "இல்லறம் துறந்தேன்; வில்லறம் துறந்தேன்; எனவே நவை கெட நல்லற நோன்பின் தலைப்படுவேன்" என்பதாம்.

வாலி எண்ணியதையே இராமன் கூறுவதாகக் கவிஞன் பாடுகிறான்.

இராமன் சுக்கிரீவனிடம் கூறிய கருத்தும், வாலி எண்ணிய கருத்தும் சொல்லாட்சி ஒற்றுமை உடையன. 'எம்மனோர்க்காக வில்லறம் துறந்தான்' என்று வாலி எண்ணுகிறான். அதாவது சுக்கிரீவற்கு நன்மை தேட தன்னைக் கொன்றதன் வாயிலாய் இராமன் வில்லறம் துறக்கிறான் என்பதாம். இராமன் கூற்று வாலியின் எண்ணத்தை, அதாவது தான் போரறம் துறந்ததை ஒப்புக்கொள்வதாகவே அமைகிறது.

உரையாசிரியர்கள் கருதுவது போல், வாலி எண்ணும் வில்லறத் துறப்பும், இராமன் கூறும் வில்லறத் துறப்பும் வேறானவை என்னில், வேறு எதுகை இட்டோ வேறு அமைப்பிலோ புலவன் பாடியிருக்கமாட்டானா? சொற் பஞ்சம் சொலல் வல்லானுக்கு ஏது?

கம்பன் குறிப்பாக உணர்த்துவது, அவன் எண்ணமும், இவன் கூற்றும் ஒன்றையே குறிப்பன என்பதாம்.

இவ்விரு பாடல்களின் அமைப்பை இவ்வாறு நோக்குவதும் இராமனுக்குப் பெருமை சேர்க்குமே தவிரச் சிறுமை பயவாது.

'நின்ற தீமைகள் தீருமாறு, நல்அறம் தொடர்ந்த நோன்பின் நவையற நோற்பல்' என்ற தொடர், இராமன் தான் செய்த தவற்றிற்கு கழிவிரக்கம் கொண்டு, நோன்பிருப்பதன் வாயிலாகக் கழுவாய் தேடமுயல்கிருன் என்பது குறிக்கும்.

இறுதியாக ஒன்றைக் காணலாம்.

சுக்கிரீவன் அழைக்க, அவ்வழைப்பை ஏற்க இராமன் மறுத்துவிடுகிருன். அநுமன் இராமனிடத்து, தானும் அவனேடே இருந்து ஏயின பணிகள் செய்வதாகக் கூறி தானும் கிஷ்கிந்தை நகர்க்குச் செல்லப் போவதில்லை என்கிருன்.

அதற்கு இராமன் கூறிய பதிலில்தான் தனிச் சிறப்பு ஒன்று இடம் பெற்றிருக்கின்றது.

இராமன் கூறியதாகக் கம்பன் காட்டும் பாடல் களாவன:

'நிரம்பினுன் ஒருவன் காத்த நிறை அரசு இறுதி நின்ற
வரம்பு இலாததனை, மற்று ஓர் தலைமகன் வலிதின்
கொண்டால்,
அரும்புவ, நலனும், தீங்கும்; ஆகலின், ஐய! நின்போல்
பெரும் பொறை அறிவினேரால், நிலையினைப் பெறுவது.
அம்மா!'
(கம்பன், 4143)

ஆன்றவற்கு உரியது ஆய அரசினை நிறுவி, அப்பால்,
ஏன்று எனக்கு உரியது ஆய கருமமும் இயற்றற்கு ஒத்த
சான்றவர், நின்னின் இல்லை; ஆதலால், தருமம் தானே
போன்ற நீ, யானே வேண்ட, அத்தலை போதி, என்ருன்.
(கம்பன், 4144)

முதற்பாடலில் வாலியை 'நிரம்பினுன் ஒருவன்' என்று இராமன் குறிப்பிடுகிருன்.

அதாவது, குணத்தால், பண்பால், வீரத்தால் நிறைந்தவன்; எந்த விதத்திலும் குறைவில்லாதவன் என்ற பொருள் பொதிந்த சொல் அது.

'நிரம்பு' என்ற சொல்லில் அழுத்தமும் இருக்கிறது. மேற்கொண்டு எதையும் பெறுவதற்கு இடமில்லாத வகையில் முழுமை அடைந்துவிட்ட நிலையைக் குறிக்கும்.

இப்படி வாலியை இராமனே குறிப்பிடுவானானால் அக்குறிப்பே அவனை மறைந்து நின்று அம்பு எய்து தான் கொன்றது எந்த அளவிற்கு அவனை (இராமனை)ப் பாதித்திருக்கும் என்பதனை உணர்த்தும்.

'நிரம்பினான்' என்று சொன்னதோடன்றி 'ஒருவன்' என்றும் சொல்வான்.

'ஒருவன்' என்பது 'ஒப்பற்றவன்' என்ற பொருள் உடையது. இச் சொல் ஆட்சியும் முற்கூறிய கருத்தையே வலியுறுத்தும்.

இப்பாடலின் முதல் அடியிலேயே இன்னும் சில சொற்கள் அற்புதமாகவும் அழகாகவும் அமைந்து, வாலியின் பெருமையை வலியுறுத்துவனவாகப் பொலிகின்றன.

அவை 'காத்த', 'நிறை அரசு', 'வரம்பு இல்லாதது' என்பன.

'காத்த' என்ற சொல்லிலேயே வாலி தன் கிஷ்கிந்தை நாட்டை எவ்வாறு ஆண்டான் என்ற தன்மை குறிப்பிடப் பெற்றுள்ளது. அவன் காவல் தன்மைச் சிறப்பால்தான் அரசும் நிறையரசாக ஆயிற்று. அதாவது அவன் ஆட்சியில் எக்குறைக்கும் இடம் இல்லை என்பதாம்.

மேலும் அவ்வாட்சி 'இறுதி நின்ற வரம்பிலாதது'. அதாவது கடை எல்லை இல்லாதது என்று பொருள்படும்.

இரண்டாம் அடியில் பிறிதொரு சொல் உள்ளது. 'வலிதின் கொண்டால்' என்ற தொடரிடை உள்ள 'வலிதின்' என்ற சொல்லே அது.

'வலிதின்' என்ற சொல் 'வலிய கைப்பற்றுதல்', 'தனக்கு உரியது அல்லாத ஒன்றை பலாத்காரமாகப் பற்றுதல்' என்று பொருள்படும்.

கிஷ்கிந்தை அரசு சுக்கிரீவற்கு, மரபுவழி வந்தது அன்று. வாலி இயற்கை மரணமடைந்த பிறகோ, அல்லது வேறு எம்முறைப்படியுமோ அன்று.

வஞ்சகமாக வாலியைக்கொன்று, சுக்கிரீவனால் பெறப் பட்டது.ஆகையினால்தான் 'வலிதின் கொண்டால்' என்ற சொற்களைக் கம்பன் ஆள்கிறான்.

இப்பாடலில் கம்பனது பரந்த அரசியல் அறிவுரை காண்கிறோம். முறையோடு மக்களைக் காத்து, அவர்கள் மன நிறைவு பெறச் செய்து, ஆண்டுவரும் மன்னன் ஒருவனைக் கொன்று, பிறிதொருவன் அவ்வாட்சியை வலிந்து கைப்பற்றுவானேயானால் நாட்டில் கலகம் எழுத லும் கூடும். ஆண்டவன் சார்பாகச் சிலர், ஆளவந்தான் சார்பாகச் சிலர், என இரு கூறுபடவும் செய்வர். எனவே இந்நிலையில் நலனும் தீங்கும் அரும்பவே செய்யும்.

ஆட்சியாளர்க்குவாழ்த்துப்பாடி, பின்நிற்கும் கூட்டம் முன்னவன் ஆதரவாளரைத் துன்புறுத்தவும் கூடும்.

அத்தகைய சூழ்நிலை ஒன்று உருவாகுமேயானால் அதனைச் சமாளிக்க அநுமனைப்போன்ற பெரும்பொறை அறிவினோன் அங்கேயே இருந்து, விழிப்பாகச் செயல் பட்டு நாட்டை அமைதிப்படுத்த வேண்டும்.

எனவேதான், தன்னோடு உடன் உறைதலினும் அநுமன் உதவி சுக்கிரீவனுக்கே பெரிதும் தேவைப்படும்.

ஆதலால் அங்கு செல்வதே நன்று என்று கூறிய இராமன் அநுமனைக் கிஷ்கிந்தைக்குச் செல்ல வற்புறுத்துகிறான்.

அடுத்த பாடலில் 'ஆன்றவற்கு உரியது ஆய அரசினை நிறுவி' என்ற தொடரில் அமைந்துள்ள 'நிறுவி' என்ற சொல் சிறப்பைப் பார்ப்போம்.

புதியதாக ஒருவன் அரசிற்கு வந்திருத்தலால், அதுவும் வலிதின் கொண்ட அரசு எனில், அதனைப் பல்வகையாக எழும் பூசல்களுக்கு இடையில் நிலைநிறுத்துவது பெருமுயற்சிக்கு உரியதே. இவ்வாறு நிலை நிறுத்து முயற்சி பேரறிவின் அடிப்படையில் அமைவதே.

அறிவின் நுண்மை, ஆற்றலில் திண்மை உடையவன் மாருதி. அத்தகையவன் அங்கிருப்பதே தக்கது. எனவே இராமன் அவனைச் சுக்கிரீவனுக்கு உதவுமாறு கேட்டுக் கொள்கிறான்.

இப்பாடலிலிருந்தும், பல்வேறு சிறப்புகள் பெற்றிருந்த வாலியைத் தான் நெறியலா நெறியில் கொன்றது குறித்து இராமன் வருந்துகிறான் என்பது அவனாலேயே வெளிப்படையாகக் கூறப்படுவதை அறிகிறோம்.

அதுவன்றியும் அவன் செயலால் அவனுக்கு உண்டான வருத்தம் எவ்வளவு ஆழமாகப் பதிந்திருந்தது என்பதையும் காண்கிறோம்.

இந்த ஆழ்ந்த வருத்தத்தின் அறிகுறியாகத்தான் தான் கொற்ற மாமுடிபுனையும் போது 'அங்கதன் உடைவாள் ஏந்த' வைக்கிறான்.

இப்படிப் பார்க்கும்பொழுது, பிற அனைவராலும் யாக்கப் பட்ட இராம காதைகளில், வாலியை இராமன் மறைந்து நின்று கொன்றதன் காரணமாக ஒரு மனிதன் என்ற முறையில் இராமனுடைய பெயர்க்கும் புகழ்க்கும்

மாசு ஏற்படும் நிலையில் கதை நிகழ்ச்சிகள் கூறப் பெற்றிருக்கின்றன.

கம்பன் ஒருவனே அந்த மாசுக்கும் மாற்றுகண்டு, துடைக்க முயல்கிறான்.

தவறு செய்வது இயற்கையே ஆயினும் எப்பொழுது அவன் அத்தவற்றை உணர்ந்து அதற்காக வருந்தி தன் தவற்றினால் பாதிக்கப்பட்டவரிடத்து மன்னிப்புக் கேட்டு பிராயச் சித்தம் செய்கிறானே அப்பொழுது மனிதர்களி லேயே உயர்ந்தவன் ஆகிவிடுகிறான் என்ற வகையில், மானிடன் என்ற முறையில், இராமன் 'புருஷோத்தமன்' என்பதனை, நிலைநிறுத்தி விடுகிறான், கம்பன்.



இந்நூல் எழுதுவதற்குக் கலந்து ஆலோசிக்கப் பெற்ற நன்னூல்களில் சில வருமாறு :

1. வால்மீகி இராமாயணம்
—ஆரிய மூலத்திற்கு வசன முறைப்படி
சொல்லுக்குச் சொல்
தமிழில் மொழிபெயர்க்கப்பெற்றது.
இராவ் சாகேப் P. S. கிருஷ்ணசாமி ஐயர்

2. வால்மீகி இராமாயண வசனம்
—தமிழ் மொழி பெயர்ப்பு
பண்டித நடேச சாஸ்திரியார்

3. ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்
—தமிழ்வசனம்
ஸ்ரீ. உ. வே. C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார்

4. SRIMAD VALMIKI RAMAYANA
—Translated by
N. RAGHUNATHAN 3. Vols.

5. STUDIES IN RAMAYANA
—By DEWAN BAHADUR
K. S. RAMASWAMY SASTRY
"KIRTI MANDIR LECSURES"
Series. No IX 1944.
Dept of Education, BARODA State

6. LECTURES ON THE RAMAYANA
—By The Rt. Hon'ble
V. S. SRINIVASA SASTRI
Madras Samskrit Academy publication

7. THE GREATER RAMAYANA
—By
Dr. V. RAGHAVAN
The All India Kashiraj Trust
Fort Ramnagar, VARANASI (1973)

8. THE RAMAYANA IN GREATER INDIA
—By. Dr. V. RAGHAVAN
South Gujarat university, SURAT

9. THE RAMAYANA TRADITION IN ASIA
Edited by
Dr. V. RAGHAVAN
Sahitya Academy.

10. THE RAMAKIEN
—A Prose Translation of The
THAI Version of RAMAYANA
By RAY A. OLSSON, M. D.,

11. SRIMAD BHAGHAVATAM
—Translated by
N. RAGHUNATHAN

12. அத்யாத்ம ராமாயணம்
தமிழ் மொழிபெயர்ப்பு,
—பண்டித நடேச சாஸ்திரி
M/s S. G. IYER & Co., Edition

13. ரகுவம்ச மஹா காவியம்
தமிழ்உரை
—வே. ஸ்ரீ. வேங்கட ராகவாச்சார்யர்
தி. லிட்டில் ப்ளவர் கம்பெனி (1982)

14. காளிதாசரின் இரகுவம்சம்
—தமிழாக்கம்
க. ரா. ஜமதக்னி
மெர்க்குரி புத்தகக் கம்பெனி (1969)

15. மஹா சிவபுராணம்
16. ஸ்ரீ விஷ்ணு புராணம்
17. கம்ப ராமாயணம்—உரைகள்

வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சார்யார் பதிப்பு
அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு
மகாமகோபாத்தியாய
டாக்டர் உ. வே. சாமிநாதய்யர்
நூல் நிலையப் பதிப்பு

18. கம்ப ராமாயணம் (மூலம்)
—சென்னைக் கம்பன் கழகப் பதிப்பு
19. வாலி வதம் சரியா?
—முரு. பழ. இரத்தினம் செட்டியார்
20. சிறியன சிந்தியாதான்
—எஸ். இராமகிருஷ்ணன்
21. பொய்யுரையாத புண்ணியன்
—பெ இராமாநுஜன்
22. வாலி வதை
—கோ. சுப்பிரமணியப் பிள்ளை
23. வாலி ஒரு திறனாய்வு
—புலவர் கு. திருமேனி, M.A., B.O.L.,
24. ஸ்ரீ மஹாபாரதம்
தமிழ் மொழி பெயர்ப்பு.
—மகாவித்வான், ஸாரஸ்வதஸாரஜ்ஞர்
கவிசிகாமணி
மகாமகோபாத்தியாய
ஸ்ரீ உ. வே. T. V. ஸ்ரீநிவாஸாசாரியார்

நீதிபதி

## மு.மு. இஸ்மாயீல்



நீதிக்கு மட்டுமா பதி? இவர்தான் பட்டிமண்டபங்கட்கும் பதி - பட்டி மண்டபத் தலைவர் என்றால் இவர்தான் என்று சுட்டிக் காட்டும் அளவிற்குத் தமிழகமெங்கணும் பேரும் புகழும் பெற்றவர் - தமிழக உயர்நீதி மன்ற தலைமை நீதிபதியாகத் திகழ்ந்த இவர் பட்டிமண்டபங்களுக்கே ஒரு தனிப் பொலிவையும் சோபையையும் ஊட்டிய பீடுடையவர் - தாய்நாடும் தமிழ் மொழியும் இவரின் இரு கண்கள் - ஆம். தேசத் தொண்டிலும் தெள்ளு தமிழிலும் இளமை யிலிருந்தே ஈடுபாடு கொண்டவர் - தேர்ந்து தெளிந்து, துணிவுறத் தன் கருத்தை எடுத்து இயம்ப வல்ல கூர்த்த மதியினர் - தேமதுரத் தமிழோசை மட்டு மன்றி, தேசங்களெல்லாம் ஒலிக்கும் ஆங்கிலத்திலும் ஆராக் காதல் கொண்டு இனிய நடையில் பேசக் கூடியவர் - எவர்க்கும் அஞ்சாத, தோலா நாவினர் - இவர் தலைமை ஏலாத இலக்கியக் கழகங் களே இலை எனலாம் - ஆழ்ந்து, அகன்று, நுண்ணிய அறிவினர் - பதினைந்திற்கும் மேற்பட்ட நூல்களுக்கு ஆசிரியர் - கொண்ட பதவிக்கும், குளிர் தென்றல் தமிழுக்கும் அணி சேர்த்தவர் - கம்பன் என்றால் வேறெந்த வேலையும் பிறகு தான், என்னுமளவுக்குக் கம்பன்பால் தனி நாட்டமும் ஈடுபாடுங்கொண்ட இவர், சென்னைக் கம்பன் கழகத்தின் தலைவரும் ஆவார் - அவருக்குக் கம்பனிடத்துள்ள ஈடுபாட்டுக்கு இணையானது இஸ்லா மியத் தமிழ் இலக்கியங்களில் உள்ள ஈடுபாடாகும் - சீறாப்புராணம் போன்ற தமிழ்ப் பெருங் காப்பியங்களில் தாம் பெரிதும் புலமை பெற்றிருந்தபோதிலும், அந்நூல்கள் முஸ்லீம்களிடையே கூட அதிகமாகப் பரவவில்லையே என்று கவலை கொண்டவர் - கம்பன் காவியக் கடலுள் முங்கக் குளித்து முத்துகள் இனிது திரட்டிய இவர் வாய் மொழி அமிழ்தைத் தம் செவியுறத்தேக்கும் ஆர்வலர் தொகை கணக்கிலடங்காது.

